

# தமிழ் நூல் விவர அட்டவணை

# THE MADRAS STATE TAMIL BIBLIOGRAPHY

## 1911-1917

மூன்றும் தொகுதி—இரண்டாம் பகுதி

**Volume III—Part II**


பொது பதிப்பாசிரியர்

கொண்டல் சு. மகாதேவன் பி.எஸ்ஸி., எம்.ஏ.



தமிழ்நாட்டு அரசினர் தமிழ் வளர்ச்சி இயக்கக வெளியீடு.

1978.

Price: Rs. 29-10.

முதற் பதிப்பு 1978

பதிப்பாசிரியர் குழு:

1. புலவர். க. கு. சம்பத், பி. லிட்.,
2. புலவர் வை. கண்ணையன், பி. லிட்.,
3. திரு. த. க. சந்திரபாபு
எம். ஏ., பி. எஸ்ஸி, பி. லிப். எஸ்ஸி,
எம். ஏ., டி. ஆந்த். —நூலகர்.

தமிழ் நாட்டு அரசினருக்காக தமிழ் நாடு எழுதுபொருள்
அச்சுத் துறை இயக்குநரால் பதிப்பிக்கப்பெற்றது.

# பதிப்புரை

இந்நூல், தமிழ் நூல் விவர அட்டவணையின் மூன்றாம் தொகுதியின் இரண்டாம் பகுதியாகும். இதன்கண் 1911 ஆம் ஆண்டு முதல் 1915 ஆம் ஆண்டுவரையுள்ள ஐந்தாண்டு காலப் பகுதியில் தமிழில் அச்சிடப் பெற்று உரிமை பதிவு செய்யப் பெற்ற நூல்களின் விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன.

இதன்கண் இக்காலப் பகுதியில் வெளியான தமிழ் நூல்களுள் தற்போது ஆவணக் காப்பகத்தில் கிடைக்கப் பெற்ற 2261 தமிழ் நூல்கள், 'டியுவி' பொருட் பாகுபாட்டின்படியும், கோலன் பகுப்பு முறையின்படியும் வரைபடுத்தப் பெற்றுள்ளன. ஆசிரியர் அகரவரிசைப்படி நூல்களின் விளக்கங்கள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

இப்பகுதியில், இலக்கியம், வரலாறு, புவியியல் நூல்களின் விளக்கங்களும், முதலிரு பகுதிகளுக்குரிய பொருளகராதி, ஆசிரியர் அகரவரிசை, நூல் அகரவரிசை முதலியனவும் இடம் பெற்றுள்ளன.

இதன் அமைப்பு முறை முதலிரண்டு தொகுதிகளின் அமைப்பு முறையினை அடியொற்றியே அமைந்துள்ளது. இதன் அமைப்பு முறையும், குறியீடுகளின் விளக்கங்களும் முதல் தொகுதியின் முதற் பகுதியில் விரிவாகத் தரப்பெற்றுள்ளன.

எஞ்சிய நூல்கள் ஆவணக் காப்பகத்தில் கிடைக்கப் பெறுவிடினும், அவைகளைப்பற்றிய செய்திகளைத்தெரிந்து கொள்ளவும், பிறவிடங்களில் கிடைக்கக்கூடும் என்பதனை அறிவிக்கவும் கிடைக்கப் பெறாத நூல்களின் விளக்கங்களைத் தாங்கி மூன்றாவது பகுதியும் வெளியிடப்படுகிறது

பதிப்பாசிரியர் குழு.

# தமிழ் நூல் விவர அட்டவணை

## பொருள் அட்டவணை

## பொருள் அட்டவணை

## கோலன் பகுப்பு முறையில் பொருள் அட்டவணை

| | | | |
|---|---|---|---|
| 2 | பொதுவியல் | L | மருத்துவம் |
| 1 | பொது அறிவியல் | M | பயனுறு கலைகள் |
| 2 | நூலக இயல் | △ | சித்தியல் |
| 3 | புத்தக இயல் | | |
| 4 | செய்தித் தாளியல் | N | அழகுக் கலைகள் |
| A | அறிவியல் | O | இலக்கியம் |
| B | கணிதம் | P | மொழி இயல் |
| C | பௌதிகம் | Q | சமயம் |
| D | பொறி இயல் | R | தத்துவம் |
| E | இரசாயனம் | S | உள நூல் |
| F | தொழில் இயல் | T | கல்வி |
| G | உயிர் நூல் | U | நில நூல் |
| H | புவி இயல் | V | சரித்திரம் |
| Hz | சுரங்க இயல் | W | அரசியல் |
| I | தாவர இயல் | X | பொருளியல் |
| | விவசாயம் | Y | சமூக இயல் |
| K | விலங்குநூல் | Z | சட்டம். |

## குறியீடுகளும் அவற்றின் விளக்கமும்

| | |
|---|---|
| உ.ப. .. .. .. | உரைநடை நூல் பக்கங்கள் |
| உ.ப. + செ.மூ. எ. .. .. | உரைநடை பக்கங்கள் செய்யுள் மூலம் எண்ணிக்கை |
| உ.ப. + செ.மூ.ப. .. .. | உரைநடை பக்கங்கள் செய்யுள் மூலம் பக்கங்கள் (அல்லது) உரைநடையும் செய்யுளும் சேர்ந்த பக்கங்கள். |
| செ. மீ. .. .. .. | சென்டி-மீட்டர் |
| செ.மூ.எ. .. .. .. | செய்யுள் மூலம் எண்ணிக்கை |
| செ.மூ.உ.ப. .. .. | செய்யுள் மூலமும் உரையும், எண்ணிக்கை |
| தொ.எ. .. .. .. | தொடர் எண் |
| தொ.து. .. .. .. | தொகுத்தது |
| மொ.து. .. .. .. | மொழி பெயர்த்தது |

| | |
|---|---|
| i. | நூலின் பெயர் |
| ii. | பதிப்பாசிரியரின் பெயரும் பதிப்பகமும். |
| iii. | நூல் பதிப்பித்த ஆண்டு |
| iv. | நூலின் அளவு (உள்ளடக்கம்). |
| v. | நூலின் வடிவ அளவு |
| vi. | விலை |
| vii. | விளக்கம் |
| viii. | நூலின் பதிவு எண் குறிப்பு |
| [ ] | இவ்விதம் பகர அடைப்புக்குள் உள்ளவை ஒரு நூலோடு இணைந்துள்ள வேறு நூல்களின் பெயர்கள். |
| ...... | இவ்விதம் புள்ளி இட்ட இடங்கள் விவரம் தெரிய இயலாத பகுதிகளும் விளக்கம் எழுதப்பெறாத பகுதிகளும் ஆகும். |
| & | ஒன்றுக்கு மேற்பட்ட ஆசிரியர், பதிப்பாசிரியர், பதிப்பகங்களைக்காட்டும். |

# 800 இலக்கியம்

## 823 ஆங்கிலக் கவிதை

**கோபாலகிருஷ்ண அய்யர், ம. (மொ.து.)**

1263. i. அல்லின் பிரபுவின் மகள்—போர்வீரன் கனவு முதற் பதிப்பு; ii. ம. கோபாலகிருஷ்ண அய்யர்; விவேகபாநு அச்சியந்திரசாலை மதுரை; iii. நவம்பர், 1912; iv. உ. ப. + செ. மூ. ப. 8; v. 22 × 14 செ. மீ.; vi. 0-1-0; vii. தாமஸ்காம்பெல் என்னும் ஆங்கிலப் புலவர் பாடிய லார்டு அல்லின்ஸ் டாட்டர் தி சோல்சர்ஸ் டிரீம்" என்ற இரு பாடல்களின் தமிழ் மொழிபெயர்ப்பு. முதற்பாடல் சிவகாமி சரித்திரத்தில் அமைந்துள்ள தாழிசைப் பாடல் போன்றுள்ளது. இரண்டாவது பாட்டு அறுசீர் ஆசிரிய விருத்தத்தில் அமைந்துள்ளது. கவிதைகள் பற்றிய சிறு விளக்கமும் அருஞ்சொற்பொருளும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 558/1912/IV.

O111,1L

**சிவசுப்ரமணிய அய்யர், ம.வெ.**

1264. i. சங்கற்ப வெறுமை; முதற் பதிப்பு; ii. ம. வெ. சிவசுப்பிரமணிய அய்யர், நீயூ ஆல்பியான் பிரஸ், கூனூர்; iii. நவம்பர் 1912; iv. செ. மூ. ப. 7+115; v. 23 × 15 செ. மீ.; vi. 0-6-0; vii. டாக்டர் சார்ஜ் என்பவர் எழுதிய (தி வேனிட்டி ஆப்யூ மன் விஷஸ் என்னும்) ஆங்கில நூலின் தமிழ் ஆக்கமாகும். பல சந்தங்களிலான விருத்தப் பாடல்களைக் கொண்டு அமைந்தது. viii. 519/1912/IV.

O111,1L

**வெங்கட்ராம ஐயர், கே., கும்பகோணம்**

1265. i. ஷேக்ஸ்பியர் நாடகக்கதைகள் மூன்று; முதற் பதிப்பு; ii. டி. கிருஷ்ணசாமி ஐயர், கும்பகோணம். ஸ்ரீகிருஷ்ண விலாசம் பிரஸ், கும்பகோணம்; iii. மே, 1914; iv. உ.ப. 72; v. 16 × 11 செ. மீ.; vi. 0-4-0; vii செகப்பிரியர் நாடகங்களில் வெனிஸ் வர்த்தகன், எம்-லட், லீர் அரசன் என்னும் மூன்று நாடகங்களையும் குறித்த கதைகள் இதில் உள்ளன. வெனிஸ் வர்த்தகன் கதையை மூல ஆசிரியர் இட்ட பெயரிலும், ஏனைய இரண்டையும், ஹேமவர்ணன் கதை, லோகிதன் கதை என் நம் நாட்டுக் கேற்ப மாற்றியும் அமைத்துள்ளார். இவை நல்லொழுக்கம், அறம், முதியோரைப் பேணல், முதலிய அறங்களை வற்புறுத்திக் கூறுவனவாம். இவற்றை தமிழிலும் வட மொழியிலும் உள்ள அறநெறிக் கதைகளை போன்றவை என்று கூறலாம். viii. 744/1914/II.

O111,1J

## 891·21 வடமொழி இலக்கியம்

**அரங்கநாதச் செட்டியார், ச.கி., அரியக்குடி**

1266. i. வான்மீகராமாயண சருகார்த்த சங்கிரகம்; முதற் பதிப்பு; ii. சா.கி. ரெ. இலக்குமணச் செட்டியார், விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை; iii. ஜூன், 1911; iv. செ.மூ.ப. 549; v. 22 × 14 செ. மீ.; vi. 0-8-0. vii. வட மொழி வால்மீகி இராமாயணத்தின் ஒவ்வொரு சருக்கத்திலும் கூறப்பெற்ற பொருளை ஒவ்வொரு கவியில் அமைத்துப் பாடப் பெற்றது. இராமாயணம் ஆருவது யுத்த காண்டம் முடிய உள்ளது. இதனைச் சௌமிய ஆண்டு (1909-1910) ஆடித் திங்கள் 24 ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமை திருக்குற்றுலத்திலே இருந்து பாடி நிறைவு செய்தார். செல்வக் கேசவராய முதலியார் ஆங்கிலத்தில் இதற்கு முன்னுரை எழுதியுள்ளார். மு.ரா. அருணாசலக் கவிராயர் பாடிய சிறப்புப்பாயிரமும் அரியக்குடி கிருஷ்ண மாச்சாரியர், ரா. ராகவ அய்யங்கார் முதலிய புலவர்கள் எழுதிய சாத்துக் கவிகளும் உள. viii. 654/1911/II.

O15,1A1L

**ஆலாலசுந்தரம் பிள்ளை, கா., வேப்பேரி**

1267. i. தேவீ பாகவதம், ஏழாம் ஸ்கந்தம் முதற் பதிப்பு; ii. ஆலால சுந்தரம் பிள்ளை, சென்னை; கணேச பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட் 1913; iv. உ. ப.1+ 184; v. 21 × 14 செ. மீ. vi. 0-12-0; vii. வியாச முனிவர் அருளிய பதினெண் புராணங்களில் இது ஒன்று. பகவதியாகிய இறைவியின் பெருமைகளையும், இறைவியின் மூல எழுத்துக்களின் பெருமைகளையும், தேவி சகஸ்ர நாமத்தில் வரும் பெயர்ப் பொருள்களை விளக்கும் வரலாறுகளையும், பல புராணங்களில் ஆங்காங்கு வரும் அரிய வரலாறுகளின் உட்பொருளையும் நன்ருய் விளக்குவது. இது ஏழாவது ஸ்கந்தப் பகுதியின் மொழிபெயர்ப்பு. நாற்பது அத்தியாயங்கள் கொண்டது. viii. 584/1913/III.

O15,1A1L

**கஸ்தூரிரங்கய்யர், ஆ. வீ.**

1268. i. பாகவத வினவிடை—இரண்டாம் பாகம்—முதற் பதிப்பு; ii. ஜெனரல் சப்ளைஸ் அண்டு கம்பெனியார், சென்னை; கபாலீசுரர் அச்சுக்கூடம், சென்னை; iii. அக்டோபர், 1912; iv. உ. ப. 8 + 226 + 10; v. 22 × 14 செ. மீ.; vi. 1-0-0; vii. 'பாகவத புராணத்தில்' இறுதி மூன்று 'ஸ்கந்தங்கள்' வினவிடை முறையில் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஒரு சில படங்களும் உள்ளன. பாகவதக் கதை

அட்டவணையும், கண்ணன் திருவிளையாடல் முதலியவற்றை விளக்கும் ஏழு பிற்சேர்க்கைகளும் இந்நூலில் உள்ளன ; viii. 449/1912/IV.

O15,1A1L

**காளிதாசர்**

1269. i. மேகசந்தேசம் : முதற் பதிப்பு ; ii. வி. கல்யாண ராமய்யர் அன்டு கம்பெனி, சென்னை ; மினர்வா பிரஸ், மதராஸ் ; iii. ஜூ, 1913 ; iv. உ. ப. 20 + 83 ; v. 18 × 12 செ. மீ. ; vi. 0-10-0 ; vii. வடமொழியில் காளிதாசர் எழுதிய 'மேகசந்தேசத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு, காதலர் பிரிந்திருக்கும் காலத்துத் தங்கள் நிலைமையை மேகத் திடம் சொல்லி அனுப்புவதாக வருணிக்கப்பெற்றது. 'மேக தூதம்' என்றும் இதற்குப் பெயர் உண்டு. இந் நூலின் அருமை குறித்தும் 'சந்தேசக்' காவியங்களின் வரலாறு குறித்தும் விளக்கமாக நூல் முகத்தில் ஆராய்ந்து எழுதி யுள்ளார். கவியின் உட்கருத்தையும் அதில் பொதிந்த வேறு கிளைக் கதைகள் முதலியவற்றையும் விளக்கி ஓர் உரையை அடிக்குறிப்பாக அமைத்துள்ளார். 'வல்லபதேவன்' 'பூர்ண சரஸ்வதி' முதலியோர்கள் மேக சந்தேசத்தைச் சேர்ந்தவை அல்ல என்று விடப்பெற்ற வடமொழிப் பாக்களுக்கு மல்லி நாதர் உரை எழுதியிருப்பதால் அவற்றைத் தனி பிற்சேர்க்கை யாக இந்நூலில் சேர்த்திருக்கிறார். 'தட்சன்' மேகத்திற்குக் கூறிய நெறியிலுள்ள மலை, ஆறு, நதிகள், நகரங்கள் முதலிய வற்றைப் பற்றியும் ஒரு தனிப் பிற்சேர்க்கை உள்ளது ; viii 742/1913/II.

O15,D40L

**கிருஷ்ணசாமி சாஸ்திரிகள், கருங்குளம்**

1270. i. மஹாபாரதம் : முதற் பதிப்பு ; ii. ம. வி. இராமானுஜா சாரியார் ; வைஜயந்தி பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1914 ; iv. உ. ப. 1081 முதல் 1280 வரை ; v. 23 × 15 செ. மீ. ; vi. 0-12-0 ; vii. பாரதத்தின் சாந்திபர்வம் இதில் வெளியிடப்பட்டுள்ளது 303-ஆவது அத்தியாயம் முதல் 349 வரை இதில் உள்ளது. அடிக்குறிப்பில் ஆங்காங்கே விளக்கங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. இதழாக வெளியிட்டு வந்த பாரத மொழிபெயர்ப்பு வெளியீட்டின் 20 ஆம் இதழ்; viii. 745/1914/IV.

O15,1L

**கிருஷ்ணமாச்சாரியார், பி. ஆர். ஸ்ரீரங்கம் & குருசுப்பிரமணிய அய்யர், ஸ்ரீரங்கம்**

i. காதம்பரி வசனம் (தொ. எ. 1287 பார்க்க) முதற் பதிப்பு ; ii. ஜே. கிருஷ்ணமாச்சாரியார், ஸ்ரீரங்கம் ; வெட்னஸ்டே ரிவியூ பிரஸ், திருச்சிணுப்பள்ளி ; iii. ஏப்ரல், 1912 ; iv. உ.ப. 188 ; v. 24 × 17 செ. மீ. ; vi. 3-0-0 ; vii. வடமொழிக் 'காதம்பரியைப் பின் பற்றியும் தமிழ்க் காதம்பரிச் செய்யுளை அடியொற்றியும் உரைநடையில் எழுதப்பட்டுள்ளது; viii. 598/1912/II.

O15,1L

**சுகர்**

1271. i. பாகவதம்—தசமஸ்கந்தம்—4வது சஞ்சிகை ; முதற் பதிப்பு ; ii. பாஸ்கர் அண்டு கம்பெனியார், சென்னை ; எட்வர்ட் அச்சுக்கூடம், சென்னை ; iii. பிப்ரவரி, 1911 ; iv. உ. ப. 32 (97 முதல் 128), v. 23 × 15 செ. மீ. ; vi. 0-2-0 ; vii. கண்ணனது, பிறப்புக்களின் வரலாற்றைக்கூறும் பாகவத தசமஸ்கந்தத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு. இது நான்காவது இதழ். கதை நிகழ்ச்சிகளைக் கொண்ட சில படங்களும் இதில் உள்ளன. viii. 458/1911/I.

O15, 1L

**சுப்பிரமணிய ஐயர், பி. எஸ்.**

1272. i. காயத்ரீ ராமாயணம் : முதற் பதிப்பு ; ii. ப. நாராயண அய்யர் ; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை ; iii. ஜூன், 1913 ; iv. செ. மூ. உ. ப. 36 ; v. 14 × 11 செ. மீ. ; vi. 0-1-0 ; vii. இராமாயணத்திலிருந்து எடுக்கப்பட்ட இருபத்து நான்கு பாடல்களைக் கொண்டது. 'காயத்திரி மந்திரத்தின்' எழுத்துக்களைக் கொண்டு முறைப்படி அமைந்தது. பாடல்கள் கிரந்த எழுத்துக்களிலும் அவற்றின் விளக்கங்கள் தமிழிலும் உள்ளன; viii. 678/1913/II.

O15, 1L

**நடேச சாஸ்திரி, சிறுகாம்பூர் (மொ. து.)**

1273. i. அத்யாத்ம ராமாயணம், பாகம்—1 : முதற் பதிப்பு ; ii. எஸ். ஜி. ஐயர் அண்டு கம்பெனி, சென்னை ; சுதேசமித்திரன் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1913 ; iv. உ.ப. 238 ; v. 22×15 செ.மீ.; vi. 1-0-0: vii. ' அத்யாத்ம ராமா

யணம்' என்னும் வட மொழி நூலின் தமிழாக்கமாகும். பாலகாண்டம் முதல் கிட்கிந்தா காண்டம் வரையுள்ள பகுதி முதற் பாகத்திலுள்ளது. திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் மாணவர்களில் ஒருவராகிய சீர்காழி அ. வேதகிரிப் பிள்ளையின் துணைகொண்டு இதைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்; viii. 374/1913/IV.

O15,1L

1274. i. அத்யாத்ம ராமாயணம், பாகம்-2: முதற் பதிப்பு; ii. வேதகிரித் தொண்டர், சீர்காழி & எஸ். ஜி. அய்யர் அண்டு கோ, திருவல்லிக்கேணி, சென்னை; சுதேசமித்திரன் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1914; iv. உ.ப. 13 + 276; v. 22 × 14 செ. மீ.; vi. 1-4-0; vii. இராமன் மனிதனாகப் பிறந்து, இம்மை மறுமைக்குத் தேவையான சிறந்த அறவழி ஒழுகி, மக்களுக்கு எடுத்துக்காட்டாகத் தாமே வாழ்ந்து காட்டியிருக்கிறான் என்பதே 'அத்யாத்ம ராமாயணத்தின்' உட்பொருள். இந்நூல் விசுவாமித்திர முனிவரால் வடமொழியில் எழுதப் பட்டுள்ள நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு. வேதாந்தத்தை விளக்கும் அருஞ்சொற்களுக்குக் குறிப்புரைகளும் சேர்க்கப் பட்டுள்ளன. பிரம்மாண்ட புராணத்தில் பிரம்ம தேவர் கூறிய 'அத்யாத்ம ராமாயண பிரபாவம்' மொழிபெயர்த்துக் கொடுக்கப் பட்டுள்ளது. இரண்டாம் பாகத்தில் யுத்த காண்ட, உத்திர காண்டப் பகுதிகள் அடங்கியுள்ளன. நடேச சாஸ்திரியாரின் மொழிபெயர்ப்பு மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களின் மாணாக்கர்களுள் ஒருவராகிய சீர்காழி அ. வேதகிரித் தொண்டரால் தமிழுக்கிணங்கத் திருத்தி வெளியிடப் பட்டுள்ளது; viii. 209/1914/II.

O15,1L

1275. i. இராமோதந்தம்: முதற் பதிப்பு; ii. அம்பாவிலாச புத்தகசாலை, சென்னை; கல்விப்பிரகாசம் பிரஸ், சென்னை; iii. மே, 1912; iv உ.ப. 1+27; v. 18×12 செ.மீ.; vi. 0—2—0; vii. இராமன் வரலாற்றைச் சுருக்கமாகக் கூறும் வடமொழி நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு; இதனை இயற்றியவர் வால்மீகி முனிவர் என்று சொல்லப்படுகிறது. இராம கதையைப் பெருங்காப்பியமாகச் செய்த வால்மீகி, சிறுவர் எளிதில் உணரும் பொருட்டு இந்நூலைச் செய்தார் என்பர்; viii. 1025/1912/III.

O15,1L

1276. i. பாகவதம்—பாகம்-8: முதற் பதிப்பு; ii. ஏ. வைத்தியனாதையர், சென்னை, சச்சிதானந்தம் பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1912; iv. உ.ப. 80 (561—640); v 26×18 செ.மீ.,; 0—6—0: vii. வடமொழி மூலப்பாடல்

களுடன் கூடியது இத்தமிழ் மொழிபெயர்ப்பு. இது எட்டாம் இதழ். இதில் பாகவதம் மூன்றுவது ஸ்கந்தத்தின் பகுதிகள் உள்ளன. வரகவி. அ. சுப்பிரமணி பாரதியாரின் துணைகொண்டு ஆசிரியர் இத்தமிழ் மொழிப்பெயர்ப்பைச் செய்துள்ளார். viii 741/1912/IV.

O15,1

1277. i. வால்மீகி ராமாயண வசனம்—யுத்தகாண்டம் : முதற்பதிப்பு; ii. வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் வெ. கல்யாண ராமய்யர் அண்டு கம்பெனியார்; லாரன்ஸ் அசைலம் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1913 ; iv. உ.ப. 8+692 ; v. 21×14 செ.மீ. ; vi. 3—8—0 ; vii. இது வால்மீகி இராமாயணம் யுத்த காண்டத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு ; 131 சருக்கங்கள் கொண்டது. கதைப் போக்கினை விளக்கும் தலைப்புக்கள் பத்திதோறும் தனியே காட்டப்பட்டிருக்கின்றன. திருந்திய முறையில் அச்சேற்றப்பட்டிருக்கிறது. viii. 321/1913/I.

O15,1A1

**நரசிம்ஹாசாரியார், அ.வி.**

1278. i. ராமாயணம் அயோத்தியா காண்டம்—முதல் பாகம் : முதற் பதிப்பு ; ii. ஆர். வெங்கடேஸ்வர் அண்டு கம்பெனி, சென்னை ; iii. ஜூன், 1912 ; iv. உ.ப. 9+400 அண்டு 10 படங்கள் ; v. 18×13 செ.மீ. ; vi. 1-0-0 ; வால்மீகி இராமாயணத்திற்கு இணங்க எழுதப் பெற்ற தமிழ் உரைநடை நூல். இது அயோத்தியா காண்டத்தின் முதல் பகுதியாகும். நாற்பத்து மூன்று அத்தியாயங்கள் இதில் உள்ளன. பத்துப் படங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 886/1912/II.

O15,1

1279. i. பாகவதம் (முதல் வால்யூம்) : முதற்பதிப்பு; ii. ஸ்ரீதரன் கம்பெனி, சென்னை ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1914 ; vi. உ.ப. 624 ; v. 25×17 செ.மீ. ; vi. 3-0-0 ; vii. இதில் ஒன்று முதல் ஒன்பதாவது "ஸ்கந்தம்" வரையில் உள்ளன. ஆங்காங்கே படங்களும் உள்ளன. சுகர்" அருளிய பாகவதத்தை ஒட்டி அமைந்த தமிழ் உரை நடை. viii. 427/1915/I.

O15,1

**ராஜகோபால அய்யங்கார், வி. (மொ. து.)**

1280. i. தசகுமார சரிதம், முதற்பாகம் : முதற் பதிப்பு ; ii. வி. ராஜகோபால அய்யங்கார், மினர்வா பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1913 ; iv. உ.ப. 85 ; v. 19×13 செ.மீ.; vi. 0–6–0 ; vii. இது வடமொழியிலுள்ள 'தசகுமார சரிதத்தை, அடியொற்றிய மொழிபெயர்ப்பு. 'பூர்வ பீடிகை' என்னும் முதற் பகுதி மட்டும் இதில் உள்ளது. ஐந்து 'உச்சு வாசம்' என்னும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இராசவாகனன் என்பான் தெய்வ மனித பலத்தினால் தனது விருப்பம் கைகூடப் பெற்று அவந்தி சுந்தரி என்பாளை மணந்து இன்ப மாக வாழ்ந்த வரலாறு குறிக்கப்பட்டிருக்கிறது. viii. 1087/1913/III.

O15,1

**ராஜாசாஸ்திரி & சுப்பிரமணிய பாரதி, அ., வரகவி (மொ.து.)**

1281. i. ஆநந்த ராமாயணம் : முதற் பதிப்பு ; ii. எ. வைத்தினாதையர் ; எ.வி. ஐயர் அண்டு கம்பெனி, புரொப்ரைட்டர், திருவல்லிக்கேணி ; வாணி பூஷணம் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1910 ; iv. உ.ப. 80+1 படம் ; v. 23×15 செ.மீ. ; vi. 0–6–0 ; வால்மீகி எழுதிய ஆனந்த இராமாயணத்தின் மொழிபெயர்ப்பு. பகுதி பகுதியாக வெளியிடும் இவ் வெளியீட்டில் மனோகர காண்டப் பகுதி உள்ளது. அ. சுப்பிர மணிய பாரதியின் துணையைக் கொண்டு இதன் ஆசிரியர் மொழி பெயர்த்துள்ளார். viii. 526/1911/I.

O15,1

1282. i. ஆநந்த ராமாயணம் : முதற் பதிப்பு ; ii. எ.வைத்தினா தய்யர், திருவல்லிக்கேணி, சென்னை ; வாணி பூஷணம் பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1911 ; iv. உ.ப. 80; v. 23×14 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. வடமொழியிலிருந்து மொழி பெயர்க்கப் பெற்றது. அ. சுப்பிரமணிய பாரதியின் துணைகொண்டு இராசா சாத்திரி என்பார் இதனை மொழிபெயர்த்துள்ளார். பகுதி பகுதியாக வெளிவரும் இந்நூலின் ஒரு பகுதி இது. மனோகர காண்டத்தின் சில பகுதிகள் இதில் அடங்கியுள்ளன. கிரந்த எழுத்தில் வழிபாட்டுப் பாடல்கள் இடையிடையே கொடுக் கப்பட்டிருக்கின்றன. viii. 102/1911/II.

O15,1

1283. i. ஆநந்த ராமாயணம் : முதற் பதிப்பு ; ii. எ. வைத்தியனாதையர், வாணி பூஷணம் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1911; vi. உ.ப. 50 ; (104—160) ; v. 23 × 15 செ.மீ. ;

vi. 0—6—0 vii ஆனந்த இராமாயணம் என்றால் மகிழ்ச்சியை அளிக்கும் சீதையின் வரலாறு அல்லது இராமனைப்பற்றி பேசும் நூல் என்று பொருள்படும். தமிழில் மொழிபெயர்த்த வர் வரகவி. அ. சுப்பிரமணி பாரதியார் ஆவர். இராசா சாத் திரி இதற்கு முகவுரை எழுதியுள்ளார். இதில் இந்நூலைத் தவிர அற்புத இராமாயணம், அத்தியாத்ம இராமாயணம், வாசிட்ட இராமாயணம் என்பனவும் இராமாயணத்தின் பிரி வெனச் சுட்டியுள்ளார். இதழாக வெளிவரும் இவ்வெளி யீட்டில் பூர்ண காண்டத்தின் சில பகுதிகள் உள. viii. 219/1911/III.

O15,1

**வால்மீகி**

1284. i. வால்மீகி இராமாயணம் 14-வது பாகம்—உத்தரகாண்டம் முதற் பதிப்பு ; ii. சி. ஆர். சீனிவாச அய்யங்கார்; கார்டியன் பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1911; vi. உ.ப. 52+112+ 34; v. 25×17 செ.மீ. ; vi. 1—4—0; viii. வால்மீகி இராமா யணத்தின் உத்தரகாண்டத் தமிழ் மொழிபெயர்ப்பின் ஒரு பகுதி. இதோடு பால காண்டம் பற்றிய குறிப்புகள் முடிந்து அயோத்தியா காண்டம் பற்றிய குறிப்புச்சவில் ஒரு பகுதியும் வந்துள்ளது. viii. 714/1911/I.

O15,1A1

1285. i வால்மீகி ராமாயணம்—பதினைந்தாவது பாகம் (உத்தர காண்டம்): முதற் பதிப்பு; ii. சி.ஆர் ஸ்ரீநிவாச அய்யங்கார்; கார்டியன் பிரஸ், சென்னை; iii. ஏப்ரல், 1911; iv. உ.ப. 202; v. 25×17 செ.மீ· ; vi. 1—4—0; vii வால்மீகி இராமாயணத்தின் மொழி பெயர்ப்பு. உத்ரகாண்டத்தில் 67 முதல் 88 வரை உள்ள சருக்கங்களின் மொழிபெயர்ப்பும் இறுதியில் முன் பகுதிகளுக்குரிய குறிப்புக்களும், கொடுக்கப் பட்டிருக்கின்றன· viii. 542/1911/III.

O15,1A1

1286. i. ஸ்ரீராமாயணம்—கிஷ்கிந்தாகாண்டம்: முதற் பதிப்பு; ii. அ.வி. நரசிம்ஹாசாரியார்; ஆர். வேங்கடேஸ்வர் அண்டு கம்பெனியார், சென்னை; ஆனந்தா அச்சுக்கூடம், சென்னை; iii. அக்டோபர், 1913; iv. உ.ப. 7+375; v. 18×13 செ.மீ.; vi. 1—0—0; vii. வால்மீகி இராமாயணத்தின் தமிழ்மொழி பெயர்ப்பு. முதனூலுக்கிணங்க மொழிபெயர்க்கப் பட்டது. முன் காண்டத்தின் தொடர்ச்சியாகவே இதில் பக்க எண் 1601 எனத் தொடங்கப்பட்டிருக்கிறது. பொருள் அட்ட வணை நூல் முகப்பில் உள்ளது. நூலில், ஆங்காங்கே தலைப்புக்கள் தரப்பட்டுள்ளன. 15 படங்கள் இடம் பெற் றுள்ளன. viii. 572/1913/IV.

O15,1A1

**வாழவந்தபெருமாள்**

1287. i. காதம்பரி மூலம் [காதம்பரி வசனம்]: முதற் பதிப்பு ; ii. ஜே. கிருஷ்ணையங்கார், சீரங்கம், ; வெட்னஸ்டே ரிவியூ பிரஸ்; திருச்சினுப்பள்ளி ; iii. எப்ரல், 1912 ; iv. செ.மூ.உ.எ. 14+1,218 ; v. 24×17 செ.மீ. ; vi. 3-0-0 ; vii. காதம்பரி என்பது வடமொழியில் பாணன் என்னும் கவிஞரால் எழுதப்பட்ட உரைநடைக் காவியமே ஆகும். இதனை விருத்தச் செய்யுட் களால் வாழவந்த பெருமாள் என்பார் தமிழில் பாடி யுள்ளார். கலியுகம் 4512 ஆம் ஆண்டு இக் காதம்பரியைப் பாடிய தாகப் பாயிரத்திலிருந்து தெரிய வருகிறது. இதற்குப் பதிப்பாசிரியர் அருஞ்சொற்பொருள் எழுதிச் சேர்த்துள் ளார். தமிழ்க் காதம்பரியின் விரிவான விளக்கம் முகப்பில் கொடுக்கப்பட்டிருக்கிறது ; காதம்பரி உரைநடையும் இதில் தரப்பட்டிருக்கிறது. viii. 598/1912/II.

O15,1

**வியாசர்**

1288. i. மஹாபாரதம் அநுசாசன பர்வம் : முதற் பதிப்பு ; ii. ம.வீ. இராமானுஜாச்சாரி ; வைஜயந்தி பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1913; iv. உ.ப. 200 (849—1048); v. 22×15 செ.மீ.; vi. 0-12-0 ; vii. வியாச பாரதத்தின் மொழிபெயர்ப்பு வரிசை யில் "அநுசாசன பர்வத்தின்" ஒரு பகுதி இதில் உள்ளது. இது பதினேழாவது இதழாக வெளிவந்தது. சொற்கள், சில மரபுகள் ஆகியவற்றிற்கான விளக்கம் அங்கங்கே அடிக்குறிப்பில் தரப்பட்டுள்ளது ; viii. 497/1913/III.

O15,1

**வேங்கடராம ஐயங்கார், தி., சென்னை**

1289. i. வால்மீகி இராமாயணக் கிளைக்கதைகள்—இரண்டாம் பாகம் : முதற் பதிப்பு ; ii. தி. வேங்கடராம அய்யங்கார், சென்னை ; கலா ரத்நாகரம் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1914 ; iv. உ.ப. 6+124 ; v. 18×12 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. வால்மீகி இராமா யணத்தில் வரும் கிளைக் கதைகளை இந்நூல் விவரிக்கிறது ; பால காண்ட, அயோத்தியா காண்டக் கதைகளை (36) முதற் பாகமாக வெளியிட்டு, ஆரண்ய காண்டம் முதல் யுத்த காண்டம் வரை இருபத்தொன்பது கதைகளை இந்நூலில் விளக்கியுள்ளார். கதைகளின் சுருக்கத்தை விளக்கி, அதனோடு ஒத்ததான கம்பன் கவிதைகளையும் கொடுத்துள்ளார் ; viii. 598/1914/I.

O15,1

**வேங்கடேசாச்சாரியர், அ. (மொ.து.)**

1290. i. மஹாபாரதம், விராடபர்வம், அநுசாசன பர்வம் ; முதற் பதிப்பு ; ii. ம.வீ. இராமானுஜாசாரி ; வைஜயந்தி பிரஸ், சென்னை ; iii. மார்ச்சு, 1912 ; iv. உ.ப. (10+1201—324+48) 182 ; v. 22×15 செ.மீ. ; vi. 0-12-0 ; vii. வியாச பாரதத்

தின் தமிழ் மொழிபெயர்ப்பு. விராட பருவப் பகுதிகள் இதில் உள. சாந்தி பருவத்தின் பொருளட்டவணையும் இதில் சேர்ந்துள் ளது ; viii. 945/1912/I.

O15,1A1

ஜேசிங், பி. எல். (மொ.து.)

1291. i. நாமராமாயணம் : முதற் பதிப்பு ; ii. பி. எல். ஜேசிங் ; நீமா பிரஸ், திருப்பாதிரிப்புலியூர் ; iii. மார்ச், 1912 ; iv. செ.மூ.ப. 17; v. 14×11 செ.மீ.; vi. 0—0—6; vii. இராமாயண வரலாற்றைக் கூறி இராமனைப் புகழ்கின்ற நூல். தேவநாகிரி எழுத்தில் உள்ளதை பி. எல். ஜேசிங் என்பார் தமிழ் எழுத்தில் அமைத்துள்ளார். இதனோடு "கணேச தோத்திரம்" "சரசுவதி தோத்திரம்" "ஹரிநமா மாலா" என்பனவும் அமைந்துள்ளன ; viii. 67/1912/II.

O15,1A1

ஸ்ரீநிவாஸாசார்யர், தி. ஈ. (மொ.து)

1292. i. மஹாபாரதம்—அனுசாசன பர்வம் : முதற் பதிப்பு ; ii. ம.வீ. இராமானுஜாசாரியார், கும்பகோணம் ; வைஜயந்தி பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1912 ; iv. 49 முதல் 248 வரை (200 பக்.) ; v. 22×15 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. வியாச பாரத மொழிபெயர்ப்பு வரிசையில் வந்துள்ள நூல்களில் இது ஒன்று. அநுசாசன பர்வதத்தின் பதினாறுவது அத்தியாயம் தொடங்கி 59-ஆவது அத்தியாயம் வரையுள்ள பகுதிகள் இதில் உள்ளன. இதில் சிவசகச்ரநாம அகராதியும் பொருளும் அடங்கியுள்ளன ; viii. 944/1912/III.

O15,1A1

1293. i. வால்மீகி ராமாயணம், உத்தரகாண்டம் ; பதினாறுவது பாகம் : முதற் பதிப்பு ; ii. சி.ஆர். ஸ்ரீனிவாஸய்யங்கார் ; கார்டியன் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1911; iv. உ.ப. 280; v. 25×17 செ.மீ. ; vi. 1–4–0 ; vii. வால்மீகி இராமாயணத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு. "வால்மீகி மஹரிஷியால் 24,000 ஸ்லோக ரூபமாய் அருளிச் செய்யப்பட்ட ஸ்ரீமத் இராமாயணம் என்ற ஆதி காவியம் முடிவு பெற்றது" என்று உத்திர காண்ட இறுதியில் உள்ளது. உத்திர காண்டத்தின் பொருள் அட்டவணையும் வேறு காண்டங்களின் குறிப்புக்கள் முதலியனவும் இதில் சேர்ந்துள்ளன ; viii. 471/1911/III.

O15,1A1

## 894,81109 இலக்கிய வரலாறு

**அலர்மேலுமங்கை அம்மாள்**

1294. i. திராவிட மதம் : முதற் பதிப்பு ; ii. சைவசபா, பாளையங் கோட்டை ; பெத்தாச்சி பிரஸ், பாளையங்கோட்டை ; iii. மார்ச், 1914 ; iv. உ.ப. 38 ; v. 22×14 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. பண்டைத் திராவிடர்களின் சமயத்தைப் பற்றியும், வழிபாட்டு முறைகளைப் பற்றியும் இந்நூல் விவரிக்கின்றது. பண்டைத் தமிழரின் கடவுள் கொள்கை, திராவிடர்களின் சமய நூல்கள், கடவுள் வணக்கமுறை, திராவிடர்களின் உண்மை நூல்கள், ஆரியரின் கற்பனை நூல்கள், திராவிட சமயத்தின் மேன்மை, இக்காலத்திற்கேற்ற நன்னெறிக் கருத்துக்கள் என்னும் பொருள்களை இந்நூல் கூறுகின்றது. viii. 1038/1914/I.

O31v

**இராகவையங்கார், ரா., சேதுசமஸ்தான வித்வான்**

1295. i. சேது நாடுந் தமிழும் ; முதற் பதிப்பு ; ii. ரா. இராக வையங்கார், தமிழ்ச்சங்க முத்திராசாலை, மதுரை ; iii. எப்ரல், 1915 ; iv. உ.ப. 31 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. சேது நாடு என்பது குமரிமுனையை அடுத்துள்ள நாடு என்பது ஆசிரியர் கருத்து. இங்கு தமிழர்கள் வாழ்ந்த சிறப்பினையும், தோன்றிய தமிழ் மன்னர்களையும், புலவர் களையும் பலவித சான்றுகளுடன் நிறுவியுள்ளார். தமிழால் உயர்ந்தது சேதுநாடு என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார். இது மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பதிமூன்றும் ஆண்டுக் கூட்டத்தில் படிக்கப் பெற்றது ; viii. 156/1915/II.

O31v

**இராகவையங்கார், மு.**

1296. i. வேளிர் வரலாறு ; முதற் பதிப்பு ; ii. மு. இராக வையங்கார், தமிழ்ச் சங்க முத்திரசாலை, மதுரை ; iii. பிப்ரவரி, 1913 ; iv. உ.ப. 10+77+6 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. சங்ககாலத்தில் வாழ்ந்த வேளிர்களின் வரலாற்றைப் பற்றிய ஓர் ஆராய்ச்சி நூல். வேளிர்களின் ஆதிவரலாறும் வேளாளர் என்போர் வேளிரே என்பதும், முதற் பகுதியில் விளக்கப்பட்டுள்ளன. பிற்பகுதியில் ஆய், ஆவி, எவ்வி, பேகன், பாரி, வேண்மான் என்னும் வேளிர்களைப் பற்றியும், பிற வேளிர்களைக் பற்றியும் தனித் தனியாக ஆராய்ந்து எழுதியுள்ளார். இந்நூலை குறித்து உ. வே. சுவாமிநாதய்யர், திருமணம் செல்வ கேசவராய முதலியார் முதலியோர் எழுதிய கருத்துரைகள் நூல் முதலில் உள்ளன ; viii. 500/1913/I.

O31v

**சாமிநாத முதலியார், ஐ,**

1296—.அ. i. நமது பழைய புதுச் சரித்திரம்; முதற் பதிப்பு; ii. ஐ. சாமிநாத முதலியார், திருச்சிராப்பள்ளி ; வெட்னஸ்டே ரிவியூ பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. ஜூன், 1914 ; iv. உ.ப. 22 ; v. 18× 13 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. தமிழரின் பழைய நாகரிகத்தையும் பண்பாடுகளையும் விளக்கும் வரலாற்று நூல். தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் இரண்டாம் ஆண்டு விழாவில் படிக்கப் பெற்றது. முகவுரை, வகுப்புரை, தொகுப்புரை என மூன்று பகுதியாக அமைத்து விளக்கப்பட்டுள்ளது. இக்கட்டுரை 'தன்சரிதமுணர்த்து மொழி' என்ற தலைப்பில் ஆசிரியர் எழுதியுள்ள நெய், அணி, ஊர் ஆகிய மூன்று கட்டுரைகளை ஒட்டிப் பிறந்த நான்காம் கட்டுரை ஆகும் ; viii. 221/1914/III.

O31v

**சுப்பிரமணிய பாரதியார், அ.**

1297. i. பரதன் ; மூன்றும் பதிப்பு ; ii. ஸ்ரீபாலசுப்ரமணியம் கம்பெனி, சென்னை ; கார்டியன் பிரஸ், மதராஸ் ; iii. 1915 ; iv. உ.ப. 103 ; v. 19× 13 செ.மீ. ; vi. 0–5–0 ; vii. இராமாயணத்தில் வரும் பரதனது பாகத்தைத் தெளிவாக விளக்கி உரைக்கும் நூல். பரதனை ஒரு செயல் வீரன் என்று ஆசிரியர் விளக்குகிறார். முதல்நூல் கருத்தைத் தழுவிக் கம்பராமாயணத்துள் அமைந்த போக்கமைதிகளைக் கொண்டு அமைந்தது. இடையிடையே தகுந்த மேற்கோட் செய்யுட்களை எடுத்தாண்டு அவற்றிற்கு அடிக்குறிப்பில் விளக்கமும் அமைத்துள்ளார் ; viii. 826/1915/III.

O31v

**வெங்கடசாமி நாட்டார், ந. மு.**

1298. i. வேளிர் வரலாற்றின் ஆராய்ச்சி ; ii. எஸ். ஜார்ஜ் அண்டு கோ பிரிண்டர்ஸ், திருச்சி; iii. 1915; iv.உ.ப. 32; v. 18× 13 செ.மீ., vi. 0–2–0 ; vii. தமிழ் நாட்டிலுள்ள வேளாளர் வரலாற்றினை எழுதிய திரு. எம். ராகவஐயங்காரின் கருத்துக்களை எதிர்த்து அவ்வரலாற்றின் கருத்துக்கள் உண்மைக்குப் புறம்பானவையென்று விளக்குவது இந்நூல். தஞ்சை நகர் 'கரந்தைத் தமிழ்சங்கத்தின்' மூன்றுவது ஆண்டுவிழாக் காலத்தில் தோ. ராமகிருஷ்ண பிள்ளை என்பார் தலைமையில் கூடிய அவையில் படிக்கப்பெற்றது. viii. 155/1915/III.

O 31, v

## 894·8111 பத்துப் பாட்டு

**பெருங்கௌசிகனுர், இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்**

1299. i. மலைபடுகடாம் மூலமும், நச்சினுர்கினியருரையும் : முதற் பதிப்பு ; ii வே. சாமிநாத அய்யர், சென்னை ; வைஜயந்தி அச்சுக்கூடம், சென்னை; iii. ஜனவரி, 1912 ; iv. செ.மூ.உ.ப

12+30+122 ; v. 22 × 14 செ. மீ. ; vi. 1–4–0 ; vii. இது பத்துப்பாட்டுள் இறுதியானது. கூத்தராற்றுப்படை எனவும் வழங்கப்படும். செங்கண் மாத்துவேள் நன்னன் சேய்நன்னனைப் பாட்டுத் தலைவனாகக் கொண்டது. மலையில் தோன்றும் பல்வகை ஒலிகளை இப்பாடலில் வருணித்திருப்பதால் இதற்கு மலைபடுகடாம் என்னும் பெயர் உரியதாயிற்று. நச்சினார்க்கினியர் உரையுடன் கூடியது. viii. 230/1912/I.

O31,1B952L

## 894·8111 எட்டுத் தொகை

1300. i. நற்றிணை : முதற் பதிப்பு : ii. அ. நாராயணசாமி ஐயர் பின்னத்தூர், சுப்பிரமணிய அய்யர், அண்டு ராஜாராம அய்யர் ; சைவ வித்தியாநு பாலனயந்திரசாலை, சென்னை; iii. 1915 iv. செ. மூ. உ. எ. 400 ; v. 21 × 14 செ. மீ. ; vi. 5–0–0 ; vii. எட்டுத் தொகை நூல்களுள் ஒன்றான நற்றிணையிலுள்ள பாடல்களின் அகப்பொருள் இலக்கணத்தை விளக்கும் உரையுடன் கூடியது. இவ்வுரையினை ஆக்கியவர் பின்னத்தூர் அ. நராயணசாமி ஐயர் ஆவர், பாடினோர் பாடப்பட்டோர் வரலாறுகளையும் இவர் எழுதிச் சேர்த்துள்ளார். பழைய உரையாசிரியர்களின் உரைப்போக்கைத் தழுவி அமைந்ததாகும். viii. 626/1915/IV.

O31,1B1L

1301. i. புறநானூறு (101–125) : முதற்பதிப்பு ; ii. வே. சாமிநாத ஐயர் ; வைஜயந்தி பிரஸ், சென்னை; iii. ஜூலை ; 1911; iv. செ.மூ.உ.ப. 12+32 ; v. 21 × 14 செ. மீ. ; vi. 0–8–0 ; vii. புறநானூற்றிலுள்ள இருபத்தைந்து பாடல்கள் (101–125) உரையுடன் உள்ளன. இது 1912 ஆம் ஆண்டு பி. எ. தேர்வுக்காகத் தனியாக வெளியிடப்பெற்றது. viii. 263/1911/III.

O31,1B8L

## 894·8111 பெருங்காப்பியம்

### ஆறுமுகச் சேர்வை, வீ., செம்பூர்

1302. i. சீவகசிந்தாமணி வசனம், முதற்பாகம் ; ii. டி. ஆதி நயினார், திருப்புரம்பூர் ; கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1913 ; iv. உ. ப. 34 + 228+ 2 ; v. 22 × 15 செ. மீ. ; vi. 1–4–0 ; vii. சீவக சிந்தாமணி என்னும் பெருங்காவியத்தின் உரைநடைநூல். சீவகசிந்தாமணி செய்யுட்களையும், நச்சினார்க்கினியர் இயற்றிய உரையையும் தழுவி விரிவாக எழுதப்பட்டது. சமண சமயக் கொள்கைகளையும் பல அறங்களையும் விளக்குவது. இதில் கோவிந்தை

யார் இலம்பகம் வரையிலுள்ள பகுதி வெளிவந்துள்ளது. நூலாசிரியரைப் பற்றி க. ர. கோவிந்தராச முதலியார் விளக்கமாக எழுதியுள்ளார். சிந்தாமணி ஆசிரியர் திருத்தக்க தேவரின் வரலாறும் கொடுக்கப்பட்டுள்ளது. இவ்வுரைநடை நூலைப்பற்றி உ. வே. சாமிநாத அய்யர் முதலிய பலர் எழுதிய கருத்துரைகளும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 670/1913/IV.

O31,1C91

**கிருஷ்ணமாசாரியார், பு., கடாம்பு**

1303. i. மகா காவிய வசனம்: முதற் பதிப்பு; ii. வி. குமார சாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1915; iv. உ. ப. 104; v. 19 × 13 செ. மீ.; vi. 0–4–0; vii. சங்கம் மருவிய ஐம் பெருங்காப்பியங்களில் உள்ள சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணி மேகலை ஆகியவற்றின் கதைகளை உரைநடையில் தருகின்றது இந்நூல். அருஞ்சொற் பொருளும், நூலிறுதியில் சேர்க்கப் பட்டிருக்கிறது. viii. 714/1915/I.

O31,1C9

**சாமிநாதையர், வே., உத்தமதானபுரம்**

1304. i. மணிமேகலை கதைச் சுருக்கம்: இரண்டாம் பதிப்பு; ii. வே. சாமி நாதையர், உத்தமதானபுரம்; வைஜயந்தி அச்சுக் கூடம், சென்னை; iii. மார்ச், 1913; iv. உ.ப. 81; v. 21×14 செ. மீ.; vi. 0–8–0; vii. உ. வே. சாமிநாத அய்யர், தாம் பதிப்பித்த மணிமேகலை பதிப்பில் எழுதிச் சேர்த்திருந்த மணி மேகலைக் கதைச் சுருக்கத்தின் தனி வெளியீடு. ஒவ்வொரு கதைப் பகுதியிலும் அமைந்த உரைநடைக்கு வரி எண்கள் ஒவ்வொரு பக்கத்தின் ஓரங்களிலும் கொடுக்கபட்டிருக்கின்றன. அருஞ்சொற்பொருள், விளக்கம் ஆகியவை சேர்க்கப்பட்டுள்ளன. viii. 956/1913/I.

O31,1C93

## 894.8111 பதினெண்கீழ்க்கணக்கு

**அருணாசலக் கவிராயர், மு. ரா., மதுரை**

1305. i. திருக்குறள் வசனம்: முதற் பதிப்பு; ii. மு. ரா. அருணா சலக் கவிராயர், விவேகபாநு அச்சியந்திரச்சாலை, மதுரை; iii. ஆகஸ்ட், 1913; iv. உ.ப. 18 + 266 + 28; v. 22 × 15 செ.மீ.; vi. 1–4–0; vii. அனைவரும் எளிதில் தெரிந்து கொள்ளும் முறையில் எளிய உரைநடையில் எழுதப்பட்ட நூல். திருக்குறளின் கருத்தையும் பரிமேலழகரின் உரைக் கருத்தை யும் தழுவிய உரைநடை நூல், 'ஆங்கிலக் கலாசாலை மாணவரது தற்காலக் கல்வி முறைக்கும் ஒழுக்க நிலைக்கும் ஊன்றுகோல் போல உள்ளது' என்று ஒரு பெரியார் கூறுகிறார்.

பல தமிழறிஞர்களின் கருத்துக்கள் முதலில் கொடுக்கப் பட்டுள்ளன. 'திருவள்ளுவர் பெருமையும் திருக் குறட் பெருமையும்' என்னும் பகுதியும் இதில் உள்ளது. 133 அதிகாரங்களுக்கும் இவ்வுரை தரப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு குறட்கருத்தும் விளக்கும் உண்மை தலைப்பு போலக் கொடுக்கப் பட்டிருக்கிறது. திருக்குறள் மூலம் இதில் கொடுக்கப்படவில்லை. அதிகார அகராதி, பொருள் அகராதி ஈற்றில் உள்ளன. viii. 579/1913/III.

O 31,1C5

கணிமேதையார்

1306. i. ஏலாதி ; ii. எஸ். சிவசங்கர செட்டி ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1915 ; iv. செ.மூ. உ.எ. 82 ; v. 16 × 12 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. எண்பது அறநெறிப் பாடல்கள் கொண்ட நூல், முதலிலிருந்து நாற் பத்தொன்பது பாடல்களுக்கும் தற்சிறப்புப் பாயிரச் செய்யு ளுக்கும் மகாவித்வான் கோமளபுரம் இராசகோபாலப் பிள்ளை இயற்றிய உரை தரப்பட்டிருக்கிறது. ஏனைய செய்யுட்களுக்கு கா.ரா. கோவிந்தராச முதலியார் உரை எழுதி இந்நூலைப் பார்வையிட்டுப் பதிப்பித்துள்ளார். viii. 655/1915/IV.

O 31,1C66

குப்புசாமி பிள்ளை, க., திரிசிரபுரம்

1307. i. திருக்குறள் சாரசங்கிரகம் : முதற் பதிப்பு ; ii. குப்புசாமி பிள்ளை ; திரிசிபுரம் ; சச்சிதாநந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஆகஸ்ட், 1912; iv. செ.மூ. ப. 29; v. 13×11 செ.மீ.; vi. 0–1–0 ; vii. திருக்குறளிலுள்ள 133 அதிகாரங்களின் கருத்தை ஒவ்வொரு அடியால் விளக்கும் 133 அறநெறித் தொடர்களைக் கொண்டது இந்நூல். கொன்றைவேந்தன், வெற்றிவேற்கை நூல்களிலுள்ள அறநெறித் தொடர்களை யொத்த அமைப்பையுடையன. "இறைவன் அடியுறில் பிறவிக் கொடியறும்", "மழையினாலே மாநில மோங்கும்", "துறந்தார் பெருமை இறந்தார் அளவே", அறத்தைவிட வேருக்கமும் உண்டோ", என்பன முதலில் உள்ள பாயிரப் பகுதியின் சுருக்கமாகும். பூவை. கலியாணசுந்தர முதலியார், கோ. வடிவேலு செட்டியார் முதலிய சிலர் இதற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். viii. 965/1912/III.

O 31,1C5

நல்லாதனார்

1308. i. திரிகடுகம் மூலமும் உரையும், முதற் பதிப்பு, ii. கோவிந்தராஜ முதலியார், கா.ரா. ரிப்பன் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1914; iv. செ.மூ. உ.எ. 100; v. 17 × 13 செ.மீ.;

vi. 0-4-0; vii. பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று, அறநெறிபுகட்டும் இந்நூலின் ஒவ்வொரு பாடலிலும் மூன்று சிறப்புப் பொருள்கள் விளக்கப்பட்டுள்ளன. 100 பாடல்களைக் கொண்டுள்ளது ; உரையும் உள்ளது. இவ்வுரையை எழுதியவர் கோமளபுரம் இராசகோபாலப் பிள்ளை ஆவர். viii. 1016/1914/III.

O31,1C61

**சமணமுனிவர்கள்**

1309 i. நாலடியார் : முதற் பதிப்பு ; ii. சே. கிருஷ்ணமாச்சாரி, சென்னை ; கணேச அச்சுக்கூடம், சென்னை ; iii. மே 1914 ; vi. செ.மூ. உ.எ. 400; v. 22×14 செ.மீ. ; vi. 2-0-0 ; vii. திருக்குறளுக்கு அடுத்தபடியாக வைத்துப் பாராட்டப்படும் சிறந்த அறநூல் ; நாலடி வெண்பாக்களால் ஆனது, திருக்குறளைப் போலவே மூன்று பாலாக இது பாகுபடுத்தப்பட்டுள்ளது. நாற்பது அதிகாரங்களையும் ஒவ்வோர் அதிகாரத்திற்கும் பத்துப் பாடல்களாக 400 பாடல்களையும் கொண்டது. 'நாலடி நானூறு' என இது வழங்கப்பெறும். வை. மு. சடகோபராமானுசாச்சாரியாரும், சே. கிருஷ்ணமாச்சாரியரும் 'தெளிபொருள் விளக்கம்' என்னும் உரையை அமைத்துள்ளனர். 899/1914/II.

O31,1C21L

1310. i. நாலடியார் ; ii. பு. க. ஸ்ரீநிவாஸா சாரியார், வித்தியாரத்நாகர அச்சுக்கூடம், வேலூர் ; iii. 1915 ; iv. செ. மூ. உ. எ. 400 ; v. 18×12 செ. மீ. ; vi. 0—8—0 ; vii. சிறந்த பழைய அற நூல்களில் ஒன்றுய்ப் புகழப் பெறுவது. அறநெறிக் கருத்துடைய செய்யுட்கள் இதில் அடங்கியுள்ளன. பாடல்களில் வரும் கடின சந்திகளைப் பிரித்து, அங்கங்கே, ஏற்ற நிறுத்தற் குறியீடுகளும் அமைத்துள்ளார். பால், இயல், அதிகாரங்களின் பெயர்களுக்கு ஏற்ற ஆங்கில மொழிபெயர்ப்பும் சேர்க்கப்பட்டுள்ளது. ஈற்றில் செய்யுள் முதற் குறிப்பகராதியும் உள்ளது. பாடல்களுக்கு அருஞ்சொற்பொருள் மட்டுமன்றி இன்றியமையாத இடங்களில் பொழிப்புரையும், கருத்துரையும், கொண்டு கூட்டுமுறையும் மேற்கோள்களும், காட்டப்பட்டுள்ளன. viii. 814/1915/IV.

O31,1C21

**பொய்கையார்**

1311. i. களவழி நாற்பது—மூலமும் உரையும் : முதற் பதிப்பு ; ii. கா. ர. கோவிந்தராஜ முதலியார் ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை ; iii. செப்டம்பர், 1913 ; iv. செ. மூ. உ. எ. 41 ; v. 16×11 செ. மீ. ; vi. 0—2—0 ; vii. சேரமான் கணைக்கால் இரும்பொறையைச் சோழன்

செங்கணான் சிறை வைத்தபோது சோழனது போர்க் களத்தைப் பொய்கையார் பாடி, சேரனை விடுவித்தார் என்பது வரலாறு. இதற்குச் சோடசாவதானம் சுப்பராய செட்டியார் எழுதிய உரை தரப்பட்டிருக்கிறது. இவ்வுரை சொற்பொரு ளும், விளக்கக் குறிப்புக்களும் கொண்டது. பொய்கை யாரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்பு முகவுரையில் கொடுக்கப் பட்டுள்ளது. viii. 457/1913/IV.

O31,1C34

**மாறன் பொறையனார்**

1312. i. ஐந்திணை ஐம்பது—மூலமும் உரையும் : இரண்டாம் பதிப்பு; ii. ரா. இராகவய்யங்கார் ; தமிழ்ச் சங்க முத்திராசாலை, மதுரை ; iii, பிப்ரவரி, 1912 ; iv. செ. மூ. உ. எ. 50 ; v.21×14 செ. மீ. ; vi. 0—3—0 ; vii. இது ஓர் அகப் பொருள் நூல். ஒவ்வொரு திணைக்கும் பத்துப் பாடலாக ஐம்பது பாடல்கள் கொண்டது. வெண்பாவினால் ஆனது. முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை, நெய்தல் என்னும் அமை வில் ஐந்திணைப் பாடல்கள் இதில் அமைந்து உள்ளன. இதற்குப் பழைய உரை கொடுக்கப்பட்டிருக்கிறது. பதிப் பாசிரியர் அருஞ்சொல் அகராதி, பொருள் அகராதி ஆகிய வற்றை இணைத்துள்ளார். viii. 1029/1912/I.

O31,1C41

## 894.8111 திருமுறை இலக்கியம்

**சுந்தரமூர்த்தி சுவாமிகள்**

1313. i. சுந்தர மூர்த்தி சுவாமிகள் தேவாரப் பதிகங்கள் 1-ஆவது சஞ்சிகை : முதற் பதிப்பு ; ii. பு. சண்முக முதலியார் ; மதறுஸ் டைமண்ட் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1910 ; iv. செ. மூ. உ. ப. 32 ; v. 22×15 செ. மீ. ; vi. 0—2—0 ; vii. சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தை உரையுடன் பகுதி பகுதியாக வெளியிடும் முயற்சியில் இது முதலாவது. இதில் திருவெண்ணெய்நல்லூர், திருக்கோத்திட்டை, திருக் கோவலூர், திருநெல்வாயில் திருஅரத்துறை, திரு அஞ்சைக் களம் என்னும் பதிகங்கள் உள்ளன. இந்த உரையை ஆக்கியவர் காஞ்சிபுரம் மகாவித்வான் இராமாநந்த யோகிகளாவார். இந்த உரை சொற்பொருள், பொழிப்பு புரை, கருத்துரை, விரிவுரை என்னும் நான்கு வகையாக ஒவ்வொரு பாட்டுக்கும் அமைந்துள்ளது. ஒவ்வொரு பதிகத் தின் ஈற்றிலும் அக்கோயிலின் இருப்பிடம், இறைவனின் பெயர், இறைவியின் பெயர் ஆகியவை கொடுக்கப்பட்டுள்ளன. viii. 38/1911/I.

Q23:417,x4

1314. i. தேவாரப் பதிகங்கள் உரையுடன்—2-ஆவது சஞ்சிகை முதற் பதிப்பு; ii. பு. ஷண்முக முதலியார்; மதறாஸ் டைமண்ட் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1911; iv. செ. மூ. உ. ப. 33-64, (32); v. 22×14 செ. மீ.; vi. 0—2—0; vii. இதழாக வெளிவருவதில் இது இரண்டாவது ஆகும். viii. 17/1911/II.

Q 23:417,x4

1315. i. தேவாரப் பதிகங்கள் உரையுடன்—3ஆவது சஞ்சிகை: முதற் பதிப்பு; ii. பு. ஷண்முக முதலியார்; மதறாஸ் டைமண்ட் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1911; iv. செ.மூ. உ.ப. (65-96) (32); v. 13×14 செ.மீ.; vi. 0—2—0; vii. சுந்தர மூர்த்தி சுவாமிகள் தேவாரத்தின் ஒரு சிறு பகுதி. காஞ்சி புரம் வித்வான் இராமானந்த யோகிகள் எழுதிய உரையுடன் கூடியது. ஒவ்வொரு பாட்டுக்கும் சொற்பொருள், பொழிப் புரை, கருத்துரை, விரிவுரை என நான்கு பகுதிகள் அமைத் துள்ளார். இது மூன்றாவது இதழ் ஆகும். viii. 18/1911/II.

Q 23:417x4

1316. i. தேவாரப்பதிகங்கள்—நாலாம் சஞ்சிகை—முதற் பதிப்பு; ii. பு. ஷண்முக முதலியார்; மதராஸ் டைமண்ட் ப்ரஸ், சென்னை; iii. ஜூலை, 1911; iv. செ. மூ. உ. ப. 97-128=32; v. 22×15 செ.மீ.; vi. 0—2—0; vii. காஞ்சி இராமனந்த யோகிகள் உரையுடன் இதழாக வெளிவரும் தொடர் பதிப்பில் இது நான்காம் இதழ். திருத்துறையூர், திருப்பாச்சிலாக் கிராமம், திரு நாட்டியத் தான்குடி, திருக்கலயநல்லூர் என்னும் ஊர்களைக் குறித்த பதிகங்கள் உள. viii. 532/1911/III.

Q 23:417x4

1317. i. தேவாரப் பதிகங்கள்—ஐந்தாம் சஞ்சிகை: முதற் பதிப்பு; ii. பு. ஷண்முக முதலியார்; மதறாஸ் டைமண்ட் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1911; iv. செ மூ. உ.ப. 129-160=32; v. 22×15 செ. மீ.; vi. 0—2—0; vii. திருவெண்ணெய் நல்லூர், திருநாவலூர், திருநின்றவூர், திருக்கோளிலி, திருவேகம்பம் திருமேற்றளி ஆகிய ஊர்களைக் குறித்த பதிகங்கள் உள. viii. 533/1911/III.

Q 23:417x4

1318. i. தேவாரப்பதிகங்கள்—ஆறும் சஞ்சிகை: முதற் பதிப்பு; ii. பு. ஷண்முக முதலியார்; மதறுஸ் டைமண்ட் பிரஸ், சென்னை,; iii. ஜூலை, 1911; iv. செ. மூ. உ.ப. 161-192=32; v. 23×15 செ.மீ.; vi. 0—2—0; vii

திருப்பழ மண்ணிப் படிக்கரை, திருக்கழிப்பாலை, திருமழபாடி திருமுதுகுன்றம், திருக்காளத்தி ஆகிய ஊர்களைப் பற்றிய பதிகங்கள் அமைந்துள்ளன. viii. 534/1911/III.

Q 23:417x4

**1319.** i. தேவாரப் பதிகங்கள்—ஏழாம் சஞ்சிகை : முதற் பதிப்பு ; ii. பு. ஷண்முக முதலியார் ; மதராஸ் டைமண்ட் பிரஸ் ; சென்னை ; iii. ஜூலை, 1911 ; iv. செ.மூ. உ.ப. 193–224= 32 ; v. 23×15 செ.மீ. ; vi. 0—2—0 ; vii. திருக்கற்குடி, திருக்கடவூர், திருக்குருகாவூர், திருக்கருப்பறியலூர், திரு இடையாற்றுத் தொகை என்னும் ஊர்களின் பதிகங்கள் இதில் உள. viii. 535/1911/III.

Q 23:417x4

**சேக்கிழார் நாயனர்**

1320. i. மெய்ப் பொருணயனர் புராணம் : முதற் பதிப்பு ; ii. ம. ர. குமாரசாமிப் பிள்ளை ; புஷ்பாளாயாம்பாள் விலாஸம் பிரஸ், திருக்கோவிலூர் ; iii. ஆகஸ்ட், 1911 ; iv. செ.மூ. எ. 24+2=26 ; v. 11×8 செ.மீ. ; vi. இலவசம் ; vii. சேதி நாட்டைத் திருக்கோவலூரிலிருந்து ஆண்ட மன்னராகிய மெய்ப் பொருள் நாயனரின் வரலாறு. பெரிய புராணத்திலிருந்து இவ்வரலாறு மட்டும் தனியாகப் எடுத்துபதிப்பிக்கப் பட்டிருக்கிறது. பார்க்கவ குல சங்கத்தின் சார்பில் இது வெளியிடப்பட்டிருக்கிறது. viii. 748/1911/III.

Q 23W x 1

**திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர், சுந்தரமூர்த்தி நாயனர் மற்றும் அருணகிரிநாதர்**

1321. i. ஈழ மண்டலத்துத் தேவாரமும் திருப்புகழும் : முதற் பதிப்பு ; ii. தி. த. கனக சுந்தரம் பிள்ளை ; வித்தியாநு பாலனயந்திர சாலை, சென்னை ; iii. நவம்பர், 1910 ; iv. செ.மூ.ப. 1+36 ; v. 16×12 செ. மீ. ; vi. 0—1—0 ; vii. ஈழ மண்டலத்தின்கண் உள்ள சிவன் கோயில்கள், முருகன் கோயில்கள் பேரில், சைவசமயக் குரவர்களான திருஞானசம்பந்தர், சுந்தரர் ஆகியோராலும் அருணகிரிநாதராலும் இயற்றப் பட்ட தேவாரத் திருப்புகழ்களை ஒருங்கு திரட்டி, அவற்றை நாடோறும் படிக்க விரும்புபவர்க்காக இது அச்சிடப்பட்டுள்ளது. படிப்பவர்கள் தேவராங்களின் பொருளையுணர்ந்து படிப்பதன் பொருட்டுத் தேவாரங்களுக்கு ஒருவாறு வினை முடிபும் குறிக்கப்பட்டுள்ளது. viii. 115/1911/I.

Q 23:417x1

### திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் & சுந்தரமூர்த்தி சுவாமிகள்

**1322.** i. தேவாரத் திருமுறை : முதற் பதிப்பு ; ii. எஸ். சுவாமி நாத பண்டிதர், வண்ணை நகர், யாழ்ப்பாணம் ; சைவ வித்யாநு பாலன் யந்திர சாலை, சென்னை ; iii. எப்ரல், 1911 ; iv. செ.மூ.ப. 62+14+1,244+14+60 ; v. 25×17 செ.மீ. ; vi. 8-0-0 ; vii. ஞான சம்பந்தர் முதலிய முதல் மூவ ரும் பாடிய தேவாரத் திருமுறை. இது 'அடங்கல் முறை' என்றும் வழங்கப்பெறும். இப்பதிப்பு, 'தல வரிசை' முறையில் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பதிகத்திற்கும் உரிய பண் முதலில் குறிக்கப்பெற்றிருக்கிறது. பலவிடங்களிலுள்ள பழைய சுவடிகளை ஆய்ந்து வெளியிட்ட பதிப்பு. பாட வேறு பாடுக குறிப்புக்கள் அங்கங்கே கொடுக்கப்பட்டிருக்கின்றன. திரு முறைப் பெருமை, திருமுறை வரலாறு, ஊர் அகராதி, திருப் பாட்டு முதற் குறிப்பு அகராதி, முதலிய பலவற்றைப் பதிப் பாசிரியர் இதில் சேர்த்துள்ளார். இதைப் பதிப்பிக்க ஆசிரியர் எடுத்துக்கொண்ட முயற்சிகளையும் அடைந்த தொல்லைகளையும் முகவுரைப் பகுதியில் விளக்கியுள்ளார். சிவப்பிரகாச பண்டிதர், அ. குமாரசாமிப் புலவர் முதலிய சில தமிழறிஞர்களின் துணையும் இதைப் பதிப்பிக்கும்போது பெற்றுள்ளார். viii. 293/1911/II.

Q23 : 417x

### திருஞானசம்பந்தர் முதலிய மூவர்

**1323.** i. திருக்கோவலூர்த் தேவாரம் : முதற் பதிப்பு ; ii. ம. ரா. குமாரசாமிப் பிள்ளை ; புஷ்பாலயாம்பாள் விலாச அச்சுக்கூடம், திருக்கோவிலூர் ; iii. ஜூலை, 1911 ; iv. செ.மூ.ப. 14 ; v. 11×9 செ.மீ. ; vi. இலவசம் ; vii. 'அட்ட வீரட்டத் தலங்களுள்' ஒன்றாகிய திருக்கோவலூர் சிறப்புற்றதாகும். இவ் வூரில் புலவர்களும் நாயனமார்களும் வாழ்ந்திருந்தனர். இவ வூரைக் குறித்துத் தேவாரம் பாடிய மூவரும் அருளிய பாடல் கள் இதில் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 418/1911/III.

Q23 : 417x1

### திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார்

**1324.** i. திருவிடும்பாவனம், திருக்கடிக்குளம் தேவாரப் பதிகங் கள் : முதற் பதிப்பு ; ii. தி. மு. சுவாமிநாத உபாத்தியாயர், திருக்களர் ; எட்வர்ட் அச்சுக்கூடம், நாகப்பட்டினம் ; iii. மே, 1912 ; iv. செ.மூ.எ. 11+11 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-0-9 ; vii. திருஇடும்பாவனம், திருக்கடிக்குளம் என்னும இரு ஊர்களிலும் விளங்கும் சிவபெருமானைப்பற்றிய பாடல்கள். இவ்விருவூர்களின் பெருமையும், அங்குக் கோயில்

கொண்டருளும் இறைவனின் பெயர் முதலியனவும் புனிதப் பொய்கைகளின் விளக்கமும் குறிக்கப்பட்டுள்ளன. viii. 757/1912/II.

Q 23:417x2

### திருஞானசம்பந்தர் முதலியோர்

1325. i. தேவார வாசகத் திரட்டு : முதற் பதிப்பு ; ii. குரு. முருகப்ப தேசிகர் ; விவேக திவாகரன் அச்சியந்திரசாலை, சேலம் மங்கள மாநகர் ; iii. ஆகஸ்ட், 1914 ; iv. செ.மூ.ப. 22; v. 21×14 செ.மீ. ; vi. 0-1-0 ; vii. சைவசமய வழிபாட்டுப் பாடல்களின் திரட்டு. கருத்துரையும் உள்ளது. இத்துடன் பதிப்பாசிரியர் குரு. முருகப்ப தேசிகர் இயற்றிய சில இசைப் பாடல்களும் சேர்க்கப்பட்டுள்ளன. தேவாரம், திருவாசகப் பாடல்களுக்குப் பண் குறிப்பிட்டுள்ளதோடு "மகுடம்" என்னும் 'மெட்டும்' கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 569/1914/III.

Q 23:417x1

### திருமூலர் & திருவள்ளுவர்

1326. i. பன்னிரு திருமந்திரம் : முதற் பதிப்பு ; ii. ம. ரா. குமாரசாமி பிள்ளை ; புஷ்பாலயாம்பாள் விலாச பிரஸ், திருக் கோவலூர் ; iii. எப்ரல், 1911 ; iv. செ.மூ.எ. 12+12 ; v. 11×7 செ.மீ. ; vi. இலவசம் ; vii. திருமூலர் திரு மந்திரத்திலிருந்து பன்னிரண்டு பாடல்களும், திருவள்ளுவர் திருக்குறளிலிருந்து பன்னிரண்டு பாடல்களும் கொண்ட சிறு தொகுப்பு. இதோபதேசம், திரிமூர்த்தி, யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, கொல்லாமை, புலால் மறுத்தல், பிறர்மனை நயவாமை, இரந்தார்க்கு ஈதல், மாயேசுவர பூசை, அன்புடைமை, தியானம் என்னும் பன்னிரு தலைப்புக்களில் திருமந்திரப் பாடல்கள் உள. திருக்குறள் பாடல்களும் இதே கருத்தில் அமைந்தவையாகும். viii. 401/1911/II.

Q 23:417x

### திருமூல நாயனார்

1327. i. திருமந்திரம் : முதற் பதிப்பு ; ii. வே. விசுவநாத பிள்ளை, மாலை ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. மார்ச், 1913 ; iv. செ.மூ உ.எ. 3,047 ; v. 23×15 செ.மீ. ; vi. 3-8-0 ; vii திருமூல நாயனார் திருவாவடு துறை என்னும் ஊரில் அரச மரத்தின் கீழ் யோகியாயிருந்து மூவாயிரம் ஆண்டுகள் உயிருடன் வாழ்ந்து, ஆண்டுக்கு ஒவ் வொரு பாடலாக 3,000 பாடல்கள் இயற்றினார் என்பர். இது சைவத் திருமுறைகளில் பத்தாவதாக வைக்கப்பட்டிருக்கிறது.

இது ஒன்பது 'தந்திரங்களாகவும்', 235 அதிகாரங்களாகவும் பாகுபடுத்தப்பட்டிருக்கிறது. "மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ்" என்று ஆசிரியர் வாக்கில் அமைந்துள்ளது. பாடல்களுக்கு விளக்கமான குறிப்புரை ஒன்று சேர்க்கப்பட்டிருக்கிறது. திருமூல நாயனார் மாணாக்கர்களுடன் இருக்கும் படம் ஒன்றும் உள்ளது. இப்பதிப்பைக் காணிக்கையாகப் பெற்ற திவான் பகதூர் வி. எஸ். சுப்பிரமணிய அய்யரின் படமும் உள்ளது. உ. வே. சுவாமிநாதய்யர், சுவாமிநாத பண்டிதர் ஆகிய இருவரும் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். இதன் நான்முகத்தில் இந்நூலின் வரலாறும் முன்பு வந்த பதிப்புக்களின் வரலாறும் எழுதப்பட்டுள்ளன. viii. 350/1913/II.

Q23:417x8

1328. i. திருமந்திர நூறு பாட்டுக்குரை: முதற் பதிப்பு; ii. மதுரைத் தமிழ்ச் சங்கம்; தமிழ்ச் சங்க முத்திராசாலை, மதுரை; iii. ஜூன், 1913; iv. செ.மூ.உ.எ. 100; v. 22×14 செ.மீ.; vi. 0-8-0; vii. சைவத் திருமுறை பன்னிரெண்டில் பத்தாந் திருமுறையைச் சேர்ந்தது இத் திருமந்திரம். இதிலுள்ள நூறு செய்யுட்கும் கம்பளிச் சட்டை கைலாய சித்தர் ஓர் உரை வரைந்துள்ளார் என்றும், அது இலக்கிய, இலக்கண முறைப்படி அமையவில்லை என்றும் கண்டு, ஆசிரியர் சேற்றூர் ரா. சுப்பிரமணியக் கவிராயர் அவர்கள் இவ்வுரையை ஆக்கியுள்ளார். சொற்பொருளும் விளக்கவுரையுமாகச் செவ்விய முறையில் இதனை உரையாசிரியர் ஆக்கியுள்ளார். viii. 743/1913/II.

Q23:417x8

1329. i. திருமந்திரத்தில் சத்திபேதம்—திரிபுரைச் சக்கரம்; ii. முனிசாமிப் பிள்ளை; வைஜயந்தி அச்சுக்கூடம், சென்னை; iii. செப்டம்பர், 1914; iv. செ.மூ.எ. 32; v. 18×13 செ.மீ.; vi. இலவசம்; vii. சைவ நாயனார் திருமூலரின் பெரும் படைப்பான 'திருமந்திரத்தில்' ஒரு பகுதி. திருக்கையம்மையின் பெருவிழாவைக் காணவரும் அன்பர்களுக்கு அளிக்கும் பொருட்டு 'சத் சங்க பூஜித பக்த ஜன சபையாரால்' வெளியிடப்பட்டது இந்நூல். viii. 1171/1914/III.

Q23:417x8

**தில்லைநாயகம் பிள்ளை, ச. (தொ.து.)**

1330. i. பன்னிரு திருமுறைத் தோத்திரத் திரட்டும் நவரத்னத் திரட்டும்; ii. பாலசுப்பிரமணிய பிள்ளை; சாரதா அச்சாபீஸ், பாளையங்கோட்டை; iii. 1915; iv. செ.மூ.ப. 108; v. 22×14 செ.மீ.; vi. 0-8-0; vii. சைவ சமயக் குரவர்கள் பலர் பாடிய வழிபாட்டுப் பாடல்களின் தொகுப்பு. தேவாரம் முதல் பெரிய புராணம் ஈறாகவுள்ள திருமுறைகளினின்றும் திரட்டியதே பன்னிரு திருமுறைத் திரட்டு. நவரத்னத் திரட்டு

என்பதில் அருணகிரிநாதர், பட்டினத்தடிகள், தாயுமானசுவாமிகள், குமர குருபரர் சுவாமிகள், சிவப்பிரகாச சுவாமிகள், சிதம்பர சுவாமிகள், தத்துவராய சுவாமிகள், சுப்பராய சுவாமிகள், சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் என்னும் ஒன்பதின்மர் பாடல்களினின்றும் திரட்டியது. திரட்டின் விளக்க அட்டவணை முதலில் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 774/1915/IV.

Q23 : 417x3

**பட்டினத்துப் பிள்ளையார்**

1331. i. பட்டினத்தார் பிரபந்த விருத்தியுரை [கோயில் நான்மணி மாலை முதலிய நூல்கள்]: முதற் பதிப்பு; ii. குமார வேலாயுத முதலியார், சென்னை; மதராஸ் டைமண்ட் அச்சுக்கூடம், சென்னை; iii. மார்ச், 1911; iv. உ.ப. செ.மூ. உ.ப. 32+ 624+12; v. 22×14 செ.மீ.; vi. 3-0-0; vii. பதினோரந் திருமுறையில் பட்டினத்துப் பிள்ளையார் பாடிய கோயில் நான்மணி மாலை முதலிய ஐந்து நூல்களும் அ. சிங்காரவேலு முதலியார் இயற்றிய விருத்தி உரையுடன் தரப்பட்டுள்ளன. ஈக்காடு இரத்தினவேலு முதலியார் எழுதிய பட்டினத்துப் பிள்ளையார் வரலாறு முதலில் உள்ளது. இவரது மாணவராகிய பத்திரகிரியார் பாடிய மெய்ஞ்ஞானப் புலம்பல் உரையுடன் தரப்பட்டிருக்கிறது. இந்நூலை அச்சிட்ட குமாரவேலு முதலியாரது பதிப்பு முறையைப் பாராட்டிப் புலவர்கள் பாடிய சாத்துக் கவிகளும் இதில் உள்ளன. viii. 685/1911/I.

Q23:417x93

i. கோயினான்மணிமாலை—மூலமும் விருத்தியுரையும் (தொ. எ. 1331 பார்க்க) முதற் பதிப்பு; குமார வேலாயுத முதலியார், சென்னை; மதராஸ் டைமண்ட் அச்சுக்கூடம், சென்னை; iii. மார்ச், 1911; iv. செ.மூ.உ.ப. 40; v. 22×14 செ.மீ.; vi........; vii. தில்லையில் விளங்கும் நடராசப் பெருமானைப் பற்றிய வழிபாட்டுப் பாடல்கள். வெண்பா, கலித்துறை, ஆசிரிய விருத்தம். ஆசிரியப்பா என்னும் நான்கும் மாறி மாறி அந்தாதியாக அமையத் தொடுக்கப் பெற்ற நாற்பது பாடல்களைக் கொண்டது. இதற்குச் சிங்கார வேலு முதலியார் விருத்தியுரை செய்துள்ளார். viii. 685/1911/I.

Q23:417x98

i. திருக்கழுமல மும்மணிக் கோவை (தொ.எ. 1331 பார்க்க)]: முதற் பதிப்பு; ii. குமார வேலாயுத முதலியார், சென்னை; மதராஸ் டைமண்ட் அச்சுக்கூடம், சென்னை; iii. மார்ச், 1911; iv. செ. மூ. உ.எ. 30; v. 22×14 செ.மீ.; vi. . . . . . . .; vii. சீகாழி என வழங்கும் திருக்கழுமலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைப்

பற்றிய வழிபாட்டு மாலை. ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை எனனும் மூன்றும் மாறி மாறி முப்பது அந்தாதி யாக அமையத் தொடுக்கப்பெற்ற பாடல்களைக் கொண்டது இச் சிற்றிலக்கியம். இதற்குச் சிங்காரவேலு முதலியார் காண்டிகை யுரை எழுதியுள்ளார். viii. 685/1911/I.

Q 23:417 x 93

i. திருவிடை மருதூர் மும்மணிக் கோவை (தொ. எ. 1331 பார்க்க)]: முதற் பதிப்பு; ii. குமார வேலாயுத முதலியார், சென்னை; மதராஸ் டைமண்ட் அச்சுக் கூடம், சென்னை ; iii. மார்ச், 1911 ; iv. செ.மூ. உ.எ. 30 ; v. 22×14 செ. மீ. ; vi. . . . . . . . . . . . ; vii. திருவிடை மருதூர்ப் பெருமான்மீது பாடப்பெற்ற வழி பாட்டுப் பாடல்களின் தொகுப்பு. திருக்கழுமல மும்மணிக் கோவை போன்ற அமைப்புடையது இந்நூல். viii. 685/1911/I.

Q 23:417x93

i. திருவேகம்ப முடையார் திருவந்தாதி—மூலமும் உரையும் (தொ. எ. 1331 பார்க்க)] ; முதற் பதிப்பு ; ii. குமார வேலாயுத முதலியார் ; செனனை ; மதராஸ் டைமண்ட் அச்சுக்கூடம், சென்னை ; iii. மார்ச், 1911 ; iv. செ.மூ. உ.எ. 100 ; v. 22×14 செ.மீ. ; vi. . . . . . . . . ; vii. காஞ்சிபுரம் ஏகாம்பரநாதரை வழிபடுவது இந்நூல். இது கலித்துறை அந்தாதி. viii. 685/1911/I.

Q 23:417 x 93

i. திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது [ (தொ. எ. 1331 பார்க்க ] : முதற் பதிப்பு ; ii. குமார வேலாயுத முதலியார், சென்னை ; மதராஸ் டைமண்ட் அச்சுக்கூடம், சென்னை ; iii. மார்ச், 1911 ; iv. செ. மூ. உ.எ. 10 ; v. 22×14 செ. மீ. ; vi. . . . . . . . . ; vii. திருவொற்றியூர்ப் பெருமான் மீது அமைந்த பத்து வழிபாட்டுப் பாடல்கள் உள. இது ஆசிரியப்பாவால் ஆனது. viii. 685/1911/I.

Q 23:417 x 93

1332. i. பன்னிரு திரு முறைத்திரட்டு : முதற் பதிப்பு ; ii. கே. கன்னியப்ப ஆச்சாரி, சென்னை ; விஸ்வ குலோத்தாரண அச்சி யந்திரசாலை, சென்னை ; iii. நவம்பர், 1914 ; iv. செ. மூ. ப. 16 ; v. 14×11 செ. மீ. ; vi. இலவசம் ; vii.

பன்னிரு திருமுறையிலிருந்து எடுக்கப்பட்ட இச்சிறு திரட்டு, பண்களுக்கியைந்த இராக, தாளங்களுடன் பாடும் பொருட்டு வெளியிடப்பட்டது. திருவண்ணாமலை ஞானதீபக்குடைப் பிரயாணத்தன்று சென்னை, சூளை, திருநெறித்தமிழ் வேத பாராயண சைவ சித்தாந்த சபையாரால் வழங்கப்பட்டது இச்சிறு நூல், viii. 732/1914/IV.

Q 23:417x5

**மாணிக்கவாசக சுவாமிகள்**

**1333.** i. திருவாசகத்தின் திருப்பள்ளியெழுச்சி திருவெம்பாவை : முதற் பதிப்பு ; ii. ராம. சித. இலக்குமணச் செட்டியார், தேவக்கோட்டை ; ஸ்ரீஹயவதன அச்சியந்திரசாலை, கும்பகோணம் ; iii. டிசம்பர், 1912 ; iv. செ.மூ.எ. 10+20 ; v. 16×11 செ. மீ. ; vi. இலவசம் ; vii. திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களின் தொகுதி. திருவாசகத்தினின்று எடுத்துப் பதிப்பிக்கப்பட்டது. viii. 851/1913/I.

Q 23:417x5

1334. i. திருவாசகம் : முதற் பதிப்பு ; ii. எஸ். கே. ஏ. எம். முத்தையா ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. ஜனவரி, 1911 ; iv. செ. மூ. ப. 8 ; v. 13×11 செ. மீ.; vi. 0–0–6 ; vii. ஆருத்திரா விழாவை முன்னிட்டு அன்பர்களுக்கு வழங்குவதற்காக திருவாசகத்தினின்று திரட்டப்பட்ட சில வழிபாட்டுப் பாடல்களைக் கொண்ட நூல். viii. 239/1911/I.

Q 23:417x5

**1335.** i. திருவாசகம் : முதற் பதிப்பு ; ii. எஸ். கே. ஏ. எம். முத்தைய செட்டியார் ; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மார்ச், 1912; iv. செ. மூ. எ. 1+20=21; v. 13×10 செ. மீ. ; vi. 0–0–6 ; vii. திருவாசகப் பாடல்களில் சில தெரிந்தெடுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன. திருவெம்பாவை, திருவம்மானை, திருப்பொன்னூசல், குயிற்பத்து, திருத்தசாங்கம், திருப்பள்ளியெழுச்சி, அடைக்கலப்பத்து, அதிசயப்பத்து, வாழாப்பத்து என்னும் பகுதிகளிலிருந்து எடுக்கப்பட்டவை இதிலுள்ள பாடல்கள். viii. 1025/1912/I.

Q 23:417x5

**1336.** i. திருவாசகம் பிரார்த்தனைப்பத்து : முதற் பதிப்பு ; ii. வி. எஸ். கிருஷ்ணசுவாமி ஐயர், வி. எஸ். கே. சுவாமி அண்டு கம்பெனி, கயத்தாறு ; விவேகபாநு அச்சியந்திரசாலை,

மதுரை ; iii. எப்ரல், 1914 ; iv. செ. மூ. உ.ப. 11. ; v. 16×13 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. மாணிக்கவாசகர் சிவ பெருமானிடம் தமது குறைகளை விண்ணப்பித்து வணங்கும் பத்துப் பாடல்கள் கொண்டது. அவற்றிற்கான பொழிப்புரை யுடன் கூடியது. மாணிக்கவாசகரின் வரலாற்றுச் சுருக்கமும் நூலின் முதலில் அமைந்துள்ளது. viii. 199/1914/II.

Q23:417x5

1337. i. திருவாசகம் ; ii. நா. கதிரைவேற் பிள்ளை ; வித்யா ரத்நாகர அச்சுக்கூடம், சென்னை ; iii. 1915 ; iv. செ. மூ. ப. 19 ; v. 22×13 செ. மீ. ; vi. 0—8—0 ; vii. வேதாந்தம், பத்தி நெறி, ஒழுக்கம் முதலியன பற்றிய செய்யுட்கள் அடங்கிய நூல். யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் மாணுக்கரில் ஒருவராகிய நா. கதிரைவேற் பிள்ளையால் எழுதப்பெற்ற குறிப்புரையுடன் கூடியது. அருஞ் சொற் பொருள்கள் அங்கங்கே அடிக்குறிப்பில் கொடுக்கப்பட் டுள்ளன. சிவபுராணம் முதலிய பகுதிகளின் உண்மையை விளக்கும் ' திருவாசக உண்மை' என்னும் செய்யட் பகுதி நூன்முதலில் இடம் பெற்றுள்ளது. அன்றியும் ஒவ்வொரு பாடல் தலைப்பிலும் உரை நடையில் அமைந்த கருத்துரையும் உள்ளது. viii. 594/1915/IV.

Q23:417x5

1338. i. திருவெம்பாவை : முதற் பதிப்பு ; ii. முத்தைய செட்டியார், ஈரோடு ; ஸெண்ட்ரல் பிரஸ், ஈரோடு ; iii. டிசம்பர், 1913 ; iv. செ. மூ. எ. 1+20+11 ; v. 17×10 செ.மீ. ; vi. இலவசம் ; vii. மாணிக்கவாசக சுவாமிகள் பாடிய திருவெம்பாவைப் பாடல்கள் இந்நூலில் உள்ளன. அதன பின் பதினோராம் திருமுறையில் நம்பி ஆண்டார் நம்பி பாடிய திருநாவுக்கரசு தேவர் திரு ஏகாதச மாலையும் இதில் உள்ளது. பாவைப் பாட்டு, மகளிரது மார்கழி நீராட்டம் பற்றியது. ஏகாதச மாலை திருநாவுக்கரசு நாயனாரின் தொண் டின் சிறப்பைப் போற்றிப் புகழ்கிறது. viii. 829/1914/I.

Q23:417x5

## 894.8111 நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

### ஆண்டாள்

1339. i. திருப்பாவை : முதற் பதிப்பு ; ii. எம். ஆதி அண்டு கோ., சென்னை ; சந்திரா பிரஸ், சென்னை ; iii. டிசம்பர்; 1913 ; iv. செ.மூ.எ. 2+30 ; v. 12×9 செ.மீ.; vi. 0–1–0 ,

vii. பாவை நோன்பு பற்றிய செய்திகளைத் தெரிவிக்கும் திருப் பாவைப் பாடல்களை வெளியிடுவது இந்நூல். ஒவ்வொரு பாடலுக்கும் இராக, தாளக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 566/1914/I.

Q22:417x1,13

i. திருப்பாவை (தொ.எ. 1342 பார்க்க) முதற் பதிப்பு; ii. எ.எம் ராஜரத்ன முதலி, அருவங்காடு; நியூ ஆல்பியான் பிரஸ், கூனூர்; iii. டிசம்பர், 1914; iv. செ.மூ.எ. 30; v. 17×11 செ.மீ.; vi. ............; vii. இது, திருமாலைக் குறித்துப் புகழ்ந்து பாடப்பெற்ற 30 பாடல்களைக் கொண்டது. 'எம்பாவாய்' என்று ஒவ்வொரு பாடலும் முடிவடைகிறது. கன்னிப் பெண்கள் கொண்டாடும் பாவை நோன்பு பற்றியது. அப்பெண்கள் மார்கழி நீராடி, நோன்பு செய்த முறைகள் முதலியவற்றை விளக்குவது. viii 178/1915/I.

Q22:417x1,13

## திருமங்கையாழ்வார்

1340. i. பெரிய திருமொழி; நாலாம் பத்து, ஒன்பதாந் திருமொழி; ii. டி. பி. சேஷாத்ரியாசாரியார், திருவிந்தளூர்; கமலா பிரஸ், மாயவரம்; iii. அக்டோபர், 1911; iv. செ.மூ. உ.ப. 16; v. 14×11 செ.மீ.; vi. ..........; vii. திருமங்கையாழ்வார் இந்தளூர்ப் பெருமாளைப்போற்றிப் பாடிய 'நும்மைத் தொழுதோம்' என்ற திருமொழியின் உரை. இவ்வுரை பூர்வாசாரியர்களின் விரிவுரைகளிலிருந்து எடுத்தெழுதப்பட்டது. இதன் ஈற்றில் திருமங்கையாழ்வார் திருமேனி வடிவழகில் ஈடுபட்டு மணவாள மாமுனிகள் இயற்றிய பாடல்களும் தரப்பட்டுள்ளன. பெரியதிருமொழி தனியன்களின் பரியாய சொற்களும் இதில் தரப்பட்டிருக்கின்றன. viii. 426/1911/IV.

Q22:417x1,21

## திருவரங்கத்தமுதனார்

1341. i. இராமாநுச நூற்றந்தாதி; ii. கிருஷ்ணமாச்சார்ய ஸ்வாமிகள் & ம. இராசகோபால பிள்ளை, செங்கல்வராய நாயகர் ஆர்பனேஜ் அச்சுக்கூடம், சென்னை; iii. 1915, iv. செ.மூ.எ. 108; v. 13×11 செ.மீ.; vi. 0-1-0; vii. தென்னிந்தியாவில் சிறந்து விளங்கிய வைணவ சமயக் குரவரான இராமாநுசரைப் பற்றிப் புகழ்ந்து பாடும் பாடல்கள் இந்நூலில் உள. நூற்றெட்டுக் கலித்துறைப் பாடல்கள் இருக்கின்றன. இதற்குப் 'ப்ரபன்ன காயத்திரி' என்னும் பெயரும் உண்டு; viii. 55/1915/IV.

Q22:417,42

**தொண்டரடிப்பொடியாழ்வார்**

1342. i. திருப்பள்ளியெழுச்சி (திருப்பாவையும்) : முதற் பதிப்பு ; ii. ஏ. எம். ராஜரத்ன முதலியார், அருவங்காடு ; நியூ ஆல்பியான் பிரஸ், கூனூர் ; iii. டிசம்பர், 1914 ; iv. செ.மூ.எ. 10; v. 17×11 செ.மீ.; vi. இலவசம்; vii. திருமால் துயிலினின்று எழும் பொருட்டுப் பாடப் பெறும் பத்துப் பத்திப் பாடல்கள் கொண்டது. 'பள்ளியெழுந்தருளாயே' என ஒவ்வொரு பாடலும் முடிவுறுகின்றது ; viii. 178/1915/I.

Q 22:417x1,18

## 894·8111 பிற்காலக் காவியங்கள்

**ஆறுமுகஞ் சேர்வை, வி., செம்பூர், மதுரை ஜில்லா**

1343. i. அரிச்சந்திர புராண வசனம் : முதற் பதிப்பு ; ii. எஸ். சிவசங்கர செட்டி, சென்னை ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை ; iii. டிசம்பர், 1914, ; iv. உ.ப. 404 ; v. 21×13 செ.மீ. ; vi. 1-8-0 ; vii. உண்மையை இறுதி வரை கடைப் பிடித்து வந்த அரிச்சந்திரனின் கதையை உரை நடையில் ஆசிரியர் இந்நூலில் தருகிறார். நெல்லூர் வீரகவியார் பாடிய அரிச்சந்திர புராணச் செய்யுட்களைப் பெரும்பாலும் தழுவி இந்நூல் இயற்றப் பெற்றது. காலத்துக்கேற்ற வகையில் தாம் இக்கதையில் செய்த மாறுபாடுகள் முதலியவற்றை ஆசிரியர் தமது முகவுரையுள் விளக்கியுள்ளார். மேலும், முதற்கண் அமைந்துள்ள பொருள் அட்டவணையிலிருந்து ஆசிரியர் நூலமைப்பு நன்கு புலனாகும். viii. 631/1915/I.

O 31,1

**ரெங்கசாமி நாயுடு, தி., காஞ்சிபுரம்**

1344. i. ராம பராக்கிரமம் : முதற் பதிப்பு ; ii. ஆர். முருகேசப் பிள்ளை, புரசவாக்கம், சென்னை, பெரியநாயகி அச்சுக் கூடம், சென்னை ; iii. பிப்ரவரி, 1914 ; iv. உ.ப. 1+69 ; v. 21×14 செ.மீ.; vi. 0-6-0 ; vii. இராமாயண காவியத்தின் சுருக்கத்தைத் திரட்டித் தரும் நூல். இராமன் காடடைந்து, அரக்கரை அழித்து உலகைக் காத்த வரலாறு கூறப்படுகின்றது. இராமனின் வீரச் செயல்களும், மாருதியின் சிறப்புக்களும் விவரிக்கப்பட்டுள்ளன. நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்திலிருந்தும், கம்பராமாயணத்திலிருந்தும் ஆங்காங்கே மேற்கோள்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. அனைவரும் படித்தின்புறும் வகையில் தெளிவிய உரைநடையில் எழுதியுள்ளார். viii. 633/1914/I.

O 31, 1

**கச்சியப்ப சிவாச்சாரியார்**

1345. i. கந்த புராணம்—திருவவதாரப் படலம் : முதற் பதிப்பு. ii. ஆர். ஸி. சுப்பிரமணியம், திருச்சிராப்பள்ளி ; ரிவ்யூ பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. பிப்ரவரி, 1911 ; iv. உ. ப. 127 ; v. 25×16 செ.மீ. ; vi. ... . ...... ; vii. இது கச்சியப்ப சிவாச்சாரியார் பாடிய கந்தபுராணத்தில் திரு அவதாரப் படலத்தின் ஒரு பகுதி ; viii. 838/1911/I.

O31,1

**கம்பர்**

1346. i. கம்பராமாயணம் : பால காண்டம் முதல் சுந்தர காண்டம் வரை ; ii. அ. சுந்தரநாதம் பிள்ளை & பி. நா. சிதம்பரநாத முதலியார் ; வித்தியா ரத்நாகர அச்சுக் கூடம், சென்னை ; iii. 1911 ; iv. செ.மூ.எ. 6232 ; v. 22×14 செ.மீ. ; vi. 3-0-0 ; vii. கம்பராமாயணத்தின் முதலாவது காண்டமாகிய பாலகாண்டம் முதல் ஐந்தாவது காண்டமாகிய சுந்தர காண்டம் வரையிலும் இதில் உள்ளன. ஒவ்வொரு காண்டமும் தனித் தனிப் பகுதிகளாக, தனித்தனிப் பக்க எண்கள், முதலியவற்றுடன் அமைந்துள்ளன. பாடல் களை ஆய்ந்தவர் திரிசிரபுரம் மகா வித்வான் அமிர்தம் பிள்ளை மகன் சுந்தரநாதம் பிள்ளையாவர். அடிக்குறிப்பாக உரை விளக்கம் முதலியன அங்கங்கே சேர்க்கப்பட்டிருக்கின்றன; viii. 351/915/IV.

O31,1F

1347. i. கம்பராமாயணம் உயுத்த காண்டமும் உத்தரகாண்டமும்; ii. அ. சுந்தரநாதம் பிள்ளை & பொ. நா. சிதம்பரநாத முதலியார் ; வித்தியா ரத்நாகர அச்சுக் கூடம், சென்னை ; iii. 1911 ; iv. உ.ப. 4,355+1,510=5,865 ; v. 22×13 செ.மீ.; vi. 3-0-0 ; vii. கம்ப நாட்டாழ்வாரருளிச் செய்த இராமாயணத்தில் ஆறுவது காண்டமாகிய உயுத்த காண்டமும், ஏழாவது உத்தரகாண்டமும் இதில் உள. உத்தர காண்டத் தையும் கம்பநாட்டாழ்வார் செய்ததாகவே இப்பதிப்பு கூறு கிறது. பாடல்களை ஆய்ந்தவர் திரிசிரபுரம் அ. சுந்தரநாத பிள்ளை என்பாராவர். நாக பாசப் படலம், நிகும்பலைப் படலம் முதலியவற்றில் ஒரு சில பாடல்களுக்கு உரை விளக்கமும் சேர்க்கப்பட்டிருக்கிறது ; viii. 352/1915/IV.

O31,1F

**கல்லாடனார்**

1348. i. கல்லாடம் : முதற் பதிப்பு ; ii. எஸ். சிவசங்கர செட்டி, சென்னை ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை ; iii. ஜூன், 1911 ; iv. செ. மூ. உ. ப. 8+624+4 ;

v. 21×13 செ.மீ.; vi. 3-0-0; vii. திருக்கோவையாரின் துறைகளை உள்ளுறையாகக் கொண்டு, நூறு ஆசிரியப் பாக்களால் அமைந்த ஓர் அகப் பொருள் இலக்கியம். இதனுள் பெரும்பாலும் எல்லாப் பாடல்களும் மதுரைப் பதியைச் சிறப் பித்தும், மதுரைச் சொக்கேசரைச் சிறப்பித்தும், அவர் செய் தருளிய திருவிளையாடல்களைக் கூறியும் அமைந்துள்ளன. மயிலேறும்பெருமாள்பிள்ளை முதலிய புலவர்கள் எழுதிய உரைகளுடன் அவற்றை விளக்கி மகாவித்வான் காஞ்சி இராமானந்த யோகிகள் எழுதிய சிறப்பு உரையுடன் இது அமைந்துள்ளது; viii. 30/1911/III.

O31,1

குட்டிப் பிள்ளை (தொ. து.)

1349. i. அங்கதன் தூது: முதற் பதிப்பு; ii. வி. வெங்கடா சல சாஸ்திரி, பாலக்காடு; வித்தியாகல்பதரு அச்சுக் கூடம், பாலக்காடு iii. ஜனவரி, 1915; iv. செ.மூ. உ.ப. 24; v. 21×14 செ.மீ.; vi. 0-2-0; vii. வாலியின் மகன் அங்கதன் இலங்கைக்குத் தூது சென்ற இராமாயணக் கதையைக் கூறும் பாடல்கள் கொண்டது இந்நூல். உரையும் தரப்பட் டுள்ளது: viii. 290/1915/I.

O31,1

கோனரியப்ப முதலியார்

1350. i. உபதேச காண்ட மூலமும் பொழிப்புரையும், முதற சஞ்சிகை: முதற் பதிப்பு; ii. ப. தெய்வநாயக முதலியார், வல்லி; பிரசிடென்ஸி அச்சுக் கூடம், சென்னை; iii. ஏப்ரல், 1911; iv. செ.மூ. உ.ப. 64; v. 26×18 செ.மீ.; vi. 0-4-0; vii. கந்தபுராணத்தின் தொடர் பாகிய உபதேச காண்டத்தை இதழாக வெளியிடும் முயற்சியில் இது முதலாவது இதழ். ஈக்காடு இரத்தினவேலு முதலியார் எழுதிய பொழிப்புரையுடன் கூடியது: viii. 460/1911/II.

O31,1

1351. i. உபதேசகாண்ட மூலமும் பொழிப்புரையும்-2ஆவது சஞ்சிகை: முதற் பதிப்பு; ii. ப. தெய்வநாயக முதலியார், வல்லி; பிரசிடென்சி அச்சுக்கூடம், சென்னை; iii. மே, 1911; iv. செ. மூ. உ. ப. 64 (65—128); v. 25×18 செ. மீ.; vi. 0—4—0; vii.........; viii. 196/1911/III.

O31,1

1352. i. உபதேசகாண்ட மூலமும் பொழிப்புரையும்— மூன்று வது சஞ்சிகை ; ii. தெய்வநாயக முதலியார், வல்லி ; பிரசிடென்சி அச்சுக்கூடம், சென்னை ; iii ஜூலை, 1911 ; iv. செ. மூ. உ. ப. 64 (129-192) ; V. 25×18 செ. மீ.; vi. 0—4—0 ; vii.......... ; viii. 197/1911/III.

O31,1

1353. i. உபதேசகாண்ட மூலமும் பொழிப்புரையும்— 4ஆவது சஞ்சிகை : முதற் பதிப்பு ; ii. ப. தெய்வநாயக முதலியார், வல்லி ; பிரசிடென்சி அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1911 ; iv. செ. மூ. உ. ப. 64 (193-256) ; v. 25×18 செ. மீ.; vi. 0—4—0 ; vii...... ; viii. 776/1911/III.

O31,1

1354. i. உபதேசகாண்ட மூலமும் பொழிப்புரையும்-5ஆவது சஞ்சிகை: முதற் பதிப்பு ; ii. ப. தெய்வநாயக முதலியார், வல்லி ; பிரசிடென்சி அச்சுக்கூடம், சென்னை ; iii. செப்டம்பர், 1911 ; iv. செ. மூ. உ. எ. 64 (257-320) ; v. 25×18 செ. மீ. ; vi. 0—4—0 ; vii............ ; viii. 777/1911/III.

O31,1

1355. i. உபதேசகாண்ட மூலமும் பொழிப்புரையும் : முதற் பதிப்பு ; ii. ப. தெய்வநாயக முதலியார் ; பிரசிடென்சி அச்சுக்கூடம், சென்னை ; iii. அக்டோபர், 1911 ; iv. செ. மூ. உ. ப. 321 முதல் 384 முடிய 64 பக்கங்கள் ; v. 25×18 செ. மீ. ; vi. 0—4—0 ; vii. கந்தபுராணத்தின் தொடர்ச்சியாகிய உபதேச காண்டத்தின் ஒரு பகுதி இந்நூல். இது, ஆறுவது இதழ். ஈக்காடு இரத்தினவேல் முதலியார் எழுதிய பொழிப்புரை தரப்பட்டிருக்கிறது; viii. 113/1911/IV.

O31,1

1356. i. உபதேசகாண்ட மூலமும் பொழிப்புரையும்—7ஆவது சஞ்சிகை : முதற் பதிப்பு ; ii. ப. தெய்வநாயக முதலியார், வல்லி ; பிரசிடென்சி அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1911 ; iv. செ. மூ. உ .ப. 385 முதல் 448 முடிய ; v. 24×18 செ. மீ. ; vi. 0—4—0 ; vii. கந்தபுராணத்தின் தொடர்ச்சியாகிய உபதேச காண்டத்தின் ஒரு பகுதி. ஈக்காடு இரத்தினவேலு முதலியார் இயற்றிய பொழிப்புரையுடன் கூடியது. viii. 868/1911/IV.

O31,1

1357. i. உபதேச காண்ட மூலமும் பொழிப்புரையும்—8-ஆவது சஞ்சிகை : முதற் பதிப்பு ; ii. ப. தெய்வநாயக முதலியார், வல்லி ; பிரசிடென்சி அச்சுக்கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1911; செ. மூ. உ. ப. 449 முதல் 512 முடிய ; v. 25×15 செ. மீ.: vi. —4—0 ; vii. கந்தபுராணத்தின் தொடர்ச்சியாகிய உபதேச காண்டத்தின் ஒரு பகுதி. ஈக்காடு இரத்தின வேலு முதலியார் இயற்றிய பொழிப்புரையுடன் கூடியது; viii. 869/1911/IV.

O31,1

1358. i. உபதேச காண்ட மூலமும் உரையும்—9-ஆவது சஞ்சிகை : முதற் பதிப்பு ; ii. இரத்தினவேலு முதலியார், ஈக்காடு தெய்வநாயக முதலியார்; பிரஸிடென்ஸி அச்சுக் கூடம், சென்னை; iii. மார்ச், 1912; iv. செ. மூ. உ.ப. 56 ; v. 25×18 செ. மீ. ; vi. 0—4—0 ; vii. தொடர் வரிசையில் இது ஒன்பதாவது இதழ். ஈக்காடு இரத்தினவேல் முதலியார் எழுதிய பொழிப்புரையுடன் கூடியது; viii. 366/1912/II.

O31,1

1359. i. உபதேச காண்ட மூலமும் உரையும்—பத்தாவது சஞ்சிகை: முதற் பதிப்பு ; ii. இரத்தினவேலு முதலியார், ஈக்காடு & ப. தெய்வநாயக முதலியார்; பிரசிடென்ஸி அச்சுக்கூடம், சென்னை ; iii. மார்ச், 1912 ; iv. செ. மூ. உ. ப. 64, v. 25×18 செ. மீ. ; vi. 0—4—0 ; vii.......... ; viii. 367/1912/II.

O31,1

1360. i. உபதேச காண்ட மூலமும் உரையும்—11 ஆவது சஞ்சிகை : முதற் பதிப்பு ; ii. இரத்தினவேலு முதலியார், ஈக்காடு தெய்வநாயக முதலியார், வல்லி ; பிரசிடென்ஸி அச்சுக்கூடம், சென்னை ; iii. மார்ச், 1912 ; iv. செ.மூ.ப. 64 ; v. 25× செ. மீ.; vi. 0—4—0 ; vii.......... ; viii. 368/1912/II.

O31,1

1361. i. உபதேச காண்ட மூலமும் பொழிப்புரையும், சஞ்சிகை 12 : முதற் பதிப்பு ; ii. ப. தெய்வ நாயக முதலியார், வல்லி ; பிரசிடென்சி அச்சுக்கூடம், சென்னை ; iii. அக்டோபர், 1912 ; iv. செ. மூ. உ ப. 64 (697–760) ; v. 28×18 செ. மீ.; vi. 0—4—0 ; vii............. ; viii. 476/1912/IV.

O31,1

1362. i. உபதேச காண்ட மூலமும் பொழிப்புரையும், சஞ்சிகை-13 : முதற் பதிப்பு ; ii. ப. தெய்வ நாயக முதலியார். வல்லி ; பிரசிடென்சி அச்சுக்கூடம் ; iii. அக்டோபர், 1912 ; iv. செ. மூ. உ. ப. 64 (761-824) ; v. 25×18 செ. மீ. ; vi. 0—4—0 ; vii................ ; viii. 477/1912/IV.

O31,1

1363. i. உபதேச காண்ட மூலமும் பொழிப்புரையும், சஞ்சிகை-14 : முதற் பதிப்பு ; ii. ப. தெய்வ நாயக முதலியார், வல்லி ; பிரசிடென்சி அச்சுக்கூடம் ; சென்னை ; iii. அக்டோபர், 1912 ; iv. செ.மூ.உ.ப. 64 (825—888) ; v. 25×18 செ.மீ ; vi. 0—4—0 ; vii........ ; viii. 478/1912/IV.

O31,1

1364. i. உபதேச காண்ட மூலமும் பொழிப்புரையும், சஞ்சிகை-15 : முதற் பதிப்பு ; ii. ப. தெய்வநாயக முதலியார், வல்லி ; பிரசிடென்சி பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1912 ; iv. செ.மூ. உ. ப. 64 (889-952) ; v. 25×18 செ.மீ. : vi. 0—4—0 ; vii........ ; viii. 479/1912/IV.

O31,1

**சிதம்பரஞான தேசிகர் (தொ. து.)**

1365. i. மஹாபாகவதத்திரட்டு : முதற் பதிப்பு ; ii. கோ. வடிவேலு செட்டியார் அண்டு ஷண்முக முதலியார், சென்னை ; சச்சிதாநந்தம் பிரஸ், சென்னை, கோமளேசுவரன் பேட்டை : iii. பிப்ரவரி, 1915 ; iv. செ. மூ. எ. 718 ; v 18×11 செ. மீ. ; vi. 0—6—0 ; vii பாகவதத்தினைச் சுருக்கி ஆசிரியர் இந்நூலில் தந்திருக்கிறார். 12ஆவது ஸ்கந்தம் வரை தரப்பட்டுள்ளது. வேதாந்த தத்துவப் பொருள் பொதிந்த பாடல்களும் அறவுரைப் பாடல்களுமாக உள்ளன. viii. 762/1915/I.

O31,1

**சின்னத்தம்பி வாத்தியார்**

1366. i. ஆடல்ப்பற்று ; ii. தேரடி, வெங்கடாசல சாஸ்திரி ; வித்யாகல்பதரு அச்சியந்திர சாலை, கல்பத்தி ; iii, 1915 ; iv. செ. மூ. ப. 35 ; v. 21×14 செ. மீ. ; vi. 0—4—0 vii. இராமாயணத்திலுள்ள ஆரண்யகாண்ட-கிட்கிந்தா காண்ட கதைப்பகுதிகளை உட்கொண்டது. viii. 267/115/IV.

O31,1

1367. i. ஆடலப்பற்று ; ii. தேரடி வெங்கடாசலய்யர், வித்யா கல்பதரு அச்சுக்கூடம், கல்பாத்தி ; iii. 1915 ; iv. செ.மூ.ப. 20 ; v. 21×14 செ. மீ. ; vi. 0—3—0 ; vii. இராமாயணத்தில் சுந்தர காண்டமும், யுத்த காண்டத்தில் வீடணப் புத்தியும் மட்டும் உள்ளன. இம்முறையில் முன் காண்டங்களையும் இவர் செய்துள்ளார் என்பது இந்நூல் முதலில் உள்ள ' ஆடல் பற்று ஆறு காண்டமும்—மூலம் பாட்டுகள் ' எனவரும் விளம் பரப்பகுதியால் தெரியவரும். viii. 268/1915/IV.

O31,1

**சுப்பிரமணிய சிவாச்சாரியார்**

1368. i. கந்த புராண வசனச் சுருக்கம் : முதற் பதிப்பு ; ii. சி. எஸ். ராதா கிருஷ்ண அய்யர் ; லஷ்மி விலாசம் பிரஸ், கும்பகோணம் ; iii. ஜூலை, 1913 ; iv. உ. ப. 8+123 ; v. 18×13 செ. மீ. ; vi. 0—8—0 ; vii. முருகப் பெரு மானது பிறப்பையும் சூரபத்மா முதலிய அசுரர்களை அழித்த நிகழ்ச்சிகளையும், வள்ளி தெய்வயானை ஆகியோரைத் திருமணம் செய்தது முதலிய செய்திகளையும் விவரிப்பது. கச்சி யப்ப சிவாசாரியரின் செய்யுட் புராணம் எல்லார்க்கும் படித்தல் அருமையாதலின் உரை நடையில் ஆக்கியுள்ளார். உற்பத்தி காண்டம் முதல் தட்ச காண்டம் வரை ஆறு காண்டம் பற்றிய பகுதிகளும் உரைநடையில் உள்ளன. viii 358/19.3/III.

O31,1

**நெயினுன் முகம்மது பாவலர்**

1369. i. செய்யதத்துப்படைப்போர் வசன காவியம் : முதற் பதிப்பு ; ii. எம். எ. சாகுல் அமீது லப்பை ; ஷாகுல் ஹாமீதிய்யா அச்சியந்திரசாலை ; iii, ஜூன், 1914 ; iv. உ. ப. 105 ; v. 22×14 செ. மீ. ; vi. 0—12—0 ; vii. இசுலாமிய மதகுரு முகமதுவின் முதல் மாணவரின் மகனுன அப்துல் ரக்மானின் வீர வாழ்க்கை வரலாற்றைக் கூறும் நூல். இது, இசுலாமிய மதக் கோட்பாட்டை மீறிய அரசனை அடக்கி அவன் மகளை அப்துல் ரக்மான் மணந்த கதையாகும். 12 அத்தியாயங்களில் அமைந்துள்ளது. இது 'செய்யதத் துப்படைப்போர்' என்னும் காவிய புராணத்தை மூலமாகக் கொண்டு எழுதப்பட்ட நூலாகும். viii. 853/1914/III.

O31,1

பரஞ்சோதி முனிவர்

1370. i. திருவிளையாடற் புராணம் : முதற்பதிப்பு ; ii. ஸ்ரீதரன் கம்பெனி, சென்னை ; வாணிநிலையம் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர் , 1913 ; iv. உ.ப.+செ.மூ.ப. 345; v. 25 × 17 செ. மீ. ; vi. 0-5-6 ; vii. பரஞ்சோதி முனிவர் பாடிய திருவிளையாடற்புராணத்தின் உரைநடை நூல். இது சென்னை சம்பத்குமார் அண்டு கம்பெனியாரால் 1908ஆம் ஆண்டு தொடங்கி ' புராண மஞ்சரி ' என்னும் பெயரில் பகுதி பகுதி யாக வெளியிடப்பட்டுள்ளது. அவ் வெளியீடுகளின் முழுத் தொகுப்பே இந்நூல். இதனோடு புராண மஞ்சரியில் பாகவத புராணமும் வெளிவந்து கொண்டிருந்தது. ' துதிகவி களைச் ' செய்யுட்களாகவும் கதைப்பகுதியை உரைநடை யிலும் கொடுத்துள்ளார். அறுபத்தைந்து படலங்கள் உள்ளன. இதனைப் பார்வையிட்டுப் பதிப்பித்தவர் ஆ. சிங்காரவேலு முதலியார் என்று தெரிகின்றதே அன்றி, உரை எழுதிய ஆசிரியர் பெயர் தெரியவில்லை. viii. 433/1913/IV.

O31,1

புகழேந்திப் புலவர்

1371. i நளவெண்பா—மூலமும் உரையும் ; முதற் பதிப்பு ; ii. கா. ர. கோவிந்தராஜ முதலியார், மதராஸ் ரிப்பன் அச்சி யந்திரசாலை ,சென்னை ; iii. டிசம்பர், 1914 ; iv. செ. மூ. உ. எ. 442 ; v. 17 × 13 செ. மீ. ; vi. 1-0-0 ; vii. பாரதக் கதையுள் ஒன்றாகிய நளன்தமயந்தி கதையை வெண்பாக் களால் விளக்கப்பட்டிருக்கின்றது. பொருளுரையும் விளக்கவுரை யும் தரப்பட்டிருக்கின்றன. புகழேந்திப் புலவர் வரலாறும் இதில் கொடுக்கப்பட்டுள்ளது.இந்த உரையை ஆக்கியவர் மகாவித்துவான் கோ. இராசகோபாலப் பிள்ளை என்பவராவார். viii. 632/1915/I.

O31,1

1372. i. நளவெண்பா; ii. ஜி. தாமோதர முதலியார், பி. ஆர். இராம ஐயர் அண்டு கோ. iii. 1915; iv. செ. மூ. உ. எ. 150; v. 18 × 13 செ. மீ.; vi. 0-4-0 ; vii. நளவெண்பாவின் சுயம்வர காண்டம் மட்டும் இந்நூலில் அமைந்துள்ளது. இதில் ஒவ்வொரு பாடலுக்கும் தெளி பொருளுரையும் ஒரு சேரப் பாடல்களின் பின் இணைப் பாகத் தரப்பட்டிருகிறது. நூலாசிரியரைப்பற்றிய குறிப் புகளும் நூல் முதலில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 612/1915/III.

O31,1

1373. i. மருந்துப்படலம் மூலமும் உரையும் ; ii. தேரடி. வெங்கடாசல அய்யர், கல்பாத்தி ; வித்தியாகல்பதரு அச்சுக்கூடம், கல்பாத்தி ; iii. 1915 ; iv. செ. மூ. உ.எ. 40 ; v. 22 × 14 செ. மீ. ; vi. 0-2-0 ; vii. கம்பராமாயணத்தில் யுத்த காண்டத்தின் முழுப் பகுதியை விளக்குகிறது இந்நூல். அனுமன் மருந்து மலை கொண்டுவந்து இலக்குவன் முதலியோரையும் குரங்குப்படைகளையும் காப்பாற்றிய வரலாறு உரைப்பது. viii. 276/1915/III.

O31,1

வரதராஜ முதலியார், கா.

1374. i. கம்பராமாயண வசனம் : முதற் பதிப்பு ; ii. வரதராஜ் முதலியார், கா. ; பியர்லெஸ் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1914 ; iv. உ.ப. (465 முதல் 604 வரை) v. 21 × 14 செ. மீ. ; vi. 1-8-0 ; vii. இராமனின் பிறப்பு முதல் முடிசூடும் வரையில் அமைந்த கதையைப் பால காண்டம், அயோத்தியாகாண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தரகாண்டம், உயுத்தகாண்டம் என்னும் ஆறு காண்டங்களாகப் பிரித்து எழுதப்பட்டுள்ளது. இந்நூல் முதலில் இதழ் வடிவில் வந்தது என்றும் திரு. இராமாநுச நாயுடு அவர்கள் இந்நூல் எழுத ஆசிரியருக்கு உறுதுணையாக இருந்தார் என்றும் ஆசிரியரின் முகவுரை தெரிவிக்கிறது. viii. 800/1914/III.

O31,1

வில்லிபுத்தூரார்

1375. i. கிருஷ்னன் தூது சருக்கம் (வில்லி பாரதம்) : முதற் பதிப்பு ; ii. பி. கே. ஸ்ரீநிவாஸாசாரி ; சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர் ; iii. மே. 1915 ; iv. செ. மூ. உ. ப. 227 ; v. 21 × 14 செ. மீ. ; vi. 0-10-0 ; vii. சென்னைப் பல்கலைக்கழகப் படிப்பிற்கான தமிழ் இலக்கிய நூல். வில்லிபுத்தூராரால் இயற்றப்பெற்ற பாரதத்தில் கண்ணன் தூது சென்ற கதையை விளக்கும் 227 பாடல்கள் இதில் இடம் பெற்றுள்ளன. பாடல்களுக்கான பொழிப்புரையும் இதில் உள்ளது. இதனை அமைத்தவர்கள் வி. சு. ஸ்ரீநிவாச அய்யங்காரும், பி. கே. ஸ்ரீநிவாசாச்சாரியாரும் ஆவர். வில்லிபுத்தூரார் வரலாறும் முன்கதையும் நூல் முதலில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ; viii. 447/1915/II.

O31,1

1376. i. கிருட்டினன் தூது சருக்கம் : முதற் பதிப்பு ; ii. ப. க ஸ்ரீனிவாஸசாரியார், வேலூர் ; சுந்தரவிநாயகர் அச்சுக்கூடம், வேலூர்; iii. ஜூலை, 1913 ; iv. செ.மூ. எ. 6+264 ; v. 21 × 14 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. வில்லிபுத்தூரர் பாடிய பாரதத்தின்

கிருட்டிணன் தூதுச்சருக்கத்தின் பகுதி உள்ளது. பாரதத்தில் முதற்கண் அவர் பாடிய காப்பும் நூற் சிறப்புப் பாயிரமும் அவரது மகன் வரன்தருவார் பாடிய சிறப்புப் பாயிரத்துள்ள தமிழ் வணக்கப் பாடலும் முதலில் கொடுக்கப்பட்டுள்ளன. இச் சருக்கம் உத்தியோக பருவத்தில் நான்காவது சருக்கமாகும் ; பாண்டவர் பொருட்டுக் கண்ணன் துரியோதனனிடம் தூதுசென்று மீண்ட வரலாறு சொல்லப்படுகிறது. viii. 348/1913/III.

O 31,1

**வில்லிபுத்தூரார் & சமண முனிவர்கள்**

1377. i. பாரதமும் நாலடியாரும் : முதற் பதிப்பு ; ii. எஸ். கிருஷ்ணமாச்சாரியார், கணேசா பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1912 ; செ. மூ. உ.ப. 250 ; v. 22 × 14 செ. மீ. : vi. 2-0-0 ; vii. வில்லிபாரதத்தின் உத்தியோக பருவத்திலுள்ள கிருட்டிணன் தூதுச்சருக்கம் முழுவதும் உரையுடன் உள்ளது. இவ்வுரை செ. கிருஷ்ணமாச்சாரியாரால் எழுதப் பெற்றது. இதனோடு நாலடியார் பொருட்பாலில் அறிவின்மை, நன்றியில் செல்வம், ஈயாமை, இன்மை, மானம் என்னும் ஐந்து அதிகாரங்களுக்கு உரையும் உள்ளது. இது 1913ஆம் ஆண்டு இடைநிலை வகுப்புத் தேர்வுக்கான பாடநூலாக அமைக்கப்பெற்றதாகும் ; viii. 580/1912/I.

O 31,1

**வீரராகவய்யங்கார், எம்.கெ. (மொ.நூ.)**

1378. i. ஸ்ரீபாகவதம்—தசமஸ்கந்தம் 5-வது சஞ்சிகை : முதற் பதிப்பு ; ii. பாஸ்கர் அண்டு கம்பெனியார், சென்னை ; எடவர்ட் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஏப்ரல், 1911 ; iv. உ.ப. 32 ; v. 22 × 14 செ. மீ. ; vi. 0-2-0 ; vii. வடமொழிப் பாகவதத்தின் 'தசமஸ்கந்த' மொழி பெயர்ப்பு. இதழாக வெளியிடுவதில் ஐந்தாவது இதழ். கண்ணனது வரலாற்றை விரிவாக உரைப்பது ; viii. 347/1911/II.

O 31,1

**வேலுச்சாமிப் பிள்ளை, தி.சு., காஞ்சிபுரம்**

1379. i. கந்த புராண வெண்பா ; முதற்பதிப்பு ; ii. தி. சு. வேலுச்சாமிப் பிள்ளை, காஞ்சீபுரம் ; ராமநிலைய விவேகாநந்த அச்சியந்திர சாலை, சென்னை ; iii. 1913 ; iv. செ. மூ. எ. 5,665 ; v. 23 × 13. செ. மீ. ; vi. 2-0-0; vii. இவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் மாணவர். இது, முருகன் பிறப்பையும், அவரது வேறு சிறப்புக்

களையும் கூறும் ஒரு நூல். கந்தபுராணத்தின் ஆறு கண்டங்களும் வெண்பாவால் பாடப்பட்டுள்ளன. நூற்று நாற்பத்தொரு படலங்கள் இந்நூலில் உள்ளன. ஒரு சில அருஞ்சொற்களுக்கு விளக்கமும் இந்நூலில் உள்ளது. திருவாவடுதுறை ஆதீனம் பழனிக்குமார சுவாமிகள், சுப்பிரமணிய சுவாமிகள் என்னும் இருவரும் முறையே இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரமும், அரங்கேற்றச் சிறப்புப் பற்றியும் பாடியுள்ளார்கள். அப்பாவு பிள்ளை என்பார் இதற்கு முகவுரைப் பாசுரம் பாடியுள்ளார். viii. 822/1913/IV.

O 31,1

## 894·8111 தமிழ்க் கவிதை : சிற்றிலக்கியங்கள்

### அகவல்

**ஔவையார்**

1380. i. விநாயகரகவல் : முதற்பதிப்பு [வேழமுகம், உலகநீதி] ; ii. சி.வி. கிருஷ்ணசாமி முதலியார், காஞ்சிபுரம் ; சித்தி விநாயகர் அச்சுக்கூடம், சென்னை ; iii. செப்டம்பர், 1913 ; iv. செ.மூ. ப. 6 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. சுந்தரமூர்த்தி நாயனாரோடு சேரமான் பெருமாள் நாயனாரும் கயிலாயத்திற்குச் சென்றபோது, ஔவையார் இந்த அகவலைப்பாடி விநாயகரை வழிபட்டு அப்பெருமான் அருளால் அவர்களுக்கு முன்னரே கயிலாயம் போய்ச்சேர்ந்தார் என்பது வரலாறு. இந்த அகவலில் யோகநிலைப் பற்றி விவரிக்கப்பட்டுள்ளது. viii. 13/1913/IV.

O 31,1

**கருப்பசாமி கவிராஜர், கெ., சாமநத்தம்**

1381. i. ஸூர்யனகவல் : முதற்பதிப்பு ; ii. வி.எம். பெருமாள் நாயகர் ; சைவப்பிரகாசா அச்சியந்திரசாலை, தூத்துக்குடி ; iii. மே. 1915, ; iv. செ. மூ. ப. 9 ; v. 14×11 செ.மீ. ; vi. ................ ; vii. சூரியவணக்கப் பாடல் ; சூரியனின் சிறப்புகளைக் கூறி, அவனை வணங்கும் முறையையும் காட்டுகிறது. எட்டையபுரம் சமஸ்தானம் தெற்கு வீரபாண்டியபுரம், வி.எம். பெருமாள் நாயக்கர் என்பாரின் வேண்டுகோட்படி இயற்றப்பட்டது; viii. 673/1915/II.

O 31,1

கோட்டைய நாயகர்

1382. i. காமாக்ஷியம்மை அகவல் : முதற் பதிப்பு ; ii. ஏ. சுப்பிர மணிய நாயகர் ; மதுகர வேணி பிரஸ், வேப்பேரி, மதராஸ் ; iii. மார்ச் 1912 ; iv. செ.மூ.ப.16 ; v. 13×10 செ.மீ. ; vi........., vii. காஞ்சீபுரம் திருக்காம கோட்டத்தில் கோயில் கொண்டு விளங்கும் காமாட்சி அம்மையை வழிபடும் பாடல். அம்மையின் கருணைச் செயல்களும் பிற சிறப்புக்களும் மிகவும் பாராட்டப்பட்டுள்ளன; viii. 612/1912/II.

O 31,1

சிவராம பிள்ளை, தி.ப., திருநெல்வேலி

1383. i. தக்ஷிணாமூர்த்தி. யகவல் [தக்ஷிணாமூர்த்தி பதிகம்] முதற் பதிப்பு ; ii. பி. பி நாராயணசாமி நாயுடு, சைவ வித்யாநு பாலன யந்திரசாலை, சென்னப்பட்டணம்; iii. மே, 1913 ; iv. செ.மூ.ப. 147 அடிகள் ; v. 16×11 செ.மீ. ; vi. இலவசம் ; ii. சிந்து பூந்துறையில் விளங்கிய தட்சணாமூர்த்தி சுவாமியைப் பற்றிய வழிபாட்டுப் பாடல். திருவாசகத்தில் வரும் போற்றித்திருவகவல்' போன்ற அமைப்பில் உள்ளது. தட்சணா மூர்த்தி ஆசிரம மடத்துத் தலைவரான வேதநாயக சுவாமிகளின் விருப்பின்படி இயற்றி, 23—1—1913-ல் அரங்கேற்றம் செய்யப்பட்டது viii. 597/1913/II.

O 31,1

சோமசுந்தரம் உடையார், கடகம், மாயூரம்

1384. i. ஸரஸ்வதி அகவல், முதற்பதிப்பு ; ii. சோமசுந்தர உடையார், கடகம், மாயூரம் ; வால்மீகி பிரஸ், மாயூரம் ; iii. ஜனவரி, 1914 ; iv. செ.மூ.ப. 14 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. கலைமகள் வழிபாட்டுப்பாடல் நூல் ; கலைமகளின் பெருமையைக் கூறி, வரம் வேண்டும் வகையில் இது அமைந்துள்ளது. இதனைத் தாம் பத்திப்பெருக்கால் பாடியதாகவும், இதனை நாடோறும் படித்து மனனம் செய்பவர்களுக்கு அன்பும், அருளும், கல்விப் பெருக்கும் உண்டாகும் என்றும் ஆசிரியர் தமது நூல் முகப்பில் கூறியுள்ளார். மாயவரம் வேலாயுத முதலியார், பிரம்பூர் டி.எஸ். துரைசாமி உடையார், ஐ. மயூரநாத தேசிகர் ஆகியோர் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். இந்நூலைத்தவிர ராஜ வெண்பா, போதனு விளக்கம், இரட்டை மணி மாலை என்னும் நூல்களையும் நூலாசிரியர் இயற்றியிருப்பதாகத் தெரியவருகிறது; viii. 388/1914/I

O31,1

**நல்லகாளிப்பண்டாரம், பி., சிறுமுகை**

i. மாரியம்மன் அகவற்பா: முதற் பதிப்பு (தொ. எ. 1790 பார்க்க); ii. என். வையாபுரிப் பிள்ளை பள்ளிபாளையம், கிருஷ்ண விலாச அச்சியந்திரசாலை, கோயமுத்தூர்; iii. மார்ச்சு, 1913; iv. செ. மூ. ப. 13 முதல் 34 முடிய; v. 22×14 செ.மீ.; vi. இலவசம்; vii. மேனாட்டுக் குள்ளந்துறைக் கோட்டை மாரியம்மன் கோயிலில் திருவுருவை நிறுவிக் குடமுழுக்கு நிகழ்த்திய விழாச் சிறப்பைக் கூறுவது இவ்வகவற்பா. இந்நிகழ்ச்சிகளுக்குத் துணை செய்தார் யார் யார் என்பதும் இவ்விழாச்சிறப்பு முதலியவையும் வருணிக்கப்பட்டுள்ளன. "மாரியம்மன் திருப்பணி மிராசு பாத்தியம்" என்னும் நொண்டிச் சிந்துப் பாடலும் இதில் உள்ளது; viii. 808/1913/III.

O31,1

**நாராயணசாமி ஐயர், ஆ., பின்னத்தூர்**

1385. i. இராமாயண அகவல், எழு காண்டமும்: முதற் பதிப்பு; ii. டி. கிருஷ்ணசாமி அய்யர், கும்பகோணம்; ஸ்ரீ கிருஷ்ண பிரஸ், கும்பகோணம்; iii. மார்ச், 1914; iv. செ.மூ.ப. 2+31; v. 19×12 செ.மீ.; vi. 0–3–0; vii. இராமன் வரலாற்றைச் சுருக்கமாக அகவற் பாட்டில் தருவது இந்நூல். இராமாயணம் எழு காண்டத்திலுள்ள கதைப் பகுதிகள் இதில் அமைந்துள்ளன. இடையிடையே கதைப் பகுதிகளுக்கு ஏற்ற தலைப்புக்கள் தரப்பட்டுள்ளன. அருஞ்சொற் பொருளும் இதில் சேர்க்கப்பட்டுள்ளது; viii. 1095/1914/I.

O31,1

i. வெள்ளைப் பிள்ளையார் அகவல்: [தொ. எ. 616 பார்க்க.] ii. ப. அருஞ்சுனைமுத்து நாடார், சிவ. பெ. சிவனனந்த பெருமாள் நாடார், திருச்சுழி; கலாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை; iii. அக்டோபர், 1911; iv. செ.மூ. 166 அடிகள்; v. 14× 11 செ.மீ.; vi. 0–0–6; vii. ஒளவையார் பாடிய விநாயகர் அகவலைப் போன்ற அமைப்புடையது. அருணகிரியாரைப் போலக் கவி மழை பொழிய வாக்கு அருள வேண்டுமென்று ஆசிரியர் வேண்டுகிறார். viii. 165/1911/IV.

O31,1

## அந்தாதி

### அபிராமி பட்டர்

1386. i. அபிராமியந்தாதி மூலமும் உரையும் : முதற் பதிப்பு; ii. அ. மஹாதேவ செட்டியார், அக்கம்மாள்பேட்டை ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. அக்டோபர், 1912 ; iv. செ.மூ. உ.எ. 1+100+1 ; v. 16×13 செ.மீ. ; vi. 0–5–0; viii. திருக்கடவூரில் கோயில் கொண்டிருக்கும் அபிராமி அம்மையைப்பற்றிய அந்தாதி. இது சொல் நோக்கமும் பொருள் நோக்கமும் உடைய சிறந்த வழிபாட்டு நூல். காஞ்சீபுரம் இராமானந்த யோகி இயற்றிய விருத்தியுரையுடன் கூடியது. ஒவ்வொரு பாடலுக்கும் சொற்பொருள், பொழிப்புரை, கருத்துரை, சிறப்புரை என நான்கு பகுதிகள் உள்ளன. இவ்வுரை திருநெல்வேலி முருகேச முதலியாரால் செய்யப்பட்ட உரையைப் பின்பற்றியது. இறைவியின் அருளைப் பெற விரும்புவோரெல்லாம் ஓதுதற்குரிய பெருமையை உடையது இந்நூல். viii. 538/1912/IV.

O31,1

1387. i. அபிராமியந்தாதி: முதற் பதிப்பு; ii. ம.கதிர்வேற் பிள்ளை; வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை ; iii. மார்ச் 1913; iv. செ.மூ. உ.எ. 101 ; v. 16×12 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. அபிராமி பட்டர் திருக்கடவூரில் விளங்கும் அபிராமியம்மை கோயில் வழிபாடு செய்பவர். இறைவியிடம் பெரும் பத்தி கொண்டு இந்த அந்தாதிப் பாமாலையைப் பாடியுள்ளார். இவரது வரலாறு நூல் முகப்பில் உள்ளது. இவர் தஞ்சை சரபோசி அரசர் காலத்தில் வாழ்ந்தவர். இந்நூலுக்கு ம. கதிர் வேற் பிள்ளை என்பார் இயற்றிய உரை கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 369/1913/II.

O31,1

### அருணகிரிநாதர்

1388. i. கந்தரந்தாதி மூலமும் உரையும் : முதற் பதிப்பு ; ii. தி. சபாபதி பிள்ளை, ஸ்ரீ மட்டுவார் குழலாம்பாள் அச்சுக் கூடம், திருச்சிராப்பள்ளி ; iii. டிசம்பர் 1910 ; iv. செ.மூ.உ.எ. 100 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–6–0; vii. அருணகிரியார் முருகன் மீது பாடிய இந்த வழிபாட்டு மாலைக்கு, அவர்

காலத்தில் வாழ்ந்த வில்லிபுத்தூரார் உரை செய்தார் என்று கூறுவர். வில்லிபுத்தூரார் உரை செய்த உரை சுவடிகளிலிருந்த பிழைகள் பலவற்றை நீக்கி, அச்சிடப் பட்டது. பதிப்பாசிரியர், சொற்பொருள், கருத்துரை என்று தலைப்பிட்டு உரையைப் பதிப்பித்துள்ளார். viii. 82/1911/I.

O 31,1

1389. i. கந்தரந்தாதி மூலமும் உரையும் ; ii. இராமானந்த யோகிகள், ரிப்பன் பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. செ. மூ. உ.எ. 100 ; v. 16×13 செ.மீ. ; vi. 0-5-0 ; vii. அறுமுகனை வழிபடும் நூல். வில்லிபுத்தூரார் உரையுடன் உள்ளது. இவ்வுரை சொற்பொருளும் கருத்துரையுமாக அமைந்துள்ளது. உள்ளத்தை உருக்கும நூறு பத்திப் பாடல்களைக் கொண்டது. viii. 654/1915/IV.

O 31,1

**இராஜப்ப நாவலர், பஞ்சலட்சண சரபம்**

1390. i. சித்திநகரந்தாதி : முதற் பதிப்பு ; ii. தி. வடிவேலு முதலியார், இச்சினர் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. மார்ச், 1913 ; iv. செ. மூ. எ. 3+1+94 ; v. 20×11 செ. மீ.; vi. 0-0-6 ; vii. சித்திலிங்க மடம் என வழங்கும் சித்திநகரத்து இறைவன் மீது பாடப்பெற்ற அந்தாதி நூல். கட்டளைக் கலித்துறைச் செய்யுளால் ஆகியது. பூவை. கலியாணசுந்தர முதலியார், திருவெண்ணெய் நல்லூர் கம்பர் கலாமிர்த சங்கத்தைச் சார்ந்த தி.ந. சுப்பிரமணிய முதலியார், தி.நரசிம்ம பாகவதர் ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புக் கவிகள் பாடியுள்ளனர். viii.274/1913/II.

O 31,1

கம்பநாட்டாழ்வார்

1391. i. சரஸ்வதியந்தாதி மூலமும் உரையும் ; முதற் பதிப்பு [கம்பநாட்டாழ்வார் சரித்திரம்] ; ii. எஸ். சிவசங்கர செட்டி, சென்னை; மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடம் ; iii. அக்டோபர், 1913 ; iv செ.மூ. உ.எ.30; v.16×12 செ.மீ.; vi. 0-5-0; vii. கலைமகளை வழிபடும் 30 பாடல்கள் கொண்ட அந்தாதி. க.ரா. கோவிந்தராச முதலியார் இதற்கு உரை எழுதியுள்ளார். கம்பரது வரலாறு விரிவாக இதில் தரப்பட்டுள்ளது. viii. 460/1913/IV.

O 31,1

1392. i. சரஸ்வதியந்தாதி : முதற்பதிப்பு ; ii. எஸ். கிருஷ்ண மாச்சாரி, சென்னை ; கணேச அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1914 ; iv. செ.மூ.உ.எ., 2+30 ; v. 22 × 14 செ.மீ.; vi. 0-3-0 ; vii. கலைமகள் மீது பாடப் பெற்ற அந்தாதிப் பாடல்கள் கொண்ட நூல் இது. நூல் முதலில் கம்பரின் வரலாறு கூறப்பட்டுள்ளது ; மூலத்தோடு உரையும் தரப்பட்டுள்ளது. viii. 539/1914/IV.

O31,1

மாரப் பெருமாள்சாமி, பாப்பை நகர்

1393. i. வாலையந்தாதி [நட்டாத்தி மாலை, மாணிக்க மாலை, மனோன்மணி மாலை] ; ii. இராம. குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. செப்டம்பர், 1911 ; iv. செ.மூ.எ. 5+100 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. உமையம்மையைக் குறித்துப் பாடப் பெற்றது. கலித்துறைப் பாவில் அமைந்தது. viii. 9/1911/IV.

O31,1

ண்முக முதலியார், மோகூர்

1394. i. வட திருமுல்லைவாயில் மாசிலாமணி ஈசுவரர் வெண்பா வந்தாதி: முதற் பதிப்பு ; ii. எ. கந்தசாமி முதலியார், அணவை ; கிச்சினர் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. செப்டம்பர், 1911 ; iv. செ.மூ.எ. 9+1+100+1 ; v. 18×11 செ.மீ. ; vi. இலவசம் ; vii. மாசிலாமணி ஈசுவரர் வழிபாட்டுப் பாடல்கள் அமைந்த சிற்றிலக்கியம், வட திருமுல்லைவாயில் தல மான்மியம் இதன் இறுதியில் தரப் பெற்றிருக்கிறது. வட மொழிப் புராணப்படி த.வா. திருவேங்கட நாயுடு என்பார் தமிழில் மொழி பெயர்த்து அச்சிட்ட உரைநடைப் புராணமும், வித்துவான் திரு மயிலை சண்முகம் பிள்ளை அவர்கள் பாடிய செய்யுட் புராணமும் உள்ளன. viii. 214/1911/IV.

O31,1

சிவராமலிங்கம் பிள்ளை (முருகதாசக் கவிராயர்), குலசேகரபுர மென்னும் உயரவினை நகர்

1395. i. திருமலைக் கந்தரந்தாதி : முதற் பதிப்பு ; ii. சிவராம லிங்கம் பிள்ளை, குலசேகரபுரமென்னும் உயரவினைநகர்; நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி ; iii. எப்ரல், 1911 ; iv. செ.மூ.எ. 7+100 ; v. 16×12 செ.மீ. ; vi. 0-1-0 ; vii. செங்கோட்டையை அடுத்துள்ள திருமலையின் கண் விளங்கும் முருகப் பெருமானைப் பற்றிய வழிபாட்டுநூல். இது கலித்துறை அந்தாதி. இதற்குத் தேரூர்த் தேசிகவிநாயகம் பிள்ளை சாத்துக் கவி பாடியுள்ளார். viii. 483/1911/II.

O31,1

**சிவாநந்தசாகர யோகீச்வரர், அ.**

1396. i. திருச்செந்தில் வெண்பா வந்தாதி ; ii. ஸ்ரீ பாலசுப்பிர மணியம் கம்பெனி, சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. செ.மூ.எ. 100 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. திருச்செந்திலில் விளங்கும் கந்தனைப் போற்றி எழுதப் பெற்ற பாடல்கள் கொண்டது. இது ஒரு வெண்பா அந்தாதி. viii. 145/1915/I.

O 31,1

**சின்னத்தம்பிப் புலவர், யாழ்ப்பாணத்துநல்லூர்**

1397. i. கல்வளையந்தாதி மூலமும் பழைய உரையும் : முதற் பதிப்பு ; ii. எஸ். அனவரத விநாயகம் பிள்ளை, எஸ். சிவசங்கர செட்டி, சென்னை ; மதராஸ் ரிப்பன் அச்சியந் திரசாலை, சென்னை ; iii. செப்டம்பர், 1913 ; iv. செ.மூ. உ.எ. 2+100 ; v. 16×13 செ.மீ. ; vi. 0–5–0 ; vii. இது இலங்கை யிலுள்ள சண்டிருப்பாயில் விளங்கும் கல்வளைப் பிள்ளை யார் மீது பாடப்பட்ட நூறு கலித்துறை அந்தாதிப் பாடல்களைக் கொண்டது. இது தமிழ் கற்கப் புகும் மாணவர்கள் முதன் முதலாகக் கற்கத் தகுந்த நூல்களுள் ஒன்று. இவ்வாசிரிய ரால் இயற்றப்பட்ட மறை சையந்தாதியை விட உரை செய்வதற் குக் கடினமான சொற்களைக் கொண்ட பாடல்கள் இதில் உள்ளன. பழைய உரை கொண்டு அமைந்தது ; உரையாசிரி யரின் பெயர் குறிப்பிடப்படவில்லை . இந் நூலாசிரியர் வில்லவ ராயர் மகன் என்றும், 1886ஆம் ஆண்டுக்குப் பிறப்பட்டவர் என்றும் நூல் முன்னுரையிலிருந்து தெரிய வருகிறது. இந் நூலுக்குச் 'செம்பொற்குவட்டினில்' எனத் தொடங்கும் சிறப்புப்பாயிரம் ஒன்றும் இந்த நூல முகப்பிலுள்ளது. viii 458/1913/IV.

O31,1

1398. i. மறைசையந்தாதி—மூலமும் பழைய உரையும் : முதற் பதிப்பு ; ii. எஸ். அனவரத விநாயகம் பிள்ளை எஸ். சிவசங்கர செட்டி, சென்னை ; மதராஸ் ரிப்பன் அச்சியந் திரசாலை, சென்னை ; iii. 1912 ; iv. செ.மூ.உ.எ. 1+100 ; v. 16×12 செ.மீ.; vi. 0–5–0 ; vii. திருமறைக்காட்டில் கோயில் கொண்டருளிய இறைவன் மீது பாடப்பட்ட நூறு செய்யுட்களைக் கொண்ட கலித்துறை அந்தாதி. தமிழ் கற்கப் புகும் மாணவர் முதலாவதாகக் கற்கப் புகும் நூல்களில் ஒன்று இந் நூல். இவ் வந்தாதிக்கு உடுப்பிட்டி ஆ. சிவசம்புப் புலவர் என்பவர் உரை எழுதியுள்ளார். இதைத் தவிர மதுரை வித்துவான் சபாபதி முதலியார் உரை ஒன்றும் இந் நூலுக்கு உள்ளது. இந் நூலின் முன்னுரையில் காணப்படும் ஆசிரியர் வரலாறு, யாழ்ப்பாணம் ஆ. சதாசிவம் பிள்ளை எழுதிய பாவலர் சரித்திர தீபகம் என்னும் நூலிலிருந்து எடுத்தாளப்பட்டுள்ளது. இந்

நூலின் உரை நயத்தைப் பற்றி அப்போது வெளிவந்த உதைய தாரகை என்னும் இதழில் திறனாய்வு நிகழ்த்தப் பெற்றுள்ளதாக இந் நூலின் பதிப்பாசிரியர் எஸ். அனவரத விநாயகம் பிள்ளை முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். viii. 459/1913/IV.

O31,1

**சுப்பையா சுவாமிகள்**

i. திருக்கொற்றவாளீசரந்தாதி (தொ.எ.) 1399. பார்க்க; ii. அ. வெ. வெங்கடாசலஞ் செட்டியார்; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. டிசம்பர், 1910; iv. செ.மூ.எ. 1+100; v. 18×11 செ.மீ.; vi. இலவசம்; vii. இது வெண்பா அந்தாதி. viii. 128/1911/I.

O31,1

1399. i. திருநெல்லையந்தாதி [திருக்கொற்றவாளீசரந்தாதி]; ii. அ. வெ. வெங்கடாசலஞ் செட்டியார்; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. டிசம்பர், 1910; iv. செ.மூ.எ. 1+100+1; v. 18×11 செ.மீ.; vi. இலவசம்; vii. இது கலித்துறை அந்தாதி. viii. 128/1911/I.

O31,1

**சுல்தானபதுல்காதிறு, மு.செ., பிறையாறு**

1400. i. காரையந்தாதி: முதற் பதிப்பு; ii. இ.கே. மரைக்கார், அக்யாப்; கமலா பிரஸ், மாயவரம்; iii. ஜூன், 1915; iv. செ.மூ.எ. 100; v. 16×13 செ.மீ.; vi. 0–2–0; vii. அந்தாதி நடையில் இசுலாமியப் பெரியார் ஒருவர் பெருமைகளை விளக்கும் 100 பாடல்கள் கொண்டது. கட்டளைக் கலித்துறைப்பாவினால் ஆகியது. பாட்டுடைத் தலைவர் காரைக்காலில் வணங்கப்படுகிறார். அகப் பொருட்டுறையில் அமைந்த பாடல்களே இதில் பெரும்பாலாகவுள்ளன. இந் நூலாசிரியரின் ஆசிரியர் அ. முத்துத்தாண்டவராயப் பிள்ளை முதலியோர் இதற்குச் சிறப்பாயிரம் பாடியுள்ளனர். viii. 672/1915/II.

O31,1

**சொக்கலிங்க தேவர்**

1401. i. திருச்செந்திலந்தாதி: முதற் பதிப்பு; ii. கே.வி. கருப்பையா பாவலர்; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. செப்டம்பர், 1913; iv. செ.மூ.எ. 1+100; v. 22×14 செ.மீ.; vi. 0–1–0; vii. திருச்செந்தூரில் கோயில் கொண்டு விளங்கும் முருகக் கடவுளைப் பற்றிய வழிபாட்டு நூல். இது ஒரு கலித்துறையந்தாதி. அ. அருணனந்த சுவாமிகள், சுப்பிரமணியப் புலவர் முதலியோர் பாடிய சாத்துக் கவிகள் உள. இந் நூலை அச்சிட உதவிய சீநிவாச நாயகர் பேரில் இந் நூலாசிரியர் வியந்து கூறிய ஐந்து விருத்தப் பாடல்களும் உள. viii. 27/1913/IV.

O31,1

1402. திருச்சுழியல் வெண்பா அந்தாதி : முதற் பதிப்பு ; ii. பி. ஆர். கிருஷ்ணமாச்சாரியார் ; கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஏப்ரல், 1912 ; iv. செ.மூ.உ.எ. 1+100+1 ; v. 22×14 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. திருச்சுழியில் விளங்கும் சிவபெருமானைப் பற்றிய புகழ்மாலை. இது வெண்பா வால் ஆகிய அந்தாதி நூல். இதற்குப் பண்டிதர் பி.ஆர். கிருஷ்ணமாச்சாரியார் என்பவர் உரை எழுதி அச்சிட்டுள்ளார். தேவாரம், திருவாசகம், முதலிய திருமுறைகளின் கருத்துக் களையும், திருவாய்மொழி, திருவிருத்தம், சடகோபர் அந்தாதி, அழகர் கலம்பகம் முதலிய நூல்களின் கருத்துக்களையும் இவ் வாசிரியர் தமது பாடல்களில் எடுத்தாண்டுள்ளார்; viii. 167/1912/II.

O 31,1

நம்மாழ்வார் நாடார், எஸ்.

1403. i. சிவகாசியந்தாதி : முதற் பதிப்பு ; ii. எஸ். நம்மாழ்வார் நாடார் ; சச்சிதானந்தம் பிரஸ் , விருதுபட்டி ; iii. ஜூன், 1913 ; iv. செ.மூ.எ. 102+4 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. சிவகாசியில் கோயில் கொண்டருளும் சுப்பிரமணியக் கடவுளைப் பற்றிய வழிபாட்டு நூல். இது ஒரு கலித்துறை அந்தாதி . கழுகுமலை சங்கரக் குமாரப் புலவர், சுப்பிரமணியம் பிள்ளை முதலியோர் இதற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். viii. 902/1913/II.

O 31,1

நாராயணசுவாமி நாயுடு, பி. பி.

1404. i. தக்ஷிணாமூர்த்திக் கலித்துறை யந்தாதி : முதற் பதிப்பு ; ii. நாராயணசுவாமி நாயுடு ; சைவ வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை ; iii. செப்டம்பர், 1912 ; iv. செ.மூ.ப. 1+100; v. 16×12 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. திருநெல்வேலித் தேவாரத்தில் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரால் " சிந்து பூந்துறைகமழ் " என்று சிறப்பித்து ஓதப் பெற்ற சிந்துபூந் துறை நகரில் விளங்கும் தட்சிணாமூர்த்தியைப் பற்றிய வழி பாட்டு நூல். கட்டளைக் கலித்துறைப் பாடலால் அமைந்த அந்தாதி. பாடல்களில் வரும் ஒரு சில அரு சொற்களுக்கு அடிக் குறிப்பில் உரை தரப்பட்டிருக்கிறது. மேலப்பாவூர், ஓய்வு பெற்ற தலைமைக் காவலர் கோபால நாயுடு, பாவூர் மு. பார்த்த சாரதி நாயுடு, சம்புலிங்கபுரம் திரவிய சங்கரநாராயணக் கவி ராயர் ஆகியோர் இந் நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார் கள்; viii. 946/1912/III.

O 31,1

i. திருச்சிந்தூர்க் கந்தர் வெண்பாவந்தாதி (தொ. எ. 1795 பார்க்க) ; ii. பி. பி. நாராயணசாமி நாயுடு ; சைவ வித்தியாநு பாலன யந்திரசாலை, சென்னைப்பட்டணம், iii. மே, 1913 ; iv. செ.மூ.ப. 1+ 100 ; v. 16 × 12 செ.மீ. ; vi. 0–2–0; vii. செந்தில் முருகன் புகழ் பாடும் வெண்பாவினால் ஆகிய அந்தாதி நூல்

பாடல்களுக்குரிய அருஞ்சொற்பொருள் அடிக்குறிப்பில் கொடுக கப்பட்டிருக்கின்றன. திருச்செந்தூர் மு. கிருஷ்ண சர்மா, மேலப்பாவூர் கோபால்சாமி நாயுடு, எட்டயபுரம் திரவியசங்கர நாராயணக் கவிராயர் ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர் ; viii. 596/1913/II.

O31,1

**பிச்சுவையர், எம். எஸ்., மதுரை**

1405. i. மதுரையென்னுங் கூடலந்தாதி—மூலமும் உரையும் [தோத்திரமாலையும் ஆறுமுகப் பதிகமும்] ; முதற் பதிப்பு ; ii. எம். எஸ். சேஷ அய்யர் ; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. ஜூன், 1912 ; iv. செ. மூ. உ. எ. 101 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. மதுரை என்று வழங்கும் கூடல் நகர் கொக்கேசப் பெருமானைப் பற்றிய வழிபாட்டு நூல். இது கலித்துறை அந்தாதி. இதற்கு மதுரைத் திருஞானசம்மந்த சுவாமிகள் ஆதீன வித்துவான் சுப்பிரமணிய தேசிகர் என்பார் உரை எழுதியுள்ளார்; viii. 852/1912/II.

O31,1

**முத்தைய பாவலர்**

i. மயூரகிரி அந்தாதி (தொ. எ. 1912 பார்க்க) ; முதற் பதிப்பு ; ii. முருக மீனாட்சிசுந்தரம் பிள்ளை, எரிமாநகரம் ; ஜீவ காருண்ய விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜனவரி, 1913 ; iv. செ. மூ. எ. 1 + 30 ; v. 22 × 14 செ. மீ. ; vi. 1–8–0 ; vii. இது, கட்டளைக் கலித்துறைப் பாவினால் அமைந்த அந்தாதி ; viii. 310/1913/I.

O31,1

**வரதராஜப் பிள்ளை, திருக்கடன்மல்லை**

1406. i. பார்த்தசாரதிப் பெருமாள் பதிற்றுப் பத்தந்தாதி ; முதற் பதிப்பு ; ii. வரதராஜப் பிள்ளை, திருக்கடன்மல்லை ; ராம நிலைய விவேகாநந்த அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூலை, 1913 ; iv. செ. மூ. எ. 118 ; v. 22 × 14 செ. மீ. ; vi. இலவசம் ; vii. திருவல்லிக்கேணியில் கோயில் கொண் டருளும பார்த்தசாரதிப் பெருமாளைப் பற்றிய வழிபாட்டு நூல். வணக்கப் பாடல்கள் பதினேழும் பல்வேறு வகையான சீரளவில் கொண்டவை. நூல், பத்து வேறுபட்ட சந்தம் அமைந்த கவிதைகளைக் கொண்டமைந்துள்ளது. பூவை கலியாணசுந்தர முதலியார், ஈக்காடு இரத்தினவேல்

முதலியார், திருவல்லிக்கேணி முத்துக்கிருஷ்ண நாயுடு, மதுரை ஆறுமுகம் சேர்வை முதலியோர் இந்நூற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர்; viii. 123/1913/III.

O31,1

**வீராசாமி ஆசாரியார்**

1407. i. வேணுகோபால சுவாமி அந்தாதி: முதற் பதிப்பு; ii. முருகேச கிராமணி; ஸ்ரீ கிருஷ்ண விலாச அச்சுக்கூடம், திருப்பா திரிப்புலியூர்; iii. ஜனவரி, 1912; iv. செ. மூ. எ. 107; v. 21 × 14 செ. மீ.; vi. இலவசம்; vii. திருவண் ணாமலை வட்டம் தடாகநகரமென்னும் பெருங்கொளத்தூரில் கோயில் கொண்டருளும் வேணுகோபால சுவாமியைப் பற்றியது. எட்டுச் சுவடியிலிருந்து எடுத்து அச்சிடப் பெற்றது. இது வெண் பாவினால் ஆகிய அந்தாதி; viii. 640/1912/I.

O31,1

**வேலையர், கவித்தலம்**

1408. i. திருவேரகயமகவந்தாதி: முதற் பதிப்பு; ii. ச. முரு கையா வாண்டையார், சென்னை; சைவ வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை; iii. பிப்ரவரி, 1913; iv. செ. மூ. உ. எ. 1 + 100 + 1; v. 16 × 12 செ. மீ.; vi. 0-2-6; vii. சுவாமிமலை என்று வழங்குகின்ற திருவேரகத்து உறை யும் முருகப் பெருமானைப் பற்றிய வழிபாட்டு நூல். இது கட்டளைக் கலித்துறைச் செய்யுளால் அமைந்த யமக வந்தாதி. சிதம் பரம் பே. இராமலிங்க உபாத்தியாயர் இந்நூற்கு உரை எழுதி யுள்ளார்; viii. 637/1913/I.

O31,1

**ஷெய்க் அப்துல்காதறு நயினார் லப்பை ஆலீம் புலவர், காயற் பட்டினம்**

i. நாகையந்தாதி (தொ. எ. 1658 பார்க்க): முதற் பதிப்பு; ii. எம். கே. எஸ். இப்ராஹிம் சாகிப், கயத்தாறு, கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை; iii. மே, 1914; iv. செ. மூ. எ. 101; v. 17 × 11 செ. மீ.; vi. 0-12-0; vii. நாகூர் ஆண்டவரின் மீது பாடப்பட்டது. கட்டளைக் கலித்துறைப்பாடல் களால் ஆகியது. ஒவ்வொரு பாடலின் கருத்தையும் உணர்த் தும் சொற்றொடர் அந்தந்தப் பாடலின் தலைப்பில் கொடுக்கப் பட்டுள்ளது. இது, திருக்கோவையார்ப் பாடல்களுக்கு அமைந் துள்ள கொளுப்போன்றுள்ளது; viii. 847/1914/II.

O31,1

## அந்தாதி : நீரோட்டக யமக வந்தாதி

**சிவப்பிரகாச சுவாமிகள், துறைமங்கலம்**

i. திருச்செந்திநிரோட்டக யமகவந்தாதி (தொ. எ. 1917 பார்க்க) முதற் பதிப்பு ; ii. மு. ரா. அருணசலக் கவிராயர் ; ஸ்ரீ இராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. ஜூலை, 1911 ; iv. செ. மூ. உ. எ. 30 ; v. 22 × 14 செ. மீ. ; vi. 1–8–0 ; vii. உதடுபடாமல் பாடப்படுகின்ற பாடல்களை உடையது. கலித்துறையால் ஆன அந்தாதி. தமது ஆசிரியர் கட்டளைப்படி சிவப்பிரகாச சுவாமிகள் திருச்செந்தூரில் வாழ்ந்த ஆணவம் மிக்க புலவன் ஒருவனைச் சொற்போரில் வெல்ல இவ்வந்தாதியைப் பாடினார் என்பர். ஆணவங்கொண்ட அப்புலவன் ஒரு பாடலும் பாட முடியாமல் அடிகளாருக்கு அடிமையாயினன் ; viii. 267/1911/III.

O31,1

**வடிவேல் சாமி பிள்ளை, ம.**

1409. i. அகிலாண்டநாயகி நீரோட்டக யமக அந்தாதி [அகிலாண்ட நாயகியம்மன் பதிகம்] ; ii. .............. ; விவேகபானு அச்சாபீஸ், திருச்சி ; iii. 1915 ; iv. செ. மூ. எ. 3 + 29, v. 17 × 13 செ. மீ. ; vi. ............ ; vii. திரிசிராமலை ஜம்புகேஸ்வரம் அகிலாண்ட நாயகியை வழிபடும் பாடல்களைக் கொண்ட நூல். அமிர்தம் சுந்தரநாத பிள்ளை என்பார் இதற்குச் சாத்துக்கவி பாடியுள்ளார்; viii. 317/1915/III.

O31,1

## அந்தாதி : பதிற்றுப்பத்தந்தாதி

**சாமிநாத முதலியார், சி. வா., திருநாகேச்சரம்**

1410. i. திருநாகேச்சரப் பதிற்றுப்பத்தந்தாதி : முதற்பதிப்பு ; ii. சி. வா. சாமிநாத முதலியார் ; ஆரியன் அச்சியந்திரசாலை, கும்பகோணம் ; iii. ஜூன், 1913 ; iv. செ. மூ. எ. 1 + 100 ; v. 16 × 12 செ. மீ. ; vi. 0–1–0 ; vii. காவேரியின் தென்கரையில் உள்ளதும் மூவர் தேவாரம் பெற்றது மான திருநாகேச்சுரத்து விளங்கும் இறைவன்மீது பாடிய வழிபாட்டு நூல். பப்பத்துப் பாடல்களுக்கு ஒரு முறை சந்தம்

வேறுபட்ட கவிகளைக் கொண்டது இந்த அந்தாதி. இவ்வூர் பற்றி "நாகநாத வெண்பா", குன்றுமலை அந்தாதி, "கொம்பன மாலை" என்னும் முன்னோர் பாடிய நூல்கள் காலப்போக்கில் மறைந்துவிட்டன என்று ஆசிரியர் முகவுரையில் குறிப்பிட்டிருக்கிறார்; viii. 918/1913/II.

O31,1

**சிதம்பரஞான தேசிகர்**

i. பதிற்றுப்பத்தந்தாதி: முதற்பதிப்பு (தொ. எ. 1894 பார்க்க); ii. சுப்பைய சுவாமிகள்; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. டிசம்பர், 1909; iv. செ. மூ. எ. 2 + 100; v. 18 × 11 செ. மீ.; vi. இலவசம்; vii. பப்பத்துப் பாடல்களுக்கு ஒரு முறை சந்தம் வேறுபட்ட பாக்களைக் கொண்டு, அந்தாதியாக அமைந்துள்ளது இந்நூல். இதில் நூலாசிரியர் தமது ஆசிரியரின் புகழ்களைக் கூறித் தமக்கு அருள் செய்யு மாறு வேண்டுகின்றார். "கழனிப்பதி"யில் வாழும் குருபரன் என்று பாடல்களில் காண்பதனால் கோவிலூருக்குக் கழனிப்பதி என்பதும் ஒரு பெயராதல் வேண்டும்; viii. 129/1911/I.

O31,1

**சுப்பைய சுவாமிகள்**

1411. i. பாரிஜாத வனேசுவரர் பதிற்றுப் பத்தந்தாதி: முதற் பதிப்பு; ii. சுப்பைய சுவாமிகள், பாரதி அச்சியந்திரசாலை, மன்னார்குடி; iii. ஜூன், 1911; iv. செ. மூ. எ. 1 + 100; v. 21 × 14 செ. மீ.; vi. இலவசம்; vii. திருக்களர் என்னும் பதியில் கோயில்கொண்டருளும் பாரிசாத வனேசுவர ரைப் பற்றிய புகழ்மாலை. பப்பத்துப் பாடல்களுக்கொருமுறை சந்தம் வேறுபட அமைந்த பாடல்களைக் கொண்டு அந்தாதியாக அமைந்தது; viii. 637/1911/III.

O31,1

**முத்துக்குமார சுவாமிக் கவிராஜர், திருநெல்வேலி**

1412. i. திருப்புடைமருதூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி [திருப்புடை மருதூர் இரட்டை மணிமாலை, திருப்புடைமருதூர் மும்மணிக் கோவை]; ii. மு. ரா. அருணாசலக் கவிராயர்; விவேகபானு அச்சியந்திரசாலை, மதுரை; iii. மார்ச், 1914; iv. செ. மூ. எ. 6 + 100 + 6; v. 22 × 14 செ. மீ.; vi. 0–4–0; vii. திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த திருப்புடைமருதூர் இறைவனை வழிபடும் நூல். பத்து வேறுபட்ட சந்தங்களைக் கொண்டு அமைந்த பாடல்களை உடையது. அந்தாதித் தொடையில்

அமைந்தது. சாலிவாடீசுவர ஓதுவார்மூர்த்தி, கவிராசர் சுந்தரமூர்த்தியா பிள்ளை, வைகுண்டநாதன் கவிராசர், அம்பலவாணன் கவிராசர், கவிராசர் நெல்லையப்ப பிள்ளை ஆகியோர் இதற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். இதன் இறுதியில் அறுபத்திமூன்று நாயன்மார்களும் மாணிக்கவாசக சுவாமிகளும், இறைவன் திருவடிநிழல் அடைந்த திங்கள், நட்சத்திரம் ஆகியவற்றை விளக்கும் அந்தாதிக் கலித்துறைப் பாடல்கள் பதினாறு இதில் கொடுக்கப்பட்டுள்ளன. அருஞ்சொற்களுக்குப் பொருளும் தனியாகக் காட்டப்பட்டுள்ளன ; viii. 1130/1914/I.

O31,1

**வீரபத்திர பிள்ளை, சோ., வரகனேரி**

1413. i. திரிசிரகிரிப் பதிற்றுப் பத்தந்தாதி : முதற் பதிப்பு; ii; தே. பெரியசாமி பிள்ளை, உறந்தை ; வெட்னஸ்டே ரிவியூ அச்சியந்திரசாலை, திருச்சி ; iii. மே, 1911 ; iv. செ. மூ. எ. 9+100+3 ; v. 24×16 செ.மீ. ; vi. ...... ; vii. இதன் ஆசிரியர் திரிசிரபுரம் 'முத்தி நெறி விளக்கப் பக்த ஜனசபை'த் தலைவராக இருந்தவர். திரிசிராமலையில் கோயில் கொண்டருளும் தாயுமானப் பெருமானைப் புகழ்ந்து போற்றுவது இந்த அந்தாதி. பப்பத்துப் பாடல்களுக்கு ஒருமுறை சந்தம் வேறுபட்ட பாக்களை உடையதாய் நூறு பாடல்கள், அந்தாதியாக அமைந்துள்ளது. குரு சுப்பிரமணிய அய்யர், தி.கு. சோமசுந்தரம் பிள்ளை முதலிய பலர் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர் ; viii.695/1911/II.

O31,1

**வேங்கட சுப்புப் பிள்ளை, அரன்வாயில்**

1414. i. சக்கர விநாயகர் மீது பதிற்றுப் பத்தந்தாதி ; ii. மு. நல்லசிவன் பிள்ளை, பாளையங்கோட்டை ; ஸ்ரீவிஜயலக்ஷ்மி விலாச அச்சியந்திரசாலை, பாளையங்கோட்டை ; iii. ஜனவரி, 1915 ; iv. செ.மூ. எ. 1+100 ; v. 21×14 செ.மீ. ; vi. ....... ; vii. திருநெல்வேலிக்கு மேற்பால் பேட்டையென வழங்கும் மங்கை நகரில் விளங்கும் சக்கர விநாயகர் மீது பாடப்பெற்ற பக்திப் பாக்கள். பத்துப் பாடல்களுக்கு ஒருமுறை சந்தம் வேறுபட்ட பாக்களைக் கொண்டு அமைந்துள்ளது இந்நூல். சந்த விருத்தங்களும் சில இடம் பெற்றுள்ளன ; viii. 560/1915/I.

O31,1

## அலங்காரம்

**காதர் இப்ருஹீம், எஸ். & நாகைய நாயகர், எஸ். கே.**

1415. i. குளுமாயி அம்மன் வரலாறும் ஒண்டி முத்து சுவாமி வரலாறும் அடங்கிய அலங்காரச்சிந்து ; முதற்பதிப்பு ; ii எஸ். காதர் இப்ருஹிம் & எஸ். கே. நாகைய நாயகர் ஷண்முகம் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. பிப்ரவரி, 1913 ;

iv. செ.மூ.ப. 8; 23×15 செ.மீ.; vi. 0–0–6; vii. திருச்சிராப்பள்ளியில் விளங்கும் குளுமாயி அம்மனைப் பற்றிய வரலாறும் சிறப்பும் உரைப்பது. ஒண்டி முத்துச்சாமி வரலாறு சிந்துப் பாடலில் அமைந்துள்ளது; viii. 705/1913/I.

O31, 1

**சுந்திரராசு செட்டியார், கோ., மன்னார்குடி**

1416. i. கும்பாபிஷேக அலங்காரம்; முதற் பதிப்பு; ii. எல். இரத்தினம் செட்டியார், மன்னார்குடி; சம்பக லெட்சுமி விலாச பிரஸ், மன்னார்குடி; iii. ஜூன், 1913; iv. செ.மூ.ப. 7; v. 22×14 செ.மீ.; vi. 0–0–6; vii. தில்லை விளாகம் இராமசுவாமி கோயில் குடமுழுக்கைப் பற்றிய பாடல்கள். தெம்மாங்கு, கும்மி மெட்டுகளில் உள்ளன. தெம்மாங்கு வழிநடை நிகழ்ச்சிகளை விவரிக்கிறது. கும்மி, ஊர்ச் சிறப் பையும் குடமுழக்குச்சிறப்பையும் கூறுகிறது. கருட சேவையைப் பற்றிய பாட்டும் ஈற்றில் உள்ளது; viii. 165/1913/III.

O31, 1

**தண்டபாணி சுவாமிகள், வண்ணச்சரபம்**

1417. i. தமிழலங்காரம்,த மிழ்த் துதிப் பதிகம்; ii. செந்திநாயகம், பிள்ளை; சைவ வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை; iii. 1915; iv. செ.மூ.எ. 4+100+13; v. 16×12 செ.மீ.; vi. 0–1–0; vii. தமிழ் இலக்கியத்தின் பெருமையை நன்கு விளக்கும் நூல். அருணகிரிநாதர் கந்தரலங் காரம் என்று பெயரிட்டு நூறு கலித்துறைகள் பாடினாற்போல இத்தமிழலங்காரம் பாடப்பட்டுள்ளது. இதன் இறுதியில் 'தமிழ்த்துதிப்பதிகம்' ஒன்றும் உளது. "நீடு சீர்த் திரு நெல்லையின் நிலவிய சிறுவன், பாடும்முத்தமிழ்க் கலையினைப் பழிச்சும் இப்பதிகம்" என்று ஆசிரியர் தம்மைப் பற்றிக் கூறிக் கொள்கின்றார்; viii. 110/1915/III.

O31, 1

**நரசிம்ம பாரதி, அ.**

i. அங்கையர்க் கண்ணம்மை அலங்காரமாலை (தொ.எ. 1902); முதற் பதிப்பு; ii. ராமன் செட்டியார், பள்ளத்தூர். விவேகபானு பிரஸ், மதுரை; iii. மே, 1913; iv; செ.மூ.எ. 30; v. 17×13 செ.மீ.; vi. 0–4–0; vii. பள்ளத்தூரில் விளங்கும் மீனாட்சியம்மனைப் பற்றிய வழிபாட்டுப் பாடல் கட்டளைக் கலித்துறைச் செய்யுளால் ஆகியது. இந்த அலங்கார மாலையில் முப்பது பாடல்கள் உள்ளன. viii. 456/1913/II.

O31,1

**பொன்னுசாமிப் பிள்ளை, ஜெ., இராஜகிரி**

1418. i. கரமேலழகர் அலங்காரம்; ii. நா. குப்புசாமி பிள்ளை, நாகை; ஹமீதிய்யா, அச்சியந்திரசாலை, நாகை; iii. பிப்ரவரி 1912; iv. செ.மூ.எ. 1+24; v. 21×14 செ.மீ., vi. 0-0-6; vii. கும்பகோணத்திற்குப் பக்கத்திலுள்ள இராசகிரியில் கரமேலழகர் சுவாமியின் திருவிழாவிற்குச் சென்னையிலிருந்து ஒருவன் மனைவியோடு சென்று வந்த காட்சியை விரித்துப் பாடுவது. இரயில் பயணம், ஊர்க்காட்சிகள், கோவில் விழாக் காட்சிகள், பூசனை முதலிய நிகழ்ச்சிகள் வரிக்கப்படுகின்றன; viii. 602/1912/I.

O31,1

**முனிசாமி முதலியார், சிறுமணவூர்**

i. மதுரை சொக்கர் அலங்காரம் (தொ. எ. 1905 பார்க்க); முதற் பதிப்பு; ii. நாராயணசாமி முதலியார், களத்தூர்; ஆதிகளுநிபதி அச்சுக்கூடம், சென்னை; iii. பிப்ரவரி, 1911; iv. செ.மூ.ப. 8; v. 21×14 செ.மீ.; vi. 0-3-0; vii. சென்னையிலிருந்து தன் மனைவியோடு மதுரை மாநகர்க்குச் சென்று சொக்கேசப் பெருமானை வழிபட்ட நிகழ்ச்சியை உரைப்பது; viii. 497/1911/I.

O31,1

## அலங்காரம் : வழிநடைச்சிங்காரம்

**காதர் இப்ருஹிம், எஸ். & நாகைய நாயக்கர், எஸ். கே.**

1419. i. குளுமாயம்மன் திருவிழா வழிநடைச் சிங்காரமும் பதிகமும்; முதற் பதிப்பு; ii. எஸ். காதர் இப்ருஹீம் & எஸ். கே. நாகைய நாயக்கர்; ஷண்முக விலாச அச்சுக்கூடம், திருச்சிராப்பள்ளி; iii. மார்ச், 1912; iv. செ.மூ.ப. 7; v. 21×14 செ.மீ.; vi. 0-0-6; vii. திருச்சிராப்பள்ளி, புத்தூரில் கோயில் கொண்டிருக்கும் குளுமாயி அம்மனை வழிபடச் செல்லும்போது வழிக் காட்சிகளைப்பற்றி விரித்துப் பாடுவது. ஆண்டுதோறும் மாசித் திங்களில் செவ்வாய்க் கிழமையில் நடைபெறும் காளிபூசனையைப் பற்றிச் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார். இவ்விறைவியைப் பற்றிய வழிப்பாட்டுப் பாடல்களும் உள்ளன; viii. 96/1912/II.

O31,1

## அனுபூதி

**அருணகிரிநாதர்**

1420. i. கந்தரனுபூதி, முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & இ. ராம. குருசாமி கோனார், மதுரை; ஸ்ரீராமச் சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. மார்ச், 1914; iv. செ.மூ.எ. 51; v. 14×11 செ.மீ.; vi. 0-4-

vii. இன்னின்ன பயனை வேண்டுவோர் இன்னின்ன பாடல்களை மூலமந்திர எந்திரத்துடன் பூசனை செய்ய வேண்டும் என்று விளக்கியிருக்கிறார். பூசனை செய்ய வேண்டிய முறைகளும் படையல் செய்ய வேண்டிய பொருள்களும் விளக்கிக் காட்டப்பட்டுள்ளன ஐம்பத்தொரு பாடல்களும் எந்திரங்களுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளன. கோயமுத்தூர் அ. சுப்பிரமணியம் செட்டியாரால் பல ஏட்டுச் சுவடிகளைக் கொண்டு ஆய்ந்து அச்சிட்ட நூலுக்கிணங்க இந்நூல் அமைந்துள்ளது. viii. 1134/1914/I.

O31,1

அருணகிரி நாத சுவாமிகள்

1421. i. ஞானநுபூதி; முதற்பதிப்பு; ii. எம். ஆண்டியப்ப பிள்ளை, சைவப்பிரகாச அச்சியந்திரசாலை, தூத்துக்குடி; iii. பிப்ரவரி 1912; iv. செ.மூ.எ. 12; v. 16×11 செ.மீ.; vi.... vii. முருகப் பெருமானை அருள் புரியுமாறு வேண்டும் பாடல்களைக் கொண்டது. "தெய்வமே உய்யுமாறு அருளே" என்னும் வேண்டுதலுடன் ஒவ்வொரு பாடலும் முடிவுறுகின்றது. ஆண்டியப்ப பிள்ளை என்பாருக்கு அவருடைய தாத்தாவால் இந்த நூல் கொடுக்கப் பெற்றதாம்; viii. 895/1912/I.

O31,1

முத்தய்ய பாவலர்

i. மயூரகிரி முருகர் அனுபூதி (தொ. எ. 1912 பார்க்க); முதற் பதிப்பு; ii. முருக. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, எரிமா நகரம்; ஜீவகாருண்ய விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. ஜனவரி 1913; iv. செ.மூ.எ. 1+51; v. 22×14 செ.மீ.; vi. 1-8-0; vii. கந்தர் அனுபூதியைப் போன்று பாடலளவிலும் சந்தத்திலும் ஒத்து அமைந்துள்ளது; viii. 310/1913/I.

O31,1

அஷ்டகம்

குப்புசாமி திட்சதர், சி. ஆர். பி.

1422. i. எட்டீசுவராஷ்டகம்; முதற் பதிப்பு; ii. சி.ஆர்.பி. குப்புசாமி தீட்சதர், விஞயக சுந்தர விலாச பிரஸ், சிதம்பரம்; iii. ஏப்ரல், 1912; iv. செ.மூ.ப. 3; v. 23×14 செ.மீ.; vi. ..........; vii. எட்டீசற்கு, எட்டப்ப பூபதி செய்த குடமுழுக்கு விழாவை ஒட்டிப் பாடப் பெற்ற வழிபாட்டு பாடல். எட்டீசர் புகழாக எட்டுப் பாடல்களைக் கொண்டிருப்பதால் இது 'அஷ்டகம்' என்று வழங்கப்படுகிறது; viii. 680/1912/II.

O31,1

**வீரசுவாமிகள், சு( (பொ. து.)**

i. விஸ்வநாதாஷ்டகம் (தொ. எ. 158 பார்க்க); முதற் பதிப்பு ; ii. சுப்பைய சுவாமி, சிதம்பரம், ; ஸ்ரீவித்யா விநோதினி பிரஸ், தஞ்சாவூர் ; iii. அக்டோபர், 1911 ; iv. செ.மூ.எ. 9 ; v. 14×11 செ.மீ. ; vi.... ; vii. கங்கைக் கரையில் விளங்கும் காசி விசுவநாதனைக் குறித்த வழிபாட்டுப் பாடல். இது வேதவ்யாசரது மூலத்தை அடியொற்றித் தமிழில் செய்யப்பட்டது. இறுதியில் உள்ள ஒன்பதாவது செய்யுள், வீரசுவாமிகளைக் குறித்து வேறொருவர் செய்ததாகும் ; viii. 338/1911/IV.

O31,1

## ஆசிரிய விருத்தம்

**ஆத்மநாதையர், ஆண்டவராயபுரம்**

1423. i. தண்டாயுதபாணி ஆசிரிய விருத்தம் ; முதற் பதிப்பு ; ii. சர்க்கரை இராமசாமிப் புலவர் ; பாரதி பிரஸ், மன்னார்குடி ; iii. மார்ச், 1913 ; iv. செ.மூ.ப. 14 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. கானூர் என வழங்கும் இராசமணி புரத்தில் திருக்கோயில் கொண்டிருக்கும் தண்டாயுதபாணியைப் பற்றிய புகழ்மாலை. இறுதியில் இசைப்பாடல் ஒன்றும் உள்ளது. viii. 879/1913/I.

O31,1

**கனகசபை கவிராயர், உடையார்பாளையம்**

1424. i. துரோபதை அம்மன் பேரில் ஆசிரிய விருத்தம் : முதற் பதிப்பு ; ii. வீ. சக்கரபாணி செட்டியார், உடையார் பாளையம் ; ஸ்ரீ மட்டுவார் குழலாம்பாள் அச்சுக்கூடம் ; திரிசிரபுரம் ; iii. மே, 1911 ; iv. செ. மூ. எ. 1 + 10 ; v. 14 × 11 செ.மீ.; vi. 0–0–6; vii. உடையார் பாளையத்தில் மாயலூர் எல்லையில் ‘வைத்தியர்கள் வீதியில்’ எழுந்தருளியிருக்கும் பாஞ்சாலி யம்மனைப்பற்றிய வழிபாட்டுப் பாடல், ஆசிரிய விருத்தத்தால் ஆகியது. “மாபாதிகள் கண்மணி துரோபதி யெனம்மணி மனோன்மணி வரந்தருகவே” என்னும் விண்ணப்பத் தொடரைக் கொண்டு ஒவ்வொரு பாடலும் முடிவுறுகின்றது. viii. 712/1911/II.

O31,1

எழுந்தருளிய அரங்கநாதர் மீது பாடப்பெற்றது இந்த ஒயிற கும்மி. இராமாயண வரலாறு கும்மிப் பாடலில் சுருக்கமாகத் தரப்பட்டிருக்கிறது. பாரத நிகழ்ச்சிகளும் 'ஸ்ரீரங்கா புராணமும்' இக் கும்மிப் பாட்டில் அமைந்துள்ளன. அரங்கநாதர் வழிபாடாகிய இசைப் பாடல்கள் சில ஈற்றில் உள்ளன. திரிசிரபுரம் வரகனேரி வித்துவான். வீரபத்திரப் பிள்ளை இதற்குச் சாத்துக் கவிகள் இயற்றியுள்ளார். viii. 712/1912/IV.

O31,1

**வைத்தியநாத சர்மா, ஆர்.**

**1569.** i. குளகையொயிற் கும்மி : முதற் பதிப்பு ; ii. ஆர். வைத்தியநாத சர்மா ; எட்வர்டு அச்சுக்கூடம், நாகப்பட்டினம் ; iii. நவம்பர், 1912 ; iv. செ.மூ.எ. 103 ; v. 20×14 செ.மீ.; vi. இலவசம் ; vii. குளகை நகரில் விளங்கும் சுப்பிரமணியரைக் குறித்த வழிபாட்டு நூல். வள்ளிக்கும் முருகனுக்கும் நிகழ்ந்த உரையாடல்களைப் பற்றி விரிவாக உரைப்பது. வள்ளி தெய்வானை திருமணம் குறிக்கப்பட்டிருக்கிறது. ஆனித் திங்கள் தொடங்கி ஆடி வரையில் ஒவ்வொரு திங்களிலும் முருகப் பெருமானுக்கு நடைபெறும் சிறப்பு வழிபாடுகளைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். 1912 செப்டெம்பர் 9ஆம் நாள் இந்நூலைப் பாடி முடித்ததாக 101ஆம் பாடலில் ஆசிரியர் குறித்துள்ளார். viii. 716/1912/IV.

O31,1

## குறம்

**பக்கிரிசாமி பிள்ளை, அரு., அந்தணர்பேட்டை**

i. எட்டுக்குடி ஸ்ரீ முருகக் கடவுள் பேரில் குறம் (தொ.எ. 1611 பார்க்க) ; ii. வரதராஜுலு நாயுடு, வெளிப்பாளையம் ; நீலலோசனி அச்சுக்கூடம், நாகப்பட்டினம் ; iii. எப்ரல், 1914 ; iv. செ.மூ.ப. 8 (5—12) ; v. 14×11 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. முருகப் பெருமான் வள்ளியம்மையைத் திருமணம் செய்து கொண்ட நிகழ்ச்சி பற்றியது. வள்ளியின் பிறப்பு, வளர்ப்பு வரலாறும், அவள் தினைப்புனம் காத்ததும், அங்கு முருகப் பெருமான் தோன்றி அவளுடன் உரையாடுவதும், அவளை மணம் புரிதலும் பற்றி முறையாகக் கூறும் நூல். viii. 655/1914/II.

O31,1

**திரிகூட ராசப்பன் கவிராய மூர்த்திகள், மேலகரம்**

**1570.** i. திருக்குற்றாலக் குறவஞ்சி : முதற் பதிப்பு ; ii. மு. ரா. அருணாசலக் கவிராயர், மதுரை ; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. செப்டம்பர், 1912 ; iv. செ.மூ.உ.ப. 5+92 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. குறவஞ்சி என்பது 'குறத்திப் பாட்டு என்றும் சொல்லப் பெறும். மலைவாழ் மக்களாகிய குறவன் குறத்தியர் வாழ்க்கையையும் அவர் வாயிலாகத் தாம் எடுத்துக்கொண்ட பொருளையும் விரிப்பது. அகவல், வெண்பா, கொச்சகம், கலித்

துறை, கழிநெடில் விருத்தம், இவைகளோடு சிந்து முதலிய இசைப் பாடல்களையும் கொண்டு நாடகத் தமிழில் அமைந் துள்ளது. 209 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த இந்நூல் ஆசிரி யர் இதைத் தவிர திருக்குற்றாலத்தைப் பற்றி மேலும் 13 கவிதை நூல்கள் பாடியுள்ளார். ஏட்டுச் சுவடிகளின் துணை யால் பழைய அச்சு நூல்களிலுள்ள பிழைகளை நீக்கி அருஞ் சொல் பொருள் எழுதியவர் மு.ரா. அருணசலக் கவிராயர் ஆவர். viii. 992/1912/III.

## கையறுநிலை O31,1

### கலியாணசுந்தர முதலியார், பூவை

1571. i. சிவ சாயுஜ்ய தியான மஞ்சரி ; ii. நடராஜாசாரியார், புதுவை ; மகாலட்சுமி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜுலை, 1911 ; iv. உப+செ.மூ.ப. 5+13+1 படம் ; v. 21×13 செ.மீ. ; vi. இலவசம் ; vii. திரிசிரபுரம் ஆண்டா ணடிமை வைத்தியலிங்க ஆசாரிய சுவாமிகள் சிவனடி சேர்ந்தமை பற்றிப் பாடிய இரங்கற் பாடல்களின் தொகுதி. இவர் திரிசிரபுரம் உறையூர் மகாவித்வான் முத்துவீர உபாத்தியாயரின் மகனவார். இவர் அரசு ஊழியத்திலிருந்த போதிலும் தமிழிலும், இசையிலும் வல்லவராய்ப் பல அவை களை நிறுவி, சைவ சமயத்தைப் பரப்பியவர். பெரிய புராணக் கீர்த்தனை இவரால் செய்யப் பெற்றது என்று தெரிகிறது. இவரது வரலாற்றுச் சுருக்கம் முதலில் தரப்பட்டிருக்கிறது. viii. 257/1911/IV.

O31,1

### ஸ்ரீநிவாசகம் பிள்ளை, த., சிவகிரி.

1572 i. சிவலோகச் சிந்து : முதற் பதிப்பு ; ii. பா. ஷண்முக உபாத்தியாயர், சிவகிரி ; கோமதி விலாசம் பிரஸ், தென்காசி ; iii. ஜுன், 1914 ; iv. செ.மூ.ப. 28 ; v. 21×14 செ.மீ ; vi. இலவசம் ; vii. சிவகிரி சமத்தானம் சேதுராமலிங்க வரகுண பாண்டிய சின்னத்தம்பி சிவனடி சேர்ந்தது பற்றி விரிக்கின்ற சிந்துப் பாடல்கள். சமீன்தாருடைய பலவகைச் சிறப்புக்கள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. பேச்சு வழக்கிலுள்ள பல ஆங்கிலச் சொற்களும் கொச்சை மொழிகளும் இதில் மிகுதி யாக உள்ளன. viii. 1110/1914/II.

## கோவை O31,1

### ஔவையார்

i. அசதிக் கோவை (தொ. எ. 1576 பார்க்க) ; ii. குருசாமிக் கோனர் ; இராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1914 ; iv. செ. மூ. எ. 4 ; v 21 × 14 செ. மீ. ; vi. 0-2-0 ; vii. ஒரு சமயம், களைப்படைந்த ஔவையாரை இடைக்குலத்தார் பேணி விருந்தோம்பியபோது, மகிழ்ந்த ஔவையார் அக்குலத்தினரைப் புகழ்ந்து பாடிய கோவை யாகும். இதில் நான்கு பாடல்களே இப்பொழுது கிடைத்துள்ளன.

மற்றவை கிடைக்கவில்லை. இவற்றைக் கொண்டு இக் கோவை அகப்பொருள்பற்றி அமைந்த நூலாகும் என்பது புலனாகிறது. viii. 1154/1914/III.

O31,1

செங்கிழார்

1573. i. செழுகைத்தஞ்சக் கோவை : முதற் பதிப்பு ; ii. இ. சங்கரசுப்பு பிள்ளை ; சைவப்பிரகாச அச்சியந்திரசாலை, தூத்துக்குடி ; iii. எப்ரல், 1912 ; iv. செ. மூ. எ. 2 + 101 ; v. 21 × 13 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. செழுகைப்பதியில் விளங்கும் பெருமானுக்குத் தஞ்சை அரசியைத் தொண்டு செய்யும் பொருட்டு அடைக்கலமாகக் கொடுத்தனர் என்னும் ஒரு பழைய வரலாற்றை மேற்கொண்டு பாடப்பட்டது. இறைவனுடைய பல திருவிளையாடல்களும் அருட் செயல்களும் இதில் புகழ்ந்து பேசப்பட்டுள்ளன. பெண்ணை அடைக்கலமாக ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று விண்ணப்பிப்பதால் இதற்குத் தஞ்சக்கோவை என்ற பெயர் ஏற்பட்டுள்ளது. viii. 454/1912/II.

சட்கம் O31,1

வேலாயுதசுவாமி, (மொ. து.)

i. விவேக சட்கம் (தொ. எ. 1443 பார்க்க) ; ii. வேலாயுத சுவாமி ; பூலோக வியாஸன் அச்சுக்கூடம், சென்னை ; iii. பிப்ரவரி, 1912 ; iv. செ. மூ. எ. 6 ; v. 18 × 11 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. 'சிவலோகம்' என முடியும் ஆறு பாக்களைக்கொண்டது. viii. 828/1912/I.

சதகம் O31,1

அந்தோணி குருஸ், வி. ஆர்., இராயவேலூர்

1574. i. அர்ச் சூசையப்பர் அற்புதச் சதகம் : முதற் பதிப்பு ; ii. வி. ஆர். அந்தோனி குரூஸ் ; மெர்குரி பிரஸ், சென்னை ; iii. எப்ரல், 1913 ; iv. செ. மூ. எ. 16 + 101 + 10 ; v. 21 × 14 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. அர்ச் சூசையப்பர் வாழ்க்கையில் நிகழ்த்திய வியத்தகு செயல்களைப்பற்றிக் கூறும் நூல். சூசையப்பர் பிறப்பு முதற்கொண்டு அவரது வாழ்க்கையை விரித்துப் பாடப்பெற்றுள்ளது. இறுதியில், அர்ச் சூசையப்பருடைய ஏழு 'துக்க சந்தோஷங்களைக்' குறித்து ஏழு தேவாரப் பாமாலையும் வழிபாட்டு இசைப் பாடல்களும் வாழ்த்தல் பதமும் உள்ளன. viii. 301/1913/II.

O31,1

அமிர்த கவிராயர், பாலூர்

1575. i. கோகுல சதகம் : முதற் பதிப்பு ; ii. எஸ். சிவசங்கர செட்டியார், சென்னை ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. மார்ச், 1914 ; iv. செ. மூ. எ. 1 + 102 + 1 ;

v. 16 × 13 செ. மீ.; vi. 0–9–0; vii. கோகுலத்தவர்களாகிய இடைச்சாதியரின் பெருமைகளைக் கூறுவது இந்நூல். கண்ணனை வளர்த்த பெருமையும், வள்ளல்கள் பலரைப் பெற்ற பெருமையும் உலகிற்குப் பல பொருள்களைக் கொடுத்துத் துணை புரியும் பெருமையும் உடையவர் இம்மரபார் என்று இச் சதகப் பாடல்கள் கூறுகின்றன. viii. 816/1914/II.

O31,1

1576. i. கோகுல சதகம் (கோவைசிய மாலை, அசதிக் கோவை); ii. குருசாமிக் கோனார்; இராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை; மதுரை; iii. 1914; iv. செ. மூ. எ. 102; v. 21 × 14 செ. மீ.; vi. 0–2–0; vii. கோகுலர்களின் பெருமையையும் முதன்மையையும் விளக்கிடும் பாடல்கள் கொண்டது. கட்டளைக் கலித்துறைப் பாடலால் ஆகியது. யாதவர்களோடு இயைபுடைய பல புராண வரலாறுகள் முதலியவற்றை இது விளக்குகிறது. இதனோடு 'கோவைசியமாலை', அசதிக்கோவை என்னும் இரு நூல்கள் சேர்ந்துள. இவற்றுள் அசதிக்கோவை சிதைவுபட்ட நூல். viii. 1154/1914/III. O31,1

கிருஷ்ணையர், மாயூரம் நல்லக்குடி

1577. i. அவையாம்பிகை சதகம்: முதற் பதிப்பு; i.i. எஸ். சிவசங்கர செட்டியார், சென்னை; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை; iii. செப்டம்பர், 1913; iv. செ. மூ. எ. 1 + 100; v. 16 × 12 செ. மீ.; vi. 0–2–0; vii. மயிலாபுரி என்னும் மாயவரத்தில் கோயில் கொண்டருளும் அவையாம்பிகைத் தாயைப் பற்றிய புகழ்மாலை. பன்னிருசீர்கழிநெடிலடி ஆசிரிய விருத்தப் பாவால் ஆகியது. "மயிலாபுரியில் வளரீசன் வாழ்வே அவையாம்பிகைத் தாயே" என்னும் முடிவைக்கொண்டு எல்லாப் பாடல்களும் அமைந்துள்ளன. அரும் சொற்களுள் ஒரு சில அடிக்குறிப்பில் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 464/1913/IV.

O31,1

குணானந்த ஸ்வாமிகள், மாயூரம்

1578. i. வேதாசல சதகம்: முதற் பதிப்பு; ii. குணானந்த ஸ்வாமிகள், மாயூரம்; வால்மீகி பிரஸ், மாயூரம்; iii. ஜனவரி, 1914; iv. செ. மூ. ப. 18; v. 21 × 14 செ. மீ.; vi. 0–1–0; vii. திருக்கழுக்குன்றத்தில் விளங்கும் வேதாசலப் பெருமானைப்பற்றிய வழிபாட்டு நூல். ஒவ்வொரு பாடலும் 'வேதாசலா! வேதாசலா!!' என்னும் முடிவுடன் அமைந்துள்ளது. திருவாசகம், பட்டினத்தார் பாடல் முதலிய வழிபாட்டு நூல்களின் கருத்துக்களைத் தழுவி இதிலுள்ள பாடல்கள் பல அமைந்துள்ளன. திரிசிரபுரம் எஸ். பி. ஜி. கல்லூரி அ. சுந்தரம் பிள்ளையும், உ. வே. கல்யாணசுந்தர முதலியார் என்பாரும் சிறப்புப் பாயிரம் எழுதியுள்ளனர். viii. 389/1914/I. O31,1

சபாபதி முதலியார்

**1579. i.** அருணாசல சதகம்: முதற் பதிப்பு; **ii.** எஸ். சிவசங்கர செட்டியார், சென்னை; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை; **iii.** மார்ச், 1914; **iv.** செ. மூ. எ. 101; **v.** 16 × 13 செ. மீ.; **vi.** 0-1-0; **vii.** திருவண்ணாமலையில் கோயில் கொண்டருளும் பெருமானின் புகழ் பேசுவது. 'அருணாசலா, அருணாசலா'' என ஒவ்வொரு பாடலும் முடிவு பெறுகின்றது. இறைவனது பெருமையைக் கூறி அவன் திருவருளை வேண்டுகின்றார் ஆசிரியர். திருவாசகம், திருக்குறள், தேவாரம் முதலிய முன்னோர் நூலின் கருத்துக்களை ஆசிரியர் மேற்கொண்டு பாடியிருக்கிறார். "வானாகினை, வெளியாகினை (6) புல்லாகியே பூடாகியே (7) முதலிய பாடல்கள் திருவாசகத்தை அப்படியே அடிஒற்றி அமைந்துள்ளன. "திருவாசகம் ஒன்றுண்டு நல் தேவாரமும் உண்டு, ஆங்கு அவை கருவாய் வழி வாரா நெறிகாட்டும்'' (பாட்டு 56) என ஆசிரியர் திருமுறைப் பாசுரங்களைப் போற்றுகிறார். அருஞ் சொற்களுக்குரிய பொருள்கள் ஆங்காங்கு அடிக்குறிப்பில் உள்ளன. **viii.** 819/1914/II.

O31,1

சுந்தராச்சாரி, சி. கி

**1580. i.** கலைவாணி சதகம் [சரஸ்வதி பஞ்சரத்னம்]; முதற் பதிப்பு; **ii.** கொ. கன்னியப்ப ஆச்சாரியார், சென்னை; விஸ்வ குலோத்தாரண அச்சுக்கூடம், சென்னை; **iii.** மே, 1913; **iv.** செ. மூ. எ. 100 + 1; **v.** 17 × 11 செ. மீ.; **vi.** 0-2-0; **vii.** கலைமகளைக் குறித்த சந்த விருத்தப்பாட்டு நூறு கொண்ட நூல். ஒவ்வொரு பாடலையும் "கலைவாணியே கலைவாணியே'' என்னும் விளித் தொடருடன் நிறைவு செய்கிறார். நூல் இறுதியில் பொது வாழ்த்து ஒன்றும் உள்ளது. **viii.** 553/1913/II.

O31,1

சுப்பிரமணிய ஐயர், கு., சிறுகனூர்

**1581. i.** திருவிளையாடற் சதகம்: முதற்பதிப்பு; **ii.** சோமசுந்தரம் பிள்ளை, தி. கு., திரிசிரபுரம்; வெட்னெஸ்டே ரிவியூ அச்சுக்கூடம், திரிசிரபுரம்; **iii.** எப்ரல், 1911; **iv.** செ. மூ. எ. 6 + 5 + 108; **v.** 21 × 14 செ. மீ.; **vi.** ..........; **vii.** மதுரையில் சோமசுந்தரக் கடவுள் அருளால் நிகழ்ந்த 64 திருவிளையாடல்களையும் 108 பாடல்களையும் தருவது. கந்த புராணத்திலுள்ள 'சங்கர சங்கிதை'யை முதல் நூலாகக் கொண்டு இது எழுதப்பெற்றது. "திசைபுகழு மீனாட்சியுமை தரு நல்லரசாட்சி செய்துவரு கருணாட்சனே'' என்னும் விளித் தொடரை இறுதியாகக் கொண்டு ஒவ்வொரு பாடலும் அமைந்துள்ளது. **viii.** 317/1911/II.

O31,1

1582 i. தசரதராம சதகம்: முதற் பதிப்பு; ii. பு. க. ஸ்ரீநிவாஸாசாரியார், ரிகார்டு அச்சியந்திரசாலை, வேலூர்; iii. ஜூன், 1914; iv. செ. மூ. எ. 1 + 101; v. 18 × 13 செ. மீ.; vi. 0–3–0; vii. இராமன் வரலாற்றை எளிய நடையில் அமைத்துக் கூறும் நூறு விருத்தங்களைக் கொண்ட நூல். ஒவ்வொரு செய்யுளின் ஈற்றிலும், "சனசி மனமகிழ் காம தவசன விநய பூம தசரத குமார ராமா" என்பது மகுடமாக வந்துள்ளது. இந்நூலின் காப்புச் செய்யுளால் இதன் ஆசிரியர் வைணவ மதத்தவரெனத் தெரிகிறது. இந்நூல் ஓலைச் சுவடியினின்று எடுத்தெழுதி அச்சிடப்பட்டதாகும். viii. 99/1914/III. O31,1

திருக்கமலப் புலவர், புளியங்குடி

1583. i. கோமதியம்பிகை சதகம்: முதற் பதிப்பு; ii. எஸ். கந்தசாமிப் புலவர், மதுரை; விவேகபானு பிரஸ், மதுரை; iii. ஏப்ரல், 1914; iv. செ. மூ. எ. 100; v. 17 × 13 செ. மீ.; vi. 0–4–0; vii. சங்கரநாராயணசுவாமி கோயிலில் விளங்கும் கோமதி அம்பிகையைப் பற்றிய புகழ்மாலை. ஆசிரிய விருத்தத்தால் ஆகியது. "தெய்வவர ராசையம்பதி வளரும் மாதவச் செல்வி கோமதிவல்லியே" என ஒவ்வொரு பாடலும் முடிவடைகிறது. அம்மையின் புகழும் பிற சிறப்புகளும் கூறி, அவளுடைய அருளை வேண்டி விண்ணப்பம் செய்யும் வகையில் பாடப்பட்டுள்ளது. viii. 292/1914/II.

O31,1

நாராயணதாசர்

1584. i. வடவேங்கட நாராயண சதகம்: முதற்பதிப்பு; ii. எஸ். சிவசங்கர செட்டி, சென்னை; ரிப்பன் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1914; iv. செ. மூ. எ. 100; v. 17 × 13 செ. மீ.; vi. 0–2–0; vii. திருப்பதி மலையில் எழுந்தருளியிருக்கும் வேங்கடநாராயணனைப் பற்றிய வழிபாட்டுப் பாடல்கள்; கலிவிருத்தப் பாடல்களால் அமைந்துள்ளன. ஒவ்வொரு பாடலும் "நாராயணா, நாராயணா" என்னும் விளியுடன் முடிவுறுகிறது. திருமாலுடைய பிறப்பு நிகழ்ச்சிகளும் கருணைச் செயல்களும் புகழ்ந்து பேசப்பட்டுள்ளன. நூல் முழுமைக்கும் பொழிப்புரை அமைக்கப்பெற்றுள்ளது. viii. 818/1914/II. O31,1

படிக்காசுப் புலவர்

1585. i. தொண்டைமண்டல சதகம்: முதற் பதிப்பு; ii. எஸ். சிவசங்கர செட்டியார், சென்னை; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை; iii. மார்ச், 1914; iv. உ. ப. + செ.மூ. ப. 48; v. 17 × 13 செ. மீ.; vi. 0–2–0; vii. தொண்டை மண்டலத்தின் பெருமைகளைப் பேசுவது இந்நூல். இந்நாட்டிலுள்ள நகரங்களின் மேன்மைகளையும், இங்கே வாழ்ந்த அரசர்கள், வள்ளல்கள், முதலியவர்களின் சிறப்புப் பற்றியும் கூறு

வது ; திருவள்ளுவர், சேக்கிழார் கச்சியப்பர், இரட்டைய அருணகிரிநாதர், ஆகிய புலவர் மணிகள் வாழ்ந்து தமிழுக்கு அணியாக ஒப்பற்ற நூல்களை ஆக்கியதும் இந்நாட்டில்தான். வரலாற்றுச் செய்திகளுக்கு இந்நூல் ஒரு கருவியாக உள்ளது. இச்சதகப் பாடல்களைக் குறிக்கும் செய்திகளுக்கு அடிப்படையாக பிறநூல் மேற்கோள் பாடல்களும் உடன்சேர்த்துப் பதிப்பிக்கப் பட்டுள்ளன. **viii.** 817/1914/II.

O31,1

**மலைக்கொழுந்து நாவலர், திருப்பாண்டிக் கொடுமுடி**

**1586. i.** திருத்தொண்டர் சதகம் : முதற் பதிப்பு ; **ii.** எஸ். சிவ சங்கர செட்டியார், சென்னை ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை ; **iii.** மார்ச், 1914 ; **iv.** செ. மூ. எ. 103 ; **v.** 16 × 13 செ. மீ. ; **vi.** 0–2–0 ; **vii.** சிவனடியார் களின் வரலாற்றைக் கூறி வழிபடும் நூல். வாட்போக்கி சிவதை என்னும் மாணிக்க மலையில் கோயில் கொண்டருளும் இறைவனை முன்னிலைப்படுத்திப் பாடப்பட்டுள்ளது. சுந்தரர் திருத்தொண்டத்தொகை, நம்பியாண்டார்நம்பியின் 'திரு வந்தாதி', சேக்கிழார் அருளிய 'பெரியபுராணம்', உமாபதிசிவம் அருளிய 'புராணசாரம்' என்னும் நூல்களை அடிப்படையாகக் கொண்டு நாயன்மார் கதையை ஆசிரியர் விவரிக்கின்றார். நாயனார் தொகை, மரபு, ஊர், லிங்கம் வேடம் இவற்றில் விடுபெற்றோர் செய்திகளும், நாயன்மார் பூசை விளக் கங்களும் உள்ளன. இறுதியில் உள்ள பத்துப் பாடல்கள் மாணிக்க மலையின் ஊர்ச்சிறப்பை விவரிக்கின்றன. இந் நூலின் முன் பதிப்பிற்கு அழகிய சொக்கநாதபிள்ளை பாடிய சிறப்புப் பாயிரம் முதலில் கொடுக்கப்பட்டுள்ளது. இதிலிருந்து சொக்கலிங்க ஓதுவார் மூர்த்தி என்பார் பல சுவடிகளைப் பார்வை யிட்டு முன் பதிப்பை அச்சிட்டார் என்று தெரியவருகிறது. **viii.** 815/1914/II.

O31,1

**வேதாசலய்யர், பு., பொன்னை**

**1587. i.** கடிகாத்திரி நரசிங்க சதகம் : முதற்பதிப்பு [அமுதவல்லி தாயார் பதிகம், கடிகாத்திரி ஆஞ்சநேயன் பதிகம்] ; **ii** **பு. வேதாசலய்யர்,** பொன்னை; விக்டோரியா ஜூபிலி முத்திராக்ஷர சாலை, சித்தூர் ; **iii.** நவம்பர், 1912 ; **iv.** செ.மூ.எ. 108 ; **v.** 21 × 14 செ.மீ., ; **vi.** இலவசம் ; **vii.** சோளிங்கபுரம் என வழங்கும் கடிகாத்திரியில் கோயில் கொண்டருளும் நர சிங்கக் கடவுளைப் பற்றிய வழிபாட்டு நூல். ஒவ்வொரு பாடலும் நரசிங்க நரசிங்கனே' என்னும் முடிவைக் கொண்டுள்ளன. இடையிடையே சந்தம் வேறுபட்ட கவிகளும் உண்டு. நூறு பாடல்கள் இருப்பதால் இது சதகம் எனப் பெயர் பெற்றுள்ளது. **viii.** 780/1912/IV

O31,1

## சிந்து

**அண்ணுசாமி பிள்ளை, எஸ். வி. கூனூர்**

1588. i. தெள்ளுப்பூச்சியின் நித்திரை பங்கச் சிந்து : முதற பதிப்பு ; ii. எஸ்.வி. அண்ணுசாமி பிள்ளை, கூனூர் ; நியூ ஆல் பியன் அச்சியந்திரசாலை, கூன்னூர் ; iii. டிசம்பர், 1913 ; iv. செ.மூ.எ. 10 + 6 + 6 + 7 ; v. 14 × 11 செ.மீ. ; vi. 0–0–6; vii. தெள்ளுப் பூச்சியினுல் உறக்கம் கெடுவது பற்றியும் அதன் இயல்பு பற்றியும் விளங்கும் சிந்து. இதைத்தவிர, சிலேப்பேன் கும்மி, மூட்டைப் பூச்சியின் அலங்கோலம் பற்றிய காவடிச் சிந்து மெட்டுப் பாடல்களும் இதில் உள்ளன. viii. 800/1913/IV.

O 31,1

**அமிர்தம் பிள்ளை, அ. க., திரிசிரபுரம்**

i. இளம்பிள்ளை உமாமகேசர் குணுங்க சந்தச் சிந்து (தொ. எ. 1502 பார்க்க) ; ii. அ. சிவப்பிரகாசம் பிள்ளை, திண்டுக்கல் ; மெக்கானிக்கல் பிரஸ், திண்டுக்கல் ; iii. மார்ச், 1912 ; iv. செ.மூ. எ. 10 ; v. 22 × 15 செ.மீ ; vi. 0–1–0 ; vii. சேலத்தையடுத்த இளம்பிள்ளை நகரில் விளங்கும் உமா மகேசரை வழிபடும் நூல் ; viii. 31/1912/II.

O 31,1

i. சின்னத்திருப்பதி தங்கச் சிந்து : முதற் பதிப்பு (தொ. எ. 1502 பார்க்க) ; ii. அ. சிவப்பிரகாசம் பிள்ளை, திண்டுக்கல் ; மெக்கானிக்கல் பிரஸ், திண்டுக்கல் ; iii. மார்ச், 1912 ; iv. செ.மூ.எ. 4 ; v. 22 × 15 செ.மீ. vi. 0–1–0 ; vii. சேலம் நகரைச் சேர்ந்த சின்னத் திருப்பதியில் விளங்கும் திரு மாலை வழிபடுவது. viii. 31/1912/II.

O 31,1

**அரிகிருஷ்ண நாடார், சி. அ., ஏரல், தூத்துக்குடி**

1589. i. அருணசல சுவாமிகள் சித்து விளையாடற் சிந்து-இரண்டாம் பாகம்;, முதற் பதிப்பு; ii. சி. ஆ. அரிகிருஷ்ண நாடார், ஏரல், தூத்துக்குடி ; சைவப்பிரகாச அச்சியந்திரசாலை, தூத்துக்குடி ; iii. பிப்ரவரி, 1911 ; iv. செ. மூ. ப. 12 ; v. 21 × 14 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. ஏரல் மாநகரத்தில் சமாதி அடைந்துள்ள அருணசல சுவாமிகளின் சிறப்பைப் பற்றி உரைப்பது. ஆடி அமாவாசையில் இங்கு வந்து மக்கள் பலர் குழுமிப் பூசை முதலிய சிறப்புகள் செய்வதுண்டு. இச்சுவாமி கள் அருளால் பல வியத்தகு நிகழ்ச்சிகள் நிகழ்ந்தனவாம். இச்சிந்தில் காவடிச் சிந்து, வர்ண மெட்டு, கும்மி, தேவாரம் என்னும் தலைப்புக்களில் வேறு வேறு வகையான சந்தப் பாடல் கள் அமைந்துள்ளன. viii. 529/1911/I.

O 31,1

**அருணசலம் பிள்ளை, அய்யாநல்லூர்**

1590. i. பின் முடுக்கு நொண்டி சிந்து ; ii. கதிர்வேல் பிள்ளை ; ஹயவதன விலாஸ அச்சுக்கூடம், கும்பகோணம் ; iii. 1915; iv. செ.மூ.எ. 65 ; v. 22 × 15 செ.மீ., vi. 0–0–6 ; vii. அறுமுகனுக்கும் வள்ளிக்கும் நடக்கும் திருமணத்தை விளக்கும் செய்யுள் வடிவில் அமைந்த கதை. ‘சுவாமிநாத சுவாமியாகிய சுப்பிரமணியக் கடவுள் திருவலஞ் சுழியில் சென்று வள்ளி நாயகியைத் திருமணம் செய்த பின் முடுகநொண்டிச் சிந்து’ என்று இந்நூற்பெயர் குறிக்கப்பட்டிருக்கிறது. viii. 127/1915/II.

O31,1

**அவரைக்கோட்டை சுவாமிகள்**

i. அவரையானந்தச் சிந்து (தொ. எ. 1246 பார்க்க) ; ii. டி. தியாகராசன் ; நீலலோசனி பிராஞ்சு அச்சுக்கூடம், திருவாரூர் ; iii. எப்ரல், 1913 ; iv. செ.மூ.எ. 32+9 ; v. 14 × 11 செ.மீ. ; vi. 0–0–3 ; vii. வேதாந்தக் கருத்துக்கள் அமைந்த சிந்துப் பாடல்கள் இவை. இதிலுள்ள பாடல்கள் எல்லாம் ‘அவரையானந்தமே’ என்று முடிவுறுகின்றன. யோகநிலையைப் பற்றி இது விவரிக்கிறது. இங்கே அவரை என்பது இறைவனைக் குறித்துக் கூறிய சுட்டுப் பெயர். இதன் இறுதியில் ‘பிரமானந்தமே’ என முடியும் பிரமானந்தச் சிந்து பாடல்கள் ஒன்பது உள்ளன. viii. 250/1913/II.

O31,1

**ஆறுமுகம், என். ஏ., நாமக்கல்**

1591. i. நாமக்கல் பிளேக் சிந்து : முதற் பதிப்பு ; ii. என்.ஏ. ஆறுமுகம்; யூனியன் பிரஸ், நாமக்கல் ; iii. ஜூன், 1911 ; iv. செ.மூ.ப. 10 ; v. 22 × 14 செ. மீ.; vi. 0–1–0 ; vii. நாமக்கல் பகுதியில் நடமாடிய பிளேக் நோயினால் ஏற்பட்ட குழப்பத்தைப் பற்றிய சிந்து. நாமக்கல் ‘பிளேக் டியூட்டியில் பாஸ் போர்ட் கிளார்க்காக’ இருந்தவர் இவ்வாசிரியர், 1910ஆம் ஆண்டு ஏற்பட்ட வால் நட்சத்திரத்தின் விளைவாக எட்வர்ட் மாமன்னர் இறந்தபோது இந்த பிளேக் நோயும் மக்களைத்தாக்கியதாம். நொண்டிச்சிந்து, கும்மி மெட்டுக்களிலும் பாடல்கள் உள்ளன. viii. 779/1911/II.

O31,1

**கந்தசாமிக் கவிராயர், ஏ., விருதுப்பட்டி**

1592. i. அருணாசல சுவாமிகள் அதிசயச் சிந்து : முதற் பதிப்பு ; ii. ஏ. கந்தசாமிக் கவிராயர், சச்சிதானந்த அச்சியந்திரசாலை, விருதுபட்டி ; iii. அக்டோபர், 1911 ; iv. செ.மூ.ப. 8 ; v. 21 × 13 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. எரல் மாநகரத்தில் சமாதியடைந்த அருணாசல சுவாமிகள் சித்து விளையாடல் பற்றிக் கூறும் நூல். viii. 328/1911/IV.

O31,1

**கந்தசுவாமி புலவர், சு.**

1593. i. ஏறல் சுவாமி அருள் விலாசச் சிந்து : முதற் பதிப்பு ; ii. என். சிவகுருநாத பிள்ளை ; சைவப் பிரகாச அச்சியந்திரசாலை, தூத்துக்குடி ; iii. மே, 1911 ; iv. செ.மூ.ப. 2 + 12 ; v. 21 × 14 செ.மீ.; vi. 0–2–0 ; vii. எரல் மாநகரில் சமாதி கொண்டிருக்கும் அருணாசல சுவாமியின் சமாதியில் நிகழ்ந்த வியத்தகு நிகழ்ச்சிகளை விவரிக்கும் சிந்துப் பாடல்கள், அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்தில் வரும் " என்னடி நான் பெற்ற மங்கை ", " மஞ்சுநிகர் குந்தளமின்னே", "வெள்ளிமலையொத்தபல மேடை", "பாளைவாய்கமுகில் ஊறும்" என்னும் பாடல்கள் மெட்டில் இந்நூல் பாடல்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. viii. 19/1911/III.

O31,1

**கதிர்வேற் பிள்ளை**

1594. i. அற்புத விநாயகர் சிந்து ; ii. சாஸ்திர ஸஞ்சீவிநீ அச்சுக்கூடம், சென்னை ; iii. 1915 ; iv. செ.மூ.ப.8; v. 22 × 14 செ.மீ. ; vi. 0–0–3 ; vii. கடவுள் கணேசரை அற்புத விநாயகராக நினைந்து அவர் புகழைப்பாடும் புகழ்மாலை. கும்மி, நொண்டிச்சிந்து, மெட்டுகளில் அமைந்த பாடல்களும் இறுதியில் உள்ளன. viii. 698/1915/IV.

O31,1

**கிருஷ்ணசாமி கோனூர், ஜெயங்கொண்டசோழபுரம்**

1595. i. இராமாயணத் திருப்புகழ்ச் சிந்து : முதற் பதிப்பு ; ii. ஆறுமுக முதலியார்,; மாணிக்க விலாச அச்சுக்கூடம் ; iii. ஏப்ரல், 1915 ; iv. செ.மூ.ப. 24 ; v. 21 × 14 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. இராமாயணக் கதையானது காண்டங்கள் வாரியாகச் சிறுபாடல்களில் கூறப்பட்டுள்ளது. ஆசிரியர் இப்

பாடல்களைக் கூத்து எனும் நாடகத்திற்குத் தகுந்த முறையில் இயற்றியுள்ளார். இந்நூலில் வெங்கிடாசலபதி, அனுமன் ஆகியவர்களின் பேரிலும் இசைப்பாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவை காவடிச் சிந்து வர்ண மெட்டில் உள்ளன. "ராமாயணக் காவடிச் சிந்து எனவும் இந்நூல் வழங்கப்படும். viii. 730/1915/II.

O31,1

**கிருஷ்ணய்யங்கார், ப. கி. தி., திரணி**

1596. i. திருமங்கையாழ்வார் வைபவச் சிந்து; ii. ஸ்ரீ சரண்யாபிமத விஷ்ணு சித்தராமானுஜ சபை, மதுரை ; அஷ்டலக்ஷ்மி விலாஸ் அச்சுக்கூடம், மதுரை ; iii. 1915 ; iv. செ.மூ.எ. 1+109 +1 ; v. 21 × 13 செ.மீ.; vi.............vii; தென்னிந்தியாவில் புகழ் பெற்று விளங்கிய வைணவ சமயப் பெரியாராகிய திருமங்கையாழ்வாரின் பெருமையை விளக்குவது இந்நூல். கோவிந்த சாமி ஐயர், திருமலை ஐயங்கார், ப. இராமய்யங்கார் ஆகியோர் இதற்குச் சாத்துக் கவிகள் தந்துள்ளனர் ; viii. 494/1915/III.

O31,1

**கோபால உபாத்தியாயர், மு. க.**

1597. i. சிலோன் வினு விடைச் சிந்து : முதற்பாகம், முதற் பதிப்பு ; [முத்துமாரியம்மன் கும்மி, ஓரடிக்கீர்த்தனை, எசல்] ; ii. மு.க. கோபால உபாத்தியாயர், ராமச் சந்திர விலாசம் பிரஸ், மதுரை ; iii டிசம்பர், 1911 ; iv. செ.மூ. ப. 26 ; v. 21 × 14 செ.மீ.; vi. 0-5-0; vii. கதிர்காம வேலனைப்பற்றிய வழிபாட்டுப் பாடல்கள் உள்ளன. இவை அண்ணாமலை ரெட்டியார் பாடிய காவடிச் சிந்தின் வர்ண மெட்டில் அமைந்துள்ளன. இதனோடு நாவல்பட்டி முத்துமாரியம்மன் பேரில் கோலாட்டப் பாட்டும் உள்ளது. viii. 2/1912/I.

O31,1

**கோவிந்தசாமி ஐயர், மு**

1598. i. திருஞானசம்பந்த சுவாமிகள் சிந்து ; முதற் பதிப்பு; ii. மு. கோவிந்தசாமி ஐயர், விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. ஜனவரி, 1914 ; iv. செ.மூ.எ. 9 + 112 ; v. 22 × 14 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. சைவ சமயக்குரவருள் ஒருவராகிய சீகாழி ஞானசம்பந்த சுவாமிகளின் வரலாறு. பெரியபுராணத்தில் கூறப்பட்ட வரலாற்றுச் செய்திகள்

முழுவதையும் இந்தச் சிந்துப் பாட்டில் தந்துள்ளார். மதுரை ஞானசம்பந்த சுவாமிகள் மடத்துத் தலைவரின் கட்டளையால் இந் நூல் இயற்றப்பெற்றது. கலியாணசுந்தர பட்டர், சோழவந்தான் அ. சண்முகம் பிள்ளை, மு. ரா. கந்தசாமி கவிராயர், மு.கதிரேசஞ் செட்டியார் முதலியோர் இதற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். viii. 169/1914/I.

O 31,1

சதாசிவம் பிள்ளை, ஜி., திருவிடைமருதூர்

1599. i. அம்பலவாணதேசிகசுவாமிகள் சிந்து : முதற் பதிப்பு ; ii. எம். இரத்தினசாமி, திருவாரூர். ஜி. சதாசிவம் பிள்ளை, திருவிடைமருதூர் ; நீலலோசனி பிராஞ்சு பிரஸ், திருவாரூர்; iii. ஜனவரி, 1914 ; iv. செ.மூ. ப.10 ; v. 16×12 செ.மீ. ; vi. இலவசம் ; vii. திருக்கைலாய பரம்பரை திருவாடுதுறை மகாசந்நிதானம் தவத்திரு அம்பலவாண தேசிகரைப் பற்றிய வழிபாட்டு நூல், வெவ்வேறுவகைச் சந்தங்களில் அமைந்த பாடல்கள் இதில் உள்ளன. சுவாமிகளின் பெருமையையும் அவருடைய விருப்பத்தையும் வியந்து போற்றுவது; viii. 122/1914/II.

O 31,1

சற்குரு சுவாமிகள், வெள்ளனூர், திருச்சிறுப்பள்ளி

i. சற்குரு சிந்து (தொ. எ. 1438 பார்க்க), முதற் பதிப்பு; ii. ச. அய்யாசாமி உடையார், ஸ்ரீ கிருஷ்ண விலாஸ பிரஸ், திருச்சிறுப்பள்ளி ; iii. மே, 1912 ; iv. செ.மூ.ப.3. ; v. 22×14 செ. மீ. ; vi. .......... ; vii. சிவபெருமானை வழிபடும் பாடல்கள் உள்ளன ; viii. 856/1912/II.

O 31,1

சாமிதாசன், வே. சி., தூத்துக்குடி

1600. i. அருணசல சுவாமி அற்புதச்சிந்து : முதற் பதிப்பு ; ii. வே. சி. சாமிதாசன், தூத்துக்குடி ; சச்சிதானந்தம் அச்சியந்திர சாலை, விருதுபட்டி ; iii. ஜனவரி, 1914 ; iv. உ.ப.+செ.மூ.ப. 8 ; v. 21×13 செ.மீ. ; vi.0-1-0 ; vii. எரல் மாநகரில் சமாதி கொண்டுள்ள அருணசலசுவாமிகளின் சிறப்பு பற்றியது. ஆடாத பேய்களையும் ஆட்டிவைத்து ஓட்டும் சீரிய வன்மை இவரது கோயிலுக்கே உண்டு. இவரது சமாதியை வணங்கி நற்பேறு பெற்றோர் பலராவர். இவரது

சமாதியில் அமாவாசை, பௌர்ணமி நாட்களில் மக்கள் திரளாக வந்து வணங்குவது உண்டு. viii. 396/1914/I.

O31,1

சாமுண்டி ஆசாரியார், பி.

1601. i. நற்குண்டுருண்ட நாராயணன் மகிமை அலங்காரச் சிந்து: முதற் பதிப்பு; ii. சாப்ஜி சாயபு என்னும் குலா மஹமத் தஸ்தகீர்கான் சாயபு & ஏ. ரத்தினவேலு முதலியார்; வாணிவிலாஸ அச்சுக்கூடம், சென்னை; iii. பிப்ரவரி, 1911; iv. செ.மூ.ப. 8; v. 22×14 செ.மீ.; vi.0-0-3; vii. சேலம் நகரையடுத்த தர்மபுரி வட்டத்தில் உள்ள பக்தர்கிரியில் குண்டு இறங்கின சிறப்பைப் பற்றி உரைப்பது. அந்த இடத்தில் திரு. நாராயணன் குடிகொண்டு பக்தர்களுக்கு அருளிய திறத்தை உரைப்பது; viii. 101/1911/II.

O31,1

சிகாமணி, ஜே.

1602. i. யேசுநாயக உத்தானச் சிந்து: முதற் பதிப்பு; ii. எம். எம். பி. மஸ்கரீஹாஸ், தூத்துக்குடி, சிவப்பிரகாசப் பிரஸ், தூத்துக்குடி; iii. எப்ரல், 1914; iv. செ.மூ.எ. 45; v. 16×13 செ.மீ.; vi. இலவசம்; vii. ஏசுகிறித்து நாதர் உலகில் மனிதனாக வந்து பட்ட பல பாடுகளை விரிக்கும் சிந்து நூல். சிலுவையில் அறையுண்டு கல்லறையில் புகுந்து மீண்டும் உயிர்த்தெழுந்த சிறப்பு நிகழ்ச்சியை விரிப்பது; viii. 265/1914/II.

O31,1

சிங்காரவேலு முதலியார்

1603. i. ஷண்முக லீலா விநோதம்: முதற் பதிப்பு; ii. சிங்காரவேலு முதலியார், சென்னை; ப்ரின்ஸ் ஆப்வேல்ஸ் அச்சுக்கூடம், சென்னை; iii. நவம்பர், 1914; iv. செ.மூ.ப. 20; v. 22×14 செ.மீ.; vi. 0-2-0; vii. சுப்பிரமணியக் கடவுள் வள்ளியை மணந்த கதையைச் சில பாடல்களில் விரிப்பது. வள்ளியம்மை தெய்வானை பற்றிய சிந்தும் இதில் உள்ளது; viii.754/1914/IV.

O31,1

**சின்னச்சாமி பிள்ளை, கோ., திருத்தங்கல்**

1604. i. அருணாசல சுவாமிகள் மகத்துவம் : முதற் பதிப்பு ; ii. கோ. சின்னச்சாமி பிள்ளை, சச்சிதானந்தம் அச்சியந்திர சாலை, விருதுபட்டி ; iii. செப்டம்பர், 1911 ; iv. செ.மூ.ப. 8; v. 21×13 செ.மீ. ; vi. 0-1-0 ; vii. எரலில் சமாதி கொண்டிருக்கும் அருணாசல நாடார் சிறப்பைப் பேசுவது. காவடிச் சிந்து, நொண்டிச் சிந்து கும்மி மெட்டுக்களில் பாடல்கள உள்ளன ; viii. 957/1911/III.

O31,1

**சுந்திரராசு செட்டி, கோ.**

1605. i. வேடிக்கைச்சிந்து : முதற் பதிப்பு ; ii. கோ. சுந்திர ராசு செட்டி, மன்னார்குடி, மன்னார்குடி சம்பகலெட்சுமி விலாச பிரஸ் ; iii. பிப்ரவரி, 1915 ; iv. செ.மூ.எ. 31 ; v. 22×14 செ.மீ. ; vi. 0-0-6 ; vii. ஒரு 'ஜட்கா வண்டிக்கும்' ஒரு புகை வண்டிக்கும் ஏற்பட்ட வேடிக்கையான உரையாடலையும், 'மோட்டார் கார்' சந்து செய்வதையும் விளக்கும் சிந்து பாடல்கள் கொண்டது இந்நூல். இதைப் படிப்பவர்க்கும் கேட்பவர்க்கும் அடிக்கடி சிரிப்பை உண்டாக்கி மகிழ்ச்சியை ஊட்டும் தன்மை கொண்டது. மன்னார்குடிக்கு முதல் முதலாக புகைவண்டி வந்த வரலாற்றை விளக்குகிறது. 1915 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 15ஆம் நாள் முதல் புகை வண்டிப் போக்குவரவு அங்குத் தொடங்கியதாக இச் சிந்து பாட்டு குறிப்பிடுகிறது ; viii. 1182/1915/I

O31,1

**சுப்புசுவாமி ஐயர், எச். டி., அம்பாசமுத்திரம்**

1606. i. இராமாயணச்சிந்து [கிருஷ்ணமூர்த்தி லீலைக்கும்மி] ; ii. எச். டி. சுப்புசுவாமி ஐயர் & சங்கரநாராயண பிள்ளை, சிந்தாமணி அச்சியந்திரசாலை, பாளையங்கோட்டை ; iii. டிசம்பர், 1911 ; iv. செ.மூ.ப. 30 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. இராமன் வரலாற்றைச் சுருக்கமான முறையில் சிறப்பு நிகழ்ச்சிகளெல்லாம் அடங்கச் சிந்துப் பாட்டில் தருவது. அண்ணாமலை ரெட்டியார் பாடிய காவடிச்சிந்துப் பாடல்கள் மெட்டில் ஆசிரியர் இயற்றியுள்ளார். பத்தொன்பது படலங்களாகப் பாகுபடுத்தி இவ்வரலாற்றை அமைத்துள்ளார் ; viii. 295/1912/I.

O31,1

1607. i. சேசுநாதரின் திருப்பாடுகளின் பேரில் சிந்து : முதற் பதிப்பு ; ii. எஸ். ஆரோக்கியம் & ரிபேரா சுவாமிகள், சென்னை; ஜோஸப் இண்டஸ்டிரியல் பிரஸ், திருச்சினுப்பள்ளி ; iii. எப்ரல், 1914 ; iv. உ.ப.+செ.மூ.ப. 31 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. சிலுவைப்பாட்டு நிகழ்ச்சியை, "சேசுநாதருடைய திருப்பாடுகளின் கடியாரம்" என்னும் பகுதி விளக்குகிறது. எசுநாதர் வியாழக்கிழமை இரவு உணவு உட்கொண்டது முதல் அடுத்த நாள் சிலுவையில் உயிரை விட்டு அவருடைய மாணுக்கர்கள் அடக்கம் பண்ணிய வரையில், இன்ன மணி வேளையில் இன்ன நிகழ்ந்தது என்று விவரிக்கப் பட்டுள்ளது. எசுநாதர் சிலுவையில் அறையப்பட்ட செய்தியை வெளிப்படுத்தும் இரங்கற் பாக்கள் பல உள்ளன. 'தேவமாதா வின் புலம்பலும்' இதில் உள்ளது ; viii. 171/1914/II.

O31,1

சொக்கலிங்கம் பிள்ளை, ஆர்.

1608. i. திருப்பரங்குன்றம் மஹத்துவச்சிந்து : முதற் பதிப்பு ; ii. ஆர். சொக்கலிங்கம் பிள்ளை, ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மார்ச், 1912 ; iv. செ.மூ.ப. 16 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–1–6 ; vii. மதுரையை அடுத்து விளங்கும் முருகன் கோயில் கொண்ட திருப்பரங்குன்றத்தின் பெருமையைப் பேசுவது. முருகன் வணக்கம். திருப்பரங்கிரிவளப்பம், சுவாமி தரிசனம், காவடிச் சிறப்பு, வேடனாக வந்த சுப்பிரமணியருக்கும் வள்ளிக் கும் தர்க்கம் ஆகியவை பற்றிப் பாடல்கள் உள்ளன. இதில் காவடிச்சிந்து, கும்மி, ஆனந்தக் களிப்பு, நொண்டிச் சிந்து, லாவணி மெட்டுக்களடங்கியிருக்கின்றன ; viii. 18/1912/II.

O31,1

தேரோடும் பெருமாள் நாடார், ம. சு., தூத்துக்குடி

1609. i. எரல் சேர்மென் தெய்வீகச்சிந்து : முதற் பதிப்பு ; ii. என் சிவகுருநாத பிள்ளை, தூத்துக்குடி; சைவப் பிரகாச அச்சியந்திரசாலை, தூத்துக்குடி ; iii. பிப்ரவரி, 1912 ; iv. செ.மூ.ப. 58 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. எரல் மாநகரத்தில் அருணாசல நாடார் சமாதியில் நிகழ்ந்த சித்து விளையாடல்களைப்பற்றி விவரிக்கும் சிந்து பாட்டு. வழிநடைச் சிந்து, அம்மானை., தாலாட்டு, பூசை, அலங்காரம், ஒப்பாரி கண்ணி, கும்மி, பாம்புச்சிந்து, பேய்ச்சிந்து சந்தக் கும்மி முதலிய தலைப்புக்களில் பாடல்கள் உள ; viii. 771/1912/I.

O31,1

**நாராயணசாமிக் கவுண்டர், மு.**

1610. i. ஆடியீட்டு மோரீஸ் மணிலாக்கொட்டை அலங்காரச் சிந்து ; ii. ஆர். வரதைய நாயுடு, நெல்லிக்குப்பம் ; ஸ்ரீவர லக்ஷ்மி விலாசம், பிரஸ் ; iii. 1915 ; iv. செ.மூ.ப. 12 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. அதிக மழையினால் நிலக்கடலைப் பயிருக்கு அழிவு உண்டானதைப் பற்றிய செய்யுள். 'ஆடியீட்டுக் கொட்டையின் அலங்காரச் சிந்து' என்றும் இது குறிக்கப்படும். ஆண்–பெண் உரையாடலாக இது அமைக்கப்பட்டுள்ளது. 'தாது கருப்பும் பார்த்தேன் நாரண வெள்ளம் பார்த்தேன் யேது ஆனந்தாவைப்போல் இதுவரைக் கும் கண்டதில்லை' என முன்பு நிகழ்ந்த சில நிலைமை களைச் சுட்டிக்காட்டுதல் கவனிக்கத்தக்கது. viii. 111/1915/II.

O31,1

**பக்கிரிசாமிப் பிள்ளை, அரு., அந்தணர் பேட்டை**

1611. i. எட்டுக்குடி ஸ்ரீ முருகக்கடவுள் பேரில் ஆனந்தச்சிந்து [குறம், புகழ்கும்மி] ; ii. வி. வரதராஜலு நாயுடு, வெளிப் பாளையம் ; நீலலோசனி அச்சுக்கூடம், நாகப்பட்டணம் ; iii. எப்ரல், 1914 ; iv. செ.மூ.ப. 4 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. முருகப் பெருமான் பிறப்பு நிகழ்ச்சி களைக் கூறுவது. viii. 655/1914/II .

O31,1

i. சிவசுப்பிரமணியக் கடவுள் பேரில் ஆனந்தசிந்து (தொ. எ. 1692 பார்க்க) முதற் பதிப்பு ; ii. மகா பரசுராம் பாகவதர், சங்கையூர்; நீலலோசனி அச்சுக்கூடம், நாகப்பட்டணம் ; iii. மார்ச், 1913; iv. செ.மூ.ப. 2 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. எட்டுக்குடி முருகனுக்குக் காவடி எடுத்துச் சென்று பக்தர்கள் பரவித் தொழுவதை வருணிப்பது இச் சிந்து. சிங்கார வேலவனே என்னும் வர்ணமெட்டு ஒன்றும் ஈற்றில் உள்ளது. viii. 112/1913/II.

O31,1

**பரிமளதாஸ், ஐ., இரசைமாநகரம்**

1612. i. சந்தலலங்காரச்சிந்து : முதற் பதிப்பு ; ii. ஐ. பரிமள தாஸ் (இரசை மாநகரம்) மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மார்ச், 1914 ; iv. செ.மூ.ப. 36 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. மதுரைக்கு அண்மையிலுள்ள சிக்கந்தர் மலையில் விளங்கும்

துல்க்கருணை அவுலியா என்பாரைப் பற்றிய தோத்திரம். இந் நூலாசிரியரின் குருவாகிய இளையான்குடி மஸ்தான் முகம்மது மீரான் மெய்ஞ்ஞான தேசிகரை முதலில் வணங்கி இந்நூலைத் தொடங்கியுள்ளார். சிக்கந்தர் துல்க்கருணை என்பாரைக் குறித்து விருத்தப்பாவில் அமைந்த புகழ்ப் பாடல்கள் முதலில் அமைந்துள்ளன. அடுத்து வரும் சந்தலலங்காரச்சிந்து, பல வகைச்சிந்து மெட்டுகளைத் தழுவி அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலின் தலைப்பிலும் இராக தாளக் குறிப்புக்களும், அது அமைந்துள்ள வர்ண மெட்டும் கொடுக்கப்பட்டிருக்கின்றது. viii. 1117/1914/I.

O31,1

**பாலகவி பாஸ்கரன், சிங்காநல்லூர்**

1613. i. கூத்தாண்டையெனக்கூறும் இராவான் சிந்து: முதற் பதிப்பு; ii. ஸ்ரீனிவாசய்யர், கோயமுத்தூர்; கிருஷ்ண விலாச அச்சாபீஸ், கோயமுத்தூர்; iii. நவம்பர், 1910; iv. செ.மூ.எ. 34; v. 21×14 செ. மீ.; vi. 0–0–9; vii. இது பாரதக் கதையில் வரும் இராவான் வரலாறு பற்றியது. இவ்வரலாறு பாரத நூல்களில் ஒருசில வேறுபாடுகளுடன் உள்ளது. இவனைத் தெய்வமாகக் கொண்டாடுவோரின் கொள்கைக்கும், ஹனுமத்பாரதத்திலுரைக்கும் வரலாற்றிற்கும் ஒப்புமையிருப்பதால் அதனைப் பின்பற்றி இது எழுதப் பட்டது. இவர் வரலாற்றில் முடிவாகவரும் 'களபலி' என்னும் துயரச் செய்தியைக் கூறுது, இராவான் - திருமணத்தோடு ஆசிரியர் மங்களமாக முடித்திருக்கிறார். இதில் (1) காவடிச் சிந்து, (2) வண்ணச் சிந்து, (3) முடுகு சிந்து ஆகிய மூவகைச் சிந்தும் விரவி வருகின்றன. viii. 64/1911/I.

O31,1

i. பிராமணப்பெண்ணை துலுக்கனுக்கு விற்த்த துரோகியின் சிந்து. (தொ.எ. 1905 பார்க்க); முதற் பதிப்பு; ii. கிருஷ்ண பிள்ளை; ஆதிகணதிபதி அச்சுக்கூடம், சென்னை; iii. பிப்ரவரி, 1911; iv. செ.மூ.ப. 8; v. 21×14 செ.மீ.; vi. 0–3–0; vii. இது சமூக நிகழ்ச்சியைப் பற்றியது. பிராமணனுகப் பிறந்த ஒரு இந்து தன் பெண்ணுடன் புகைவண்டியில் பயணம் செய்யும்போது ரூ. 2,000 வாங்கிக் கொண்டு, பெண்மேல் ஆசைகொண்ட திருப்பத்தூர் இசுலாமியன் ஒருவனுக்கு விற்று விட்ட கதையைக் கூறுவது. viii. 497/1911/I.

O31,1

பெரியசாமிப் புலவர், அ., சிதம்பரம்

1614. i. வெள்ளமெடுத்தபதம், உடைப்படைச்சிந்து : முதற் பதிப்பு ; ii. அ. பெரியசாமிப் புலவர், சிதம்பரம் ; விநாயக சுந்தரவிலாசம் பிரஸ், சிதம்பரம் ; iii. மார்ச், 1914 ; iv. செ.மூ.ப. 12 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–0–3 ; vii. தென் ஆற்காடு மாவட்டத்தில் மிகவும் மழை பெய்ததினால் எரி, குளம் முதலியவைகளெல்லாம் உடைந்து அழிவு விளைவித்தது பற்றிக் கூறுகிறது. 1913ஆம் ஆண்டு, ஐப்பசித் திங்களில் இது நிகழ்ந்தது. பின் அலுவலாகள் கூடி, உடைப்புகளை அடைத்துச் சீர்படுத்திய நிகழ்ச்சிகளை விவரிப்பது. பதம், சிந்து என்னும் இசைப்பாக்களினால் பாடப்பட்டது. viii. 117/1914/II

O31,1

முருகதாஸ், மதுரகவி

1615. i. குளுமாயி அம்மன்சிந்து : முதற் பதிப்பு ; ii. முருகதாஸ், ஸ்ரீராமசந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மார்ச், 1912 ; iv. செ.மூ.ப. 7 v. 22×14 செ. மீ. ; vi. 0–1–0 ; vii. திருச்சிராப்பள்ளி, புத்தூரில் கோயில் கொண்டருளும் குளுமாயி அம்மனைப் பற்றிய வழிபாட்டு நூல். அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்து பாட்டுக்களில் சிலவற்றின் சந்தத்தை மேற்கொண்டு பாடிய பாடல்கள் உள்ளன. இதன் ஆசிரியர் மதுரகவி முருகதாசர் என்பாருக்குப் பேச்சிமுத்துப்பிள்ளை என்பது இயற் பெயராகும். viii. 80/1912/II.

O31,1

முருகேச கிராமணி, பெருங்குளத்தூர்

1616. i. தீர்த்தோற்சவசிந்து : முதற் பதிப்பு ; ii. முருகேச கிராமணி, பெருங்குளத்தூர்; ஸ்ரீ கிருஷ்ணவிலாச அச்சுக்கூடம் திருப்பாதிரிப்புலியூர் ; iii. நவம்பர், 1911 ; iv. செ.மூ.ப. 31; v. 13×11 செ.மீ. ; vi. 0-1-0 ; vii. திருவண்ணாமலை வட்டம் தடாக நகரமென்னும் பெருங்கொளத்தூர் வேணு கோபாலசுவாமி பினாகினியென்னும் பெண்ணையாற்றில் ஆடிப் பதினெட்டில் தூய நீர் கொடுக்கும் விழா பற்றிய நிகழ்ச்சிகளை விவரிப்பது இந்நூல். நொண்டிச்சிந்து காவடிச்சிந்து, கும்மி, தெம்மாங்கு என்னும் பாடல்வகைகள் இதில் உள்ளன. விழா விற்குச் சென்ற ஆடவனொருவன் தன் காதலிக்கு விழா நிகழ்ச்சிகளைச் சுட்டிக்காட்டி விளிப்பதாக இது அமைந்துள்ளது. viii. 762/1911/IV.

O31,1

**மூனிசாமி முதலியார், சூளை, சென்னை**

i. அர்பத் நெட்டவுஸ் அலங்கோலச்சிந்து முதல் பாகம் (தொ.எ. 1905 பார்க்க) முதற் பதிப்பு; ii. நாராயணசாமி முதலியார், களத்தூர்; ஆதிகணுதிபதி அச்சுக்கூடம், சென்னை; iii. பிப்ரவரி, 1911; iv. செ.மூ.ப. 8; v. 21×14 செ.மீ.; vi. 0-3-0; vii. 'அர்பெத் நெட்டௌஸ் பாங்கி' திவாலர்ன நிகழ்ச்சி பற்றியது. ஆங்கிலேயர் செய்கையும் வங்கிக்கு வந்த இழப்பும், சென்னை கிளையில் பணம் போட்டிருந்த பலரும் இழந்து வருந்திய நிகழ்ச்சியும் பற்றி விவரிப்பது viii. 497/1911/I.

O31,1

617. i. இருகொலைச்சிந்து: முதற் பதிப்பு; ii. மருதமுத்துப் பிள்ளை, லக்ஷ்மி நரசிம்ம விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1912; iv. செ.மூ.ப. 7; v. 20×14 செ.மீ.; vi. 0-0-6; vii. சென்னை சிறையின் கலகத்தையும், 32 வயதான ஒரு பிராமணப் பெண் இழி குணத்தால் தன் கணவனை விட்டுச் சென்னை வந்து ஒழுக்கங்கெட்ட வாழ்க்கையில் ஈடுபட்டுக் கொலையுண்டு இறந்த செய்தியையும் பற்றிய சிந்துப் பாட்டு. viii. 382/1913/III.

O31,1

i. உடன்கட்டையேறிய உத்தமிச்சிந்து (தொ.எ. 1905 பார்க்க) முதற் பதிப்பு; ii. நாராயணசாமி முதலியார், களத்தூர்; ஆதிகணுதிபதி அச்சுக்கூடம், சூளை, சென்னை; iii. பிப்ரவரி, 1911; iv. செ.மூ.ப. 8; v. 21×14 செ.மீ.; vi. 0-3-0; vii. தன் கணவனுடன் உடன்கட்டை ஏறிய கற்புடைய மங்கையைப்பற்றிய ஒரு வரலாறு. viii. 497/1911/I.

O31,1

i. செல்வப்பிள்ளை அகடவிகட கலியாணச்சிந்து (தொ.எ. 1905 பார்க்க) முதற் பதிப்பு; ii. நாராயணசாமி முதலியார், களத்தூர்; ஆதிகணுதிபதி அச்சுக்கூடம், சென்னை; iii. பிப்ரவரி, 1911; iv. செ.மூ.ப. 8; v. 21×14 செ.மீ.; vi. 0-3-0; vii. செல்வனுகிய ஒரு கயவன் தன் பிள்ளைக்குக் கலியாணம் செய்வித்ததைப் பற்றிக் கூறுவது. சிக்கனமாகக் காசு செலவில்லாமல் வெளியூரில் கல்யாணம் நிகழ்த்திப்பட்ட பாட்டை வேடிக்கையாக விவரிப்பது; viii. 497/1911/I.

O31,1

1618. i. திருப்பதி எழுமலையான் சாக்ஷி சொன்ன வேடிக்கைச் சிந்து; முதற் பதிப்பு; ii. சு. ராமசாமி உபாத்தியாயர்,i பிறைசை; இரத்தினவிலாச அச்சுயந்திரசாலை, பிறையாறு; ii. நவம்பர், 1911; iv. செ.மூ.ப. 8; v. 21×14 செ.மீ.; vi. 0–0–3; vii. நீதிமன்றத்தில் ஒரு பக்தனுக்காகத் திருப்பதி எழுமலையான் ஒரு வழக்கில் சாட்சிசொன்ன நிகழ்ச்சியைப் பற்றி விவரிப்பது இது சிந்துப்பாட்டில் அமைந்தது; viii. 622/1911/IV.

O31,1

**ராஜி செட்டியார், கு., இராயபுரம், சென்னை**

i. திருச்சினாப்பள்ளியில் மனையாளுக்குச் சூடு போட்ட சிந்து; முதற் பாகம் (தொ.எ. 1905 பார்க்க); முதற் பதிப்பு: ii. நாராயணசாமி முதலியார், களத்தூர்; ஆதிகணுதிபதி அச்சுக்கூடம், சூளை, சென்னை; iii. பிப்ரவரி, 1911; iv. செ.மூ.ப. 8; v. 21×14 செ.மீ.; vi. 0–3–0; vii. திருச்சினாப்பள்ளியில் ஒரு பிராமணன் தன் மனையாளுக்குச் சூடுபோட்ட நிகழ்ச்சியைப் பற்றியது. இதுபற்றி நிகழ்ந்த நீதிமன்ற வழக்கும் விவரிக்கப்பட்டுள்ளது. viii. 497/1911/I.

O31,1

**வரிசையிபுருகிம் உபாத்தியாயர்**

i. கொடிச்சிந்து அலங்காரம் (தொ.எ. 1479 பார்க்க); ii. எஸ். காதர்யிபுருஹிம் ருவுத்தர்; ஸ்ரீமட்டுவார்குழலாம்பாள் அச்சுக்கூடம், திருச்சி; iii. பிப்ரவரி, 1911; iv. செ.மூ.ப. 18; v. 22×14 செ.மீ.; vi. 0–2–0; vii. மகதூஞ்சைய்யது அகமது அவுலியாவின் பலவகைச் சிறப்புகளைச் சிறப்பித்துப் பாடுவது. பல்வேறு சந்தப் பாடல்கள் இதில் அமைந்துள்ளன. viii. 661/1911/I.

O31,1

**வெங்கிடாசலம் பிள்ளை, வி.எம்.வி., ஸ்ரீவில்லிபுத்தூர்**

1619. i. ஆனைமோக்ஷசிந்து: முதற் பதிப்பு; ii. வி.எம்.வி. வெங்கிடாசலம் பிள்ளை, ஸ்ரீவில்லிபுத்தூர்; ஸ்ரீகிருஷ்ண விலாசப் பிரஸ், ஸ்ரீவில்லிப்புத்தூர்; iii. மார்ச், 1913; iv. செ. மூ. ப. 8; v. 22×14 செ.மீ.; vi. 0-1-0; vii. திருவில்லிபுத்தூர் திருமால் கோயிலிலுள்ள யானை இறந்ததைப் பற்றிய சிந்து. யானையை அடக்கம் செய்த நிகழ்ச்சிகளும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இறுதியில் தெம்மாங்குப் பாட்டும் உள்ளது. viii. 196/1913/II.

O31,1

**வைத்திலிங்கம் செட்டியார், எம்.ஏ., கூடலூர்**

1620. i. செடல் மாரியம்மன் சிறப்பு : முதற் பதிப்பு ; ii. பால கிருஷ்ண பிள்ளை. எம்.&ஆர். வரதய்ய நாயுடு ; ஸ்ரீவரலக்ஷ்மி விலாசம் பிரஸ், நெல்லிக்குப்பம் ; iii. ஆகஸ்ட், 1913 ; iv. செ.மூ.ப. 8 ; v. 22×14 செ.மீ. ; vi. 0-0-6 ; vii. கூடலூரைச் சார்ந்த குறிஞ்சிப்பாடி குப்பம் என்னும் ஊரில் கோயில் கொண்டருளும் மாரியம்மனைப் பற்றிய பெருமையைக் கூறும் பாடல்கள். வழிக் கண்காட்சி சிந்து, சந்தையின் சிறப் புக்கூறும் லாவணி, கும்மி என்னும் இசைப்பாவகைகளில் இதில் பாடல்கள் உள. இதன் ஆசிரியர் கூடலூரில் நாடக ஆசிரியராக விளங்கியவர்; viii. 565/1913/III.

O31,1

**ஹரி கோவிந்தம் பிள்ளை, தேவாரம்**

1621 .i. சுப்பிரமணியருக்கும் வள்ளிக்கும் தர்க்க அலங்காரச்சிந்து ; முதற் பதிப்பு ; ii. பழனிக்குமார பிள்ளை, தேவாரம் ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மார்ச், 1911 ; iv. செ.மூ.ப. 20 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-1-0 ; vii. முருகன் தினைப்புனத்தில் வள்ளியம்மையைக் கண்டு அவள்பால் காதல் கொண்டு உரையாடிய நிகழ்ச்சிகள் இதில் உள்ளன. இதில் முருகன் தமது உண்மையுருவைக் காட்டி வள்ளியை மணந்துகொள்ளும் நிகழ்ச்சிவரை விவரிக்கப் பட்டிருக்கிறது. பலவகைச் சந்தங்களிலும் மெட்டுக்களிலும் இதில் உள்ள பாடல்கள் அமைந்துள்ளன. viii. 728/1911/I.

O31,1

## காவடிச் சிந்து

**அண்ணாமலை ரெட்டியார்**

1622. i. சுப்பிரமணிய சுவாமி பேரில் காவடிச் சிந்து ; ii. எஸ். மார்க்கண்ட அய்யர், கும்பகோணம் ; ஸ்டாண்டர்டு பிரஸ், கும்பகோணம் ; iii. அக்டோபர், 1911 ; iv. செ.மூ.எ. 5+22; v. 16×12 செ.மீ.; vi. 0-2-0 ; vii. கழுகுமலைக் கந்தர்மேல் பாடப்பட்டது இக்காவடிச் சிந்து. பல்வேறு சந்தங்களில் இதில் பாடல்கள்உள்ளன. இந் நூலாசிரியர் இந் நூலை இயற்றப் பொருளுதவி செய்த இருதாலய மருதப்ப மகிபதியவர்களைப் பற்றிய ஆசிரிய விருத்தப் பாடல்களும் முதலில் உள்ளன. இதன் முதற் பதிப்பு நெல்லையப்ப கவிராசர் நிறுவிய அச்சகத்தில் பதிப்பிக்கப்பட்டது. viii. 283/1911/IV.

O31,1

1623. i. சுப்பிரமணியர் காவடிச்சிந்து ; இரண்டாம் பதிப்பு ; ii. டி. வி. வெங்கடேஸ்வர ஐயர், திருநெல்வேலி ; ஸ்ரீவித்தியா விநோதினி அச்சியந்திரசாலை, தஞ்சாவூர் ; iii. டிசம்பர், 1911 ; iv. செ.மூ.ப. 40 ; v. 16×12 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. முருகப்பெருமானுக்குக் காவடி எடுத்துச் செல்லும்போது பாடப்படுகின்ற பாட்டு. அகப்பொருள் துறையிலும் இதனுள் சில பாக்கள் உள்ளன. காவடிச்சிந்து நூல்களில் இது மிகவும் சிறப்பு வாய்ந்தது என்பர். இதன் ஆசிரியர் பாடிய பாடல்களை "ஊற்றுமலைத் தனிப்பாடல் திரட்டு" என்னும் நூலகத்தும் காணலாம். இந்த ஆசிரியர் தமது முப்பதாவது ஆண்டு முடியுமுன்பே 1891 ஆம் ஆண்டு காலஞ் சென்றது தமிழகத்திற்கு ஓர் இழப்பாகும். viii. 943/1911/IV.

O31,1

1624. சுப்பிரமணிய சுவாமி பேரில் காவடிச் சிந்து : முதற் பதிப்பு ; ii. பா. மாசிலாமணி முதலியார் ; ஜீவகாருண்யவிலாசம் பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1913 ; iv. செ.மூ.ப. 34 ; v. 16×12 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. அண்ணாமலை ரெட்டியார், கழுகுமலை சுப்பிரமணியர் பேரில் பாடியது இக்காவடிச் சிந்து. முருகனுக்குக் காவடி எடுத்துச் செல்லும்போது களைப்புத் தோன்றாமல் இருப்பதற்காகப் பாடப்படுகின்ற பாட்டு. பாடல் பொருளை விளக்கும் தலைப்புக்கள் ஒவ்வொரு பாட்டின் தொடக்கத்திலும் உள்ளன. பா. மாசிலாமணி முதலியார் புதுமையாகப் பாடிய சில வர்ணச்சிந்துகள் இதன் ஈற்றில் கொடுக்கப்பட்டுள்ளன. இவை திருச்செந்தூர் சுப்பிரமணியக் கடவுளை வணங்குவனவாகும்; viii, 314/1913/II.

O31,1

1625. i. கழுகுமலை சுப்பிரமணியர் காவடிச்சிந்து [வழிநடைப்பதம்] ; ii. க. ச. கதிர்வேல் நாடார் & கே. எ. கிருஷ்ணசாமி முதலியார், சென்னை ; விஜயவிகடன் பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1913 ; iv. செ. மூ. ப. 27 ; v. 22 × 15 செ. மீ. ; vi. 0-3-0 ; vii. சுப்பிரமணிய சாமிக்குக் காவடி எடுத்துச் செல்லும்போது பாடப்படுகின்ற இசைப்பாட்டு. இருபத்திரண்டு பாடல்கள் கொண்டது. கழுகுமலை நகர்வளம், கோயில்வளம், ஆகியவற்றைச் சிறப்பிப்பது. தலைவி இரங்கல், தலைவி பாங்கியைத் தூது விடுத்தல் முதலிய அகப்பொருள்பற்றிக் கூறும் சிந்துகளும் இதில் உள்ளன. இவரது பாடல்களில் இடக்கர் என்று கருதுகின்ற ஒரு சில பகுதிகளைப் பொருள் மாறுமலும், சந்தக்குறிப்பு மாறுமலும், ரெட்டியார் கவியின் கருத்துக்கியையப் பதிப்பாசிரியர் தாம் மாற்றிப் பாடியுள்ளமையை முகவுரையில் தெரிவிக்கின்றார்; viii. 469/1914/I.

O31,1

**1626.** i. சுப்பிரமணிய **சுவாமி** காவடிச்சிந்து [நடராஜர் காவடி சிந்து] முதற் பதிப்பு ; ii. பி. வி. ரங்கய்யா செட்டி, சென்னை ; ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்ம விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1914 ; iv. செ. மூ. ப. 24 ; v. 16 × 12 செ. மீ. ; vi. 0-4-0 ; vii. கழுகுமலை சுப்பிரமணிய சுவாமியைப்பற்றிய சிந்து. கழுகுமலை, கோயில்வளம் முதலியவற்றை விரித்துரைப்பது. viii. 762/1914/I.

**O31,1**

**1627.** i. சுப்பிரமணிய சுவாமி பேரில் காவடிச்சிந்து ; ii. டி. சுவாமிநாத சாஸ்திரி ; சாஸ்திர சஞ்சீவிநி அச்சுக்கூடம், சென்னை ; iii. 1915 ; iv. செ. மூ. எ. 22 ; v. 16 × 13 செ. மீ. ; vi. 0-2-0 ; vii. சுப்பிரமணியக் கடவுளுக்கும் அவனுடைய பக்தர்களுக்கும் உள்ள உறவு ஒரு தலைவனுக்கும் தலைவிக்கும் உள்ள உறவோடு ஒப்பிட்டுப் பேசப்படுகிறது. இது ஒரு புகழ்மாலை. பாடல்களுக்குப் பொருள் தலைப்பும் இராக தாளக் குறிப்புகளும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 699/1915/III.

**O31,1**

**ஆவுடையப்பன் செட்டியார், வி., காருக்குறிச்சி**

**1628.** i. பாலசுப்பிரமணியக் கடவுள் காவடிச்சிந்து : முதற் பதிப்பு ; ii. பா. முத்துசுவாமிப் பிள்ளை, பத்தமடை ; சாரதா அச்சா பீஸ், பாளையங்கோட்டை ; iii. ஜூன், 1911 ; iv. செ. மூ. எ. 21 ; v. 21 × 14 செ. மீ. ; vi. 0-1-0 ; vii. இது திருக்கொழுந்து மாமலையில் எழுந்தருளிய சுப்பிரமணியரைக் குறித்துப் பாடப்பெற்றது. அண்ணாமலை ரெட்டியார் பாடிய காவடிச் சிந்துப் பாடல்களின் மெட்டில் அமைந்தது. அகப்பொருள் துறையின்பாற்பட்ட பாடல்களும் சில உள்ளன. இந்த ஆசிரியர் இக்கடவுள்மீது திருப்புகழ் ஒன்றும் பாடியுள்ளார் என்பது இதில் வரும் விளம்பரக் குறிப்பினால் தெரியவரும். viii. 536/1911/III.

**O31,1**

**இராஜ வடிவேல் தாஸர்**

**1629.** i. பழனியாண்டவர் காவடிச்சிந்து ; ii. ப. சு. குப்புசாமி ஐயர் ; கிருஷ்ணவிலாச அச்சியந்திரசாலை, திருமங்கலம் ; iii. 1915 ; iv. செ. மூ. ப. 48 ; v. 16 × 13 செ. மீ. ; vi. 0-2-0 ; vii. பழனிமலையில் எழுந்தருளியிருக்கும் முருகனைத் துதிக்கும் தோத்திரமாலை. இச்சிந்துப் பாடல்கள் அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச்சிந்து பாடல்களின் சந்த மெட்டுக்களை அடியொற்றி அமைந்தவை. சிற்சில பாடல்களில் திருப்புகழ்க் கருத்துக்களையும் எடுத்தாளுதலினால் இவ்வாசிரியருக்கு அந்நூலிடத்து உளதாகும் ஈடுபாடு புலனாகும். இது எட்டுச்சுவடியிலிருந்து ஆய்ந்து வெளியிடப் பெற்றதாகும். திருப்புகழ்ப் பாடல்கள் சிலவும் நூலிறுதியில் உள்ளன, viii. 519/1915/IV.

**O31,1**

**கருப்பண்ண பிள்ளை, வ., பாண்டமங்கலம்**

1630. i. காவடிச்சிந்து : முதற் பதிப்பு ; ii. சுப்பிரமணிய அய்யர் ; விவேகபாநு அச்சியந்திரசாலை, கரூர் ; iii. நவம்பர், 1912 ; iv. செ. மூ. ப. 18 ; v. 20 × 13 செ. மீ. ; vi. 0-1-0 ; vii. அண்ணாமலை ரெட்டியார் காவடிச்சிந்துப் பாடல்களில் சிலவற்றின் சந்தத்தில் அமைந்தது. திருச்செந்தூரில் வாழும் கந்தர்மேல் பாடப்பெற்றது இக்காவடிச் சிந்து. முருகன் காட்டில் வாழ்ந்த வள்ளியைச் சந்தித்ததும், அவ்விருவருக்கும் நடந்த உரையாடலும், இறுதியில் அவர் வள்ளியை மணந்ததும் ஆகிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. பின்னர், சுப்பிரமணியரையும் வள்ளி தெய்வயானையையும் குறித்த வழிபாட்டுப் பாடல்கள் உள. இவை விருத்தம், இசைப்பாடல், கும்மி மெட்டுகளில் அமைந்துள்ளன. viii. 655/1912/IV.

O31,1

**கன்னைய நாயுடு,, வே.**

1631. i. ராமாயண காவடிச்சிந்து : முதற் பதிப்பு ; ii. பி. ஆறுமுக முதலியார், சென்னை ; பெரியநாயகியம்மன் அச்சுக்கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1914 ; iv. செ. மூ. ப. 32 ; v. 21 × 14 செ. மீ. ; vi. 0-2-0 ; vii. இராமாயணக் கதையைக் காவடிச்சிந்து வடிவில் இந்நூலாசிரியர் தருகிறார். இடையிடையே ஏற்ற தலைப்புக்கள் தந்து கதைத் தொடர்பினைப் புலப்படுத்தியுள்ளார். viii. 946/1915/I.

O31,1

**குப்பா தேவர், கே.எஸ்.**

1632. i. நூதனக் காவடிச்சிந்து : முதற்பதிப்பு : ii. கே. எஸ். குப்பா தேவர் ; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, விருதுபட்டி ; iii. நவம்பர், 1912 ; iv. செ. மூ. ப. 16 ; v. 21 × 14 செ. மீ. ; vi. 0-2-0 ; vii. திருப்பரங்குன்றம் சுப்பிரமணியக் கடவுள் பேரில் அமைந்தது இக்காவடிச்சிந்து. வெவ்வேறு சந்தங்களில் இதில் உள்ள பாடல்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன; viii. 551/1912/IV.

O31,1

**கோவிந்தசாமி செட்டியார், ம.**

1633. i. மாரியம்மன் காவடிச்சிந்து [தோத்திரக் கும்மி] : முதற் பதிப்பு : ii. ஆ. ரு. முருகைய நாடார், நாகப்பட்டினம் ; நீலலோசனி பிராஞ்சு பிரஸ், திருவாரூர் ; iii. மார்ச், 1912 ; iv. செ. மூ. ப. 4 ; v. 22 × 14 செ. மீ. ; vi. 0-0-6 ; vii. மாரியம்மன் கோயிலுக்குக் காவடி எடுத்து வருவதைப் பற்றிச் சிறப்பித்துப் பாடுவது. viii. 57/1912/II.

O31,1

**சாமிதாசன், வே.சி., தூத்துக்குடி**

1634. i. காவடிச்சிந்து : முதற்பாகம் ; ii. வே. சி. சாமிதாசன், தூத்துக்குடி ; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, விருதுப்பட்டி ; iii. டிசம்பர், 1914 ; iv. செ. மூ. ப. 16 ; v. 22 × 14 செ. மீ. ; vi. 0-1-0 ; vii. சுப்பிரமணியர் வள்ளியை மணந்த கதையினைக் காவடிச்சிந்து வடிவில் ஆசிரியர் இந் நூலில் கூறுகின்றார். ஒவ்வொருவர் பேச்சையும் குறித்துத் தலைப்புக்களும் இடையிடையே சேர்க்கப்பட்டுள்ளன. viii. 50/1915/I.

O31,1

1635. i. திருச்செந்தூர் சுப்பிரமணியர் காவடிச்சிந்து : இரண்டாம் பாகம்; ii. வே. சி. சாமிதாசர் ; சச்சிதானந்த அச்சியந்திர சாலை ; iii. 1915 ; iv. செ. மூ. ப. 15 ; v. 21 × 14 செ. மீ. ; vi. 0-1-0 ; vii. ஆறுமுகப்பெருமானுக்கும் வள்ளியம்மைக்கும் நடந்த உரையாடலைப் பாட்டுருவமாகக் காவடிச்சிந்து மெட்டில் தரும் நூல். ‘ முத்தமிழ் சாமிதாசன் ’ என்று நூலிறுதியில் உள்ள வாழ்த்தில் தமது பெயரை ஆசிரியர் ‘ முத்திரை ’ செய்துள்ளார். viii. 306/1915/IV.

O31,1

**சிதம்பரஞ் செட்டியார்**

1636. i. குன்றக்குடி முருகர் காவடிச்சிந்து : இரண்டாம் பதிப்பு ; ii. சரவணப் பிள்ளை ; ஷண்முகா விலாச அச்சுக்கூடம், சேலம் ; iii. 1915 ; iv. செ. மூ. எ. 82 ; v. 16 × 11 செ. மீ. ; vi. ................ ; vii. குன்றக்குடி முருகனின் பெருமையைப் பாடி வழிபடும் நூல். ‘ வணிகன் அருணசல குமாரன் செல்வ மதிவதனன் சிதம்பர மாகவிரு தீரன் ’ என்று ஆசிரியர் தமது பெயரை 79 ஆம் சிந்துப் பாடலில் குறித்துள்ளார். இது அண்ணமலை ரெட்டியாரின் காவடிச்சிந்தின் அமைப்பில் மாறுபட்டுள்ளது. நூல் முழுவதும் சிந்துக் கண்ணிகளினால் ஆகியது. viii. 258/1915/IV.

O31,1

i. திருப்பரங்குன்றம் சிவசுப்பிரமணியக் கடவுள் மீது காவடிச்சிந்து : முதற் பதிப்பு (தொ. எ. 1905 பார்க்க) ; ii. எம். கிருஷ்ண பிள்ளை, மதுரை ; ஆதிகணுதிபதி அச்சுக்கூடம், சென்னை ; iii. பிப்ரவரி, 1911; iv. செ.மூ.எ. 36 ; v. 21× 14 செ. மீ. ; vi. 0-3-0 ; vii. முருகனுக்குக் காவடி எடுத்துச் செல்வோர்கள் பக்தியுடன் பாடிக்கொண்டு எடுத்துச் செல்வதற்காக அமைந்தது. திருப்பரங்குன்றம் நகரத்தின் சிறப்பும் முருகப் பெருமானின் திருவருளும் பாராட்டி உரைக்கப்பட்டிருக்கிறது. iii. 497/1911/I.

O31,1

நாராயணசாமிப் பிள்ளை

i. நடராசர் காவடிச்சிந்து : (தொ. எ. 1626 பார்க்க) ; ii. பி. வி. ரங்கய்யா செட்டி, சென்னை ; ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்ம விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1914; iv. செ மூ. ப. 8 ; v. 16 × 12 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. தில்லை நடராசப் பெருமானைப் பற்றி உரைப்பது. அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச்சிந்துவைப் பின்பற்றி அமைந்தது. பாடல்களின் தலைப்பில் பாட்டின் சந்தமெட்டு குறிப்பிடப்பட்டுள்ளது. viii. 762/1914/I.
O31,1

ரெத்தினம் பிள்ளை

1637. i. மனமதிதரிசன நவரஸச்சிந்து [ஷண்முகத் திருப்புகழ்] : முதற்பதிப்பு ; ii. வி. ரெத்தினம் பிள்ளை; இலக்ஷ்மி விலாசம் பிரஸ், இராமநாதபுரம் ; iii. மே, 1912 ; iv. செ. மூ. ப. 22 + 6 ; v. 23 × 15 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. 'ஆதிசிதம்பரம், தெக்ஷண கைலாயம், பெதரிகாவனம் என்னும் பற்பல பெயர் கொண்டிலகும் திருவுத்தரகோசமங்கை க்ஷேத்திர மனமதி தரிசன நவரசச்சிந்து' என்று ஆசிரியர் தலைப்பிட்டுள்ளார். ஓர் அடியார் தமது மனமதியை, ஒரு பெண்ணாக உருவகம் செய்து, அம்மணப் பெண்ணுடன் உத்தரகோசமங்கை ஆடலரசனைத் தொழுது இறைவனின் பெருமையை எடுத்துக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. "என்னடி 'நான் பெற்ற மங்கை', "செந்தில் மாநகர்வாழ்." என்னும் அண்ணாமலை ரெட்டியார் காவடிச்சிந்துப் பாடல் சந்தத்திலும் வேறு பல சந்தங்களிலும் இச்சிந்து அமைந்துள்ளது. viii. 507/1912/III.
O31,1

லிங்கதாஸ் சாமியார், வெங்கடாசலபுரம்

1638. i. காவடிச் சிந்தென்னும் பாவடிச் சந்தம் ; ii. சுப்பரதீப நாயகர், வெங்கடாசலபுரம் ; சுப்பிரமணிய விலாஸ அச்சுக்கூடம், சாத்தூர் ; iii. நவம்பர், 1912 ; iv. செ மூ. ப. 3+50 ; v. 20×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. திருப்பரங்குன்றில் விளங்கும் சுப்பிரமணிய சுவாமி பேரில் பாடப் பெற்றது. பொய்க்கால் மகுடச் சிந்து, நடன வண்ணச் சந்தச் சிந்து, இரட்டைத்துள்ளல் சந்தச் சிந்து, தொங்கல் இசைச் சிந்து முதலிய பல தலைப்புகளில் சிந்துப் பாடல்கள் உள்ளன. பாடல்களுக்குச் சந்தக் குறிப்புகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன ; viii. 652/1912/IV.
O31,1

## வழிநடைச் சிந்து

மகம்மது, சா. ருவுத்தர், புலவர், சோழபுரம்

. i. வழிநடை செந்துறைச் சிந்து [தொ. எ. 1806 பார்க்க] ; முதற் பதிப்பு ; ii. சிதம்பரசுவாமி ; ஸ்ரீபாலாம்பிகை விலாச அச்சுக்கூடம், விருத்தாசலம் ; iii. பிப்ரவரி, 1912 ; iv. செ.மூ.எ. 16 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. முதினை

நகரில் நடைபெறும் பூசப் பெருவிழாவிற்கு ஒருவன் தன் காதலியுடன் சென்று அங்குள்ள புதுமைகளை அவளுக்கு எடுத்துக் கூறும் முறையில் இது உள்ளது. திருவிழாக் காட்சிகளையும், முதினை நகரின் பல சிறப்புகளையும் தம் காதலிக்கு விளக்கிக் கூறுவதாக இது உள்ளது. மங்களம், துக்கடா பதம் முதலியன இதன் இறுதியில் உள்ளன ; viii. 798/1912/I.

O31,1

**ராமய்யா பத்தர், பொ., பூனூர்**

1639. i. வழிநடை அலங்காரச் சிந்து ; முதற் பதிப்பு ; ii. சி. பக்கிரியாபிள்ளை, பூந்தோட்டம் ; நீலலோசனி பிராஞ்ச் அச்சுக் கூடம், திருவாரூர்; iii. மார்ச், 1914 ; iv. செ.மூ.எ. 20+19+23; v. 23×15 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. பூந்தோட்டத்திலுள்ள அரசாற்றின் வடபால் விளங்கும் சாமுண்டீசுவரியின் கோயிலில் அமைந்துள்ள மாப்பிள்ளை துரைசாமியைப் பற்றியது. இங்கு நடைபெறும் மாப்பிள்ளை சுவாமியின் விழா பற்றிய நிகழ்ச்சியை இது விவரிக்கின்றது. இறுதியில் கும்மி மெட்டில் அமைந்த பாடல்களும் உள்ளன. viii. 124/1914/II.

O31,1

## சிலேடை

**சுப்பிரமணிய சுவாமிகள், தொட்டிக்கலை**

1640. i. கலைசைச் சிலேடை வெண்பா ; முதற் பதிப்பு ; ii. க. பெ. நாராயணசாமி முதலியார், சென்னை ; கமலநாயகி அச்சியந்திர சாலை, சென்னை ; iii. டிசம்பர், 1911 ; iv. செ.மூ.உ. 2+100 ; v. 18×11 செ.மீ.; vi. 0–5–0 ; vii. இது கலைசையில் எழுந் தருளியுள்ள இறைவன்மீது பாடப்பட்டது. சிலேடை என்பது ஒலிப்புமுறையில் ஒரு தன்மைத்தாயுள்ள சொற்றொடர். ஒன் றிற்கு மேற்பட்ட பொருளைத் தருவது சிலேடையாகும். இதற்கு தெ. கிருஷ்ணசாமிப் பாவலர் உரை இயற்றியுள்ளார். viii. 754/1911/III.

O31,1

**ராமாநுஜ பண்டிதர், முத்துகிருஷ்ண மதுரகவி, கூத்திப்பாறை**

1641. i. ஆண்டாள் பேரில் புதுவைச் சிலேடை வெண்பா : முதற் பதிப்பு ; ii. முத்துகிருஷ்ண மதுரகவி ராமநுஜ பண்டிதர், கூத் திப்பாறை ; டார்லிங் அச்சியந்திரசாலை, பாளையங்கோட்டை ; iii. ஜூன் 1912 ; iv. செ.மூ.எ. 1+100 ; v. 17×11 செ.மீ. ; vi. ; vii. திருவில்லிபுத்தூர் எனப்படும் புதுவையில் கோயில் கொண்டு விளங்கும் ஆண்டாளைப் பற்றியது. எல்லாப் பாடல்களும் இதில் சிலேடையாகவே அமைந்துள்ளன. அவ் வூரில் விளங்கும் கோயிலையும் அங்கு வீற்றிருக்கும் திருமாலையும் ஆண்டாள் அம்மையாரையும் பலவகையாக வணங்கிப் போற்று வது. புதுவை நகரின் சிறப்பு எல்லாப் பாடல்களிலும் வரு ணிக்கப்பட்டிருக்கிறது. viii. 37/1912/II.

O31,1

## சீட்டுக்கவி

**மிக்கேல்சாமி பிள்ளை, மா. ப.**

**1642.** i. இசைப்பா மலர்மாலை: ii. பொன்னுசாமிப் பிள்ளை; ஆரியன் பிரஸ், பெல்லாரி; iii. ஜூலை, 1913; iv. செ.மூ.ப. 8; v. 16×11 செ.மீ.; vi. ........; vii. பெல்லாரி செயிண்ட் ஜான் கல்லூரியில் ஆங்கிலமும் லத்தின் மொழியையும் கற்பிக்கும் மிக்கேல்சாமி என்பார் இரங்கூனில் வாழும் மதுரைப் பிள்ளை என்னும் வள்ளலுக்கு விடுத்த சீட்டுக்கவிப் பாட்டு. மதுரைப் பிள்ளையின் பெருமைகள் கூறித் தமது குடும்ப நிலை முதலியவற்றையும் சுட்டிப் பொருளுதவி வேண்டி இக் கடிதத்தை அனுப்பியுள்ளார். "தெருளோங்கும் திராவிடத் தேன் பாஷை அபிமானன் தெவிட்டாத மறுவினையன்" என்று ஆசிரியர் தம்மைக் கூறிக் கொள்கிறார். உயிர் வருக்கப் பாட்டு, நடு எழுத்து அலங்கார வெண்பா, ஆசிரியத்தாழிசை முதலிய பாவகைகளை எல்லாம் பாடிய இவர் தமிழிலும் வல்லார் என்பது போதரும். viii. 472/1913/III.

O31,1

## தசகம்

**இராமச்சந்திர ராவுத்தர், நா. ரா. ரா. ம.**

1643. i. மணித் தசகம்: முதற் பதிப்பு; ii. நா. ரா. ரா. ம. இராமச்சந்திர ராவுத்தர்; கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை; iii. செப்டம்பர், 1912; iv. செ.மூ.எ. 8+1+114; v. 19×12 செ.மீ.; vi. 0-1-6; vii. கொங்குவளநாட்டில் காளி மாநகரத்தில் எழுந்தருளியிருக்கும் கந்தசுவாமிபேரில் அமைந்த வழிபாட்டுப் பாமாலை. 'ஸ்தல விசேடம்', 'கந்தநாதர் கிருபா மகத்துவம்', 'சந்நிதி மகத்துவம்', மயிலின் புகழ்ச்சி, வேலின் புகழ்ச்சி பாதாதிகேசப் புகழ்ச்சி முதலிய பொருள்களில் முருகனை வழிபட்டுள்ளார். புதுக்கோட்டை சுவாமிநாதன் செட்டியார் முதலிய அறுவர் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். viii. 110/1912/IV.

O31,1

**வேலாயுத சுவாமி (மொ. து)**

i. தசகம் (தொ. எ. 1443 பார்க்க): ii வேலாயுத சுவாமி; பூலோக வியாஸன் அச்சுக்கூடம், சென்னை; iii. பிப்ரவரி, 1912; iv. செ.மூ.எ. 10; v. 18×11 செ.மீ.; vi. 0-2-0; vii. 'சிவோகமே' என முடியும் பத்துப் பாக்களைக் கொண்டது. viii. 828/1912/I. O31,1

## தசாங்கம்

**பாலசுந்தர நாயகர், மு. புரசை**

i. முக்குலத்தரசர் தசாங்கமாலை (தொ. எ. 846 பார்க்க); ii. மு. பாலசுந்தர நாயக்கர், புரசை; மதுகரவேணி விலாசம் பிரஸ், புரசை, சென்னை; iii. டிசம்பர், 1911; iv. செ.மூ.உ.எ. 10+1; v. 19×11 செ.மீ.; vi. 0-2-0; vii. பெயர், நாடு,

ஊர், ஆறு, மலை, ஊர்தி, போர்க்கருவி, முரசு, தார், கொடி என்னும் அரசனது பத்து உறுப்புகளையும் சிறப்பித்து ஓதுவது. கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களால் ஆகியது. viii. 367/1912/I. O31, 1

## தாலாட்டு

**இராமய்யங்கார், டி. எஸ்.**

1644. i. ஸ்ரீராமன் தாலாட்டு, கோலாட்டப் பாட்டுகள் [ஆண்டாள் நலங்கு, கும்மிப்பாட்டு] ; இரண்டாம் பதிப்பு ; ii. டி. எஸ். இராமய்யங்கார்; கோதாவிலாஸ அச்சுக்கூடம், ஸ்ரீவில்லிபுத்தூர் ; iii. நவம்பர், 1911 ; iv. செ.மூ.ப. 12 ; v. 16×11 செ.மீ. ; vi. 0–1–6 ; vii. இராமபிரான் வழிபாடாக அமைந்த தாலாட்டுப் பாட்டுகளும், இராமன் புகழ்பாடி ஆடும் வட்டக் கோலாட்டம்; மூலைக் கோலாட்டங்களுக்கு உரிய பாட்டுகளும் உள்ளன. இதனோடு திருநாராயணபாரதி பாடிய ஆண்டாள் நலங்குப் பாடலும் வைபவக் கும்மியும் உள்ளன. viii. 952/1912/I. O31, 1

**ஈசுரமூர்த்தியா பிள்ளை, மு. பொ.**

1645. i. திருமண வாழ்த்தும் நீதிநெறித் தாலாட்டும் ; முதற் பதிப்பு ; ii. மு.பொ. ஈசுர மூர்த்தியா பிள்ளை ; விவேகானந்த யந்திரசாலை, சென்னை ; iii. செப்டம்பர், 1912 ; iv. செ.மூ.ப. 5+23 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–1–6 ; vii. குழந்தைகளின் தாலாட்டுப் பாட்டில் அறநெறியை விளக்கி இளம் பருவத்திலேயே அறத்தையூட்டும் கருத்தினால் எழுதப் பெற்றது. திருக்குறளில் உள்ள 133 அதிகாரத்திற்கும் ஓர் அதிகாரத்திற்கு ஒரு கண்ணியாக 133 கண்ணிகளாகச் செய்யப்பட்டிருக்கிறது. ஒவ்வோர் அதிகாரத்திலும் உள்ள சிறப்புக் கருத்து ஒன்று இத்தாலாட்டில் அமைக்கப்பட்டுள்ளது. திருமண வாழ்த்து என்பது மணமக்களை வாழ்த்தியும், தலைவனியலைத் தலைவிக்கும், தலைவி இயலைத் தலைவனுக்கும் கூறுவதாக அமைந்து பொதுவகையாகவும் இல்வாழ்க்கை ஒழுக்கங்கள் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. தாலாட்டும் திருமண வாழ்த்தும் பிறந்த வரலாற்றை ஆசிரியர் தமது முகவுரையில் எழுதியுள்ளார். viii. 28/1912/IV. O31, 1

**காளைஹஸன் அலிப் புலவர்**

1646. i. பஞ்சரத்தினத் தாலாட்டு ; முதற் பதிப்பு ; ii. எம்.எ. ஷாகுல் ஹமீது லப்பை, சென்னை ; ஷாஹுல்மீதிய்யா அச்சியந்திர சாலை, சென்னை ; iii. நவம்பர், 1914 ; iv. செ.மூ.எ. 3+274 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. ஞானத் தாலாட்டு, சுகாநந்தர் தாலாட்டு, மணிமந்திரத் தாலாட்டு மீரான் தாலாட்டு, பாலகர் தாலாட்டு என 5 தாலாட்டுக்கள் கொண்டது. இதில் ஞானத் தாலாட்டு என்பது உடற்கூறு பற்றி விவரிப்பது ; சுகாநந்தர் தாலாட்டு, நபிநாயகத்தின் மகளாராகிய பாத்திமா நாயகத்தின் பெயரில் பாடப்பட்டது. அம்மானைக்

கண்ணிகளாய் அமைந்தது முகைத்தீன் ஆண்டவன் பேரில் உள்ள தாலாட்டு. ஷாஹூல் அமீது பெயரில் அமைந்தது மீரான் தாலாட்டு. இறுதியிலுள்ள தாலாட்டு, சிறுவர்க்குச் சொல்லக் கூடிய வாழ்த்தாக உள்ளது. viii. 1015/1914/I.
O31,1

**சவேரியா பிச்சைக்கொறேரா**

1647. i. தாலாட்டு மாலை ; ii. எம்.பி. மஸ்கனீஞாஸ் பாலபாரதி ; எஸ்.பி. பிரஸ், தூத்துக்குடி ; iii. 1915 ; iv. செ.மூ.எ. 1+105 ; v. 20×14 செ.மீ. ; vi..... .. ; vii. இயேசு கிறிஸ்துவின் புகழினைப் பாடி, தாயானவள் தன் குழந்தையைத் தாலாட்டுவதாக அமைந்துள்ளது. viii. 548/1915/III.
O31,1

**பெருமாள் தாலாட்டு என்கிற ராமர் தாலாட்டு**

1648. i.[ரங்க நாயகர். திரு ஊசல்]: முதற் பதிப்பு ; ii. எஸ். முத்தைய பிள்ளை, மதுரை; மகமதியன் பிரஸ், மதுரை ; iii. ஜூன், 1914 ; iv. செ.மூ.எ. 30 ; v. 13×11 செ.மீ. ; vi. 0-0-3 ; vii. குழந்தைகளைத் தாலாட்டும் போது தாய்மார்கள் பாடுகின்ற பாடலிசையில் அமைந்தது. இராமனைக் குழந்தையாகக் கருதி இராமபிரானது வரலாற்று நிகழ்ச்சிகள் பலவற்றைச் சுட்டிக்காட்டி ஆசிரியர் பாடுகிறார். viii. 1089/1914/II.
O31,1

**முத்துசாமிப் பிள்ளை**

1649. i. சுப்பிரமணியக் கடவுள் திருவனந்தல் [திருப்பள்ளி யெழுச்சிப் பதிகம்] ; முதற் பதிப்பு ; ii. முத்துசாமிப் பிள்ளை, பொள்ளாச்சி ; கோபால விலாசம் பிரஸ், பொள்ளாச்சி ; iii. பிப்ரவரி, 1914 ; iv. செ.மூ.எ. 1 + 36 ; v. 15 × 11 செ.மீ. ; vi. 0-0-3 ; vii. பழனி மலையில் கோயில் கொண்டு விளங்கும் தண்டபாணிக்கடவுளை கண்வளருமாறு வேண்டும் பாடல்களைக் கொண்டது. இதனை ஆசிரியர் திருவனந்தல் தாலாட்டு என்று குறிக்கிறார். "தேனே! செழும் பாகே! தெவிட்டாத தெள்ளமுதே! வானுடர் போற்ற வந்த மாணிக்கமே! கண்வளராய்" என்று குழந்தையைத் தொட்டிலிட்டுத் தாலாட்டும் பாவகையில் இது அமைந்துள்ளது. viii. 568/1914/II.
O31,1

## திருப்பள்ளியெழுச்சி

**சாமிநாதையர், எஸ்.**

1650. i. திருவாலவாயுடையார் திருப்பள்ளியெழுச்சி : முதற் பதிப்பு ; ii. எஸ். சாமிநாத அய்யர், மதுரை ; விவேகபானு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. டிசம்பர், 1914 ; செ.மூ.எ. 10 ; v. 14 × 12 செ.மீ. ; vi. இலவசம் ; vii. திருவால வாயுடையார் எனும் மதுரைச் சொக்கேசன் பள்ளியிலிருந்து துயில் கலைந்து எழும்பொருட்டுப் பாடப்பெறும் பத்துப் பாடல்களைக் கொண்ட நூல். மு. கோவிந்தசாமி ஐயர், மு.ரா. கந்த

சாமிக் கவிராயர் என்போர் இதற்குச் சாத்துக் கவி பாடியுள்ளனர். viii. 39 /1915/I. O31, 1

**சிதம்பர ஞான தேசிகர்**

i. திருப்பள்ளியெழுச்சி [தொ. எ. 1894 பார்க்க]; ii. சுப்பைய சுவாமிகள்; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. டிசம்பர், 1909; iv. செ.மூ.எ. 10; v. 18 × 11 செ.மீ.; vi. இலவசம்; vii. உறக்கத்தினின்று எழ வேண்டும் என்ற முறையில் வைகறையில் பாடப் பெறுவது பள்ளியெழுச்சி. இந்த ஆசிரியர் தமது குருவைப் போற்றிப் பள்ளியெழுந்தருளுமாறு வேண்டுகின்றார். இது திருவாசகத்தில் வரும் திருப்பள்ளியெழுச்சியை நினைவூட்டுகிறது. viii. 129/1911/I. O31,1

**சிதம்பரம் பிள்ளை, கி., சுல்தான்பேட்டை**

1651. i. சிவசுப்பிரமணியர் பேரில் உதயராகம் [வள்ளி நாயக மாலை]: முதற் பதிப்பு; ii. கி. சிதம்பரம்பிள்ளை, சுல்தான் பேட்டை; வித்தியா சந்தானம் அச்சுக்கூடம், பாலக்காடு; iii. செப்டம்பர், 1912; iv. செ. மூ.எ. 1 + 11 + 1; v. 13× 10 செ.மீ.; vi. 0–0–3; vii. வைகறைப் பொழுதில் முருகப் பெருமானைப் பாடித் துயிலெழுப்புவதாக அமைந்துள்ள பாடல்களின் தொகுதி. "அனந்தலோ திரு அனந்தலோ" என்று பாடல் தோறும் பள்ளி உணர்த்துகிறார் ஆசிரியர். viii. 1026/1912/III. O31,1

**முத்துசாமி பிள்ளை**

i. சுப்பிரமணியக் கடவுள் திருப்பள்ளியெழுச்சி பதிகம்: முதற்பதிப்பு [தொ.எ. 1649 பார்க்க]; ii. முத்துசாமி பிள்ளை, பொள்ளாச்சி; கோபால விலாசம் பிரஸ், பொள்ளாச்சி; iii. பிப்ரவரி, 1914; iv. செ.மீ.எ. 1+10+1; v 15×11 செ.மீ.; vi. 0–0–3; vii. பழனி முருகனைத் துயிலினின்று எழுந்திருக்குமாறு வேண்டிப்பாடுகின்ற பாட்டுக்களைக் கொண்டது. 'துயிலெழுந்தருள்வாய்' என வேண்டிப் பாடப்பட்டவை. "துயிலெழுந்தருள்வாய் பழனியங்கிரிவளர் பரம சற்குருவே" எனப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் முடிவுபெறுகின்றன. ஆனைமலைத் தமிழ்ப் புலவர் சிவசூரியம் பிள்ளை என்பார் இதற்குச் சாத்துக் கவி பாடியுள்ளார். viii. 568/1914/II

**லிங்கதாஸ்** O31,1

1652. i. திருப்பள்ளியெழுச்சி பதிகங்கள் [வினைநீத்தல் விண்ணப்பம்], முதற்பதிப்பு ii. அ.ச.க. காளிமுத்து நாடார், சாத்தூர்; சுப்பிரமணிய விலாசம் அச்சுயந்திரசாலை, சாத்தூர்; iii. டிசம்பர், 1913; iv. செ.மூ.எ. 1 + 20; v. 19 × 11 செ.மீ.: vi. இலவசம்; vii. திருப்பரங்குன்றம் சுப்பிரமணிய சாமி பேரிலும், திருச்செந்தூர் சுப்பிரமணிய சுவாமிபேரிலும் அமைந்த இரு திருப்பள்ளியெழுச்சிப் பதிகங்கள் கொண்டது.

திருவாசகத்தில் வரும் திருப்பள்ளியெழுச்சி பாடல்களின் சந்தத்தில் இவை அமைந்துள்ளன. viii. 230/1914/I.

O31,1

## திருப்புகழ்

### அருணகிரிநாதர்

i. திருச்செந்தூர்த் திருப்புகழ் [தொ.எ. 1917 பார்க்க]; ii. மு. ரா. அருணசலக் கவிராயர்; ஸ்ரீ இராமச் சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. ஜூலை, 1911; iv. செ.மூ. உ.ப. 90; v. 22 × 14 செ.மீ.; vi 1–8–0; vii. அருண கிரியார் செந்தூர் முருகனைக் குறித்துப் பாடிய திருப்புகழ்ப் பாடல்களின் கோவை. திருப்புகழைச் சேமித்துத் தொகுத்து வைத்த இடம் திருச்செந்தூர் ஆதலால், அவ்வூருக்குச் சிறப் பாகவும் பொதுவாகவும் உள்ள நூறு பாடல்களுக்கு அருஞ் சொற்பொருள் எழுதி இதில் சேர்த்துள்ளார். viii. 267/1911/III.

O31,1

i. திருப்புகழ்: (தொ. எ. 1230 பார்க்க); முதற் பதிப்பு; ii. எஸ். எம். சண்முகம் பிள்ளை; மகமதியன் பிரஸ், மதுரை; iii. ஜூன், 1913; iv. செ.மூ.ப. 8; v. 21 × 14 செ.மீ.; vi. 0–2–0; vii. பல்வேறு சந்தத்தில் அமைந்த திருப்புகழ் பாடல்கள் பதினொன்று இதில் உள்ளன. viii. 321/1913/III.

O31,1

1653. i. பஞ்சரத்னத் திருப்புகழ்: முதற் பதிப்பு; ii. இ.மா. கோபாலகிருஷ்ணக் கோன், மதுரை; முகமதியன் பிரஸ், மதுரை; iii. ஜனவரி, 1914; iv. செ.மூ எ. 40; v. 14 × 12 செ.மீ.; vi. 0–0–6; vii. சுப்பிரமணியரின் வரன்பெற்றுத் திருவண்ணமலையில் வாழ்ந்தவராகிய அருண கிரிநாதரின் திருப்புகழ்பாடல்கள் பலவற்றுள் இந்த ஐந்தும் பஞ்சரத்னம் எனப்படும். முருகப் பெருமான் புகழை வியந் துரைப்பது. viii. 229/1914/I.

O31,1

1654. i. பஞ்சரத்நத் திருப்புகழ்: முதற் பதிப்பு; ii தா. பொன்னுசாமி பிள்ளை, திருச்சிராப்பள்ளி; ஸ்ரீ மட்டுவார் குழ லாம்பாள் அச்சுக்கூடம், திருச்சிராப்பள்ளி; iii. ஏப்ரல், 1914; iv. செ.மூ.எ. 5; v. 14 × 11 செ.மீ.; vi 0–C–3; vii. "மலடி வயிற்று மகன் போலே", "தேனை வடித்துச் சொரிந்த", "கலியை அலைத்துத் தொலைத்து", "அரிவைய ரெனும் இரு", "வறுமைப் பாழ் பிணி" எனத் தொடங்கும்

ஐந்து திருப்புகழ்ப் பாடல்கள் இதில் உள்ளன. இவற்றைப் 'பஞ்சரத்னத்திருப்புகழ்' என்பர். viii. 531/1914/II.

O31,1

1655. i. அருணகிரிநாதர் அருளிச் செய்த பஞ்சரத்நத் திருப்புகழ் ; ii. டி. சுவாமிநாத சாஸ்திரி ; சாஸ்திர ஸஞ்ஜீவிநீ அச்சுக் கூடம், சென்னை ; iii. 1915 ; iv. செ.மூ.ப. 15 ; v. 18 × 11 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. அருணகிரிநாதர் அருளிச் செய்த திருப்புகழானது சுப்பிரமணியக் கடவுளை வணங்கும் புகழ் மாலையாகும். இவருடைய திருப்புகழ் கடலில் 'மலடி வயிற்று மகன் போலே' எனத் தொடங்கும் பாடலை முதலாகக் கொண்டு அமைவது இச்சிறுநூல். viii. 700/1915/III.

O31,1

1656. i. பஞ்சரத்நத் திருப்புகழ் ; ii. ஆறுமுக முதலியார் ; பாலவிர்த்தி போதினி அச்சுக்கூடம், சென்னை ; iii. 1915; iv. செ.மூ.உ.ப. 48 ; v. 18 × 11 செ.மீ. ; vi........; vii. அருணகிரிநாதர் முருகன் பேரில் பாடிய புகழ்மாலை கள் ; 'மலடி வயிற்று மகன் போலே' என்று தொடங்குவது. இதில் அருணகிரிநாதருடைய வரலாறும் பாடல்களுக்குரிய பொழிப்புரையும் சிறப்புரையும் அடங்கியிருக்கின்றன. இவற்றை எழுதியவர் வித்துவான் அ. சுந்தரநாத பிள்ளை ஆவர். தக்க மேற்கோள்கள் எடுத்துக்காட்டி, உவமை முதலியவற்றின் நயத்தை ஆசிரியர் நன்கு விளக்கியுள்ளார். பஞ்சரத்னத் திருப் புகழ் செய்தார் அருணகிரியாரல்லர் என்பார் கருத்தை ஐயுற வாக எற்று ஒரு குறிப்பும் இறுதியில் இணைத்துள்ளார். viii. 1080/1915/III.

O31,1

1657. i. பெரிய திருப்புகழ் ; ii. டி. சுவாமிநாத சாஸ்திரி ; சாஸ்திர சஞ்சீவிநீ அச்சுக்கூடம் ; iii. 1915 ; iv. செ.மூ.எ. 207 ; v. 13 × 11 செ.மீ.; vi. 0–5–0; vii. பல சிறந்த இடங்களில் கோயில் கொண்டுள்ள முருகப் பெருமானைக் குறித்துப்பாடும் புகழ்மாலைப் பாடல்கள் அடங்கிய நூல். திருப்புகழ்ப் பாக்களின் சிறு திரட்டு நூல். பாடல்களுக்குரிய சந்தக் குறிப்புக்கள் ஒவ்வொரு பாட்டின் தொடக்கத்திலும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 379/1915/IV

O31,1

**காசிம் புலவர், காயற்பட்டினம்**

1658. i. திருப்புகழ் : [நாகையந்தாதி] ; முதற் பதிப்பு; ii. ம. கு. செ. இப்ராஹிம் சாகிப், கயத்தாறு ; கலாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.ப. 141; v. 17 × 11 செ.மீ. ; vi. 0–12–0; vii. நபிநாயகம்

அவர்களின் புகழைப் பல படியாகப் பேசி வணங்குவது. அருண கிரிநாதரின் திருப்புகழ் பாடல் சந்தங்களை மேற்கொண்டுள்ளது. ஒவ்வொரு பாடலின் தொடக்கத்திலும் அதற்குரிய சந்தக் குறிப்பு கொடுக்கப்பட்டுள்ளது. ம.கு.செ. இப்ராஹிம் என்பார் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். மாதர்களின் இயல்பு களைப் பலவகையாக வருணித்து அவர்கள்பால் கொண்டுள்ள பற்றிலிருந்து விடுபடவேண்டுமென ஆசிரியர் பல பாடல்களில் வேண்டுகிறுர். viii. 847/1914/II.

O31,1

**கோவிந்தசாமி படையாச்சி, வீ. ரா., மாயூரம்**

1659. i. பஞ்சபாணன் திருப்புகழ் : முதற் பதிப்பு ; ii. ஞான வெட்டி சுவாமிகள், மாயூரம் ; கமலா பிரஸ், மாயூரம் ; iii. மார்ச், 1912 ; iv. செ.மூ.ப. 8 ; v. 23 × 15 செ.மீ. : vi. ........... ; vii. காமக் கடவுளாகிய மன்மதன் ஐயம்பால் சிவபெருமான் தவத்தைப் கலைக்க, அவரது சினத் துக்கு ஆளாகி அவன் எரியுண்டான். பின் இரதியினுடைய வேண்டுதலின் பேரில் அவனை அங்கம் இல்லாதவனுகக் கொடுத் தருளினுர். இப்புராண வரலாற்றைத் திருப்புகழ், நொண்டிச் சிந்து, கும்மி, மெட்டுப் பாடல்களில் ஆசிரியர் இதில் அமைத் துள்ளார்; viii. 48/1912/II.

O31,1

**சண்முகதாச பிள்ளை, கோபாலசமுத்திரம்**

1660. i. வெள்ளை விநாயகர் பஞ்சகத் திருப்புகழ் [வண்ணம் பதிகம்] : முதற் பதிப்பு ; ii. பூ. சு. வேதகணபதித் தேவர் ; நூருல் இஸ்லாம் அச்சு இயந்திரசாலை, திருநெல் வேலி ; iii. மே, 1911 ; iv. செ. மூ. ப. 7 ; v. 21× 14 செ.மீ. vi. 0–1–0 ; vii. கோபாலசமுத்திரத்தில் வெள்ளை விநாயகரைப் பற்றித் திருப்புகழ்ச் சந்தத்தில் ஐந்து வழி பாட்டுப் பாடல்கள் உள்ளன. தண்டபாணி சுவாமிகள், கழுகு மலை இராம கிருட்டினப் பிள்ளை, மேல் சேவல் கவிராஜ காந்தி நாதப்பிள்ளை ஆகியோர் சாத்துக்கவிகள் பாடியுள்ளனர். viii. 577/1911/II.

O31,1

**சின்னச்சாமி ஆச்சாரியார், சி.**

i. பஞ்சரத்னத் திருப்புகழ் (தொ. எ. 1180 பார்க்க); ii. இராம குருசாமிக் கோனுர் ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. டிசம்பர், 1913 ; iv. செ மூ. எ. 1+5 ; v. 21× 14 செ. மீ. ; vi. 0–6–0 ; vii. திருப்புகழ்ச் சந்தத்தில் அமைந்த ஐந்து பாடல்கள் கொண்ட வழிப்பாட்டுப் பகுதி. viii. 60/1914/I.

O31,1

**சுப்புசுவாமி அய்யர், எச். டி., அம்பாசமுத்திரம்**

1661. i. கண்ணப்பநாயனர் சரித்திர மகிமைத் திருப்புகழ்: முதற் பதிப்பு; ii. எச். டி. சுப்பு சுவாமி அய்யர், அம்பாசமுத்திரம்; ஆரியப் பிரகாசினி பிரஸ், திருநெல்வேலி பாலம்; iii. நவம்பர், 1913; iv. செ. மூ. எ. 38; v. 34×21 செ.மீ.; vi. ............; vii. கண்ணப்ப நாயனர் வரலாறு பற்றியது இத்திருப்புகழ்ப் பாட்டு. இதில் கண்ணப்பரது அன்பின் சிறப்பும், திருக்காளத்தி அப்பனுக்குத் தொண்டு செய்து அவர் அருள் பெற்ற வகையும் விவரிப்பது. 'தொண்டு கிழவன் இவன் யாரென இருமல்' என்னும் திருப்புகழ் மெட்டில் இப்பாடல் அமைந்துள்ளது; viii. 861/1913/IV.

O31,1

**சொரூபா நந்தமணி, கா., சுவாமி, காஞ்சீபுரம்**

1662. i. திருவருட் புகழ்: முதற் பதிப்பு; ii. கோ. வடிவேலு செட்டியார்; அமெரிக்கன் டைமண்ட் அச்சுயந்திர சாலை, சென்னை; iii. நவம்பர், 1913; iv. செ.மூ எ. 6+12+1; v. 18×11 செ.மீ.; vi. ..........; vii. திருவருட் பிரகாச வள்ளலார் மரபில் வந்த நிச்சல இராமானுச சுவாமியின் திருவடிகளைப் போற்றிப் பாடிய நூல். திருப்புகழ்ச் சந்தத்தில் அமைந்துள்ளது. வெண்பாப் புலி வேலுசாமி முதலியார், பே. வை. மாரசாமி செட்டியார், வி. ரத்னவேலு முதலியார் ஆகியோர் இதற்குச் சாத்துக் கவி பாடியுள்ளனர். viii. 250/1914/I.

O31,1

**பார்த்தசாரதி நாயுடு, மு., பாவூர்**

i. திரு விருதைத் திருப்புகழ்; (தொ. எ. 1483 பார்க்க); முதற் பதிப்பு; ii. மு. பார்த்த சாரதி நாயுடு, பாவூர், விருதுப்பட்டி; சச்சிதானந்த அச்சியந்திர சாலை, விருதுப்பட்டி; iii. மே, 1914; iv. செ.மூ.எ. 1+12+1; v. 21×14 செ.மீ.; vi. 0-3-0; vii. அருணகிரிநாதரின் திருப்புகழ்ச் சந்தத்தை ஒட்டி அமைந்த பாடல்கள் இவை. பாடல்களுக்குரிய சந்தக் குறிப்பு ஒவ்வொரு பாடலின் தொடக்கத்திலும் கொடுக்கப்பட்டுள்ளது; viii. 607/1914/II.

031,1

**முத்தய்யப் பாவலர்**

i. மயூரகிரித் திருப்புகழ் (தொ.எ. 1912 பார்க்க): முதற் பதிப்பு; ii. முகரு, மீனாட்சி சுந்தரம் பிள்ளை, எரிமாநகரம்; ஜீவகாருண்ய விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. ஜனவரி, 1913; iv. செ.மூ.எ. 20; 22×14 செ.மீ; vi. 1-8-0; vii. அருணகிரிநாதர் திருப்புகழ்ச் சந்தப் பாடல்களைப் போன்று அமைந்துள்ளன. இவை, "தனன தனதான தந்ததனன

தனதானதந்த தன்னதன தானதந்த—தனதான" என்னும் சந்தத்தில் இதிலுள்ள. பாடல்கள் உள்ளன.; viii. 310/1913/I.

O31,1

ரெத்தினம் பிள்ளை

i. ஷண்முகத் திருப்புகழ் : (தொ. எ. 1637 பார்க்க) முதற் பதிப்பு ; ii. வீ. ரெத்தினம் பிள்ளை ; இலட்சுமி விலாசம் பிரஸ், இராமநாதபுரம் ; iii. மே, 1912 ; iv. செ.மூ.எ. 6 ; v. 23×15 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. இராமநாதபுர மென்னும் முகவையம்பதி சண்முகப் பெருமானை வணங்கிப் போற்றும் எழு திருப்புகழ்ச் சந்தப் பாடல்கள் கொண்டது. viii. 507/1912/III.

O31,1

வெங்கடசாமி ரெட்டியார்

1663. i. திருவேங்கடத் திருப்புகழ் : முதற் பதிப்பு ; ii. உ. வெ. திருவேங்கடாசாரிய சுவாமி ; டாட்சன் அச்சுக்கூடம், திரிசிர புரம் ; iii. டிசம்பர், 1914 ; iv. செ.மூ.ப. 56 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. திருப்பதி மலையில் விளங்கும் சீனிவாசக் கடவுளை வணங்கிப் பாடிய 50 பாடல்களின் தொகுப்பே இந்நூல். திண்டுக்கல் பொன்னுசாமி நாயுடுகாரு முதலி யோர் இதற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். பாடல் களுக்குரிய சந்தக் குறிப்புகளும் அங்கங்கே தரப்பட்டுள்ளன. viii. 655/1915/I.

O31,1

## தூது

சடையப்ப சுவாமி

1664. i. சிதம்பர ஞான தேசிகர் நெஞ்சு விடு தூது [பிரம்ஹ நாமா வளி] : முதற் பதிப்பு ; ii. முத்துக்கருப்ப சுவாமி ; சச்சி தானந்த அச்சியந்திர சாலை, கோமளேஸ்வரன்பேட்டை, சென்னை; iii. செப்டம்பர், 1911 ; iv. செ.மூ.ப. 27 ; v. 18×11 செ.மீ. ; vi. இலவசம் ; vii. சிதம்பரஞான தேசிகர் என் னும் தமது ஆசாரியரின் மேல் நூல் ஆசிரியரால் பாடப் பட்டது. ஆசாரியரின் பெருமையையும் கருணையையும் பல வழியாக விரித்துத் தன் நெஞ்சை அவன்பால் தூது சென்று தனக்கு அருள் செய்ய வேண்டுமென்று வேண்டும் வகையில் இந்நூல் உள்ளது. viii. 222/1911/IV.

O31,1

சடாக்ஷரக் கவிராயர், வீ. வே., துரையூர்

1665. i. காதர்கான், அ. பி. அவர்கள்மீது கிள்ளை விடு தூது ; முதற் பதிப்பு ; ii. வி. எஸ். சாமிதாசன், தூத்துக்குடி ; சச்சிதானந்த அச்சியந்திர சாலை, விருதுபட்டி ; iii. நவம்பர், 1913 ; iv. செ.மூ.ப. 16 ; v. 21×13 செ. மீ. ; vi 0–1–0 ; vii. திருத்தொண்டு என்னும் திருவளர்நல்லூரில் வாழ்ந்த

காதர்கான் என்பவர் மீது பாடப்பட்டது. கலிவெண்பாவினுல் ஆகியது. கிளியைத் தூதாகச் சென்று வர அனுப்பிய நிகழ்ச்சி பற்றி இந்நூல் விவரிக்கிறது. viii. 643/1913/IV.

O31,1

## தெம்மாங்கு

**சாமி நாடார், வே. சி., கோட்டூர் சின்னையாபுரம்**

1666. i. திருச்செந்தூர் மாசித்திருநாள் வழி நடை தெம்மாங்கு: முதற் பதிப்பு; ii. வே. சி. சாமி நாடார்; சச்சிதானந்த அச்சியந்திர சாலை, விருதுப்பட்டி; iii. ஜூன், 1913; iv. செ.மூ.ப. 8; v. 21×14 செ.மீ.; vi. 0-0-6; vii. திருச்செந்தூர் சுப்பிரமணியர் மாசித் திருநாளுக்குத் தன் காதலியுடன் ஒருவன் திருமந்திர நகரம் என்ற தூத்துக்குடியிலிருந்து சென்ற காட்சியை விளக்குவது. இதில் திருச்செந்தூர் திருக்கோயில் சென்று சேர்ந்தது வரையில் உள்ள நிகழ்ச்சிகளைச் சொல்வது. கடவுள் வழிபாடு பற்றிய பகுதியை இரண்டாம் பாகமாக வெளியிடுவதாக இந்நூலில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. viii. 717/1913/II.

O31,1

## நவமணி மாலை

**அப்பாவையர், மணி, பன்னுருட்டி**

i. இலக்குமி நவமணி மாலை: முதற் பதிப்பு; ii. இலட்சுமணஞ் செட்டியார், தேவகோட்டை & அப்பாவையர், மணி, பன்னுருட்டி; மஹாலட்சுமி விலாச அச்சுக் கூடம், சென்னை; iii. அக்டோபர், 1913; iv. செ.மூ.எ. 9; v. 17×13 செ.மீ.; vi. இலவசம்; vii. திருவதிகையில் கோயில் கொண்டருளும் இலக்குமியைப் பற்றிய பாடல்கள். அந்தாதிப் பாடலில் அமைந்தது. இந்த இலக்குமி கோயில் திருவதிகை வீரட்டேசுவரர் கோயிலின் சுற்றுச் சுவருக்கு இடையில் வாயு மூலையில் நிறுவப்பட்டிருக்கிறது. viii. 265/1914/I.

O31,1

**குப்புசாமி நாயுடு, த.**

1667. i. ஜடா முனி நவரத்தினம்: முதற் பதிப்பு; ii. எம். பாலுசாமி நாயுடு; மகமதியன் பிரஸ், மதுரை; iii. மே, 1913; iv. செ.மூ.எ. 9; v. 14×11 செ.மீ.; vi. 0-0-3; vii. மதுரை மாநகரத்தில் மதுரை—திண்டுக்கல் நெடுஞ்சாலையில் விளங்கும் சடாமுனியைப் பற்றிய வழிப்பாட்டு நூல். சடையாகிற மகுடத்தை உடைமையால் சடாமுனி மகாதேவன் என்றும் குறிப்பிடப்படுகிருர். viii. 796/1913/III.

O31,1

**பாலசுப்பிரமணியய்யர், சி. வா., காரைக்குடி**

1668. i. நவரத்ந மாலிகை: முதற் பதிப்பு; ii. சி. அரு. பஞ்சநதஞ் செட்டியார், காரைக்குடி; வைசிய மித்ரன் பிரஸ் பாராஞ்சு, காரைக்குடி; iii. பிப்ரவரி, 1915; iv. செ. மூ. எ. 9:

v. 14×11 செ. மீ.; vi. ..........; vii. நாட்டரசன் கோட்டையில் விளங்கும் கண்ணுடைய நாயகியைப் புகழ்ந்து பாடப் பெற்ற 9 பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலும் 'கண் நோய் அனைத்தும் களைந்தருள்' என்னும் வேண்டுதலுடன் முடிவு பெறுகின்றன. viii. 582/1915/I.

O31,1

**வேதநாயகம் பிள்ளை, ச., வேளாங்கண்ணி**

1669. i. ஆரோக்கிய மாமரி பேரில் நவரத்தின மணிமாலை: முதற் பதிப்பு; ii. வேதநாயகம் பிள்ளை, வேளாங்கண்ணி; ஸ்காட்டிஷ் பிராஞ்சு பிரஸ், நாகப்பட்டணம்; iii. செப்டம்பர், 1912; iv. செ.மூ.எ. 7; v. 22×14 செ.மீ.; vi. இலவசம்; vii. வேளாங்கண்ணி ஆரோக்கிய மாமரியம்மையைப் பற்றிய வழிபாடு. "நவமணி மனோன்மணி சிரோன்மணி, தயாமணி நவிலொணுமரி அம்மணி" என ஒவ்வொரு பாட்டும் முடியும் வகையில் இந்நவமணி மாலை உள்ளது. அர்ச். சவேரியார் பேரில் அமைந்ததொரு இசைப்பாடலும் நூல் இறுதியில் உள்ளது. viii. 812/1912/III.

O31,1

## நாமாவளி

**குப்புசாமி செட்டியார், வி.**

1670. i. நால்வர் சரித்திர நாமாவளி: முதற் பதிப்பு; ii. ந. வேதாசல செட்டியார்; இச்சினர் இயந்திரசாலை, சென்னை; iii. நவம்பர், 1912; iv. செ.மூ.ப. 24; v. 13×11 செ.மீ.; vi. இலவசம்; vii. சைவ சமயக் குரவர்களாகிய சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்க வாசக சுவாமிகள் என்றும் நால்வரது வரலாறு பற்றி நாமாவளிகள் அமைந்துள்ளன. viii. 108/1913/I.

O31,1

**கோவிந்தசாமி பண்டிதர், நா.**

1671. i. சிவ நாமாவளி: முதற் பதிப்பு; ii. வி. நடேச செட்டி; ஸ்ரீ வித்தியா விநோதினி அச்சுக்கூடம், தஞ்சை; iii. ஜனவரி, 1912; iv. செ.மூ.ப. 40; v. 14×11 செ.மீ.; vi. 0–2–0; vii. விநாயகதோத்திரம், சண்முகதோத்திரம், பரமேஸ்வரி தோத்திரம், நடராஜர் தோத்திரம், பொது தோத்திரம் என்னும் தலைப்புக்களின் கீழ் பல நாமாவளிகள் அமைந்துள்ளன. இவை இராமலிங்க சுவாமிகள் பாடிய நாமாவளியை ஒத்துள்ளன. viii. 383/1912/I.

O31,1

**சாம்பசிவ சாஸ்திரியார்**

1672. i. அஷ்டோத்திர சிவ நாமாவளி: முதற் பதிப்பு; ii. நெ. சி. விஸ்வநாத சாஸ்திரி, சேலம்; ஸ்ரீ கிருஷ்ணவிலாசம் பிரஸ், திருப்பாதிரிப்புலியூர்; iii. டிசம்பர், 1912;

iv. செ.மூ.ப. 8 ; v. 14× 11 செ.மீ ; vi. . ; vii. சிவபெருமானது பெருமைகளை விளக்கும் நாமாவளி மாலை. நூற்றெட்டு நாமாவளிகள் இதில் உள்ளன. "சுத்தப் பிரம்ம பராத்பர ராம், காலாத்மக பரமேஸ்வர ராம்" என்பன முதலாக 'செங்காட்டடிய வியுண்டவராம், சாம்பசிவம் கவி கண்டவராம்' என்பன ஈருக நூற்றெட்டு நாமாவளிகள் இதில் உள்ளன. viii. 263/1913/I.

O 31,1

**சின்னச்சாமி ஆச்சாரியார், சி.**

i நாமாவளித் திரட்டு (தொ. எ. 1180 பார்க்க) ; ii. இ. ராம. குருசாமிக் கோனார் ; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. டிசம்பர், 1913 ; iv. செ. மூ. எ. 80 ; v. 21 × 14 செ. மீ. ; vi. 0-6-0 ; vii. தெய்வங்களின் திருப்பெயர்களைக் கூறிப் போற்றுகின்ற பாட்டு. "சித்தி விநாயகா ! வந்தருளே ! சிந்தையில் ஆனந்தம் தந்தருளே !" என்னும் வகையில் இந் நாமாவளிகள் உள்ளன, கணபதி கலைமகள், பரமசிவம், காமாட்சியம்மன், திருமால், சிவ சுப்பிரமணியர் ஆகியோரைப் பற்றிய நாமாவளிகள் உள்ளன. சுப்பிரமணியரைப் பற்றிய நாமாவளியே மிகுதியாக உள்ளது. viii. 60/1914/I.

O 31,1

**சுப்பைய சுவாமிகள், வீர. (மொ. து.)**

i. பிரஹ்மநாமாவளி : முதற் பதிப்பு (தொ. எ. 1664 பார்க்க) ; ii. முத்து கருப்ப சுவாமி ; சச்சுதானந்த அச்சியந்திரசாலை, கோமளேஸ்வரன்பேட்டை, சென்னை ; iii. செப்டம்பர், 1911 ; iv. செ.மூ.எ. 22 ; v. 18 × 11 செ. மீ. ; vi. இலவசம் ; vii. ஸ்ரீ சங்கரபூஜ்ய பகவற்பாத ஆசாரிய சுவாமிகள் செய்த பிரஹ்ம நாமாவளியின் தமிழ் மொழி பெயர்ப்பு. 'பிரம்ஹத்தின்' தன்மையை விரித்து உரைப்பது இந்நூல். viii. 222/1911/IV.

O 31,1

**சோமசுந்திர நாயகர், ஏ**

1673. i. சிவ நாமாவளி : முதற் பதிப்பு ; ii. நே. முனிசாமி முதலியார், சென்னை ; ஸ்ரீ கணேச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. எப்ரல், 1911 ; iv. செ.மூ. ப. 18 ; v. 14× 11 செ. மீ.; vi. 0-0-3 ; vii. சிவ பெருமான், உமையம்மை, முருகன், சைவ சமயக்குரவர்கள் ஆகியோரைப் பற்றிய நாமாவளிகள் உள்ளன. இராமலிங்க அடிகள் நாமாவளியைப் போன்ற அமைப்பைக் கொண்டது. சென்னைப் புரசை 'இந்துமத பாலிகா' தரும பாடசாலைச் சிறுமியர்களுக்காக வெளியிடப் பெற்றது. viii. 148/1911/II.

O 31,1

**முத்தய்யப்பாவலர்**

i. நாமாவளி. (தொ. எ. 1912 பார்க்க) : முதற்பதிப்பு ; ii. முகரு, மீனாட்சி சுந்தரம் பிள்ளை, எரி மாநகரம் ; ஜீவகாருண்ய விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜனவரி, 1913 ; iv. செ. மூ. எ. 47 ; v. 22 × 14 செ. மீ ; vi. 1-8-0 ; vii. "முருகனைக் குறித்த நாமாவளிப் பாடல்கள் " இவை. "ஆனந்தம் பரமானந்தம், ஆனந்தம் பரமானந்தம்' என்னும் சந்தத்தில் இந்நாமாவளிப் பாடல்கள் உள. viii. 310/1913/I.

O 31,1

## நான்மணி மாலை

**இராமலிங்கம் பிள்ளை, ஏ. டி.**

1674. i. நான்மணி மாலை : முதற் பதிப்பு ii. எம். எஸ். வெங்கு சுவாமி அய்யர், மதுரை ; விவேகபானு அச்சியந்திரசாலை, மதுரை; iii. டிசம்பர், 1914 ; iv. செ. மூ. எ. 40 ; v. 11 × 14 செ. மீ.; vi. 0-1-0 ; தச்சநல்லூரில் சுமார் 80 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்ததெய்வத்தன்மை பொருந்திய நல்லாசிரியரான மிக்கேல் சித்தர் என்பவரின் வாழ்க்கை வரலாற்றைக் கொண்ட நூல். மதுரை மு. ரா. கந்தசாமிக் கவிராயரியற்றிய சாத்துக் கவிகள் உள்ளன. சித்தர் புகழ் மாலையாக அமைந்துள்ள இந்நான்மணிமாலை போலவே ' சித்தர் மான்மியம் ' என்னும் நூலும் இவ்வாசிரியர் பாடியிருப்பதாகத் தெரிய வருகிறது. viii. 932/1914/IV.

O 31,1

**பெரியசாமி பிள்ளை, தே., உறையூர்**

1675. i. மெய்கண்ட தேவர் நான்மணிமாலை : முதற் பதிப்பு ; ii. அ. ரா. அமிர்தஞ் செட்டியார், பூவளூர் ; வெட்னஸ்டே ரிவியூ பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. ஜனவரி, 1912 ; iv. செ. மூ. எ. 40 ; v. 17 × 13 செ. மீ.; vi. ...... ; vii. நொச்சியம் என்று வழங்கும் தேவார வைப்புத்தலமாகிய எச்சில் இளமாப்பதியில் கோவில் கொண்டருளும் மெய்கண்ட தேவர் வழிபாட்டு நூலாக உள்ளது. மெய்கண்டத் தேவரின் வரலாற்றுச் சுருக்கமும் உருவப் படமும் நூல் முகப்பில் தரப் பெற்றிருக்கின்றது. வெண்பா, கலித் துறை, விருத்தம், ஆசிரியம் என்னும் நால்வகைப் பாவும் மாறிமாறி வர 40 பாடல்கள் அந்தாதியாக அமைந்துள்ளது சிவப்பிரகாச சுவாமிகள் பரமசிவ சுவாமிகள் முதலிய பலர் இந்நூற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்கள். viii. 717/1912/I.

O 31,1

**மகாதேவ முதலியார், வா., சென்னை**

i. பழநி நான்மணிமாலை ( தொ. எ. 1911 பார்க்க) ; ii. வா. மகாதேவ முதலியார், சென்னை ; மீனலோசனி முத்திராக்ஷர சாலை ; தேவக்கோட்டை ; iii. பிப்ரவரி, 1912 ; iv. செ.மூ.எ.

1+ 40 ; v. 17 × 13 செ. மீ. ; vi...... ; vii. வெண்பா, கலித்துறை, விருத்தம், ஆசிரியப்பா என்னும் நான்கும் மாறி மாறி வர அந்தாதியாக நாற்பது பாடல்கள் கொண்ட சிற்றிலக்கியம். பழனி முருகனது பெருமையைக் கூறுகின்றது. viii. 529/1912/I.

O 31,1

**வேலு நாயகர், வ. கு.**

1676. i. அமுத சித்தர் நான்மணிமாலை : முதற் பதிப்பு : ii. வ. கு. வேலு நாயக்கர், சுந்தர விநாயகர் அச்சுக் கூடம், வேலூர் ; iii. எப்ரல் 1913 ; iv. செ மூ. ப. 25+2 ; v. 22 × 14 செ. மீ. ; vi 0-8-0 ; vii. வேலூரில் விளங்கிய அமுத சித்த சுவாமிகளைப் பற்றிய வழிபாட்டு நூல். சுவாமிகளின் வாழ்க்கை வரலாறு சுருக்கமாக நூல் முகப்பில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இவரது கருணையைப் போற்றி சித்திர கவிப்புஞ்சம், நான்மணிமாலை, இரட்டைமணிமாலை, என்னும் பகுதிகள் இதில் உள்ளன. சித்திரக் கவிகளுக்கு விளக்கமும் எழுதப்பட்டிருக்கிறது. viii. 205/1913/II.

O 31,1

**பஞ்சகம்**

**இராமச்சந்திர ராவுத்தர், நா. ரா. ம.**

i. மணிபஞ்சகம் (தொ. எ. 1718 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. நா. ரா. ரா. ம. இராமச்சந்திர ராவுத்தர் ; கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை ; iii. செப்டம்பர், 1912 ; iv. செ.மூ.எ. 4 + 1 + 5 +1 ; v. 19 × 12 செ. மீ. ; vi. 0-2-0 ; vii. பாண்டி நாட்டைச் சேர்ந்த புதுக்கோட்டைச் சீமையில் சுவேத ஆற்றின் தென்பால் உள்ள சம்பு மலை என்னும் நாவலங்கிரி முருகனைப் பற்றிய வழிபாடு. அடிமுதல் முடிவரை உள்ள சிறப்பு, படைவீடுகளின் புகழ்ச்சி, ' எச்சன்னமும் நின் சரணகளைத் துதிக்கவரம் தருள வேண்டுமெனல், நக்கீரருக்கு அருளிய கிருபா வெள்ள வடிவம் நீ எனல் என்னும் பொருள்கள் பற்றி இப்பஞ்சகப் பாடல்கள் உள்ளன. வீம கவிராயர், முத்துசாமிக் கவிராயர் முதலிய நால்வர் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். viii. 109/1912/IV.

O 31,1

**சண்முகம் பிள்ளை, டாக்டர், தஞ்சை**

1677. i. மாதேவி பெரிய மாரியம்மன் தோத்திரப் பஞ்சகப்பா (சோடசக்கலித்துறை பாமாலை முதலியன) : முதற் பதிப்பு ; ii. டாக்டர், சண்முகம் பிள்ளை, தஞ்சை அண்டு டி.பி. அரங்கசாமிப்பிள்ளை ; எட்வர்ட் அச்சுக்கூடம், திருவாரூர் ; iii. அக்டோபர், 1911 ; iv. செ. மூ. எ. 1 + 5 ; v. 19 × 13 செ.மீ. ; vi...... ; vii. மாயூர நகரில் கோயில் கொண்டுள்ள மாதேவி பெரிய மாரியம்மனைப் பற்றிய புகழ்மாலை ; விருத்தப் பாவால் ஆகியது. viii. 111/1912/I.

O 31,1

**சாமிநாத பிள்ளை, பாலசுந்தரம் செட்டியார் முதலியோர்**

1677. i. மூன்றுவது வருடத்தில் திருவருணைப் பஞ்சகங்கள்; ii. சண்முக பக்த சபா ; பிரஸிடென்ஸி அச்சியந்திரசாலை; iii. 1915 ; iv. செ.மூ.ப. 8 ; v. 22 × 14 செ.மீ. ; vi. ............ ; vii. சிவனை அருணகிரி நாதனுக் கருதி பல அன்பர்கள் இயற்றிய பக்திப் பாடல்கள் கொண்ட நூல். கருந்திட்டைக் குடி வி. சாமிநாத பிள்ளை, திரு. மயிலை பால சுந்தரஞ் செட்டியார், சென்னை, கோ. பா தங்கவேலுப் பிள்ளை, சென்னை கலியாணசுந்தரம் செட்டியார், புதுவை, இராஜலிங்க முதலியார், திருநெல்வேலி ப. சு. நெல்லையப்ப பிள்ளை. ஆகியோர் பாடிய பஞ்சகப் பாடல்கள் இதில் உள. இது சிந்தாதிரிப்பேட்டை ஷண்முக பஜனை சபையாரால் இராட்சச ஆண்டு கார்திகைத் திங்கள் 6 ஆம் நாளன்று கார்த்திகை விழா நாளில் வெளியிடப்பட்டது. viii. 934/1915/IV.

O31,1

**சுந்தராச்சாரி, சி. கி.**

i. தேவி தோத்திரப் பஞ்சகம் (தொ. எ. 571 பார்க்க) முதற்பதிப்பு ; ii. கொ. கன்னியப்பச்சாரி, சென்னை ; விஸ்வ குலோத்தாரண அச்சுக்கூடம், சென்னை ; iii மார்ச், 1913 ; iv. செ.மூ.எ. 1 + 5 ; v. 14 × 11 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. இது ஐந்து ஆசிரிய விருத்தத்தால் ஆகிய புகழ்மாலை "கருத்தரிய சில பாலை புவனை திரிபுரையான கௌரி கண்மணி தேவியை" என்னும் முடிவினை இப் பஞ்சகப் பாடல்கள் பெற்றுள்ளன. தெலுங்கு எழுத்திலும் இப்புகழ்மாலை இறுதியில் அமைக்கப்பட்டுள்ளது. viii. 944/1913/I.

O31,1

**தேவராஜி பிள்ளை, சி. எஸ்., பழைய வண்ணாரப்பேட்டை**

i. ஆஞ்சநேய சுவாமி மீது பஞ்சகம் (தொ. எ. 1786 பார்க்க) முதற் பதிப்பு; ii. டி. ஆர். தேப்பெருமாள் செட்டியார் வண்ணாரப்பேட்டை ; அமெரிக்கன் டைமன் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1912 ; iv. செ. மூ. எ. 5 ; v. 14 × 11 செ மீ. ; vi........ ; vii. கட்டளைக் கலித்துறைப் பாடல்களான ஐந்து செய்யுட்களைக் கொண்ட ஒரு வழி பாட்டு நூல். ஆஞ்சநேயரைப் பற்றிப் புகழ்ந்து பேசுவது. viii. 192/1912/IV.

O31,1

**நடராஜாச்சாரியார், புதுவை**

1679. i. கொம்பி அம்மன் மீது தோத்திரப் பஞ்சகம், உயிர் வருக்கை மாலை முதலியன : முதற் பதிப்பு ; ii. எ. எம். பச்சயப்ப நாயக்கர் ; விவேகானந்தா பிரஸ், மதராஸ் ; iii. மே, 1913 ; iv. செ. மூ. ப. 16 ; v. 13 × 11 செ. மீ. ; vi. இலவசம் ; vii. செங்கற்பட்டுக்கடுத்த அன்னத்தூரில்

திருக்கோயில் கொண்டருளும் கொம்மி அம்மனைப்பற்றிய புகழ்மாலைகளின் தொகுதி. பஞ்சகம் ஐந்து கலிப்பாக்களை கொண்ட ஒரு சிறு வழிபாட்டு நூல். அடுத்து வரும் உயிர் வருக்கமாலையில் 'அ' முதல் 'ஔ' ஈறாக உள்ள பன்னிரெண்டு எழுத்துக்களையும் முதலாக அமைந்துள்ள கொச்சகப் பாடல்கள் உள்ளன. மேலும், கும்பாபிஷேக ஆசிரிய விருத்தமும் ஐந்து இசைப்பாடல்களும் இதில் உள்ளன. viii 680/1913/II.

O 31,1

## பஞ்சரத்தினம்

**அப்பாவையர், மணி., பன்ருட்டி**

1680. i. ஆதி நமச்சிவாய மூர்த்திகள் பஞ்சரத்தினம் : முதற் பதிப்பு ; ii. மணி அப்பாவையர், முத்துக்குமாரசுவாமிகள் : ஸ்ரீ கிருஷ்ண விலாச அச்சுக்கூடம், திருப்பாப்புலியூர் ; iii. ஜனவரி, 1912 ; iv செ.மூ.எ. 5 ; v 14 × 11 செ.மீ; vi. இலவசம் ; vii. திருவாவடுதுறை மடத்தின் முதல் தலைவரான நமச்சிவாய மூர்த்திகளைக் குறித்த வழிபாட்டு நூல். மேற்படி மடத்தின் தலைவர் அவர்கள் அனுப்பிய திருமுகத்தை நோக்கிய அளவில் பாசுரங்களை இயற்றித் தைத்திங்களில் மடத்தில் நிகழ்ந்த குரு பூசை விழாவில் அடியார்கட்கு வழங்கினார். viii. 642/1912/I.

O 31,1

i. சிவஞான பாலய்ய தேசிகர் பஞ்சரத்தினம் (தொ. எ. 106 பார்க்க) ; ii. சுப்பிரமணியவையர், & அப்பாவு அய்யர்; மஹா லட்சுமி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. செப்டம்பர், 1911 iiv. செ.மூ.எ. v. 21+13 செ. மீ; vi. 0—4—0; vii. இந் நூலாசிரியர் நமச்சிவாய நாவலரது மாணவர். பொம்ம புரம் ஸ்ரீ சிவஞான பாலய்ய சுவாமிகள் மீது வழிபாடாக இந்தப் பஞ்சரத்தினத்தைச் செய்துள்ளார். இவர் பாடிய 'மயிலாசல பவனிச் சிறப்பு' என்னும் ஐந்து பாடல் கொண்ட ஒரு பகுதியும், தமது ஆசானாகிய சிவஞான பாலய்ய சுவாமிகளைப் பற்றியதேயாகும். viii. 258/1911/IV.

O 31,1

**இராம. சுப்பிரமணிய அய்யர், ஆர்.**

1681. i. மலைக்கோயில் ஐந்து ரத்னக் கவி : முதற் பதிப்பு ; ii. ஆர். ஹரி ஹரதாஸர் , ஜி. ராமச்சந்திரராவ் ; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. ஆகஸ்ட், 1912 ; iv. செ.மூ.ப. 15 ; v. 14× 11 செ.மீ. ; vi. இலவசம் ; vii. புதுக்கோட்டை சமஸ்தானத்திலுள்ள திருநாவலங்கிரி மலைக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சுப்பிரமணியக் கடவுளைப் பற்றிய வழி பாட்டு நூல், ஆசிரியர் இராம. சுப்பிரமணிய அய்யரது கனவில் முருகன் அருள் செய்ய அதன்படி இவர் இந்த ஐந்து ரத்னக் கவிகளைப் பாடி முருகக் கடவுளின் கோயிலில் (1908–9)

கீலக ஆண்டு ஐப்பசித் திங்களின் 22 ஆம் நாளன்று யாவரும் கேட்டு மகிழுமாறு அரங்கேற்றினர். இது தவிர கோவிலில் அன்று வழிபாடு செய்தபோது விநாயகர், சிவ பெருமான், அம்பிகை. சுப்பிரமணியர் கோயில்களைக் கண்டவுடன் சொன்ன கவிகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவரது தமையனர் அரிகரதாசர் இயற்றிய முருகன் வழிபாட்டு விருத்தமும் இதில் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆசிரியரின் வரலாற்றை பாலநந்தர் என்பார் செய்யுளில் பாடியுள்ளார். viii. 620/1912/III.

O 31,1

**இராமானுஜ கவிராயர், முகவை**

i. பஞ்சரதன மாலிகை (தொ.எ. 2610 பார்க்க). ; இரண்டாம் பதிப்பு ; ii. வி. சுந்தரா முதலியார் , எஸ். சிவசங்கர செட்டியார் ; ரிப்பன் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1911; iv. செ.மூ.எ. 1+5 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. இது புதுவது புனைந்த பஞ்சரத்ன மாலிகை என்று குறிக்கப்பட்டிருக்கிறது. ஐந்து வெண்பாக்கள் கொண்டு அமைந்தது. viii. 29/1911/III.

O31,1

**எல்லப்பன் பிள்ளை, மா.**

1682. i. திருப்போரூர் முருகக்கடவுள் பஞ்சரத்தினம் : முதற் பதிப்பு ; ii. ல.ரா. முருகேசம் பிள்ளை ; பூலோக வியாஸன் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1912 ; iv. செ.மூ.எ.13+1+5; v. 18×12 செ.மீ. ; vi. இலவசம் ; vii. முருகக் கடவுள் வழிபாடான ஐந்து ஆசிரிய விருத்தப் பாக்களைக் கொண்ட நூல். முருகனின் புகழினைக் கூறி, வள்ளி தெய்வயானையோடு மயிலேறி வந்து வடிவேல் எனைக்காக்க என்னும் கருத்தமையப் பாடியுள்ளார். பூஞ்சோலை, முத்து வீர நாவலர் முதலிய எழுவர் இதற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். vii. 826/1912/I.

O 31,1

**கலியாண சுந்தர கவுன்டர். ரா. ந., செட்டிபாளையம்**

i. செல்லபாண்டியம்மன் பஞ்சரத்தினம் (தொ.எ. 1726 பார்க்க) ; ii. எஸ். சுந்தரம் பிள்ளை, கோயமுத்தூர் ; இம்மானுவேல் பிரஸ், கோயமுத்தூர் ; iii. மார்ச், 1913 ; iv. செ.மூ.எ 5 ; v. 21×14 செ.மீ. ; vi. இலவசம் ; vii. செட்டிபாளையத்தில் வீற்றிருக்கும் செல்லாண்டியம்மனைப் பற்றிய வழிபாட்டு நூல். ஐந்து ஆசிரிய விருத்தங்கள் கொண்டது. இப் பாடல்களில் அம்மையை 'ரத்னம்' என்று குறிப்பிடுகின்றார். 'பாராதி அண்ட பரப்பெலாம் ஈன்றதைப் பாலித்து அழிக்கும் ரத்னம், பங்கயன் முதல் பெருங் கடவுளெல்லாம் தனது பகர்கடை நிறுத்தும் ரத்னம்' என்று இவ்வாறு இப்பஞ்சரத்தினப் பாடல் அடிகள் செல்கின்றன. viii. 889/1913/I.

O 31,1

**கலியாணசுந்தர முதலியார், பூவை**

i. பாலசுப்பிரமணியர் பஞ்சரத்தினம் (தொ.எ. 1913 பார்க்க): முதற் பதிப்பு ; ii. கலியாண சுந்தர முதலியார், பூவை முருகேச முதலியார், சிறுவஞ்சூர் ; கிச்சினர் அச்சுக்கூடம், சென்னை ; iii. மே, 1912 ; iv. செ.மூ.எ. 1+5 ; v. 21×14 செ.மீ. ; vi. இலவசம் ; vii. சிறுவஞ்சூரில் பாலசுப்பிரமணியரைப்பற்றிய விளங்கும் வழிபாட்டு நூல், பதினான்கு சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தில் ஆகியது ; viii. 78/1912/III.

O 31,1

**குட்டிச்சாமி நாயகர், கோவளம்**

i. சொக்க நாயகி அம்மையார் பஞ்சரத்தினம் (தொ.எ. 1683 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. குட்டிச்சாமி நாயகர், கோவளம்; கிச்சினர் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஜூன், 1912 ; iv. செ.மூ.எ. 1+5 ; v. 18×11 செ.மீ. ; vi. இலவசம் ; vii. திருக்கழுக்குன்றம் திருமயிலையிலிருக்கும் சொக்க நாயகி அம்மையாரைப் பற்றிய வழிபாட்டுபாடல். viii. 79/1912/III.

O 31,1

i. முருகக் கடவுள் பஞ்சரத்தினம் (தொ.எ. 1683 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. குட்டிச்சாமி நாயகர், கோவளம் ; கிச்சினர் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஜூன், 1912 ; iv. செ.மூ.எ. 1+5 ; v. 18×11 செ.மீ. ; vi. இலவசம் ; vii. திருப்போரூரில் கோயில் கொண்டருளும் முருகப் பெருமானைப் பற்றிய வழிபாட்டு நூல் 'சமரபுரிமா முருகவமரவர் துதி மால்மருக சமயமிது நீ வருகவே' என்னும் வேண்டுதலுடன் இதிலுள்ள பாடல்கள் முடிவு பெறுகின்றன. viii. 79/1912/III.

O 31,1

1683. i. வடிவாம்பிகைத்தாயார் பஞ்சரத்தினம், முருகக்கடவுள் பஞ்சரத்தினம், சொக்க நாயகியம்மையார் பஞ்சரத்தினம் ; முதற் பதிப்பு ; ii. குட்டிச்சாமி நாயகர், கோவளம் ; கிச்சினர் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஜூன், 1912 ; iv. செ.மூ.எ. 1+5 ; v. 18×11 செ.மீ. ; vi. இலவசம் ; vii. திருவொற்றியூரில் விளங்கும் வடிவாம்பிகையை வணங்குவது. ஆசிரிய விருத்தத்தால் ஆகியது. viii. 79/1912/III.

O 31,1

**சச்சிதாநனந்த சிவாபிநவ நரசிம்மபாரதி சுவாமிகள்**

i. ஆசிர்வாத பஞ்சரத்தினம் (தொ.எ. 1399 பார்க்க) : ii. அ.வெ. வெங்கடாசலஞ் செட்டியார் ; சச்சிதாநந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. டிசம்பர், 1910; iv. செ.மூ.எ. 5; 18×11 செ.மீ. ; vi. இலவசம் ; viii. இதன் ஆசிரியர் சிருங்கேரி மடத்தைச் சார்ந்தவர் கோவிலூரிலுள்ள முத்து ராமலிங்க ஞான தேசிகர் மடத்தில் அப்பொழுது வாழ்ந்த

வீரசேகர ஞான தேசிகரை வாழ்த்திப் பாடியதாகும். viii. 128/1911/I.

O31,1

**சிந்நய நாயக்கர், திருவிசைநல்லூர்**

i. கற்பக வல்லியம்மை பஞ்சரத்தினம் (தொ.எ. 1752 பார்க்க): முதற் பதிப்பு; ii சகஜானந்தம் ஜீவரத்தன விநாயக சம்பந்த பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1913 ; iv. செ.மூ.எ 1+5 ; v. 18×13 செ.மீ.; vi. இலவசம் ; vii. திருமயிலையில் கோயில் கொண்டருளும் கற்பக வல்லியம்மையைப்பற்றிய வழிபாட்டுநூல். 'திருமறைகள் புகழ் செல்லி ஜெகமெல்லாம் அருள் நெல்லி, திவ்விய கற்பக வல்லியே' என இப்பஞ்சரத்தினப் பாடல்கள் ஒவ்வொன்றும் முடிவுறுகின்றன; viii. 167/1913/II.

O31,1

1684. i. சிவசுப்பிரமணியக்கடவுள் பஞ்சரத்தினம் : இரண்டாம் பதிப்பு ; ii. சி.எம். குமாரசாமி செட்டியார், சென்னை ; வாணி நிலைய அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூன் , 1914; iv. செ.மூ.எ. 1+5+1 ; v. 12×9 செ.மீ. ; vi. இலவசம் ; vii. திருத்தணிகைச் சிவ சுப்பிரமணியத்தைப் பற்றிய வழிபாடல் இரட்டை ஆசிரிய விருத்தத்தால் ஆகியது. 'திருவதன பொற்பு மணி வள்ளி முன்னின்ற கணி சீர் திருத்தணிக் கடவுளே' என ஒவ்வொரு பாடலும் முடிவடைகிறது. viii. 965/1914/II.

O31,1

**சிவ துரைசாமி தேசிகர்**

1685. i. ராமலிங்க பஞ்ச ரத்தினம் : முதற் பதிப்பு. மா.ர குமாரசாமி பிள்ளை ; புஷ்பாலயாம்பாள் விலாச பிரஸ், திருக்கோயிலூர் ; iii. பிப்ரவரி, 1912 ; iv. செ.மூ.ப. 7 ; v. 10×8 செ.மீ. ; vi. இலவசம் ; vii. இராமலிங்க அடிகளின் வழிபாடலாக அமைந்தது. இந்நூல் விரோதிகிருது ஆண்டு தைத் திங்கள் 20 ஆம் நாள் உத்தர ஞான சித்திபுரம் சத்திய ஞான சபையில் நடைபெற்ற சமரச சன்மார்க்க சங்கத்தில் கோவில் பக்தபால சமாஜத்தரால் வழங்கப் பெற்றது; viii. 603/1912/I.

O31,1

**சுந்தராச்சாரி, சி. கி.**

i. சரஸ்வதி பஞ்சரத்னம் (தொ.எ. 1580 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. கொ. கன்னியப்ப ஆச்சாரியார், சென்னை ; விஸ்வ குலோத்தாரண அச்சுக்கூடம், சென்னை ; மே, 1913 ; iv. செ.மூ.எ. 1+5 ; v. 17×11 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. கலைமகளைக் குறித்த ஒரு வழிபாட்டு நூல். தமக்குக் கலையை அருளவேண்டும் என்று கலைமகளைப் புகழ்ந்து பேசுகின்றார்; viii. 553/1913/II

O31,1

**சுப்பையா சுவாமிகள், (மொ. து.)**

1686. i. மகா கணபதி பஞ்சரத்னம் (ஸ்ரீ ஷண்முக ஷட்கம் முதலியன) ; ii. அ. வெ. வெங்கடாசலஞ் செட்டியார் ; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, கோமளேசுவரன்பேட்டை, சென்னை ; iii. செப்டம்பர், 1911 ; iv. செ.மூ.எ. 5+1 ; v. 12×8 செ.மீ.; vi. இலவசம் ; vii. சங்கர பூஜ்ய பகவற்பாத பூர்வாசாரிய சுவாமிகளால் இயற்றப்பட்ட வட மொழிப் பாடலைத் தமிழாக்கியது. இதில் 'ஷண்முக ஷட்கம்', 'விருஷ்டி ஷட்கம்', 'சுப்ரஹ்மண்ய தசகம்' ஆகியவை உள்ளன ; viii. 223/1911/IV.

O31,1

**தங்கவேற் புலவர், மு.**

1687. i. சிவசுப்பிரமணியக் கடவுள் பஞ்சரத்தினம் : முதற் பதிப்பு; ii. சி. ரத்ன செட்டி, மயிலம் ; ஸ்ரீ ஜெய விநாயக சிவப் பிரகாச அச்சுக்கூடம், சென்னை ; iii. ஏப்ரல், 1911 ; iv. செ.மூ.எ. 1+5+1 ; ; v. 21×14 செ.மீ. ; vi. இலவசம் ; vii. தென் மயிலம் மேவும் சிவசுப்பிரமணியக் கடவுள் வழிபாடலாக அமைந்தது. சாதாரண ஆண்டு பங்குனித் திங்கள் 28 ஆம் நாள் தேர்த் திருவிழாவன்று கோயிலில் இரத்தினஞ் செட்டியாரால் அரங்கேற்றஞ் செய்யப் பெற்று வழங்கப்பட்டது ; viii. 519/1911/II.

O31,1

**தாமோதர முதலியார், ஜி.**

1688. i. நல்வரவுப் பஞ்சரத்தினம் ; ii. ஜி. தாமோதர முதலியார் ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1914 ; iv. செ.மூ.எ. 5 ; v........ ; vi.........; vii.;............அந்நாளில் இந்நாட்டை ஆண்ட பிரிட்டனைப் புகழ்ந்தும் சொர்மனி நாட்டினைத் தாக்கியும் எழுதப் பெற்ற பாடல்கள் கொண்டது இச் சிறு வெளியீடு ; viii. 281/1915/I.

O31,1

**திருவேங்கிடசாமி நாயுடு, பா., அத்திப்பட்டு**

i. பெருமாள் அவதாரச் சுருக்க பஞ்சரத்தினம் (தொ.எ. 1493 பார்க்க) ; முதற் பதிப்பு ; ii. வி. எஸ். விஜயராகாவாச்சாரியார் ஸ்ரீ நிகேதன முத்திராக்ஷரசாலை, சென்னை ; iii. ஜூன், 1914 ; vi. செ.மூ.எ. 5+1 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–1–6 ; vii. திருமாலின் பிறப்பு நிகழ்ச்சிகளைச் சுருக்கமாக எடுத்துரைத்துப் போற்றுவது. இராமனைப் பிறந்த நிகழ்ச்சிகள் மிகுதியாகக் குறிக்கப்பட்டுள்ளன. 'வைகுண்ட வாசனே புண்டரீகத்தில் வளர் மங்கை நாயக நேசனே' என்னும் மகுடத்தைப் பெற்று, இதில் உள்ள பாடல்கள் அமைந்துள்ளன; viii. 213/1914/III.

O31,1

துரைசாமி தேசிகர், சிவ.

1689. i. ஆறுமுக ஞானகுரு **பஞ்சரத்தினம் :** முதற் பதிப்பு ; ii. டி. ரா. குமாரசாமி பிள்ளை ; புஷ்பாலயாம்பாள் விலாச அச்சுக்கூடம், திருக்கோவிலூர் ; iii. மார்ச், 1912 ; vi. செ.மூ.எ. 5 ; v. 11×19 செ.மீ. ; vi. இலவசம் ; vii. திருக்கோவிலூரில் வாழ்ந்த ஆறுமுக ஞானகுரு என்னும் ஆசாரியனைப் பற்றிய புகழ்மாலை. viii. 1012/1912/I.

O31,1

தெண்டபாணி பிள்ளை. ச., நாகை வெளிப்பாளையம்

i. சிவசுப்ரமணியக் கடவுள் பேரில் பஞ்சரத்ன மாலை, விருத்தம் ஆனந்த சிந்தும் (தொ. எ.......பார்க்க) : முதற் பதிப்பு ; ii. ஆ. ரு. முருகை நாடார், நாகப்பட்டணம் ; நீலலோசனி பிராஞ்சு அச்சுக்கூடம், திருவாரூர் ; iii. மார்ச், 1912 ; iv. செ.மூ.ப. 5 ; v. 23×14 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. இதில் சிவசுப்பிரமணியர் பஞ்சரத்தினமாலை, பஞ்சரத்ன விருத்தம், ஆனந்த சிந்து என்பவை அடங்கியுள்ளன. இவை முருகப் பெருமானைப் போற்றிப் புகழுவனவாம் ; viii. 58/1912/II.

O31,1

1690. i. சுப்பிரமணியக் கடவுள் பேரில் பஞ்சரத்தினமாலை, விருத்தம், ஆனந்தச் சிந்து : முதற் பதிப்பு ; ii. சுப்பய்யா பிள்ளை, திருமயம், & சிங்காரவேலு உபாத்தியாயர், நாகையம்பதி; ஹமீத்ய்யா பிரஸ், நாகப்பட்டினம் ; iii. ஏப்ரல், 1911 ; iv. செ.மூ.ப. 8 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–0–3 ; vii. எட்டுக்குடி முருகன் பேரில் அமைந்த பஞ்ச ரத்னமாலை, பஞ்சரத்ன விருத்தம், ஆனந்தச் சிந்து என்னும் மூன்று வகைப் பாடல்களைக் கொண்டது. ஆசிரியர் ஆண்டு தோறும் முருகக் கடவுளுக்குக் காவடி கட்டி அலகு போட்டு வரும்போது உடன் வரும் பக்தர்கள் பாடும்பொருட்டு இது இயற்றப் பட்டது. viii. 263/1911/II.

O31,1

நரசிம்ம பாகவதர் & வடிவேலு முதலியார்

1691. i. சிறு மதுரை பொய்யா விநாயக சொக்கேச கோபால கிருஷ்ண பஞ்சரத்தினங்கள் : முதற் பதிப்பு ; ii. எஸ். கிருஷ்ண உடையார், சிறு மதுரை ; புஷ்பாலயாம்பாள் விலாஸம் அச்சுக்கூடம், திருக்கோவிலூர் ; iii. செப்டம்பர், 1911 ; iv. செ.மூ.எ. 4+15 ; v. 17×10 செ.மீ. ; vi. இலவசம் ; vii. திருவருட்டுறை என்னும் திருவெண்ணெய்நல்லூருக்கு அடுத்த சிறு மதுரை என்னும் ஊரில் கோயில் கொண்டுள்ள பொய்யா விநாயகர், சொக்கேசர், கோபாலகிருஷ்ணர் என்னும் மூவரையும் பற்றிய பஞ்சரத்தினப் பாட்டு. விநாயகர் பஞ்ச ரத்தினத்திலும் கோபாலகிருஷ்ண பஞ்சரத்தினத்திலும் காப்புச்

செய்யுளும், நாடு என்னும் தலைப்பில் சிறு மதுரையைப் பற்றிய ஒரு செய்யுளும் இடம் பெற்றுள்ளன. விநாயக பஞ்ச ரத்தினத்தின் காப்பு விநாயகரையும், கோபாலகிருஷ்ண பஞ்ச ரத்தினத்தின் காப்பு குருகூர் மாறனையும் வேண்டுவதாக உள்ளது. viii. 217/1911/IV.

O31,1

நரசிம்ம பாரதி சுவாமிகள்

i. சதாசிவப் பிரஹ்மேந்திர பஞ்சரத்னம் (தொ.எ. 192 பார்க்க): முதற் பதிப்பு; ii. கோ. வடிவேலு செட்டியார் & எம். ஷண்முக முதலியார்; சச்சிதானந்தா பிரஸ், கோமளீஸ்வரன்பேட்டை, சென்னை; iii. செப்டம்பர், 1911; iv. செ.மூ.எ. 5+1; v. 12×8 செ.மீ; vi. 0–2–0; vii. வட மொழியில் அத்துவித ரஸமஞ்சரி என்னும் நூலை அருளிய 'ஸ்ரீ சதாசிவப் பிரஹ்மேந்திரரைப்'ப் புகழ்ந்து பாடுவது; viii. 221/1911/IV.

O31,1

நரசிம்ம பாரதி, எ., திருமயம்

i. சௌந்திரநாயகி பஞ்சரத்நம் (தொ.எ. 1789 பார்க்க): முதற் பதிப்பு; ii. சி.எ.சி. காசிநாத செட்டியார், கொத்தமங்கலம்; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை; iii. ஆகஸ்ட், 1913; iv. செ.மூ.எ. 2+5+1; v. 22×15 செ.மீ.; vi. 0–2–0; vii. கொத்தமங்கலத்தில் கோயில் கொண்டு விளங்கும் உமையம்மையாரைப் பற்றிய புகழ்மாலை சந்த விருத்தத்தில் அமைந்தது. ஒவ்வொரு பாட்டிற்கும் உரிய சந்தக் குறிப்பும் அவ்வப்பாடலின் முதலில் சுட்டப்பட்டிருக்கிறது. viii. 794/1913/III.

O31,1

i. மீனாட்சியம்மை பஞ்சரத்தினம் (தொ.எ. 1902 பார்க்க): முதற் பதிப்பு; ii. ராமன் செட்டியார், பள்ளத்தூர்; விவேக பாநு பிரஸ், மதுரை; iii. மே, 1913; iv. செ.மூ.எ. 1+5+1; v. 17×13 செ.மீ.; vii. 0–4–0; vi. பள்ளத்தூரில் விளங்கும் மீனாட்சியம்மையைக் குறித்து ஐந்து பாடல்களால் வழிபடும் நூல். "பள்ளத்தூர் ஆர்ந்த சுந்தர லிங்கேசர் பால் அமர்ந்தே அருள் செய் மீனாட்சி எம் தாயே" என்னும் முடிவுடன் இப்பஞ்சரத்னப் பாடல்கள் உள்ளன. viii. 456/1913/II.

O31,1

பக்கிரிசாமி பிள்ளை, அ.

1692. i. சிவசுப்பிரமணியக் கடவுள் பேரில் பஞ்சரத்னமாலை [விருத்தமும் ஆனந்தச் சிந்தும்]: முதற் பதிப்பு; ii. மகா பரசுராம பாகவதர், சங்கையூர்; நீலலோசனி அச்சுக்கூடம், நாகப்பட்டினம்; iii. மார்ச், 1913; iv. செ.மூ.எ. 1+5; v. 22×14 செ.மீ.; vi. 0–0–6; vii. எட்டுக்குடி

சிவசுப்பிரமணியக் கடவுள் பேரில் அமைந்த வழிபாட்டு நூல். நம்மைக் காக்க வேண்டுமென்று ஆசிரியர் இறைவனை வேண்டு கின்றார் ; viii. 112/1913/II.

O31,1

i. சிவ சுப்பிரமணியக் கடவுள் பேரில் பஞ்சரத்தின விருத்தம் (தொ. எ. 1692 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. மகா பரசுராம பாகவதர், சங்கையூர் ; நீலலோசனி அச்சுககூடம், நாகப்பட் டினம் ; iii. மார்ச், 1913 ; iv. செ.மூ.எ. 5 ; v. 22× 14 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. "ஜெகமதில் புகழ்கொண்ட எட்டுக்குடி சிவசுப்பிரமணிய தேவா" என முடியும் ஐந்து விருத்தப் பாக்களைக் கொண்டது இப் புகழ்மாலை. viii. 112/1913/II.

O31,1

முத்து கிருஷ்ணம்மாள்

1693. i. சுந்தர மகாலிங்க சுவாமி பேரில் பஞ்சரத்தினம் : முதற் பதிப்பு ; ii. இ. ஆர். குருசாமி கோன், மதுரை ; ஸ்ரீ ராமச் சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. அக்டோபர், 1914 ; iv. செ.மூ.எ. 5 ; v. 13× 11 செ.மீ. ; vi. 0–0–3 ; vii. சதுரகிரியில் விளங்கும் சுந்தர மகாலிங்க சுவாமியின் பேரில் பாடப் பெற்ற பஞ்சரத்தினப் பாடல்கள். வைத்திய வாத, யோக ஞான கலைகளின் விளம்பரமும் இறுதியில் உள்ளது. அதில் அந்தக் கலைகளை ஆக்கியவர்களின் பெயர்கள் தரப்பட்டுள்ளன. viii. 324/1914/IV.

O31,1

முருகேச முதலியார், க. சி., விழுப்புரம்

i. பிந்துமாதவப் பெருமாள் பஞ்சரத்தினம் (தொ. எ. 1452 பார்க்க) ; ii. சுப்பிரமணியத் தம்பிரான் ; விநாயகசுந்தர விலாச பிரஸ், சிதம்பரம் ; iii. எப்ரல், 1911 ; iv. செ. மூ. எ. 1 + 5 + 1 ; v. 13 × 11 செ. மீ. ; vi............ ; vii. விருத்தாசலத்தில் எழுந்தருளியிருக்கும் பிந்துமாதவ ராவ் என்னும் திருமாலைப் பற்றிய வழிபாட்டுநூல். viii. 359/1911/II.

O31,1

வாலை குரு நாயனர்

i. பஞ்சரத்தினம் (தொ. எ. 628A பார்க்க) : முதற் பதிப்பு ; ii. என். எம். எஸ். சண்முகசுந்தர நாயனர்; நாயனர் அச்சுக்கூடம், சென்னை ; iii. செப்டம்பர், 1913 ; iv. செ. மூ. எ. 5 ; v. 19 × 13 செ. மீ. ; vi. 0–0–9 ; vii. திட்டக்குடியில் கோயில்கொண்டருளும் அருந்ததி அம்மையாரைப் பற்றிய வழிபாடு. ஐந்து ஆசிரிய விருத்தங்கள் கொண்டது. மேலட்டையில் சுட்டியபடி "ஞானத்தாழிசை" என்ற நூல் இதனுள் இல்லை. viii. 212/1913/IV.

O31,1

**வேலாயுதன், மு., பூஞ்சோலை**

1694. i. பஞ்சரத்நம் : முதற் பதிப்பு ; ii. மு. வேலாயுதன் பூலோக வியாஸன் பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1915 ; iv. செ. மூ. ப. 8 ; v. 17 × 12 செ. மீ. ; vi. இலவசம் ; vii. திருப்போரூரில் எழுந்தருளியுள்ள வேலாயுதக் கடவுளைப் போற்றிப் புகழ்ந்து எழுதப்பெற்ற பக்திப் பாடல் ஐந்தின் தொகுப்பு. இதில் ஆசிரியர் வேலாயுதக் கடவுளைச் சுகந்தி யாகவும், பொன்னாகவும், மரகதமாகவும், மாணிக்கமாகவும், முத்தாகவும் உவமித்து வழிபடுவதால் இந்நூல் பஞ்சரத்நம் என்று பெயரிடப்பட்டுள்ளது. ஆனந்த ஆண்டு மாசித் திங்கள் 10 ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமை திருப்போரூர் மடத்தில் அரங் கேற்றப்பட்டது. viii. 236/1915/II.

O31,1

**ஜெகந்நாத பிள்ளை, வ., தஞ்சை**

1695. i. ஜலமங்கை துதி : முதற் பதிப்பு ; ii. வ. ஜெகநாத பிள்ளை, தஞ்சை ; ஸ்ரீ கிருஷ்ணவிலாச பிரஸ், தஞ்சை ; iii. ஜூலை, 1911 ; iv. செ. மூ. எ. 1 + 1 + 5 + 1 ; v. 13 × 11 செ. மீ. ; vi. 0–0–3 ; vii. தெய்வத் தன்மை பொருந்திய நீரைக் குறித்து ஐந்து பாடல்களாலாகிய புகழ் மாலை. இதனை ஆசிரியர் பஞ்சரத்னம் என்று குறிப்பிட்டுள் ளார். காவேரியில் நீராடி வந்தபோது இந்தத் வழிபாட்டுப் பாடல்களைப் பாடினார் என்று தெரியவருகிறது. viii. 284/1911/III.

O31,1

**ஜெகராவ் முதலியார், அ. ச., இராயபுரம்**

1696. i. மாசிலாமணி ஈசுரர் பஞ்சரத்னம் : முதற் பதிப்பு ; ii. கோ. பெருமாள் கிராமணியார், சென்னை ; நாயனார் அச்சுக் கூடம், பழைய வண்ணாரப்பேட்டை, சென்னை ; iii. ஜனவரி, 1913 ; iv. செ. மூ. எ. ; 1 + 5 ; v. 14 × 11 செ. மீ. ; vi. இலவசம் ; vii. வடதிருமுல்லைவாயிலில் திருக்கோயில் கொண்டெழுந்தருளிய மாசிலாமணி ஈசுரரைப் பற்றிய துதிப் பாடல். ஆசிரிய விருத்தத்தால் ஆகியது. இதிலுள்ள ஐந்து பாடல்களும், "மருவு பிரகாசனே . திருவருள் விலாசனே மாசிலாமணி ஈசனே" என்னும் அடிகளைக் கொண்டு முடி வுறுகின்றன. தைப் பூசத்தில் சிறப்புவிழாசெய்கின்ற கோழம்பேட்டு பெருமாள் கிராமணியார் பெருமையும் இறுதிப் பாடலில் குறிக்கப்பட்டிருக்கிறது. viii. 303/1913/I.

O31,1

## பதிகம்

**அங்கமுத்து முதலியார், டி. எஸ்., சின்னசெவலை**

1697. i. குண்டுமணி ஐயனார் பதிகம் : முதற் பதிப்பு; ii. டி. எஸ். அங்கமுத்து முதலியார், சின்னசெவலை ; எ. குமாரசாமி அண்டு கம்பெனி, திண்டிவனம் ; iii. மே, 1914 ; iv. செ.மூ.ப.8 ;

v. 23 × 15 செ. மீ.; vi. 0-1-0; vii. திருக் கோவிலூர் வட்டம், பெரியசெவலையில் கோயில் கொண்டருளும் குண்டுமணி அய்யனாரைப் பற்றிய புகழ்மாலை. பதிகம் அரங் கேற்றியபொழுது பெரியசெவலை வாழும் குழந்தைக் கவுண்டர், இராமசாமிக் கவுண்டர், முதலியோர் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடி அளித்துள்ளனர். இந்நூல் பாடல்களைவிட இரு பங்குக்கு மேலாகச் சாத்துக் கவிகள் உள்ளன. viii. 538/1914/II.

O 31,1

**அடைக்கலம் பிள்ளை, திருமங்கலம்**

1698. i. ஊற்று விநாயகர் பதிகங்கள் [தண்டாயுதபாணி பதிகம்]: முதற் பதிப்பு; ii. எஸ். பஞ்சாபகேச சர்மா, திருமங்கலம்; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை; iii. அக்டோபர், 1912; iv. செ. மூ. எ. 1 + 10 + 10; v. 22 × 14 செ. மீ.; vi. இலவசம்; vii. திருமங்கை ஊர் என்னும் திருமங்கலத்தில் கோயில் கொண்டருளும் ஊற்று விநாயகரைப் பற்றிய வழிபாட்டு மாலை. கட்டளைக் கலித்துறைப் பாவிலும் ஆசிரிய விருத்தத்திலும் அமைந்த இரு பதிகங்கள் உள்ளன. viii. 298/1912/IV.

O 31,1

i. தண்டாயுதபாணி பதிகம் (தொ. எ. 1698 பார்க்க): முதற் பதிப்பு; ii. எஸ். பஞ்சாபகேச சர்மா; திருமங்கலம்; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை; iii. அக்டோபர், 1912; iv. செ. மூ. எ. 1 + 10 + 5; v. 22 × 14 செ. மீ.; vi. இலவசம்; vii. திருமங்கைநகர் என்னும் திருமங்கலத்தில் ஞானப் புலவராக விளங்கும் தண்டாயுதக் கடவுளைப் பற்றிய துதி. "தண்டமிழ் பரவு திருமங்கைநகர் தன்னில் வளர் தண்டாயுதக் கடவுளே" எனப் பாடல்தோறும் முடியுமாறு இப்பதிகப் பாமாலைகள் உள்ளன. ஆசிரிய விருத்தத்தால் ஆகியது. viii. 298/1912/IV.

O 31,1

**அண்ணாமலைக் கவுண்டர்**

1699. i. செம்பியம்மன்பதிகம்: முதற் பதிப்பு; ii. பி. வி. என சடகோப முதலியார்; ஸ்ரீ ருக்மணி விலாசம் பிரஸ், முப்புரம்; iii. பிப்ரவரி, 1914; iv. செ. மூ. எ. 1 + 11; v. 20 × 12 செ. மீ.; vi. 0–0–3; vii. கள்ளக்குறிச்சி வட்டத்தைச் சேர்ந்த மருவூரில் இருக்கும் செம்பியம்மனைப் பற்றிய வழிபாட்டுப் பாடல்கள். "செந்நெல்விளை மருவூரைப் பின்னமறக் காக்கின்ற செம்பி உமை நம்பினேனே" என ஒவ் வொரு பாடலும் முடிகின்றது. viii. 195/1914/I.

O31,1

**அப்பாவுக் கவிராயர், சி. பி., சின்னையாபுரம்**

i. பத்திரகாளியம்மை பதிகம் (தொ. எ. 631 பார்க்க): முதற் பதிப்பு; ii. சி. பி. அப்பாவுக் கவிராயர்; விவேகபாநு

அச்சியந்திரசாலை, மதுரை; iii. செப்டம்பர், 1912; iv. செ. மூ. ப. 1 + 10; v. 16 × 12 செ. மீ.; vi. 0–1–0; vii. பிள்ளையார்குளம் என்னும் ஊரில் வடதிசையில் கோயில் கொண்டருளும் பத்திரகாளியம்மையைப் பற்றிய துதி. காளி தேவியின் வீரப்புகழும் கருணையும் போற்றிப் புகழப்பட்டுள்ளன. பிள்ளையார்குளம் என்னும் பகுதியில் வாழ்பவரான ஆதித்தேவ கரையாளர் என்பாரும், அடைக்கலாபுரம் சங்கர குமாரத்தேவர் என்பாரும் கேட்டுக்கொண்டபடி இது இயற்றப் பெற்றது. viii. 875/1912/III.

O31,1

**அம்பலவாணய்யர்**

1700. i. கோட்டாற்றூர் கணேசர் பதிப்பகம்; முதற் பதிப்பு; ii. அம்பலவாணய்யர்; ஸ்ரீ லட்சுமி விலாச அச்சுக்கூடம், திருச்சி; iii. செப்டம்பர், 1911; iv. செ.மூ.எ. 10 + 1; v. 14 × 11 செ.மீ.; vi. ..........; vii. கோட்டாற்றூரில் இருக்கும் விநாயகரைப் பற்றிய வாழ்த்து. ஆசிரிய விருத்தத்தால் ஆகியது. பால குருபிள்ளை என்பார் இதற்குச் சாத்துக்கவி பாடியுள்ளார். viii. 660/911/III.

O31,1

**அரிகரம் அய்யர், ஆர்.**

1701. i. சங்கரலிங்கசுவாமி பதிகம்: முதற் பதிப்பு; ii. ஆர். அரிகரம் அய்யர்; லட்சுமி விலாசம் அச்சுயந்திரசாலை, அம்பாசமுத்திரம்; iii. செப்டம்பர், 1910; iv. செ. மூ. எ. 1 + 11; v. 14 × 11 செ. மீ.; vi. 0–0–6; vii. தாமிரபரணி ஆற்றின் முகப்பில் எழுந்தருளியிருக்கும் சிவனைப்பற்றிப் பாடிய பத்துவழிபாட்டுப் பாடல்கள் அடங்கிய நூலாகும் இது. viii. 877/1911/I.

O31,1

**அருணாசல நாவலர், நா., வீரவநல்லூர்**

1702. i. திருவண்ணாமலைப் பதிகம்: முதற் பதிப்பு; ii. நா. அருணாசல நாவலர், வீரவநல்லூர்; ஆரியப்பிரகாசினி பிரஸ், திருநெல்வேலிப் பாலம்; iii. நவம்பர், 1913; iv. செ.மூ. எ. 1 + 11 + 1; 17 × 11 செ.மீ.; vi. 0–0–6; vii. திருவண்ணாமலை ஈசனைப் பற்றிய வழிப்பாட்டுநூல் எழுசீர்க்கழி நெடிலடி இரட்டை ஆசிரிய விருத்தத்தால் ஆகியது. "தேசமெங்கும் புகழ் வாசனே, நேசனே, திருவண்ணாமலை ஈசனே" என ஒவ்வொரு பாடலும் முடிவடைகின்றது. viii. 744/1913/IV.

O31,1

**அருணாசலம் பிள்ளை, எஸ். கே., சந்தனநல்லூர்**

1703. i. திருவரிகைப் பதிகம்: முதற் பதிப்பு; ii. எம். ஆர். கந்தசாமிக் கவிராயர்; விவேகபானு அச்சியந்திரசாலை, மதுரை; iii. மார்ச், 1911; iv. செ.மூ.எ. 1 + 10 + 1; v. 15 × 12

ப்புதாசப் பண்டிதர், ம.சி. (தொ.து.)

1923. i. அருளாநந்தையர் நாடகம் : முதற் பதிப்பு ; ii. முத்து வீர நாவலர் ; பூஞ்சோலை ; பூலோக வியாசன் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1911 ; iv. உ.ப. + செ. மூ.ப. 272 ; v. 21×13 செ. மீ. ; vi. 1-0-0 ; vii. இராமநாதபுரத்தில் 17 ஆம் நூற்றாண்டில் சமய பரப்புநராகவிருந்த ரோமன் கத்தோலிக்கப் பாதிரியாரான அருளானந்தர் கொலை செய்யப்பட்ட வரலாற்றை விளக்கிக்கூறும் செய்யுளிலமைந்த நாடகம். viii. 193/1911/III.

O31,2

1924. i. **அற்ப சுகம் பிராண பங்கம்** ; ii. வேவர்லி பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 10 ; v. 25×19 செ.மீ. ; vi. 0-0-6 ; vii. காதலின் சிற்றின்பத்திற்காக உயிர்க்கு அழிவு ஏற்படுவதை ஆசிரியர் நாடக வடிவில் விளக்குகிறார். சிற்சில படங்களும் அங்கங்கே சேர்க்கப்பட்டிருக்கின்றன ; viii. 822/1915/IV.

O31,2

அன்னபூர்ணியம்மா, பவானி.

1925. i. சங்கர விஜய விலாசம் : முதற் பதிப்பு ; ii. அன்னபூர்ணி யம்மா, பவானி ; ஷண்முக விலாஸ் அச்சுக்கூடம், சேலம் ; iii. டிசம்பர், 1913 ; iv. செ.மூ.ப. 136 ; v. 20×13 செ.மீ. ; vi. இலவசம் ; vii. ஆதிசங்கரரின் வரலாற்றை இசைப் பாடல் களில் உரைக்கும் நூல். விருத்தப் பாடல்களும் இடையிடையே உள்ளன. கதைப் போக்கை விளக்கும் தலைப்புகள் கொடுக் கப்பட்டுள்ளன. பாடல்களுக்கு இராக, தாளக் குறிப்புகளும் தரப்பட்டுள்ளன. பிற சமயங்களைச் சொற்போரால் வென்று சைவம் முதலிய அறுவகைச் சமயத்தைச் சங்கரர் நிலைநாட்டியமை விளக்கமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. viii. 912/1913/IV.

O31,2

ஆத்மலிங்கம் பிள்ளை, அ.

1926. i. சத்யவான் சாவித்திரி ; ii. எம். பட்டாபிராம முதலியார் நாராயணசாமி பிள்ளை, வேலூர் ; சௌத் இந்தியன் ப்ரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. + செ.மூ.ப. 76 ; v. 22×14 செ. மீ. ; vi. 0-4-0 ; vii. சத்தியவான்-சாவித்திரி என்ற புராண நாடகம் ; மூன்று அங்கங்களைக் கொண்டது. சாவித்திரி தன்கற்பின் வன்மையால் கணவன் உயிரை எமனிடமிருந்து காப்பாற்றிய கதையினைக் கூறுகிறது. viii. 25/1915/II.

O31,2

ஆதிமுத்து ரெட்டியார்

1927. i. பத்ராசல ராமதாஸ் நாடகம்—படத்துடன் : முதற் பதிப்பு ; ii. டி. இராமசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; ஸ்ரீலக்ஷ்மி நாராயண விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1910 ; iv. உ.ப. + செ. மூ. ப. 76 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. இராமனடியாராகிய பத்ராசல இராம தாசரது வரலாறு நாடகமாகச் செய்யப்பட்டிருக்கிறது. மகா பக்த விசயத்திலிருந்து எடுக்கப்பெற்றது இவ்வரலாறு. முகப்பில் ஆதிமுத்து ரெட்டியார் அவர்களால் எட்டுச் சுவடியைக் கொண்டெழுதப்பட்டது என்ற குறிப்பிருப்பதால் இதன் ஆசிரியர் வேறு ஒருவராக இருக்க வேண்டும் என்று அறியக்கிடக்கிறது. viii. 103/1911/I.

O31,2

இரங்காச்சாரியார், வீ.

1928. i. ஹேமலதா : முதற் பதிப்பு ; ii. ஸ்ரீ பாலசுப்பிரமணியம் அண்டு கம்பெனி ; சச்சிதானந்தா பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1915 ; iv. உ.ப. 272 ; v. 18×13 செ. மீ ; vi. 1–0–0; vii. ஐந்து அங்கங்களில் அடங்கிய உரைநடை நாடக நூல். இதில் சமூகத் தொண்டு செய்வதற்குத் துறவிகளைவிட இல்லறத்தவர்களுக்கே அதிக வாய்ப்புகள் உண்டு என்ற உண்மை விளக்கப்பட்டுள்ளது. பழமையின் பெருமையை ஆசிரியர் விளக்க முயன்றிருக்கிறார். தற்காலச் சூழ்நிலையிலும் பழங்காலப் பெருமைகளையும், பழக்க வழக்கங்களையும் எங்ஙனம் காக்க இயலும் என்பதை ஆசிரியர் தலைவி ஹேமலதாவின் மூலம் விளக்குகின்றார். இடையிடையே அறிவுரை புகட்டும் பழம் பாடல்களும் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 257/1915/II.

O31,2

இராமசாமி அய்யங்கார், கீ., பாலையூர்

1929. i. சந்திரகாச நாடகம் : முதற் பதிப்பு ; ii. அ. மாமுண்டியா பிள்ளை, திருச்சினாப்பள்ளி ; நிரஞ்சன விலாச அச்சியந்திர சாலை, சென்னை ; iii. ஜனவரி, 1911 ; iv. உ.ப. 4+25+216 ; v. 21×14 செ.மீ. ; vi. 1–4–0 ; vii. பாண்டவர்கள் அசுவமேத யாகம் செய்த காலத்துக் கண்ணனால் அருச்சுனனுக்குச் சொல்லப்பட்ட கதை. இது இரண்டு காண்டங்களாகப் பாகுபாடு செய்யப்பட்டுள்ளது. உரைநடையும் செய்யுளும் விரவி அமைந்தது. கதை நிகழ்ச்சிகளை விளக்கும் தலைப்புகளும் தரப்பட்டுள்ளன. ஒரு சில விளக்கப் படங்களும் காணப்படுகின்றன. இந்நூல் பாடல்களுக்குத் திருவாரூர் வ. சண்முக தேசிகர்

இராக, தாளங்கள் அமைத்துள்ளார். "நவரச அலங்கார சங்கீத சந்திரகாச நாடகம்" என்றும் இதற்குப் பெயருண்டு. சிதம்பரம், சு. அருணசல சுவாமிகள், மதுரை கலியுக வர்த்தமானி பத்திரிகையாசிரியர் கவிராச கந்தசாமிப் பிள்ளை, யாழ்ப்பாணம் அ. சபாபதிப் பிள்ளை ஆகியோர் சிறப்புப் பாயிரங்கள் இயற்றி யுள்ளனர். viii. 106/1911/I.

O31,2

இராஜகோபால அய்யங்கார், கும்பகோணம்

1930. i. சிந்தாமணி : ii. இராஜகோபால அய்யங்கார் ; லாலி எலக்டிரிக் பிரிண்டிங் ஒர்க்ஸ், தஞ்சாவூர் ; iii. 1915 ; iv. உ.ப. 142 ; v. 18×12 செ. மீ ; vi. 0–12–0 ; vii. ஐம்பெருங் காப்பியத்தில் ஒன்ருன சீவகசிந்தாமணியின் கதையே இந்நாடகப் பொருள். ஐந்து அங்கங்கள் உடையது. இடையிடையே பொருத்தமான இசைப் பாடல்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 24/1915/IV.

O31,2

இராஜ வடிவேல் தாஸர்

1931. i. உருக்குமாங்கத மஹாராஜன் சரித்திரம் ; ii. இ. ராம. குருசாமிக் கோனர் ; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சுயந்திர சாலை, மதுரை ; iii. 1915 ; iv. உ.ப.+செ.மூ.ப. 32; v. 22×14 செ. மீ. ; vi. 0—2—0 ; vii. உருக்குமாங்கத அரசனின் வரலாற்றை இந்நூல் விளக்குகிறது. இது ஏகாதசி நோன்பின் சிறப்பை உரைப்பது. ஆகவே, "ஏகாதசி மகத்துவம்" என்றும் இதற்கு ஒரு பெயருண்டு. ஜி. எஸ். முனிசாமி நாயுடு, டி.ஜி.செகநாத நாயுடு முதலியோர் நடத்தும் நாடகம் இது. எட்டு காட்சிகளில் அமைந்தது. பாடல்களுக்குரிய சந்தங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 553/1915/IV.

O31,2

கக்கமல்ல கவுடர், என்.டி., சுதிகாறட்டி

1932. i. கிரிஜி மாதி நாடகம் : முதற் பதிப்பு ; ii. என். டி. கக்க மல்ல கவுடர்; நியூ அலிபன் பிரஸ், கூனூர் ; iii. ஆகஸ்டு, 1914 ; iv. செ.மூ.ப. 21 ; v. 21×13 செ.மீ. ; vi. 0—4—0 ; vii. கணவன் இறந்த துன்பம் தாங்காமல் உடன்கட்டையேறிய படுகர் நாட்டுக் கற்பரசி ஒருத்தியின் கதையை விளக்கும் நாடகம். படுகர் மொழியிலமைந்த இந்த நாடகத்தைத் தமிழ் எழுத்துக்களில் அமைத்துக் கொடுத்துள்ளனர். இந்நாடகம் பாடல்களில் அமைந்துள்ளது. viii. 865/1914/III.

O31,2

**1933.** i. **கம்ச சம்மார நாடகம் :** முதற் பதிப்பு ; ii. கை. சு. துரைசாமி முதலியார்; பால விர்த்தி போதிநி பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1911 ; iv. உ.ப.+செ. மூ. ப. 76 ; v. 21×13 செ.மீ. ; vi. 0—5—0 ; vii. உக்கிரசேனன் என்னும் அரசனின் மகனாகிய கம்சன் கொடுங்கோலனாய், தீமை பல செய்ததும், அவனை அவன் மருமகனாகிய கண்ணன் கொன்றதும் ஆகிய பாகவதச் செய்திகளைத் துணையாகக் கொண்டது இந்நாடகம். ஒரு பழைய ஏட்டுச் சுவடியைக் கொண்டு ஆய்ந்து அச்சிடப்பட்டது இந்நூல் ; viii. 582/1911/IV.

O31,2

**கணபதி பிள்ளை தி. சு., செவ்வாய்பேட்டை, சேலம்**

1934. i. புதிய விரத பூஷணன் சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. முனிசாமி நாயுடு ; பால விர்த்தி போதினி பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1912 ; iv. உ.ப.+செ.மூ.ப. 72 ; v. 22×14 செ. மீ. ; vi. 0—8—0 ; vii. மணமக்கள் எதிர்காலத்தில் தமக்கு வர இருக்கும் நன்மைகளை எண்ணுவது பற்றி விளக்கும் சமூக நாடகம். கிராமங்களில் அம்மனுக்குப் பூசை போடல், சோதிடர்களிடம் ஆரூடம் பார்த்தல், போன்ற வழக்கங்களிலுள்ள நம்பிக்கையை எடுத்துக்காட்டுகிறது. "ஆலந்தூர் ஒரிஜினல் இந்து டிராமாடிக் கம்பெனியில்" பாடப்படுகிற இசைப்பாடல்கள் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன ; viii. 82/1912/I.

O31,2

**கந்தசாமி பிள்ளை, கவிராஜ**

1935. i. சற்குண சாவித்திரி அல்லது கற்பின் வெற்றி ; ii. வித்வ சிரோமணி விலாசம் பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப.+செ.மூ.ப. 42 ; v. 22×14 செ.மீ. ; vi. 0—2—0; vii. சாவித்திரியின் கற்பின் வலிமையை விளக்கும் புராண நாடகம். உரையும் பாட்டும் விரவிய நடையில் அமைந்தது ; viii. 335/1915/III.

O31,2

1936. i. மதி வதன கோகிலா : முதற் பதிப்பு ; ii. கவிராஜ கந்தசாமி பிள்ளை, மதுரை மாநகரம் ; கவிப் பிரகாச கணேஸானந்த பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1913 ; iv. உ. ப. 54 ; v. 21×14 செ.மீ. ; vi. 0—4—0 ; vii. இது மூன்று அங்கங்களைக் கொண்ட ஒரு நாடகம். ஓர் இளவரசி

தனது துணிவினலும் அறிவுக் கூர்மையாலும் தன் கணவனைப் பல துன்பங்களிலிருந்து மீட்ட வரலாற்றை விளக்குவது. பாடல்களும் அங்கங்கே வருகின்றன; viii. 1015/1913/III.

O31,2

**கல்யாணராமய்யர், ஷி. எஸ்.**

1937. i. அல்லியரசி : முதற் பதிப்பு ; ii. ஷி. எஸ். கல்யாண ராமய்யர் ; ஸௌத் இண்டியன் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1912 ; iv. உ. ப. + செ. மூ. ப. 79 ; v. 19×13 செ.மீ. ; vi. 0—4—0 ; vii. புகழேந்திப் புலவரால் அம்மானைப் பாடலாகப் பாடப்பெற்ற அல்லியரசாணி மாலைப் போக்கைத் தழுவி எழுதப்பெற்றது. இக்கதை நகைச்சுவைகள் நிறைந்து, மக்களுக்கு நல்லறிவு புகட்டக் கூடியயதாகவும் இருக்கிறது. நான்கு அங்கங்கள் கொண்டது இந் நாடகம். ஒவ்வொரு அங்கத்திலும் களப்பாகுபாடும் அவற்றில் இடம், உறுப்பினர் பற்றிய குறிப்புக்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஒரு சில பாடல்களும் இடையிடையே உள்ளன; viii. 6/1912/IV.

O31,2

1938. i. மானவதி அல்லது நல்லதங்காள் : முதற் பதிப்பு ; ii. ஷி. எஸ். கல்யாண ராமய்யர் ; கபாலி பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1913 ; iv. உ.ப. 103 ; v. 18×13 செ.மீ. ; vi. 0—6—0 ; vii. "நாத்தியின் கொடுமைக்கு ஆளாகித் தனது எழு குழந்தைகளுடன் உயிர்துறந்த நல்ல தங்காள் வரலாறே இந் நாடகப் பொருள். இயற்கைக்கும் நாடக இலக்கணத்திற்கும் பொருந்தச் சில பகுதிகளை மறைத்தும் தேவையற்ற சில பகுதிகளை நீக்கியும் அமைக்கப்பெற்றது. நாடக உறுப்பினர் பற்றிய குறிப்பு முதலில் உள்ளது. இடையிடையே இசைப் பாடல்களும் விரவி வருகின்றன. நான்கு அங்கங்கள் கொண்டது இந்நாடகம் ; viii. 718/1913/III.

O31,2

1939. i. வல்லி பரிணயம் ; முதற் பதிப்பு ; ii. ஸ்ரீ பால சுப்ரமணியன் அண்டு கம்பெனியார், சென்னை ; சுதேசி மித்திரன் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1913 ; iv. உ.ப. 4+133 ; v. 18×12 செ.மீ. ; vi. 0—8—0 ; vii. முருகன் வள்ளியைத் திருமணம் செய்துகொண்ட புராண வரலாற்றை உரைப்பது இந் நாடகம். இவ்வரலாற்றை ஒட்டிய முறையில் நாடகம் சிந்து, கும்மி அமைப்பில்

வேறு நூல்கள் உள்ளனவென்றும், எட்டையபுரம் மன்னர் “வல்லி பரதம்” என்னும் நூலில் எழுதியிருப்பதையும் முகவுரையில் குறித்துள்ளார். ஐந்து அங்கங்கள் கொண்டது. இடையிடையே பொருத்தமான இசைப் பாடல்கள் விரவி வருகின்றன. நாடக உறுப்பினர்களின் குறிப்பு, நூல் முதலில் உள்ளது. மேலும், “மதாலஸா”, “அல்லி அரசி”, “கோபிசந்தன்” என்னும் நாடகங்களை அச்சிட்டு வருதலையும் இவ்வாசிரியர் முகவுரையில் குறித்துள்ளார்; viii. 718/1913/I.

O31,2

**கன்னைய நாயுடு, வே.**

1940. i. ருக்மாங்கத மஹாராஜன் சரித்திர வசன காவியம்; ii. ப. கோபால சாமி நாயுடு; கேம்பிரிட்ஜ் அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1914; iv. உ.ப. 77; v. 22×15 செ.மீ.; vi. 0—8—0; vii. இந்நூல் இல்லற வாழ்க்கையிலிருந்தே நோன்பைக் கைக்கொண்டு வீடுபேறு அடைந்த “ருக்மாங்கத” மன்னனின் கதையைக் கூறுகிறது. ஏகாதசி நோன்பின் சிறப்பை உரைப்பது இவ்வரலாறு; viii. 323/1915/I.

O31,2

**கிருஷ்ணசாமி ஐயர், அ.**

1941. i. பீஷ்மர் பிரம்ம சர்யம்: முதற் பதிப்பு; ii. டௌடன் கம்பெனியார், சென்னை; பியர்லெஸ் பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1912; iv. உ.ப. 1+166; v. 18×13 செ.மீ.; vi. 0—8—0; vii. இது பாரதத்தில் வரும் ஒரு முக்கிய நிகழ்ச்சியைப் பற்றியது. வீடுமர் தம் தந்தையின் மகிழ்ச்சிக்காகத் தாம் என்றும் பிரம்மசரிய நோன்பை மேற்கொண்ட சூளுரை நிகழ்ச்சியைப் பொருளாகக் கொண்டது. இது ஐந்து அங்கங்கள் கொண்ட நாடகம்; viii. 332/1912/IV.

O31,2

**கிருஷ்ணசாமிக் கவுண்டர், வரகூர்**

1942. i. காண்டாவன தகன நாடகம்: முதற் பதிப்பு; ii. முனிசாமி முதலியார், சூளை, சென்னை; தனலக்ஷ்மி நர்த்தன அச்சியந்திர சாலை, சென்னை; iii. ஏப்ரல், 1914; iv. உ.ப. + செ.மு.ப. 72; v. 21×14 செ.மீ.; vi. 0—8—0; vii. தீக்கடவுளின் வேண்டுதலால் அருச்சுனன் காண்டவ வனத்தை எரித்தொழித்த நிகழ்ச்சி பற்றியது. இந்தக் காட்டை எரிக்கக் கண்ணன் உடன் இருந்து உதவி செய்கிறான்.

தீக்கடவுள் அருச்சுனனின் செய்க்கைக்கு மகிழ்ந்து அருச்சுன னுக்கு ஐந்து வரங்களையும் கொடுக்கிறான். பாரதத்தில் வரும் காண்டவ வன சுருக்கத்தின் நிகழ்ச்சியே நாடகமாகப் பாட்டும், உரையும் விரவிய நடையில் எழுதப்பட்டுள்ளது. இது மேல் பட்டாம்பாக்கம் நாடகக் கம்பெனியாரால் அந்நாளில் நடத்தப் பெற்று வந்த நாடகமாகும்; viii. 361/1914/II.

O31,2

**கிருஷ்ணசாமி செட்டி, டி.எம்.**

1943. i. கமல மணிமாரன்: முதற் பதிப்பு; ii. டி. எம். கிருஷ்ணசாமி, சென்னை; கபாலி பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1914; iv. உ. ப. 63; v. 22×14 செ.மீ.; vi. 0–8–0; vii. இது மூன்று அங்கங்களைக் கொண்ட நாடகம். ஓர் அரசனின் காதலி, இளவரசனை அழித்து அவனைப் பட்டத்துக்கு வராமல் செய்யச் சதி செய்து, இறுதியில் தோல்வியடையும் கதையை விளக்கும் நாடக நூல். இதன் முதற்பகுதியில் நாடக உறுப்பினர்களின் பட்டியல் ஒன்றும் தரப் பட்டிருக்கிறது; viii. 841/1914/IV.

O31,2

**கிருஷ்ணசாமி நாயக்கர், சாலே**

**1944.** i. அர்ச்சுனன் திருக்கல்யாணமென்னும் சுபத்திரை மாலையிடு நாடகம்: முதற் பதிப்பு; ii. முனுசாமி முதலியார்; தனலக்ஷ்மி நர்த்தன அச்சியந்திரசாலை, சென்னை; iii. நவம்பர், 1911; iv. உ.ப. + செ.மூ.ப. 68; v. 21×13 செ.மீ.; vi. 0–5–0; vii. கண்ணனின் தங்கையாகிய சுபத்திரையை அருச்சுனன் திருமணம் செய்து கொண்ட நிகழ்ச்சியை விவரிக்கும் நாடகம். உரைநடையும் இசைப் பாடல்களுமாக அமைந்தது; viii. 872/1911/IV.

O31,2

**1945.** i. அரக்கு மாளிகை நாடகம்: முதற் பதிப்பு; ii. முனி சாமி முதலியார், சூளை; தனலக்ஷ்மி நர்த்தன அச்சியந்திர சாலை, சென்னை; iii. ஜூன், 1911; iv. உ.ப.+செ.மூ.ப. 80; v. 21×13 செ.மீ.; vi. 0–5–0; vii. பாண்டவர் ஐவரும் அரக்கு மாளிகையில் வாழ்ந்த காலத்து, அம்மாளிகை கௌரவர்கள் சூழ்ச்சியினால் தீப்பற்றி எரிந்த நிகழ்ச்சியை நாடகமாகத் தருவது, பாரத மூலத்தை அடியொற்றியது; viii. 725/1911/II.

O31,2

1946. i. அனந்த விரத நோன்பு நாடகம்: முதற் பதிப்பு; ii. ஆர். வரதய்ய நாயுடு; ஸ்ரீவரலட்சுமி விலாச அச்சுக் கூடம், நெல்லிக்குப்பம்; iii. ஆகஸ்ட், 1912; iv. உ.ப.+ செ.மூ.ப. 54; v. 21×14 செ.மீ.; vi. 0–5–0; vii. சீலா தேவி என்பாள் மேற்கொண்டு வந்த அனந்த பத்மநாப சுவாமி நோன்பின் பெருமையைக் கூறுவது இந் நாடகம். இது உரைநடையும், இசைப்பாடல்களும், விருத்தங்களும் விரவிய நடையில் உள்ளது. viii. 687/1912/III.

O31,2

1947. i. சயிந்தவன் சண்டை நாடகம்: முதற் பதிப்பு; ii. முனி சாமி முதலியார், சூளை; தனலக்ஷ்மி நர்த்தன அச்சியந்திர சாலை, சென்னை; iii. நவம்பர், 1911; iv. உ.ப.+செ.மூ.ப. 112; v. 21×13 செ.மீ.; vi. 0–5–0; vii. பாரதப் போரின் பதினான்காம் நாள் போராகிய சயிந்தவன் சண்டை யைப் பற்றியது இந் நாடகம்; viii. 871/1911/IV.

O31,2

1948. i. சீதா கலியாணமென்னும் தாடகை சம்மார நாடகம்: முதற் பதிப்பு; ii. முனிசாமி முதலியார், சூளை; மதறாஸ் டைமண்ட் பிரஸ், சென்னை; iii. மே, 1911; iv. உ.ப. +செ.மூ.ப. 72; v. 21×13 செ.மீ.; vi. 0–5–0; vii. இராம இலக்குமணர்கள் விசுவாமித்திரர் யாகத்தைக் காக்கக காட்டிற்குச் சென்றதும், அங்கு இடையூறு விளைத்த தாடகை, சுபாகு, மாரீசன் முதலியோருடன் போர் செய்து தாடகையைக் கொன்றதும், பின் முனிவருடன் மிதிலைக்குச் சென்று சிவவில்லை வளைத்துச் சீதையைத் திரு மணம் செய்ததுமான நிகழ்ச்சிகளை விவரிக்கும் நாடகம்; viii. 723/1911/II.

O31,2

1949. i. சீதை சதமுக ராவண சம்மாரமென்னும் சகஸ்திர கண்டராவண நாடகம்: முதற் பதிப்பு; ii. முனிசாமி முதலியார், சூளை; தனலக்ஷ்மி நர்த்தன அச்சியந்திர சாலை, சென்னை; iii. நவம்பர், 1911; iv. உ.ப.+செ.மூ. ப. 84; v. 21×14 செ.மீ.; vi. 0–5–0; vii. கீழ் உலகில்

மாயாபுரி பட்டணத்தில் வாழ்ந்த சகத்திரகண்ட இராவணனை இராமன் அழித்து அவன் பேரனுக்குப் பட்டம் சூட்டிய நிகழ்ச்சியை வெளியிடுவது இந்நாடகம். உரை நடையும் இசைப் பாடல்களுமாகச் செய்யப் பெற்றது. viii. 870/1911/IV.

O31,2

**இருஷ்ணசாமி நாயுடு, வே. பெ., ஆக்கூர்**

**1950.** i. சுந்தர காண்ட நாடகம்: திருந்திய பதிப்பு; ii. ஆ. கிருஷ்ணசாமி முதலியார், குன்னத்தூர்; வித்வ சிரோன்மணி அச்சுக்கூடம், சென்னை; iii. பிப்ரவரி, 1914; iv. செ.மூ.ப. 40; v. 21×14 செ.மீ.; vi. 0–4–0; vii. அனுமான் கடலைத் தாண்டிச் சென்று இலங்கையில் சீதையைக் கண்டதும், இராமனது கணையாழியைக் கொடுத்ததும், அவளிடமிருந்து சூடாமணியைப் பெற்றதும் ஆகிய நிகழ்ச்சிகளை விவரிப்பது. அதோடு இராவணன் அனுமனது வாலில் நெருப்பை இட அனுமன் இலங்கையையே சுட்டெரித்த வீரச் செயலை விளக்குவது இந்நூல். அதனால் இதற்கு 'ஆஞ்சநேயர் இலங்கா தகனம்' என்றும் பெயர் உண்டு. இது முந்திய வெளியீட்டிலிருந்து திருத்தம் பெற்று வெளிவருவதாகும்; இராமாயணத்தின் சுந்தர காண்ட நிகழ்ச்சிகளை உரைக்கும் நாடக நூல் இது. இசைப் பாடல்களும், விருத்தக் கவிகளும் கொண்டு உரைநடையும் கலந்து அமைந்தது. இசைப் பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புக்கள் அமைந்துள்ளன; viii. 637/1914/I.

O31,2

**1951.** i. சுந்தர காண்டம்: முதற் பதிப்பு; ii ஐ. பே. கன்னியப்ப நாயகர், சென்னை; பெரிய நாயகியம்மன் அச்சுக்கூடம், சென்னை; iii. பிப்ரவரி, 1914; iv. செ.மூ.ப. 44; v. 21×14 செ.மீ.; vi. 0–4–0; vii. ............ viii. 634/1914/I.

O31,2

**இருஷ்ணசாமி நாயுடு, நா.**

**1952.** i. தேசிங்கு ராஜன் சரித்திரம்: முதற்பதிப்பு; ii. மு கிருஷ்ண பிள்ளை, மதுரை,; ஸ்ரீகிருஷ்ண விலாஸ் அச்சியந்திர சாலை, திருமங்கலம்; iii. அக்டோபர், 1914; iv. செ.மூ.ப. 44; v. 23×15 செ.மீ.; vi. 0–4–0; vii. தென்னுற்காடு

மாவட்டத்தைச் சேர்ந்த செஞ்சிக் கோட்டையை ஆண்டு வந்த தேசிங்கு மன்னனின் வீரமிக்க வரலாற்றை இந்நூல் நாடக வடிவில் கூறுகிறது. இந் நாடகத்தை அந்நாளில் நடித்து வந்தவர் பெயர்களும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 391/1914/IV.

O31,2

**கிருஷ்ணசாமிப் பாவலர், டி., சதாவதானம்**

**1953.** i. தனபதி : முதற்பதிப்பு ; ii. பி. வி. கண்ணன் அண்ட் கம்பனி ; சென்னை டைமண்டு பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1914 ; iv. உ.ப. 26 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. இது ஐந்து களங்களைக் கொண்ட ஒரு நாடகம். ஒருவனின் நடத்தை அவனின் தாய் தந்தையரைப் பொறுத்தது என்பதை விளக்கும் நாடகம். நாடக உறுப்பினர்களின் பட்டியலொன்றும் இடம் பெற்றுள்ளது. ஒவ்வொரு களத்தின் தொடக்கத்திலும் இடம், காலம், உறுப்பினர்கள்பற்றிய குறிப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 58/1914/IV.

O31,2

**1954.** i. பிரகலாதன் ; ii. பி. வி. கண்ணன் அண்டு கம்பெனி, சென்னை ; மதராஸ் டைமண்டு பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப.+செ.மூ.ப. 71 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. திருமாலின் அடியாரான பிரகலாதனின் கதை நாடக வடிவில் அமைக்கப்பட்டுள்ளது. தெருக்கூத்தாடும் கூட்டத்தார் நடித்த பிரகலாதன் நாடகத்தை ஆசிரியர் பார்த்து இந்நூல் எழுதி உள்ளார். ஆன்றோர் செய்யுட்களை அங்கங்கே தொடுத்திருப்பதோடு, தாமும் புதிதாகச் சில பாட்டுக்களை பாடியுள்ளார். ஆசிரியர் பாடிய பாட்டுகள் தெலுங்கில் சீசபத்தியம் என்று சொல்லும் பாவின் சந்தத்திற்கேற்ப அமைந்தவை. மூன்று அங்கங்கள் கொண்டது. களம், காலம், உறுப்பினர் என்னும் குறிப்புக்கள் காட்சிதோறும் தரப்பட்டுள்ளன. நாடக உறுப்பினர்களைப் பற்றிய பொதுக் குறிப்பு நூலின் தொடக்கத்திலும் தரப்பட்டிருக்கிறது. ப. சம்பந்த முதலியாருக்கு இந்நூலை உரிமை செய்துள்ளார் ஆசிரியர். viii. 1017/1915/IV.

O31,2

**கிருஷ்ணராவ், எம். பி.**

**1955.** i. ஸ்ரீ கிருஷ்ணலீலா; ii. கிருஷ்ணசாமி ராவ்; பி. ஆர். ராம அய்யர் அண்டு கோ, சென்னை; iii. 1915; iv. உ.ப. 25 ; v. 19×12 செ.மீ.; vi. 0–2–0; vii. பாகவதத்தில் கண்ணனுடைய பிறப்பிலிருந்து ருக்குமணி, சத்தியபாமை திருமணம்

வரையிலுள்ள பகுதி நாடக முறையில் விளக்கப்பட்டுள்ளது. எட்டுக் களங்களில் இந்நாடகம் அமைக்கப்பட்டுள்ளது; viii. 805/1915/IV.

O31,2

**கிருஷ்ணமாச்சாரியார், பி.**

**1956.** i. சத்திய வல்லீயம்; முதற் பதிப்பு; ii. பி. கிருஷ்ணமாச்சாரியர், காஞ்சிபுரம், ஸ்ரீ காஞ்சி பூஷண அச்சுக்கூடம், காஞ்சீபுரம்; iii. ஜூன், 1914; iv. உ.ப. 76; v. 21×14 செ.மீ.; vi. 0-6-0; vii. ஓர் இளவரசி தான் விரும்பிய காதலனை மணக்கும் பொருட்டுப் பட்ட இன்னல்களை விரிக்கும் ஐந்து அங்கங்களைக் கொண்ட புதிய நாடகம். கதைச் சூழலுக்கு ஏற்ப பல நூல் மேற்கோள் பாடல்களை எடுத்து ஆசிரியர் விடுத்துள்ளார். மேலும், நாடகத்திற்குச் சிறப்பு உறுப்பாகிய தமிழிசைப் பாட்டுகள் இன்றியமையா இடங்களில் அமைக்கப்பட்டுள்ளன. நாடக உறுப்பினர்கள் பற்றிய குறிப்பும் இந்நூலில் சேர்க்கப்பெற்றுள்ளன; viii. 951/1914/II.

O31,2

**கிருஷ்ணமாச்சாரி, பி. ஆர்**

**1957.** i. காஞ்சனவல்லி; முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜனவரி 1914; iv. உ.ப. 120; v. 18×13 செ.மீ.; vi. 0-5-0; vii. எழு அங்கங்கள் கொண்டது. ஒரு பெண் பல துன்பங்களுக்கு ஆளாகி இறுதியில் கணவன்பாலுள்ள பற்றாலும், தன் திறமையாலும் அவற்றிலிருந்து விடுதலை அடைந்த விதத்தை இந்நூல் விவரிக்கின்றது; viii. 564/1914/I.

O31,2

**கோபாலன் நாயுடு, ஏ. எஸ்.**

**1958.** i. சதாரம் சரித்திரத்தில் மயோன் பாகம்: முதல் பதிப்பு; ii. ஆர். பாலகிருஷ்ண அய்யர்; சென்னை பென்ரோஸ் அண்டு கம்பெனி; iii. 1915; iv. உ.ப. 34; v. 18×13; செ.மீ.; vi. 0-4-0; vii. காமவெறி கொண்ட இளவரசன் ஒருவன் அவனால் கற்பழிக்கப்படவிருந்த ஒரு கற்பரசியால் எப்படி திருந்தினான் என்பதை விளக்குவது. "சதாரம்" நாடகத்தில் வரும் இம் மயோன் பாகத்தை ஆன்றோர்கள் இயற்றிய நூல்களை தழுவியும், டி. டி. சங்கரதாச சுவாமி, உடுமலைப்பேட்டை சரபம் முத்துசாமிக் கவிராயர் என்பவர்களால் இயற்றப்பட்ட இசைப் பாடல்களையும் சேர்த்து இந்நூலை ஆக்கியுள்ளார்; viii. 448/1915/III.

O31,2

**கோபால் அய்யங்கார், வ. (மொ. து.)**

**1959.** i. ஹிமார் ஜுனே; முதற் பதிப்பு; ii. சி. எஸ். சிவராம் பட்டர் காரியகாரர்; இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1912; iv. உ.ப. 6+113; v. 24×17 செ.மீ.; v. 0–8–0; vii. ஆங்கில மொழியில் ஷேக்ஸ்பியர் எழுதிய "ஸிம்பலேன்" என்ற நாடகத்தின் தமிழ் அமைப்பு 12 அத்தியாயங்களைக் கொண்டது. ஆங்கிலப் பெயர்களை ஒத்த ஒலியுடைய இந்தியப் பெயர்களாக அமைத்துள்ளார் ; viii. 877/1912/II.

O31,2

**கோபாலகிருஷ்ண பிள்ளை, ஸி., நாகை**

**1960.** i. கண்ணகி (அல்லது) காதலிற் சிறந்த காரிகை; முதற் பதிப்பு; ii. கெ. ஆர். நடேச அய்யர், சென்னை; பி. ஆர். ராமா அய்யர் அண்டு கோ., சென்னை, iii. மார்ச், 1911; iv. உ.ப. 8+223; v. 18×13 செ.மீ.; vi. 0–12–0; vii. சிலப்பதி காரத்தைப் பின்பற்றி அமைந்தது இக்கண்ணகி நாடகம். இந்து ராயல் டிராமெடிக் கம்பெனி உரிமையாளர் திரு. பி. எஸ். ரங்கசாமி அய்யங்கார் வேண்டுகோள்படி கம்பெனியில் நடிப்ப தற்காக எழுதப் பெற்றது. விவேக சிந்தாமணிப் பத்திரிகையில் பகுதி பகுதியாக வெளி வந்தது. விவேக சிந்தாமணியில் வந்திருந்த செய்திகளை அப்படியே வெளியிடாமல் பல மாறுதல் கள் செய்தும் இடையிடையே புதுமையாகச் சில காட்சிகளைச் சேர்த்தும் வெளியிடப் பெற்றதாகும். viii. 709/1911/I.

O31,2

**சங்கிலியாப் பிள்ளை**

**1961.** i. அரிச்சந்திர நாடகம்: முதற் பதிப்பு; ii. பி. என். சிதம் பர முதலியார், சென்னை; வித்யாரத்நாகர அச்சுக்கூடம், குயப் பேட்டை, சென்னை; iii. மே, 1911; iv. உ.ப. + செ.மூ.எ. 572; v. 22×14 செ.மீ.; vi. 1–8–0; vii. உண்மைக்கு உறைவிட மாய் விளங்கிய அரிச்சந்திரன் வரலாற்று நாடகம், இசைப்பாடல் களும் விருத்தப் பாடல்களும், உரை நடையுமாக அமைந்தது. இந்நாடகத்தை நடத்தி வருகின்றவர்கள் பெயர்களும் இசை அமைப்பாளர்கள் முதலியவர்களுடைய பெயர்களும் முதலில் கொடுக்கப்பட்டுள்ளன. அரிச்சந்திரனைப் பற்றி எழுதிய வேறு சில நாடக நூல்களின் பெயர்களைப் பற்றிய குறிப்பும் இதில் உள்ளது. நீதி நெறி அரிச்சந்திர நாடகம் என்றும் இது வழங்கும் ? viii. 305/1911/II.

O31.2

**சம்பந்த செட்டி, ஜி. வி.**

**1962.** i. உத்தரை : முதற் பதிப்பு; ii. ஜி. வி. சம்பந்த செட்டி, கபாலி பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1913;iv . உ.ப. 68; v. 21×14 செ.மீ.; vi. 0–8—0; vii. விராட மன்னன் மகள் உத்தரைக்கும் அருச்சுனன் மகன் அபிமன்யூக்கும் நடந்த திருமணத்தைப் பற்றியது இந்நாடகம். இது பாரதத்தில் வருகின்ற நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டது. மூன்று அங்கங்கள் கொண்டது; viii. 545/1913/III. O31,2

**1963.** i. கீசகன்: முதற் பதிப்பு; ii. எஸ். மூர்த்தி அண்டு கம்பெனி, சென்னை: கபாலி அச்சியந்திரசாலை, சென்னை; iii. டிசம்பர், 1912; iv. உ.ப. 3+48; v. 22×14 செ.மீ. vi. 0–8–0; vii. பாண்டவர்கள் கரந்துறை வாழ்விற்காக விராடம் சென் றிருந்த காலத்தில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி இது. பாஞ்சாலி யைக் கற்பழிக்க எண்ணிய கீசகனை வீமன் மற்போரில் கொன்றதாகிய வீர வரலாறு மூன்று அங்கங்கள் கொண்டது. நாடக உறுப்பினர்களைப் பற்றிய குறிப்பும் முதலில் உள்ளது. மோசூர் சண்முக முதலியார் இதற்குச் சாத்துக் கவி எழுதி யுள்ளார். இவ்வாசிரியர் இதற்கு முன் சாவித்திரி வரலாற்றை நாடகமாக எழுதியுள்ளார் என்றும் அடுத்து பாஞ்சாலி சரி த்தை எழுதியதாகவும் தெரிகிறது; viii. 696/1912/IV.

O31,2

**1964.** i. சுனந்தனி: முதல் பதிப்பு; ii. ஜி. வி. சம்பந்த செட்டி, சென்னை; கபாலி பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1914; iv. உ.ப. 94; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0; vii. "கேடுவரும் பின்னே மதிகெட்டு வரும் முன்னே", "கெடுவான் கேடு நினைப் பான்" போன்ற ஆன்றோர் வாக்குகளை விளக்கும் நாடகம். நாடக உறுப்பினர் பட்டியல் ஒன்றும் முதலில் தரப்பட்டுள்ளது. கோலாசலம் சீனிவாச ராவ் என்பார் தெலுங்கு மொழியில் எழுதிய இதே பெயருள்ள நூலினின்றும் மொழி பெயர்க்கப் பட்டது. ஐந்து அங்கங்களைக் கொண்ட நாடகம்; viii 901/1914/IV.

O31,2

**1965.** i. ஸாவித்ரி : முதற் பதிப்பு; ii. எஸ். மூர்த்தி அண்டு கோ, சென்னை; கபாலி அச்சுயந்திர சாலை, சென்னை; iii. பிப்ரவரி, 1912; iv. உ.ப. 2+76; v. 22×14 செ.மீ.; vi. 0–8–0 ; vii. கற்புடைய மாதரின் ஆற்றலை விளக்கும் வரலாருகிய சத்ய வந்தன் சாவித்திரியைப் பற்றிய பழங்கதையை நாடகமாகத் தருவது. மூன்று அங்கங்கள் கொண்டது. நாடக உறுப்பினர் பற்றிய குறிப்பு முதலில் உள்ளது. ஆசிரியர் தமது அருமைத் தாயார் சின்னம்மாளின் நினைவாக இதனை வெளியிட்டுள்ளார்

viii. 522/1912/I.

**சம்பந்த முதலியார், ப.**

**1966.** i. அமலாதித்யன் அல்லது குர்ஜரத்து அரசிளங்குமரன் : இரண்டாம் பதிப்பு ; ii. ப. சம்பந்த முதலியார், சென்னை; கபாலி அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1913; iv. உ. ப. 2+178 ; v. 22×14 செ. மீ. ; vi. 1—0—0 ; vii. இது செகப்பிரியர் ஆங்கிலத்தில் எழுதிய "ஆம்லெட்", நாடகத்தையொட்டி எழுதப்பட்டது. ஐந்து அங்கங்கள் கொண்டது. பாடல்கள் சிலவும் இடையிடையே உள்ளன; viii. 554/1913/IV.

O31,2

**1967.** i. காலவரிஷி : இரண்டாம் பதிப்பு ; ii. ப. சம்பந்த முதலியார் ; எஸ். மூர்த்தி அண்டு கம்பெனி, சென்னை ; iii. அக்டோபர், 1914 ; iv. உ. ப. 60; v. 22×14 செ. மீ. ; vi. 0—8—0 ; vii. பழைய புராணக் கதையைத் தழுவி எழுதப் பெற்ற நாடகம். இது மூன்று அங்கங்களைக் கொண்டது. நாடக உறுப்பினர் பட்டியல் ஒன்றும் முதலில் தரப் பெற்றுள்ளது; viii. 343/1914/IV.

O31,2

**1968.** i. சாரங்கதரன். : இரண்டாம் பதிப்பு ; ii. ப. சம்பந்த முதலியார், பம்மல் ; பி. ஆர். ராம அய்யர் அண்டு கம்பெனி, சென்னை ; iii. ஜுலை, 1912 ; iv. உ. ப. 96 ; v. 22×14 செ.மீ. ; vi. 0—8—0 ; vii. சாரங்கதரன் சித்திராங்கி வரலாற்றை உரைக்கும் நாடகம். மூன்று அங்கங்களால் ஆனது. நாடக உறுப்பினர் பற்றிய குறிப்பு, முகப்பில் தரப்பட்டி டிருக்கிறது. viii. 72/1912/III.

O31,2

**1969.** i. சிம்ஹளநாதன் : முதல் பதிப்பு ; ii. ப. சம்பந்த முதலியார் ; பியர்லெஸ் பிரஸ், மதருஸ் ; iii. ஆகஸ்டு, 1914 ; iv. உ. ப. 167 ; v. 21×14 செ. மீ. ; vi. 0—12—0 ; vii. இது செகப்பிரியரின் சிம்பலின் (Cymbeline) எனும் நாடகத்தின் தழுவலாகும். இதுவும் செகப்பிரியரின் நாடக அமைப்பு முறையை ஒட்டியே படைக்கப்பட்டிருக்கிறது. ஐந்து அங்கங்களைக் கொண்டது. ஒவ்வோர் அங்கமும் பல காட்சிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. நாடக மாந்தர் பெயர் முத லியன தமிழ் நாட்டு மரபை ஒட்டி அமைக்கப்பட்டுள்ளன. நாடக உறுப்பினர் பற்றிய குறிப்பும் முதலில் தரப்பட்டிருக் கிறது. viii. 799/1914/III.

O31,2

1970. i. சிறுத் தொண்டர்: முதற் பதிப்பு; ii. டௌடன் கம்பெனி, சென்னை; பியர்லஸ் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1914; iv. உ. ப. 45; v. 22×14 செ. மீ.; vi. 0—8—0; vii. சைவசமயத்தைச் சார்ந்த சிறுத் தொண்டரின் கதையை ஓர் அங்கத்தில் நாடகமாகத் தருகிறது இந்நூல். நாடகம் மாந்தர் பட்டியல் ஒன்று முதலில் தரப் பெற்றிருக்கிறது. பாடல்கள் சிலவும் இடையிடையே உள்ளன; viii. 547/1914/IV.

O31,2

1971. i. நற்குல தெய்வம்: முதற் பதிப்பு; ii. டௌடன் கம்பெனியார், சென்னை; பியர்லஸ் பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1911; iv. உ. ப. 2×55; v. 22×14 செ. மீ.; vi. 0—8—0; vii. இது நான்கு அங்கங்கள் கொண்ட ஒரு புதிய நாடகம். நாடு கடத்தப்பட்ட குடும்பங்களைச் சேர்ந்த பாஸ்கரனுக்கும் வேதவதிக்கும் நடைப்பெற்ற திருமண நிகழ்ச்சி பற்றிக் கூறுவது. இடையிடையே சிற்சில பாடல்களும் உள்ளன. viii; 493/1911/IV.

O31,2

1972. i. புஷ்ப வல்லி: முதற் பதிப்பு; ii. எஸ். மூர்த்தி அண்டு கம்பெனி; கபாலி பிரஸ், சென்னை; iii. மார்ச், 1915; iv. உ. ப. 93; v. 22×14 செ. மீ.; vi. 0—12—0; vii. ஒரு பெண்ணின் கற்பின் வன்மையை விளக்கும் மூன்று அங்கங்களைக் கொண்ட நாடகம். நாடக மாந்தர்களைப் பற்றிய குறிப்பு நூலின் முதற்கண் உளது. ஒவ்வொரு காட்சித் தொடக்கத்திலும் நிகழிடமும் உறுப்பினர் விளக்கமும் கொடுக்கப்பட்டுள்ளன; viii. 927/1915/I.

O31,2

1973. i. பொன் விலங்குகள்: முதற் பதிப்பு; ii. சம்பந்த முதலியார்; பியர்லஸ் அச்சுக்கூடம், சென்னை; iii. ஜூலை, 1911; iv. உ. ப. 2+82; v. 22×14 செ. மீ.; vi. 0-8-0 vii. நவீன வாழ்க்கையைச் சித்தரிக்கும் ஒரு சமூக நாடகம். மூன்று அங்கங்கள் கொண்டது. நாடக மாந்தர்களைப் பற்றிய குறிப்பு நூல் முகப்பில் உள்ளது; viii. 340/1911/II

O31,2

1974. i. மனோகரா: மூன்றும் பதிப்பு; ii. எஸ். மூர்த்தி அண்டு கம்பெனி; கபாலி பிரஸ், சென்னை; iii. 1915; iv. உ. ப. 171; v. 22×14 செ. மீ.; vi. 0—12—0; vii. மாசற்ற நடத்தை வெற்றிக்கு அடிகோலும் என்னும் கருத்தை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட நாடகம். ஐந்து அங்கங்கள்

கொண்டது. நாடக மாந்தர்களின் பெயர் விளக்கம், கதை நிகழிடம் பற்றிய குறிப்பு ஆகியவை முதலில் இடம் பெற்றுள் ளன. இவ்வாசிரியர் இயற்றிய நாடகங்களின் பெயர்களும் இந்நூலின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளன; viii. 563/1915/

O31,2

1975. i. மார்க்கண்டேயர் : முதற் பதிப்பு ; ii. ப. சம்பந்த முதலியார், பம்மல் ; பியர்லஸ் பிரஸ், சென்னை ; iii. மே, 1911 ; iv. உ. ப. 2+65 ; v. 22×14 செ. மீ; vi. 0—8—0 ; vii. மார்க்கண்டேயனுக்காகச் சிவபெருமான் யமனைக் காலால் உதைத்து அருள் செய்த புராண வரலாறு.. இது நிகழ்ந்தது திருக்கடவூரில் என்பார். இந்நாடகம் மூன்று அங்கங்கள் கொண்டது. ஒவ்வோர் அங்கத்திலும் சில காட்சிகள் உள்ளன. நாடக மாந்தர்களைப் பற்றிய குறிப்பு நூல் முதலி லும் காட்சிகள் தோறும் தரப்பட்டுள்ளன; viii. 442/1911/II.

O31,2

1976. i. மெய்க்காதல் : முதற் பதிப்பு ; ii. ப. சம்பந்த முதலியார் சென்னை ; கபாலி பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1914 iv. உ. ப. 108 ; v. 22×14 செ. மீ. ; iv. 0—12—0 ; vii. உண்மைக் காதலின் பாதை கரடு முரடானது என்பதை விளக்கும் மூன்று அங்கங்களைக் கொண்ட நாடகம். நாடக உறுப்பினர்களின் பட்டியல் ஒன்றும் தரப்பட்டிருக்கிறது ; 762/1914/IV.

O31,2

1977. i. ரஜ புத்ர வீரன் : முதற் பதிப்பு ; ii. ப. சம்பந்த முதலியார், சென்னை ; பியர்லெஸ் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1915 ; iv. உ. ப. 37 ; v. 21×14 ; vi. 0—8—0 ; vii. இராஜபுதனத்தைச் சார்ந்த சித்தூர் இரண் டாம் முறையாகக் தாக்கப்பட்டதையொட்டிய வரலாற்றுத் தொடர்பான ஓரங்க நாடகம். நூலிறுதியிலும் ஆசிரியர் பயன் படுத்தும் இந்துஸ்தானிச் சொற்களுக்கானப் பொருளைப் பற்றிய பட்டியலொன்று உண்டு. viii. 282/1915/I.

O31,2

1978. i. விரும்பிய விதமே : முதற் பதிப்பு ; ii. சம்பந்த முதலியார், டௌடன் கம்பெனியார், சென்னை ; பியர்லஸ் பிரஸ், சென்னை , iii. ஜனவரி, 1913 ; iv. உ. ப. 2+128 ; v. 21×14 செ. மீ. ; vi. 0—12—0 ; vii. செகப்பிரியர் ஆங்கில மொழியில் எழுதிய " ஆஸ் யு லைக் இட் "

என்னும் நாடகத்தைத் தழுவி எழுதப்பட்டது. ஐந்து அங்கங்கள் கொண்டது. நாடக உறுப்பினர் பற்றிய குறிப்பு முதலில் உள்ளது. ஆசிரியர் எழுதிய மற்ற நாடகங்களின் பெயர்களும் முதலில் கொடுக்கப்பட்டுள்ளன; viii. 213/1913/I.

O31,2

**சாம்பசிவ சாஸ்திரி, என்., ஆழ்வார் திருநகரி**

1979. i. ஜியார்ஜ் சக்கரவர்த்தி மகுடாபிஷேகம்: முதற்பதிப்பு; ii. என். சாம்பசிவ சாஸ்திரி, ஆழ்வார் திருநகரி; சாரதா விலாஸ் பிரஸ், கும்பகோணம்; iii. நவம்பர், 1912; iv. உ.ப. +செ.மூ.ப. 94; v. 18×13 செ.மீ.; vi. 0-8-0; vii. இது ஐந்து அங்கங்கள் கொண்ட ஒரு வடமொழி நாடகம். ஜியார்ஜ் அரசரின் டில்லி முடிசூட்டு விழாவைப் பற்றியது. வடமொழிப் பாடலும் அதற்குத் தமிழில் விளக்கவுரையும் தமிழ் உரை நடையுமாக அமைந்துள்ளது; viii. 634/1912/IV.

O31,2

**சவுரியப்பதாசர். ச. ம.**

1980. i. அர்ச். பிலோமேனம்மாள் நாடகம்: முதற்பதிப்பு; ii. ப. அ. அ. இராஜேந்திரம் பிள்ளை அண்ட் ஆர். எ. டாவ்சன், சென்னை; மெர்குரி பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1913; iv. உ.ப.+செ.மூ.ப. 60; v. 22×14 செ.மீ.; vi. 0-6-0; vii. ரோமன் கத்தோலிக்கச் சமயத்தைச் சார்ந்த பெண் துறவியாகிய பிலோமேனம்மாளின் வரலாற்றை விளக்கும் நாடகம். இசைப்பாட்டும் உரைநடையும் விரவி அமைந்தது. இவர்கள் அச்சிட்டு வரும் வேறு நாடகங்களைப் பற்றிப் பின்பக்க மேல் அட்டையில் உள்ளது; viii. 73/1913/IV.

O31,2

**சாமிநாத சாஸ்திரி, டி.வி. (அம்புளு)**

1981. i. அப்பாசாமி சாஸ்திரி: முதற் பதிப்பு; ii. டி. வி. சாமிநாத சாஸ்திரி; இந்தியா பிரிண்டிங் வொர்க்ஸ், சென்னை; iii. டிசம்பர், 1910; iv. உ.ப. 1+71; v. 18×13 செ.மீ.; vi. 0-4-0; vii. இது ஒரு நகைச்சுவை நாடகம். ஐந்து அங்கங்கள் கொண்டது. ஒவ்வொரு களத்தின் தொடக்கத்திலும், இடம், காலம், நாடக உறுப்பினர் பெயர்கள் தரப்பட்டிருக்கின்றன. முதலில் இந் நாடகமாடுவோர், உறுப்பினர்

பெயர் முழுதும் தரப்பட்டிருக்கிறது. மடங்களிலிருக்கும் தம்பிரான்களின் தீய நடத்தையையும், காவல் துறையினரின் கையூட்டு ஊழலையும் வெளிப்படுத்தும் வகையில் நகைச்சுவையுடன் அமைந்த நாடகமாகும்; viii. 236/1911/I.

O31,2

**சிவசண்முகம் பிள்ளை, எம்.,**

1982. i. மஹா பாரதம் அல்லது பாண்டவ சரிதம்: முதற் பதிப்பு; ii. வெங்கடாசல முதலியார் & நாராயணசாமிப் பிள்ளை; கபாலி பிரஸ், சென்னை; iii. ஜூன், 1914; iv. உ.ப. 123; v. 22×14 செ.மீ.; vi. 0-12-0; vii. பாரதக் கதை நாடகமாக ஐந்து அங்கங்களில் தரப் பெற்றிருக்கிறது. நாடகத்திற்கு ஏற்ற இசைப்பாட்டுகள் ஆங்காங்கே உள்ளன. நாடக உறுப்பினர்களைப் பற்றிய குறிப்பும் தரப்பெற்றிருக்கிறது. "ஆலந்தூர் ஒரிஜினல் இந்து டிராமடிக் கம்பெனி" நடிகர்கள் இருவரின் படங்கள் இடம் பெற்றுள்ளன; viii. 913/1914/II.

O31 2

**சீனிவாசய்யங்கார், டி. வி.**

1983. i. சம்பூர்ண இராமாயணம்: முதற்பதிப்பு; ii. ஆர். எஸ். வெங்கட்டராம ஐயர்; கபாலி பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1914; iv. உ.ப. 76; v. 22×14 செ.மீ.; vi. 0-8-0; vii. இராமாயணக் கதையை நாடக வடிவில் இந்நூல் தருகிறது. இடையிடையே பாடல்களும் தரப்பட்டுள்ளன. முதற் பாகமாகிய இந்நூலில் "பாதுகா பட்டாபிஷேகம்" வரையில் உள்ள வரலாறு உள்ளது; viii. 146/1915/I.

O31,2

1984. i. சம்பூர்ண இராமாயணம்: இரண்டாம் பாகம்; முதற் பதிப்பு; ii. ஆர். எஸ். வெங்கடராமய்யர்; கபாலி பிரஸ், சென்னை; iii. 1915, iv. உ.ப. 221; v. 21×14 செ.மீ.; vi. 0-12-0; vii. இராமாயணக் கதையில் சூர்ப்பனகை மானமிழப்பதிலிருந்து ராமர் முடிசூட்டு விழா முடிய உள்ளது. இராமாயணத்தின் முதற்பகுதி வரலாறு முதற் பாகத்தில் அமைந்துள்ளது. கும்பகோணம் "ஜெகன் மோஹன சித்விலாஸ ஸபா" என்னும் நாடகக் கம்பெனியில் நடைபெற்ற நாடகக் கதையே இந்நூல் வடிவில் வெளியிடப் பெற்றிருக்கிறது. இசைப் பாடல்கள் முதலியனவும் உரைநடையும் கலந்து அமைக்கப் பெற்றது. பாடல்களுக்கு இராக தாள மெட்டுகள் பற்றிய குறிப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன; viii. 173/1915/II.

O31,2

சேஷாசலம், டி. என்

1985 i. பிஸாரோ: முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1915; iv. உ.ப. 135; v. 19×13 செ.மீ.; vi. 0-6-0; vii. ஆங்கில நாடகக் கவிகளுள் ஒருவராகிய "ஷெரிடன்" எழுதிய நாடகமான "பிஸாரோ" என்ற நாடகத்தின் தமிழாக்கமே இது. ஐந்து அங்கங்களைக் கொண்ட நாடகம். இந் நாடகக் கதையினை முதலில் உள்ள நூன் முகத்தில் ஆசிரியர் தெளிவாக விளக்கி எழுதியுள்ளார். இதனால் நாடகப் பொருள் படிப்பவர்களுக்கு நன்கு விளக்கமாகிறது; viii. 11/1915/I.

O31,2

சுப்புராய உபாத்தியாயர்

1986. i. சீதா கல்யாணம்: முதற் பதிப்பு; ii. கடம்பநாத முதலியார், குலால் வரதப்ப உடையார், அனுமந்த இராகவ நாயுடு; அமெரிக்கன் ஆற்காட் மிஷன் அச்சுக்கூடம், ஆரணி, வ.ஆ. ஜில்லா; iii. டிசம்பர், 1910; iv. செ.மூ.ப. 86; v. 22×14 செ.மீ.; vi. 0-10-0; vii. சீதை திருமண நிகழ்ச்சியை இசைப்பாடல் வடிவில் தருவது. இசைப் பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புக்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. மூன்று சாத்துக் கவிகள் முதலில் உள்ளன. ஆசிரியரது காப்புச் செய்யுளினும் சாத்துக் கவிகளினும் இந்நூலை நாடகம் என்றே குறிப்பிட்டிருக்கிறார்கள்; viii. 412/1911/I.

O31,2

சுப்பராய முதலியார், தி.

1987. i. ஞான சவுந்தரி அம்மாள் சரித்திரம்: முதற்பதிப்பு; ii. நாராயணசாமி பிள்ளை, வேலூர்; டாட்சன் பிரஸ், திருச்சினாப் பள்ளி; iii. ஜூன், 1915; iv. உ.ப.+செ.மூ.ப. 64; v. 22×14 செ.மீ.; vi. 0-4-0; vii. குற்றமொன்றும் அறியாத கத்தோலிக கிறித்துவ சமயத்துப் பாவை ஒருத்தியின் இரங்கத் தக்க கதை. வீண் பழி சுமத்தப் பெற்றுப் பல துன்பங்களை அடைந்து இறுதியில் கன்னி மேரியின் அருளால் நன்னிலையை அடையும் வரலாறு நாடகமாக்கப்பட்டுள்ளது. நான்கு அங்கங் களில் அமைந்த இந்நாடகத்தில் பாடல்களும் உரைநடைகளும் கலந்துள்ளன; viii. 697/1915/II.

O31,2

**சுப்பராய முதலியார், டி & நாராயணசாமி பிள்ளை, வி.**

**1988.** i. நல்லதங்காள் : பாகம் 1 & 2, முதற் பதிப்பு ; ii. கே. ஏ. கிருஷ்ணசாமி முதலியார், சென்னை ; ஸ்ரீசுப்பிரமணிய விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. பிப்ரவரி 1914 ; iv. உ.ப.+செ.மூ.ப. 40 ; v. 21×14 செ.மீ., vi. 0-4-0 ; vii. 'நல்லதங்காள் என்னும் நற்குல சேகரி சரிதை' என்பது இதன் பெயர். நல்லதங்காள் நாடகத்தில் பாடப்படும் பாடல்களின் தொகுதி இந்நூல். ஆலந்தூர் ஹிந்து பால விவேக தாயினி சபையின் ஆசிரியர் தி. சுப்பராய முதலியார் பாட, அதனோடு இந்தச் சபையின் மற்றொரு ஆசிரியர் நாராயணசாமி பிள்ளை புதிய பாடல்களைப் பாடிச் சேர்த்துள்ளார். இப் பாடல்களை ஆலந்தூர் ஒரிஜினல் டிராமாட்டிக் கம்பெனி நடிகர்கள் பாடிப் புகழடைந்துள்ளனர் ; viii. 395/1914/II.

O31,2

**சுப்பராயலு நாயுடு, ரா. மு.**

**1989.** i. பவளக் கொடியாள் சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. டி. பி. மாணிக்க முதலியார், சென்னை ; சுந்தர விலாச அச்சுக்கூடம், பூவிருந்தவல்லி ; iii. நவம்பர் 1913 ; iv. செ.மூ.ப. 78 ; v. 19×11 செ. மீ. ; vi. 0-6-0 ; vii. அருச்சுனன் பவளக் கொடியை மணந்த வரலாறு உரைக்கும் இதிகாச நாடகமாகும் இந்நூல். உரை நடையும் இசைப் பாடல் முதலியனவும் கலந்து அமைந்தது. தி. முருகேச முதலியார் என்பவர் இதற்கு ராக தாள வர்ணமெட்டுகள் அமைத்துள்ளார் ; viii. 668/1913/VI.

O31,2

**சுப்பிரமணிய அய்யர், பி. எஸ்., மதுரை**

**1990.** i. சுதர்ம கலாவதீயம், முதற் பதிப்பு ; ii. லலித விலாச புத்தக சாலையார், சென்னை ; பி. ஆர். ராமய்யர் அண்டு கோ., மதராஸ் ; iii. மே, 1912 ; iv. உ.ப. 1+101 ; v. 18×12 செ. மீ. ; vi. 0-6-0 ; vii. இளவரசி ஒருத்தி, தன் காதலனைச் சந்திக்கும் பொருட்டு மாறு வேடத்தில் சென்றதை யொட்டி நிகழ்ந்த நிகழ்ச்சிகளை விவரிக்கும் நாடகம். "சுதர்மா" என்ற தலைவன் பெயரையும் கலாவதி என்ற தலைவியின் பெயரையும் இணைத்து இதற்குச் "சுதர்ம கலாவதீயம்" என்று பெயர் இடப்பட்டிருக்கிறது. ஏழு அங்கங்கள் கொண்டது இந்நாடகம் ; viii. 961/1912/II.

O31,

**சுப்ரமணிய சாஸ்திரி, ஆர்.**

1991. i. நளாகினி விஜயம் : முதற் பதிப்பு ; ii. ஆர். சுப்ரமணிய சாஸ்திரி ; மதுகரவேணி பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1911 ; iv. உ. ப. 175 ; v. 19×13 செ. மீ.; vi. 0–14–0 ; viii. இளவரசி ஒருத்திக்கும் அவள் காதலனாகிய அமைச்சரின் மகனுக்கும் எதிர்பாராது நடந்த பிரிவினையும், இறுதியில் தன் காதலனைக் கண்டுகொள்வதும் ஆகிய இன்பியல் முடிவுடன் இக்கதை செல்கிறது. தன் காதலன் பிரிந்த பின் இளவரசி ஆணுடை தரித்துப் பல வியத்தகு நிகழ்ச்சிகளில் ஈடுபட்டதும் விளக்கப்பட்டிருக்கிறது ; viii. 369/1912/I.

O31,2

**சுப்பிரமணிய பாரதியார், அ., வரகவி**

1992. i. கீசகன் : முதற் பதிப்பு ; ii. ஸ்ரீபால சுப்பிரமணியம் கம்பெனியார், திருவல்லிக்கேணி, சென்னை ; சச்சிதாநந்தம் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1914 ; iv. உ.ப. 91+44 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. பாரதத்தில் விராட பருவத்திலுள்ள கீசகன் வதைச்சருக்கக் கதையை நாடகமாகத் தருவது. பிறர் மனைவியை விரும்புவோர் அழிந்தொழிவார் கள் என்பதையும், கற்பின் வெற்றியினையும் விரிப்பது. மூன்று அங்கங்கள் கொண்டது. ம. இராச கோபாலப் பிள்ளை என்பார் இந்நூலுக்கு முகவுரையும், கோ. வடிவேலு செட்டியார் என் பார் இதற்குச் சாத்துக் கவியும் பாடியுள்ளார்; viii. 440/1914/I.

O31,2

1993. i. மாயாவதி : முதற் பதிப்பு ; ii. எஸ்.ராஜா சாஸ்திரி வாணி பூஷணம் பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1911 ; iv. உ.ப.+செ.மூ.ப. 4+88 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. பாகவதம் தசமஸ்கந்தத்திலுள்ள ஒரு சிறு கதையே இந்நாடகப் பொருள். இது படிப்பவர்க்கு இன்ப மளிக்கத்தக்கதாயும் நடிப்பவர்களுக்கு வேண்டிய பாடல்களுட னும் அமைக்கப்பட்டிருக்கிறது. ஐந்து அங்கங்கள் கொண்டது. கதைச் சுருக்கம் முதலில் தரப்பட்டுள்ளது; viii. 217/1911/III.

O31,2

1994. i. வனஜாக்ஷி: முதற் பதிப்பு ; ii. எஸ். ஜி. ஐயர் அண்டு கோ, சென்னை ; பி. ஆர். ராமா அய்யர் அண்டு கம்பெனி, சென்னை ; iii. அக்டோபர், 1911 ; iv. உ.ப. 18+114 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. இது ஐந்து அங்கங்களைக் கொண்ட ஒரு சமூக நாடகம். இதன் கதைச்

சுருக்கமும் நாடக மாந்தர்களைப் பற்றிய குறிப்பும் முதலில் உள்ளது. வரதட்சணை வாங்குவதைக் கண்டித்தும், மறுமணத்தை ஆதரித்தும் உரைப்பது. சுகுணவிலாச சபையாரால் செய்யப்பட்ட விளம்பரத்தை ஒட்டி எழுதப்பட்டது. இது அப்பொழுது உண்மையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை அடிப்படையாகக்கொண்டு புனையப் பெற்றது ; viii. **337/1911/IV.**

**O31,2**

**சுப்பிரமணி முதலியார், ஆ.**

1995. i. கற்புள்ள இராணி அல்லது தாரணி ; முதற் பதிப்பு ; ii. ஆ. சுப்பிரமணி முதலியார் ; முரஹரி அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூன், 1911 ; iv. உ.ப. 96 ; v. 21×13 செ.மீ., vi. 0–8–0 ; vii. ஆங்கிலக் கவிஞர் செகப்பிரியர் எழுதிய "ஆம்லெட்" என்னும் நாடக நூலைத் தழுவி எழுதப்பட்டது. நான்கு அங்கங்கள் கொண்டது. நாடக உறுப்பினர் பற்றிய குறிப்பு முகப்பில் தரப்பட்டுள்ளது ; viii. 688/1911/II.

O31,2

**சுப்பிரமணியையர், ஆர்., வையை.**

1996. i. நள சக்ரவர்த்தி : முதற் பதிப்பு ; ii. ஆர். சுப்பிரமணிய ஐயர், வையை ; எஸ். பி. ஸி. கே. அச்சுக் கூடம், சென்னை ; iii. மார்ச், 1912 ; iv. உ.ப. 8+84 ; v. 18×12 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. பாரதத்தில் வரும் நள மன்னரின் வரலாறு நாடக முறையில் அமைக்கப்பட்டிருக்கிறது. அரங்கில் எளிதாக நடித்துக் காட்டுவதற்கு ஏற்பவும், இக்காலத்து உலக இயல்புக்கு ஏற்பவும் கதையை உரிய இடங்களில் மாற்றி இருப்பதோடு, மூன்று மணி நேரத்திற்குள் நாடகத்தை முடிப்பதற்கு ஏற்றபடி கதையைச் சுருக்கியும் இந்நாடகம் அமைக்கப் பெற்றிருக்கின்றது. ஸெயின்ட் பீட்டர்ஸ் ஹைஸ்கூல் தமிழ்ச் சங்க மாணவர்களின் வேண்டுகோள்படி இந்நாடகம் அமைக்கப் பட்டதாக ஆசிரியர் கூறுகிறார். இது இருபது காட்சிகள் கொண்டது ; viii. 937/1912/I.

O31,2

**செங்கய்ய பத்தர், டி.**

1997. i. ஸம்பூர்ண இராம நாடகம், முதற் பதிப்பு ; ii. வி. த. பார்த்தசாரதி நாயுடு, சென்னை ; ஆதி லக்ஷ்மி நாராயண பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1914 ; iv. உ.ப. + செ. மூ.ப. 22+44+42+30+26+50 ; v. 21×14 செ.மீ. ; vi.

1-8-0 ; vii. இராமாயண வரலாற்றை உரையும் பாட்டுமாக அமைத்து நாடக வடிவில் தருவது. இசைப் பாட்டுகளுக்கு இராக, தாளக் குறிப்புகள் ஆங்காங்கே தரப்பட்டுள்ளன. பால காண்டம் முதல் யுத்த காண்டம் ஈறாக 6 காண்டங்களாகப் பகுக்கப் பெற்றிருக்கிறது ; viii. 1143/1914/II.

O31,

**சேஷய்யர், ம., சென்னை**

1998. i. பாதுகா பட்டாபிஷேகம்: முதற் பதிப்பு; ii. ம. சேஷய்யர், சென்னை ; பியர்லெஸ் அச்சியந்திர சாலை, சென்னை ; iii. டிசம்பர், 1913 ; iv. உ.ப. 6+71 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. இராமாயணம் அயோத்தியா காண்டத்தை ஒட்டிய ஒரு நாடகம். காட்டிற்குச் சென்ற தமது தமயன் இராமன் பாதுகைகளைப் பரதன் பெற்று வந்து, அவன் சார்பில் ஆண்ட வரலாற்றை இந்நூல் விவரிக்கின்றது. கம்பராமாயணப் பாடல்கள் சிலவும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. சென்னை "ஹீலாக் விலாச சபையினருக்காக இந்நாடகம் எழுதப்பட்டு 1911ஆ-ம் ஆண்டு சனவரி 11ஆம் நாள் இரவு விக்டோரியா மண்டபத்தில் இச்சபையாரால் நடிக்கப்பட்டது ; viii. 913/1913/IV.

O31,2

**சோமசுந்தரம் பிள்ளை, டி.எஸ்.**

1999. i. வெங்கடேச கல்யாணம்: முதற் பதிப்பு ; ii. டி.எஸ். சோமசுந்தரம் பிள்ளை ; மெய்கண்டான் அச்சுக்கூடம், சென்னை; iii. மே, 1913 ; iv. உ.ப. 4+181 ; v. 20×13 செ. மீ. ; vi. 0-10-0 ; viii. இது திருப்பதி மகாத்மியத்தை அடிப்படையாகக் கொண்ட நாடகம். பத்மாவதி என்னும் வேடுவ குல மகளை, திருப்பதி மலைமீது திருமால் திருமணம் செய்து கொண்ட நிகழ்ச்சியை விவரிப்பது. ஐந்து அங்கங்கள் கொண்டது. இசைப் பாடல்களும் இடையிடையே உள்ளன ; viii. 602/1913/I.

O31,2

**ஞானதிக்க தாஸர், தா.**

2000. i. சுந்தர ஜோக் சபா: முதற் பதிப்பு ; ii. தா. ஞானதிக்க தாஸர் ; பிரிஸிடென்ஸி பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர் 1911 ; iv. உ.ப. + செ. மூ. ப. 2+36 ; v. 21×13 செ.மீ. ; vi. 0-1-6 ; vii. விவிலிய நூலில் உள்ள

பரி. லூக் 15, 11—24 வரையிலுள்ள பகுதியை அடிப்படை யாகக் கொண்டு செய்யப் பெற்றது. இதில் குறிப்பிட்ட தீய மகனைப் பற்றிய உவமைக் கதையே இந்நாடகப் பொருள். இதில் அமைந்த இசைப் பாடல்களுக்கு இராக தாளக் குறிப் புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆயிரத்துத் தொளாயிரத் துப் பத்தாம் ஆண்டு அக்டோபர் திங்கள் முப்பத்தொன்றும் தேதி ஆர், ஷோமேருஸ் ஐயர் முன்னிலையில் பலர் கூடிய அவையில் இந்நாடகத்தை ஆசிரியர் அரங்கேற்றியதாகத் தெரி கிறது ; viii. 112/1911/IV.

O31,2

**ஞானதிக்கம் சுவாமி அடியான்**

2001. i. அற்புத இரக்ஷிணிய நாடகம் : முதற் பதிப்பு : ii. சுவாமி அடியான் ஞானதிக்கம், வேலூர் ; வி. யென் பிரஸ், வேலூர் ; iii. ஜூன் 1914 ; iv. செ.மூ. ப. 50 ; v. 17×12 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. விவிலிய நூலின் பழைய ஏற்பாட்டு நூல்களில் ஒன்றுன டேனியல் சுவிசேஷ நூலின் 3-ம் அத்தியாயத்தின் கதையை விளக்குகிறது. பாபிலோன் அரசனுகிய நேபுகாத் நேச்சார் ராஜா தூராவில் நிறுவிய பொற்சிலையைப் பற்றியும், அதை வணங்காமல் நின்ற யூத செல்வர்களான ஷாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்பவர்களை நெருப்பு சூளையில் போட்டபோது, தேவமகன் அவர்களோடு உலாவி விடுவித்ததைப் பற்றியும் கூறும். கிருத்துவர்களுக்கும் மற்றவர்களுக்கும் மிகவும் பயன்படத்தக்க நூல் ; viii. 981/1914/II.

O31,2

2002. i. மகிடாசூர சம்மார நாடகம் : முதற் பதிப்பு ; ii. தங்க வேலு முதலியார் ; ஜீவ காருண்ய விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii செப்டம்பர், 1912 ; iv. செ.மூ.ப. 88; v. 20×14 செ.மீ.; vi. 0–5–0 ; vii. துர்க்காம்பாள் சண்டை என்னும் "மகிடா சூர சம்மார நாடகம்" என்பது இதன் முழுப் பெயர். இறைவி மகிடாசூரனைக் கொன்ற புராண வரலாற்றை இசைப் பாடல்களில் அமைத்து நாடகமாகத் தருகிறது. விருத்தம் முதலிய வேறு வகைப்பாடல்களும் உரைநடையும் இடையிடையே வருகின்றன. ஒரு சில படங்களும் உள்ளன ; viii. 888/1912/IV.

O31, 2

**தணிகாசல முதலியார், திண்டிவனம்**

2003. i. பப்பிரவாகனன் சண்டை நாடகம் : முதற் பதிப்பு ; ii. முனிசாமி முதலியார், சூளை ; தனலக்ஷ்மி நர்த்தனம் அச்சியந்திர சாலே, சென்னை ; iii. டிசம்பர், 1912 ; iv. உ.ப. + செ.மூ.ப. 124 ; v. 20×14 செ.மீ.; vi. 0–8–0 ; vii. தருமர் அசுவமேதயாகம் செய்த போது அசுவமேதயாகக் குதிரை காரணமாக அருச்சுனன் மகன் பப்பிரவாகனன் நிகழ்த்திய சண்டையைப் பற்றியது இந்நாடகம். பப்பிரவாகனன் மதுரையை ஆண்ட மன்னன். இவன் பாண்டவர்களின் அசுவமேதக் குதிரையை எதிர்த்து அவர்களோடு செய்த வீரப் போரை இந்நாடகம் பொருளாகக் கொண்டுள்ளது. இசைப் பாடல், சிந்து முதலியனவும், உரை நடையும் விரவி வர அமைந்துள்ளது. viii. 818/1913/I.

O31,2

**தாண்டவஞ் செட்டியார், தா. சு., பூவுற்றகுடி நகரம்**

2004. i. வள்ளியம்மை திருக்கல்யாணம் : ii. சு. இராமலிங்க செட்டியார், பூவுற்ற குடிநகரம் ; ஸ்ரீ குஞ்சித சரண அச்சுக் கூடம், சிதம்பரம் ; iii. 1915 ; iv. செ.மூ.ப. 184 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. வள்ளியம்மன் தினைப் புனம் காத்துக் கொண்டிருந்த ஞான்று முருகன் வேடனாகவும் வளையற் செட்டியாகவும் பண்டாரக் கிழவனாகவும் உருவெடுத்து வந்து வள்ளியம்மையை மணம் புரிந்த கதையைக் கூறுவது. புதிய வர்ணமெட்டுகளால் ஆகிய பாடல்கள் கொண்ட நூல். இடையிடையே உரைநடைப் பகுதிகளும் விரவி வருகின்றன. viii. 681/1915/IV.

O31,2

**தாண்டவராயர், வீரபாண்டி**

2005. i. மாணிக்க வாசகர் நாடகம் : முதற் பதிப்பு ; ii. முனிசாமி முதலியார், சூளை ; டைமன் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1911 ; iv. உ. ப. + செ.மூ.ப. 60 ; v. 21×13 செ.மீ. ; vi. 0–5–0 ; vii. சைவ சமயக் குரவருள் ஒருவராகிய மாணிக்க வாசகரது வாழ்க்கை வரலாற்றைத் தருவது. அவர் பாண்டியனுக்கு அமைச்சராகயிருந்து திருப்பெருந்துறையில் ஆசிரியனிடம் அருளுரை பெற்று, ஈசன் அருளுக்கு இடமாகித் திருவாசகமும் திருக்கோவையாரும் பாடியருளிய செய்திகளையெல்லாம் இந்நாடகத்தில் காணலாம் ; viii. 724/1911/II.

O31,2

திருமலைக் கொழுந்து, எஸ். ஏ., எட்டையபுரம் (மொ.து.)

2006. i. பிரசண்ட மாருதம் ; முதற் பதிப்பு ; ii. ஜீ.எஸ் லோகநாதன் பிரதர்ஸ், சென்னை & எஸ். எ. திருமலைக் கொழுந்து எட்டையபுரம் ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1913 ; iv. உ.ப. 19+52+24 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. ஆங்கிலப் பெருங்கவி செகப்பிரியரின் "டெம்பஸ்ட்" என்னும் நாடகத்தின் தமிழாக்கம். முகவுரையில் செகப்பிரியரைப் பற்றியும் அவர் கால ஆங்கில நாட்டின் மொழி நிலையைப் பற்றியும், விளக்கியுள்ளார். அருஞ் சொற் பொருள் விளக்கம் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 286/1914/I.

O31; 2

திருமலைமுத்துப் பிள்ளை, மு.

2007. i. நல்ல தங்காள் சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. பி.நா சிதம்பர முதலியார், மதுரை ; ஸ்ரீ கிருஷ்ண விலாஸ அச்சியந்திரசாலை, திருமங்கலம் ; iii. செப்டம்பர், 1914 ; iv. செ. மூ. ப. 54 ; v. 21×14 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. இந்நூற்கு "நற்குல சேகரி" என்றும் பெயர் உண்டு. புகழ்பெற்ற கதையான நல்லதங்காள் கதையை நாடகப் பாடல்கள் வழியாக இந்நூல் விளக்குகிறது. இந் நாடகத்தில் பங்கு பெற்றவர்களின் பெயரும் முகப்பில் தரப் பெற்றிருக்கிறது. இது இவ்வரலாற்றின் முதற் பகுதி. viii. 392./1914/IV.

O31,2

துரைசாமி அய்யங்கார், கே., வடுவூர்

2008. i. சுந்தராங்கி : முதற் பதிப்பு ; ii. எஸ். ஜி. அய்யர் அண்டு கம்பெனி, சென்னை ; பி. ஆர். ராமய்யர் அண்டு கோ., சென்னை ; iii. ஜூன், 1914 ; iv. உ.ப. 12+261 ; v. 18 × 13 செ. மீ. ; vi. 0–1–0 ; vii. ஆங்கிலத்தில் செகப்பிரியர் எழுதிய சிம்பலின்" ( cymbeline ) என்னும் நாடகத்தைத் தழுவி அமைந்தது. ஐந்து அங்கங்கள் கொண் டது. "முந்திய கதையினை முற்றிலும் கொண்டிடாது இந்தியர்க்கு எளிதாக இயன்றவரை மாற்றினேன்" என்று ஆசிரியர் தமது நூல் முகப்பில் குறிப்பிட்டுள்ளார். நாடக மாந்தரின் பெயர் விளக்கம் முதனில் கொடுக்கப்பட்டுள்ளது இசைப் பாடல்கள் பல நாடகத்தில் ஆங்காங்கு அமைந்துள்ளன. பாக்களுக்கு இராக, தாளக் குறிப்புக்களும் கொடுக்கப்பட்டிருக் கின்றன. இதில் அமைந்துள்ள அருஞ் சொற்களுக்கு அங்கங்கே அடிக் குறிப்பிட்டுப் பொருள் விளக்கப்பட்டிருக்கிறது. viii. 1150/1914/II.

O31,2

2009. i. சுந்தராங்கி : இரண்டாம் பதிப்பு ; ii. லலிதா விலாஸ புத்தகசாலையார், சென்னை ; பி. ஆர். ராம அய்யர் அண்டு கோ., பிரிண்டர்ஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 218 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-14-0 ; vii. சுந்தராங்கி என்னும் இந்நாடகம் செகப்பிரியனின் ( Shakespeare's ) "சிம்பலின்" என்னும் நாடகத்தைத் தழுவியதாகும். பாட்டும் உரைநடையும் சேர்ந்தே வருகிறது. மொழிபெயர்ப்பு நாடகமாயினும் இந்திய ஒழுக்கத்திற்கும், பண்புக்கும் ஏற்ற முறையில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இளைஞர் சமுதாயத்திற்கு ஏற்ற நாடகம். நாடக மாந்தரின் "பெயர் விளக்கம்" நூலின் தொடக்கத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. viii. 1036/1915/III.

O31,2

துரைசாமி சமஷ்டியார்

2010. i. மாங்கனி சரித்திர நாடகம் : முதற் பதிப்பு ; ii. கே. எஸ். துரைசாமி முதலி, சென்னை ; பாலவிர்த்தி போதினி, அச்சி யந்திரசாலை, சென்னை ; iii. நவம்பர், 1914 ; iv. செ.மூ.ப. 64 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-5-0 ; vii. மாங்கனிக்காக உலகைச் சுற்றி வந்த போதும் அது கிடைக்காது போகப் பழனமலை சென்ற சுப்பிரமணியக் கடவுளின் கதையை நாடகமாகத் தருகிறது இந்நூல். இந்நூலுக்கு அடிப்படையாக சிவப்பிரகாச சுவாமியினுடைய நூலையும், பழநித் தலபுராணத்தையும் ஆசிரியர் சுட்டுகிறார். நடிக வீரப்பாட்டு அருணசல முதலியார் இதற்குச் சாத்துக் கவி பாடியுள்ளார் viii. 582/1914/IV.

O31,3

துரைசாமி முதலியார், அ., மைலம்

2011. i. கமலவல்லி நாடகம் : முதற் பதிப்பு ; ii. கை. சு. துரைசாமி முதலியார், சென்னை ; பாலவிர்த்தி போதினி அச்சுக் கூடம், சென்னை ; iii. செப்டம்பர், 1912 ; iv. உ.ப.+ செ.மூ.ப. 72 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-5-0 ; vii. ஓர் இளவரசனும் ஓர் இளவரசியும் எதிர்பாராத வகையில் மணப்பதைப் பாடல்களால் விளக்கும் நாடகம். இடையிடையே உரைநடையும் விருத்தக் கவிகளும் விரவி வருகின்றன. பெரும்பாலும் இசைப் பாடல்களைக் கொண்டது. viii 1015/1912/III.

O31,2

துரைசாமி முதலியார், கே. எஸ்.

2012. i. சிங்கீசர் கல்யாண நாடகம் : முதற் பதிப்பு; ii. கே. எஸ்., துரைசாமி முதலியார் ; பாலவிர்த்திநிபோதினி பிரஸ், சூளை சென்னை ; iii. மார்ச், 1913 ; iv. உ.ப.+செ.மூ.ப. 68

v. 21×14 செ.மீ.; vi. 0-5-0; vii. சிவபெருமாள் கங்கையைத் திருமணம் செய்து கொண்ட நிகழ்ச்சி பற்றியது, இந் நாடகம். பார்வதி கங்கைமேல் பொருமை கொண்டு சக்களத்தி பூசல் நிகழ்த்தியதாக இக்கதையில் விவரிக்கப்பட்டிருக்கிறது. இறுதியில் உமையின் உடன்பாட்டுடன் சிவபெருமானுக்குக் கங்கையைத் திருமால் திருமணம் செய்து வைத்த நிகழ்ச்சியோடு கதை முடிகிறது. viii. 52/1913/II.

O31,2

நடேச கிராமணியார், டி. பி., தூக்கணும்பாக்கம்

**2013.** i. தென் மதுரைச் சொக்கநாதர் வலைவிசிறிப் படல நாடகம்: முதற் பதிப்பு; ii. நடேச கிராமணியார்; ஸ்ரீவரலக்ஷ்மி விலாச அச்சுக்கூடம்; iii. பிப்ரவரி, 1911; iv. உ.ப.+செ.மூ.ப. 74; v. 22×14 செ.மீ.; vi. 0-5-0; vii. மதுரைத் தல புராணமாகிய திருவிளையாடல் புராணத்தில் வரும் வலைவீசிய திருவிளையாடலை விவரிக்கும் நூல். சோமசுந்தரக் கடவுள் மீன் பிடிக்கும் வலைஞனாக வந்து செய்த திருவிளையாடலை விவரிப்பது. உரைநடையும் இசைப் பாடல்களும் விருத்தங்களுமாகச் செய்யப் பட்டது ஆகும். viii. 764/1911/I.

O31,2

**2014.** i. பாதுகா பட்டாபிஷேக நாடகம்: முதற் பதிப்பு; ii. வரதைய நாயுடு, நெல்லிக்குப்பம்; ஸ்ரீவரலக்ஷ்மி விலாசம் அச்சுக் கூடம்; iii. நவம்பர், 1912; iv. உ.ப.+செ.மூ.ப. 75; v. 21×14 செ.மீ.; vi. 0-5-0; vii. இராமாயணம் அயோத்தியா காண்டத்திலுள்ள வரலாறு. பரதன் சித்திரகூட பர்வதத்தில் தமது தமையன் இராமனைச் சந்தித்து அவனுடைய பாதுகைகளைப் பெற்று அதற்கு முடிசூட்டி இராமனின் சார்பில் நாடாண்ட வரலாறு. இது இசைப் பாடல்கள், விருத்தம் முதலிய சந்த மெட்டுக்களால் அமைந்த நாடகம். viii. 786/1912/IV.

O31,2

**2015.** i. ஸ்ரீமந்தனி திருக்கல்யாண நாடகம்: முதற் பதிப்பு; ii. டி. நடேச கிராமணியார்; ஸ்ரீவரலக்ஷ்மி விலாச அச்சுக்கூடம், நெல்லிக்குப்பம்; iii. மே, 1911; iv. உ.ப.+செ.மூ.ப. 1+76; v. 21×14 செ.மீ.; vi. 0-6-0; vii. இது பாரதத்திலிருந்து எடுக்கப்பட்ட ஒரு கதை. கீழ் உலகில் மறைந்திருந்த தன் கணவனைச் சிவபத்தியின் சிறப்பால் அடைந்த வரலாற்றைக் கூறுவது. viii. 556/1911/II.

O31,2

நடேச சாஸ்திரியார், சிறுகாம்பூர்

2016. i. மாளவிகாக்கினி மித்திரம் : முதற் பதிப்பு ; ii. எஸ். ஜி. ஐயர் அண்டு கம்பெனி, சென்னை ; பி. ஆர். ராமா ஐயர் அண்ட் கம்பெனி, சென்னை ; iii. டிசம்பர், 1911 ; iv. உ.ப. 3 +106 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. வடமொழியில் பெருங்கவி காளிதாசர் இயற்றிய மாளவிகாக்கினிமித்திரம் நூலைத் தழுவித் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. சொல்லும் பொருளும் நடையும் சுவை பெற அமைந்துள்ளன. ஐந்து அங்கங்கள் கொண்டது. நாடக உறுப்பினர்கள் பற்றிய குறிப்பு நூல் முதலில் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 750/1911/IV.

O31,2

2017. i. ருக்மிணி பரிணயம் : முதற் பதிப்பு ; ii. எஸ். ஜி. ஐயர் அண்டு கம்பெனி, திருவல்லிக்கேணி, சென்னை ; பி. ஆர். ராமய்யர் அண்டு கோ., சென்னை ; iii. எப்ரல், 1912 ; iv. உ.ப. 1+68 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. கண்ணன் ருக்மணியைத் திருமணம் செய்து கொண்ட நிகழ்ச்சி பற்றியது இந்நாடகம் ; இது ஐந்து அங்கங்கள் கொண்டது. வடமொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது இந்நூல். viii. 239/1912/II.

O31,2

நடேச பிள்ளை, கல்லம்பல்

2018. i. அல்லியரசாணி சரித்ரம் : முதற் பதிப்பு ; ii. இ. மா. கோபால கிருஷ்ணக் கோனார், மதுரை ; சித்ரசாலா பிரஸ், மதுரை ; iii. எப்ரல், 1914 ; iv. உ.ப. 40 ; v. 22×13 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. அருச்சுனனுக்கும், அல்லிக்கும் நடைபெற்ற திருமணத்தை விளக்கும் நாடகப் பாடல்கள். இப் பாடல்கள் பலவித வர்ண மெட்டுகளில் அமைக்கப்பட்டுள்ளன. இந்நாடகம் 20 காட்சிகளில் அமைந்துள்ளது. viii. 553/1915/II.

O31,2

நமசிவாய முதலியார், கா., சென்னை

2019. i. இந்திய மாதா : முதற் பதிப்பு; ii. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1911; iv. உ.ப. 15; v. 18×13 செ.மீ.; vi. இலவசம்; vii. ஆங்கிலேயர் ஆட்சியில் இந்திய அன்னைக்கு உண்டாகிய நன்மைகளை மக்களுக்கு எடுத்துக் கூறுவதாக அமைந்த நாடகம், சென்னையில் "டெல்லி தர்பார் முடிசூட்டு விழாக் கொண்டாட்டத்திற்காக இது செய்யப்பட்டது; viii. 856/1911/IV.

O31,2

2020. i. இந்தியா அன்றும் இன்றும்: முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி, நாயுடு & சன்ஸ் சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1913; iv. உ.ப. 15; v. 18×13 செ.மீ.; vi. இலவசம்; vii. அலெக்சாண்டர் படையெடுப்பு முதல், ஆங்கிலேய ஆட்சிவரை இந்தியாவின் வரலாற்றை விவரிக்கும் நூல் இது. நாடகப் பாங்கில் அமைந்தது. எட்டுக் காட்சிகள் கொண்டது. சென்னை ஆளுநர் "பெட்லாண்டு பிரபுவின் " படம் இதில் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 820/1913/IV.

O31,2

2021. i. கீசகன் அல்லது பாயப்பதுங்கல்: ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், மதராஸ்; iii. 1915; iv. உ.ப. 131; v. 18×12 செ.மீ.; vi. 0–12–0 ; vii. பாரதக் கதையிலுள்ள கீசகன் என்பவனுடைய மரணத்தைப் பற்றிய விராடபருவ நிகழ்ச்சி, நாடக முறையில் விளக்கப் பட்டிருக்கிறது. அங்கங்கள் ஐந்து கொண்டது இந்நாடகம். எ.சி. பிரணதார்த்திஹர ஐயர், இதற்கு முகவுரை எழுதியுள்ளார். viii. 432/1915/IV.

O31,2

2022. i. பிரிதிவிராஜன்: முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1911; iv. உ.ப. 4+167+3 படங்கள்; v. 18×13 செ.மீ.; vi. 1-0-0; vii. இது ஒரு வரலாற்று நாடகம். பிரிதிவிராசன், செயச்சந்திரன் என்னும் இரண்டு இராசபுத்திர மன்னர்கள் பகைமையால் போர் செய்து அழிந்த வரலாறு, ஐந்து அங்கங்கள் கொண்ட நாடகம் இது. இடையிடையே சில செய்யுட்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. செய்யுட்களுக்குரிய அருஞ்சொற் குறிப்பு இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறது எல்.டி. சாமிக்கண்ணு பிள்ளை என்பவர் இதற்கு முன்னுரை எழுதியுள்ளார். சம்யுக்தையைப் பிரிதிவிராசன் குதிரைமேல் கொண்டு செல்லும் காட்சியை விளக்கும் படமும், வேறு இரண்டு படங்களும் உள்ளன.viii. 594/1911/III.

O31,2

2023. i. நரகாசுரன் சண்டை நாடகம்: முதற் பதிப்பு ; ii. ராஜரத்தின முதலியார், பட்டணம் & சு. துரைசாமி முதலியார், சைவண்டூர்: பாலர் விர்த்தி போதினி அச்சுக்கூடம், சென்னை; iii. ஜூலை, 1911; iv. உ.ப. + செ.மு.ப. 56 : v. 21×14 செ.மீ.; vi. 0–5–0; vii. கண்ணன் நரகாசூரனைக் கொன்ற புராண வரலாறு பற்றிய நாடகம். உரையும் பாட்டுமாகக் கலந்து அமைந்தது. viii. 58/1911/III.

O31,2

**நாராயணசாமி பிள்ளை, கு. வே.**

2024. i. பார்சி மயோன் சதாரம்; ii. கே. வ. கிருஷ்ணசாமி முதலி, சென்னை, ராஜராஜேஸ்வரி பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1914; iv. உ.ப. 40; v. 21×14 செ.மீ.; vi. 0-4-0; vii. இளவரசனைக் கணவனாகக் கொண்ட ஓர் இளம் பெண், கணவனைப் பிரிந்து அதனால் அடைந்த துன்பங்களையும், இறுதியில் இருவரும் ஒன்று சேருவதையும் விளக்கும் பெயர் பெற்ற நாடகம். இது பாலாமணி கம்பெனி நடத்திவரும் நாடகம் ஆகும். இந்நாடகத்தை அந்நாளில் பெயர் பெற்ற நடிக நடிகையர் நடத்திவந்தனர் என்று தெரிய வருகிறது. viii. 27/1914/IV.

O31,2

**நாராயணசாமி பிள்ளை, வேலூர்**

2025. i. பார்ஸி மதிவல்லப மோஹனா: ii. டி. துரைசாமி முதலியார்; ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை; iii. 1915; iv. உ.ப.+செ.மூ.ப. 67; v. 22×14 செ.மீ.: vi. 0-4-0; vii. ஓர் இளமங்கை தனக்கு ஏற்பட்ட பலவித துன்பங்களையெல்லாம் கடந்து, தான் காதலித்த இளைஞனை இறையருளால் திருமணம் செய்து கொண்டாள் என்பதுவே இக்கதையின் உட்கிடை இசைப் பாடல்களும் உரை நடையுமாகக் கலந்து இயற்றப் பெற்றது. viii. 933/1915/III.

O31,2

**பக்தவத்ஸலம், டி.**

2026. i. சீதா கல்யாணம்: முதற் பதிப்பு; ii. டி. பக்தவத்ஸலம்; விவேகாநந்தா பிரஸ், சென்னை; iii. மார்ச், 1915; iv. உ.ப.+செ.மூ.ப. 100; v. 21×14; செ.மீ.; vi. 0-10-0; vii. இராமாயணக் கதையில் சீதைக்கும் இராமனுக்கும் இடையே ஏற்பட்ட திருமணத்தைப் பற்றி விளக்கிடும் நாடகம். இது ஏழு அங்கங்களாக பிரிக்கப்பட்டுள்ளது. இந்நாடக நூலின் இடையிடையே பாடல்களும் உள்ளன. viii. 45/1915/II.

O31,2

**த்மனுப அய்யர், சி. ஆர்., கோயம்புத்தூர்**

2027. i. கீசக வதம்: முதற் பதிப்பு; ii. சி. ஆர். பத்மனுப அய்யர், கோயமுத்தூர்; பிரண்ட்ஸ் அஸ்சோசியேஷன் பிரஸ், கோயமுத்தூர்; iii. நவம்பர், 1912; iv. உ.ப.+செ.மூ.ப. 5+100+1,

v. 21×14 செ.மீ.; vi. 0–8–0; vii. பாரதக் கதையுள் விராட நகரத்து நிகழ்ச்சிகளுள் ஒன்றுன கீசகன் இறப்பை பொருளாகக் கொண்டு இயல், இசை, நாடகமாக இயற்றியுள்ளார். பாக்கள் நடைக்கு இணங்கவும் ஆங்காங்குப் பழமை பொலியவும் நாடக இலக்கணம் தோன்றவும் அமைந்துள்ளன. இது ஐந்து அங்கங்கள் கொண்டது. மனோன்மணீய நாடகத்தின் நடையை இது அடியொற்றிச் செல்கிறது. பேச்சு நடையில் தட்டுத்தடையின்றி உறுப்பினர்களுக்கு ஏற்ற வகையில் இதன் போக்கு செல்கிறது. viii. 556/1912/IV.

O31,2

**பலராமையர், ந., கடலூர்**

2028. i. வல்லி பரிணயம்: முதற் பதிப்பு; ii. சித. நாகப்ப செட்டியார், காரைக்குடி; சரஸ்வதி விலாஸ் பிரஸ், மாயவரம்; iii. ஆகஸ்ட் 1912; iv. உ.ப. 178+1; v. 18×12 செ.மீ.; vi. 0–12–0; vii. முருகன் வள்ளியை மணம் புணர்ந்த நிகழ்ச்சியை நாடகமாக அமைத்துத் தருவது. ஐந்து அங்கங்கள் கொண்டது. இடையிடையே சிற்சில பாடல்களும் சேர்க்கப் பட்டிருக்கின்றன. நாடக உறுப்பினர்களைப் பற்றிய குறிப்பும் முதலில் உள்ளது. viii. 681/1912/III.

O31,2

**பவானந்தம் பிள்ளை, எஸ்.**

2029. i. சீதாகல்யாணம்: புதிய பதிப்பு; ii. எஸ். பவானந்தம் பிள்ளை, சென்னை; மினர்வா பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1914; iv. உ.ப.+செ.மூ.ப. 207; v. 21×14 செ.மீ.; vi. 1–8–0; vii. இராமன் சீதையை மணந்த கதையை நாடகமாக ஆசிரியர் ஐந்து அங்கங்களில் தருகிறார். ஆங்காங்கே சித்திரங்களும் உரைகளும் தரப்பட்டுள்ளன. நாடக உறுப்பினர் பட்டியல் ஒன்றும் நூல் முதலில் தரப்பட்டுள்ளது. இதன் பிற்சேர்க்கைப் பகுதியில் இந்நாடகத்தை நடிக்குங்கால் எடுத்தாளத் தக்க இசைப் பாடல்கள், இந்நூலில் வந்துள்ள செய்யுள்களின் உரை, கம்பராமாயண நூற்பயன் முதற் செய்யுள் சங்கோத்தரவிருத்தி, உரை வடிவில் வந்துள்ள செய்யுள்கள் அவற்றின் உரை பெயர் விளக்கம் முதலியன தரப்பட்டுள்ளன. பிற்சேர்க்கை 5-ல் இராமாயண ஆசிரியர்கள் ஆகிய அருணாசலக் கவி ராயர், கம்பர், வான்மீகர் என்பாரது வரலாறுகள் தரப்பட்டுள்ளன. viii. 434/1915/I.

O31

2030. i. பாதுகா பட்டாபிஷேகம் : முதற் பதிப்பு ; ii.ச. பவானந்தம் பிள்ளை, லாங்மன்ஸ் அண்டு கிரீன் அண்டு கோ ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1914 ; iv. உ.ப.+செ. மூ. ப. 240 ; v. 21×14 செ. மீ. ; vi. 0—8—0; vii. இராமயணக் கதையில் இராமன் காடேகுதலும், இதைக் கேட்டு மனம் நொந்த பரதன் அவரது பாதுகைகளைக் கொண்டு வந்து அவைகளுக்குப் முடி சூட்டிய கதையும் விளக்குகிறது. நாடகக் கதையான இந்நூல் ஐந்து அங்கங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. கம்பராமாயணம், திவ்வியப் பிரபந்தம் முதலிய நூற் செய்யுட்களும் அங்காங்கே எடுத்தாளப்பட்டுள்ளன ; viii. 619/1915/II.

O31,2

பார்த்தசாரதி பிள்ளை, வெ.

2031. i. நாடிழந்த நளன் : முதற பதிப்பு ; ii. பத்மநாபன் பிள்ளை, பெ. ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1913 ; iv. உ. ப. 40 ; v. 18×13 செ. மீ. ; vi. 0—2—6 ; vii. நைடதம், புகழேந்திப் புலவரின் நளவெண்பா என்னும் இரண்டையும் அடிப்படையாகவும், பாரதத்திலுள்ள நளன் வரலாற்றைத் துணை நூலாகவும் கொண்டு எழுதப்பட்டது இந்நாடகம். இரண்டு அங்கங்கள் கொண்டது. இடையிடையே சிற்சில பாடல்களும் இடம் பெற்றுள்ளன ; viii. 386/1913/IV.

C 31,2

பாலராஜம் பிள்ளை, பெ.சு.

2032. i. ராமர் பாதுகை பட்டாபிஷேகம் : முதற் பதிப்பு ; ii. பி. டி. மாசிலாமணி முதலி, சென்னை ; சுந்தர விலாச அச்சுக் கூடம், சென்னை ; iii. நவம்பர், 1913 ; iv. செ. மூ. உ. ப. 48 ; v. 22×14 செ. மீ. ; vi. 0—6—0 ; vii. இராமன் காட்டிற்குச் சென்ற பிறகு பரதன் அவரை அடைந்து அவரது பாதுகையைப் பெற்று வந்த இராமயண நிகழ்ச்சி பற்றியது இந்நாடகம். உரைநடையும் பாட்டுமாகக் கலந்தமைந்தது. இடையிடையே தலைப்புகள் உள்ளன. படங்களும் இதில் உள்ளன ; viii. 667/1913/IV.

O31,2

**பூர்ணலிங்கம் பிள்ளை, எம். எஸ்.**

2033. i. காமாட்சி நவ நகை நாடகம்: முதற் பதிப்பு; ii. எம். எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை, சென்னை; பீ. ஆர். ராமையர் அச்சுக்கூடம், சென்னை; iii. பிப்ரவரி, 1915; iv. உ. ப. 43; v. 18×13 செ. மீ.; vi. 0—4—0; vii. காதல் நோயுற்ற ஒரு கன்னி, திருமணத்தினால் இன்பம் அடைந்ததை விளக்கும் ஒரு நகைச்சுவை நாடகமே இந்நூல். இடையிடையே பாடல்களும் உண்டு. நாடக உறுப்பினர்களின் பட்டியல் ஒன்றும் உள்ளது. "மன மயக்கம் கொண்ட மகளுக்கு மருந்து திருமணமே" என்பதை உட்பொருளாகக் கொண்டு எழுதப் பெற்றது. இதில் மூன்று "ஆட்டம்" என்னும் பெரும் பகுதிகளும் அவற்றுள் ஒவ்வொன்றிலும் பல காட்சிகளும் ஆக அமைக்கப்பட்டுள்ளன; viii. 1006/1915/I.

O31,2

**பொன்னம்பலம் பிள்ளை, கிளிமங்கலம்**

2034. i. ருக்மாங்கத நாடகம்: முதற் பதிப்பு; ii. பொன்னம்பலம் பிள்ளை, கிளிமங்கலம்; ஸ்ரீ பாலாம்பிகா விலாஸ அச்சுக்கூடம், சிதம்பரம்; iii. மே, 1913; iv. உ. ப. 61: v. 22×14 செ. மீ.; vi. 0—10—0; vii. சிறந்த நற்பண்பு நல்லொழுக்கம் வாய்ந்த ருக்மாங்கத மன்னனைப் பற்றிய நாடகம். ஏகாதசி நோன்பின் சிறப்பை உரைப்பது; viii. 611/1913/II.

O31,2

**பொன்னுசாமிப் பிள்ளை, ம., திரிசிரபுரம்**

2035. i. அரிச்சந்திரன்: முதற் பதிப்பு; ii. ம. பொன்னுசாமி பிள்ளை, ரங்கூன்; மினர்வா அச்சுக் கூடம், சென்னை; iii. ஜூன், 1914; iv. உ. ப.+செ. மூ. எ. 124; v. 21×14 செ. மீ.; vi. 0—10—0; vii. உண்மைக்கு இலக்கியமாகக் கூறப்பெறும் அரிச்சந்திரனின் வரலாறு பற்றிய நாடகம். அரிச்சந்திர புராணத்தினை அடிப்படையாகக்கொண்டு எழுதப்பட்டது. உரையும் இசைப்பாட்டுமாக அமைந்துள்ளது. இரங்கூனில் இந்நாடகத்தை அரங்கேற்றியபோது பலர் காட்டிய விருப்பின் வண்ணம் இது அச்சிடப்பட்டதாகும். ஐந்து அங்கங்கள் கொண்டது; viii. 310/1914/III.

031,2

**மல.. மகள் ”.**

2036. i. ஸத்யவதி : முதற் பதிப்பு ; ii. எம். பாஷ்யகாச்சாருலு கார்டியன் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1911 ; iv. உ. ப. 1+88 ; v. 22×15 செ. மீ. ; vi. 0—8—0 ; vii. விதியின் வலிமையைக் காட்டும் வரலாறு. நல்லறிவும் நல்ல நடத்தையும் உண்டாகும் வண்ணம் இக்கதையின் மூலம் ஆசிரியர் விளக்குகிறுர். இந்நாடகம் ஐந்து அங்கங்கள் கொண்டது. நாடக உறுப்பினர்களைப் பற்றிய குறிப்பு முகப்பில் உள்ளது. ஒரு மனைவி தன்னுடைய நல்ல நடத்தையாலும், கற்பு நெறியினுலும் தெய்வ பக்தியினுலும் முடமானவனும், அழகற்றவனுமான தன் கணவனை அழகும் நல்லுடலுடைய வனுகவும் மாற்றிய நாடகம் இது; viii. 357/1912/I.

O31,2

**மாசிலாமணிக் கவிராயர், செங்காடு**

2037. i. சிறுத்தொண்ட நாடகம் : முதற் பதிப்பு ; ii. ப. மாசிலாமணி முதலியார், புதுப்பாளையம் ; ஸ்ரீ காஞ்சி பூஷண அச்சுக்கூடம், காஞ்சீபுரம் ; iii. நவம்பர், 1913 ; iv. உ. ப.+செ. மூ. ப. 120 ; v. 22×14 செ. மீ. ; vi. 0—10—0; vii. சேக்கிழார் பாடிய பெரிய புராணத்தை அடிப்படையாகக் கொண்டு செய்யப்பட்ட நாடகம். யாவருக்கும் விளங்கும் வண்ணம் இசைப் பாடல்களைக் கொண்டு அமைந்துள்ளது. க்யால், கெத், க்ருதி, கீர்த்தனம், ஜாவளி, கண்ணிகள், கெஜல், ரங், தில்லாணு, டப்பா, லாவணி, நோட், தருக்கள் ஆகிய இராக தாள வர்ண மெட்டுகள் அடங்கியது; viii. 528/1913/IV.

O31,2

**மாணிக்கவேல் சுவாமிகள், வே. கி., வேலூர், தோட்டப்பாளையம்**

2038. i. பக்காசூர விலாசம் : முதற் பதிப்பு ; ii. தி. புருஷோத்தம நாயகர், சென்னை அண்டு சி. முனுசாமி முதலியார், சூளை ; மதருஸ் டைமண்ட் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1912 ; iv. உ. ப.+செ. மூ. ப. 4+84 ; v. 21×14 செ.மீ.; vi. 0—8—0 ; vii. இதற்கு வேத்ரகீய விலாசம் என்றும் ஒரு பெயருண்டு ; பாரதத்தில் வரும் பகாசூரன் கொலையைப் பற்றியது இந்நாடகம். வேத்ரகீய நகரத்திலே ஓர் அந்தணர் மனையிலே பாண்டவர்கள் தம் தாயாருடன் மறைந்து வாழ்ந்த காலத்திலே நிகழ்ந்த நிகழ்ச்சியாகும் இது. ஒரு சில படங்களும் இதில் உள்ளன; viii. 924/1913/I.

O31,2

முத்து ரெட்டியார்

2039. i. தாமரைத்துவசன் நாடகம்: முதற் பதிப்பு; ii. முனிசாமி முதலியார், சூளை; தனலக்ஷிமி நர்த்தன அச்சியந்திரசாலை, சென்னை; iii. டிசம்பர், 1912; iv. உ ப.+ செ.மூ. ப. 88; v. 21×14 செ. மீ.; vi. 0—5—0; vii. தருமர் அசுவமேத யாகத்தின் ஒரு பகுதியாக உள்ளது இந்த வரலாறு. அசுவமேதக் குதிரையைத் தாமரைத்துவசன் கட்டி வைக்க அவனோடு அருச்சுனன் போர் செய்து மீட்கிறான்; viii. 819/1913/I.

O31,2

முருகேச நாடார், எஸ். (தொ. து.)

2040. i. அம்பகலியாண நாடகம்: முதற் பதிப்பு; ii. டி. இராமசாமி நாயுடு அண்டு சன்ஸ்; ஸ்ரீலட்சுமி நாராயண விலாசம் பிரஸ், சென்னை; iii ஜூன், 1911; iv. உ.ப.+ செ. மூ. ப. 82; v. 20×14 செ. மீ.; vi. 0-4-0; vii. பாரதம் ஆதிபருவத்தில் உள்ள ஒரு வரலாறு. காசி அரசன் தன் பெண்களாகிய அம்பை, அம்பிகை, அம்பாலிகை என்னும் பெண்களுக்குத் திருமணம் செய்து வைத்த நிகழ்ச்சி பற்றியது; viii. 73/1911/III.

O31,2

முனுசாமி முதலியார், சி., சூளை, சென்னை

2041. i. துரோபதை மாலையீடு நாடகம்: முதற்பதிப்பு; ii. சி. முனிசாமி முதலியார், சூளை, சென்னை; தனலக்ஷ்மி நர்த்தன அச்சியந்திரசாலை, சென்னை; iii. எப்ரல், 1914; iv. உ.ப.+ செ. மூ. ப. 56; v. 21×14 செ. மீ.; vi. 0-5-0; vii. பாரதத்தில் வரும் பாஞ்சாலியை மாலையிட்ட கதையைப் பற்றிய நாடகம். அருச்சுனன் வில்வன்மை காட்டித் துரோபதையை அடைவதும், தாய், குந்தியின் கட்டளைப்படி பாண்டவர் ஐவரும் அவளை மனைவியாகப் பெற்று இந்திரப் பிரத்தத்திற்குத் திரும்புவதும் குறிக்கப்பட்டிருக்கிறது. அருச்சுனன் "வில் வளைப்பு" என்றும் இதற்குப் பெயர் உண்டு, கீர்த்தனம், விருத்தப் பாட்டு, உரை ஆகியவை கலந்து வருவது; viii. 360/1914/II.

O31,2

முனுசாமி முதலியார், கா. ஆ., காவேரிப்பாக்கம்

2042. i. புஷ்பாகரன்: முதற் பதிப்பு; ii. கே. ஏ. முனிசாமி முதலியார், காவேரிப்பாக்கம்; மதராஸ் டைமண்ட் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1911; iv. உ. ப. 1+2+106,

v. 22×14 செ. மீ.; vi. 0-10-0; vii. இந்நூல் ஐந்து அங்கங்கள் கொண்டது. நாடக மாந்தர், நாடகம் நிகழிடம் முதலிய குறிப்புக்களை முதலில் தந்திருப்பதோடு ஒவ்வொரு களத்தின் தொடக்கத்திலும் இடம், காலம், உறுப்பினர் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. ஆங்கிலம், வடமொழி முதலிய மொழி களிலுள்ள அடைவுகளைத் தழுவி உரை நடையில் இந்நாடகம் ஆக்கப்பட்டுள்ளது. இதனைப் பெண்டிரும் படிக்கத் தக்க நிலை யில் தீய சொற்களும் வர்ணனைகளும் சிறிதும் நேராவண்ணம் தெள்ளிய நடையில் எழுதப்பட்டுள்ளது. viii. 306/1911/I.

O31,2

**ரங்கசாமி அய்யர், எஸ்., திருப்பத்தூர்**

2043. i. மிருகதிருஷ்ணிகரி: முதற்பதிப்பு; ii. எ. வி. அய்யர் அண்டு கம்பெனி, சென்னை; பி. ஆர். இராமய்யர் அண்டு கம்பெனி, சென்னை; iii. ஆகஸ்ட், 1911; iv. உ. ப. 1+99; v. 18×12 செ. மீ.; vi. 0-6-0; vii. செகப்பிரியர் ஆங்கிலத்தில் எழுதிய "பன்னிரண்டாம் இரவு" நாடகத்தின் தழுவல். ஐந்து அங்கங்கள் கொண்டது. வரகவி சுப்பிரமணிய பாரதியார் இதன் நடையைச் செம்மையாக்குவதற்குத் துணை புரிந்தார் என்று தெரிகிறது. viii. 759/1911/III.

O31,2

**ராஜா, ஏ.**

2044. i. ஓர் இரவின் சம்பவங்கள்: முதற் பதிப்பு; ii. டி. கே. பாலசுப்ரமணிய ஐயர், ஸ்ரீரங்கம்; ஸ்ரீ வாணி விலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம்; iii. பிப்ரவரி, 1915; iv. உ. ப. 114; v. 22×14 செ. மீ.; vi. 0-6-0; vii. ஆங்கிலக் கவிஞர் கோல்டுஸ்மித் எழுதிய "ஷி ஸ்டூ ப்ஸ் டு காங்க்கர்" என்ற நூலைத் தழுவி எழுதப்பெற்ற நாடகமே இந்நூல். ஐந்து அங்கங்கள் கொண்டது. இது படிப்பதற்குச் சுவையாயிருப்ப துடன் பள்ளி மாணவர்களுக்கும் மிகவும் பயன்படும் viii. 776/1915/I.

O31,2

**ராஜா (மொ. து.)**

2045. i. தெய்வமணி அல்லது காதலர் கபடம்: முதற் பதிப்பு; ii. வேணுசாமி அய்யங்கார், சென்னை; மினர்வா பிரஸ், சென்னை; iii. ஜூன், 1914; iv. உ. ப. 86; v. 21×14 செ. மீ.; vi. 0-10-0; vii. ஷெரிடனின் நகைச்சுவை நாடகங்களில் ஒன்றினை அடிப்படையாகக் கொண்டு எழுதப்

பெற்ற காதல் நாடகம். மூன்று அங்கங்களைக் கொண்டது. பாடல்களும் இதில் இடையிடையே உள்ளன. viii. 312/1914/III.

O31,2

ராஜா சாஸ்திரி, எஸ். (மொ. து.)

2046. i. பிரபோத சந்திரோதயம்: முதற் பதிப்பு; ii. ஆர். வைத்தியநாத அய்யர் அண்டு கம்பெனி, மாயவரம்; வாணி பூஷணம் பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1911; iv. உ. ப. 4+107; v. 21×14 செ. மீ.; vi. 0–10–0; vii. மிதிலை நாட்டைச் சேர்ந்த கிருஷ்ணமிச்ரா என்னும் வேதாந்தி ஆக்கிய வடமொழி நூலின் தமிழ் மொழி பெயர்ப்பு. வேதாந்த செய்திகள் எல்லாருக்கும் விளங்கும் பொருட்டு நாடகமாக உருவகப்படுத்தித் தந்துள்ளார். ஆறு அங்கங்கள் கொண்டது, இந்நாடகம். காமம் முதலியவற்றின் வெற்றியையும் உறுதி முதலியவற்றின் தோற்றத்தையும் இந் நாடகம் வலியுறுத்திக் காட்டுகிறது. viii. 993/1911/III.

O31,2

2047. i. விக்கிரமோர்வசீயம்: முதற்பதிப்பு; ii. எஸ். ராஜா சாஸ்திரியார்; வாணி பூஷணம் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1911; iv. உ. ப. 2+85; v. 22×14 செ. மீ.; vi. 0–8–0; vii. வடமொழியில் காளிதாஸர் இயற்றிய நாடகத்தின் மொழிபெயர்ப்பு. குரூரவசு என்ற பூவுலகத்தரசனது அழகு, வலிமை, அறிவு முதலியவைகளெல்லாம் இந்நாடகத்தில் சிறப்பித்துக் கூறப்பட்டிருக்கிறது. இதன் தலைவி தேவர் உலக மாதாகிய ஊர்வசி. காளிதாஸர் அமைத்துள்ள நாடக இலக்கணங்களையும் நடைப்போக்கையும் தமிழ் நாட்டாரும் அறிந்து பயன்பெற வேண்டுமென்ற நோக்கத்துடன் இது செய்யப்பெற்றது. இது ஐந்து அங்கங்கள் கொண்ட நாடகம். viii. 216/1911/III.

O31,2

விசாலாக்ஷி அம்மாள், சென்னை.

2048. i. இரட்டை சகோதரர்கள் அல்லது விநோத விஸ்மயம்: முதற் பதிப்பு; ii. விசாலாக்ஷி அம்மாள், மயிலாப்பூர், சென்னை; பி. ஆர். ராம அய்யர் அண்டு கம்பெனி, சென்னை; iii. அக்டோபர், 1911; iv. உ. ப. 1+60; v. 21×14 செ. மீ.; vi. 0–8–0; vii. செகப்பிரியர் ஆங்கில மொழியில் எழுதிய "காமெடி ஆப் எர்ரர்ஸ்" என்னும் நாடகத்தின் தமிழ் அமைப்பு. இது ஐந்து அங்கங்கள் கொண்டது. நாடக உறுப்பினர் பற்றிய குறிப்பு தொடக்கத்திலும் அங்கங்கே காட்சிகள்தோறும் இடம் பெற்றுள்ளன. viii. 535/1911/IV.

O31,2

**வீரபத்திர நாய்க்கர்**

**2049.** i. கோவிலன் கர்ணகி நாடகம் : முதற் பதிப்பு ; ii. முனிசாமி முதலியார், சூளை ; தனலக்ஷ்மி அச்சியந்திரசாலை, சென்னை ; iii. டிசம்பர், 1912 ; iv. உ. ப. + செ. மூ. ப. 107 ; v. 21×14 செ. மீ. ; vi. 0–5–0 ; vii. சிலப்பதிகாரத்தில் போற்றப்பெறும் கோவிலன் கண்ணகியின் வரலாறு நாடக ஆசிரியரிடம் கோவிலன் கர்ணகி நாடகமாக மாறி இருக்கிறது. கோவலன் இறந்த பின் கண்ணகி காளியின் உருக்கொண்டு, பாண்டியனைப் பழிக்குப்பழி வாங்கி, மதுரையை எரித்து, மலையாளத்திற்குச் சென்று, இறுதியாகத் திருவொற்றியூர் தியாகேசரிடம் வந்து நீர் வேண்டி நின்றுளாம். அவர் அவளைக் கிணற்றில் இறங்கச் சொல்லி தலையில் பாறையால் மூடிவிட்டாராம். இவர்தான் இப்பொழுது வட்டப்பாறையம்மன் என்று வணங்கப்படும் தெய்வம். viii. 817/1913/I.

O31,2

**வெங்கட்ராம ஐயர், கே., கும்பகோணம்**

i. இராமாயணம் சுந்தர காண்டம் : முதற் பதிப்பு ; (தொ. எ. 1143 பார்க்க) ; ii. டி. கிருஷ்ணசாமி ஐயர், கும்பகோணம் ; ஸ்ரீ கிருஷ்ணவிலாச பிரஸ், கும்பகோணம் ; iii. ஜனவரி, 1914 ; iv. உ. ப. 73 ; v. 16×11 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. இராம காதையின் சுந்தர காண்ட வரலாற்றை நாடகமாகத் தருவது. எளிய நடையில் சிறுவரும் புரிந்துகொள்ளுமாறு இது செய்யப்பட்டது. இதில் இருபது காட்சிகள் உள்ளன. அருணசலக் கவிராயர் இயற்றிய இராம நாடகக் கீர்த்தனைகளின் சுந்தர காண்டத் தொகுப்பு இதில் உள்ளது. viii. 470/1914/I.

O31,2

**2050.** i. மச்சரன் என்னும் மாரிகாலக் காதை : முதற் பதிப்பு ; ii. டி. கிருஷ்ணசாமி அய்யர், கும்பகோணம் ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1912 ; iv. உ.ப. 1+95 ; v. 19×13 செ. மீ. ; vi. 0–8–0 ; vii. ஆங்கிலக் கவிஞர் செகப்பிரியர் என்பாரின் விண்டர்ஸ் டேல் ( Winters Tale ) என்னும் மாரி காலக் கதையைத் தழுவித் தமிழில் எழுதப் பெற்றது. லாம்ப் (Lamb) என்பவர் ஆங்கிலத்தில் செகப்பிரியரின் கதைகளை எளிய நடையில் எழுதியது போல் தமிழில் இது எழுதப்பட்டிருக்கிறது. ஐந்து அங்கங்கள் கொண்டது. viii. 283/1913/I.

O31,2

2051. i. ஸமனஸ நாடகம் ; முதற் பதிப்பு ; ii. ஜி. எஸ். டிணியா அண்டு கோ, தஞ்சாவூர் ; கல்யாணசுந்தரம் பவர் பிரஸ், தஞ்சாவூர் ; iii. ஜூலை, 1911 ; iv. உ.ப. 54 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. ஆங்கிலத்தில் ஜான்மில்டன் எழுதிய "ஸாம்சன் ஆகனிஸ்டிஸ்" என்னும் சிறு நாடகத்தின் மொழி பெயர்ப்பு. கவியின் திறமையைக் கூடியவரையிலும் வெளிப்படுத்த ஆசிரியர் முயன்றிருக்கிறார் ; viii. 68/1911/III.

O31,2

2052. i. ஹாம்லெட் நாடகம் : முதற் பதிப்பு ; ii. டி. கிருஷ்ண சாமி ஐயர் ; ஸ்ரீகிருஷ்ண விலாஸம் பிரஸ், கும்பகோணம் ; iii. ஆகஸ்ட், 1914 ; iv. உ.ப. 115 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. ஆங்கிலக்கவி செகப்பிரியரின் நாடகமான "ஹாம்லெட்"டின் தமிழ் மொழி பெயர்ப்பே இந்நூல். ஆசிரியர் மூலத்திலிருந்து சிலவற்றைத் தேவையற்ற இடங்களில் நீக்கி யிருப்பது முகவுரையிலிருந்து தெரிகிறது. இவை நாடக அரங் கிற்குத் தேவையற்றவை என, சர். என்றி இர்விங் விலக்கிய பாகங்களையே இவரும் விடுத்துள்ளார். "சக்கிரவர்த்தினி" என்னும் திங்கள் இதழில் பகுதி பகுதியாக வெளி வந்ததைத் தொகுத்து இந்நூல் வடிவாக்கியுள்ளனர். "ஹாம்லெட்" நாடகத்தின் வரலாறு, தொகுத்து முதலில் எழுதப்பட் டிருக்கிறது . viii. 716/1914/III.

O31,2

வெங்கடேஸ்வர எட்டப்ப மஹாராஜா, எட்டையபுரம்

2053. i. சுத்தசேநன் ; முதற் பதிப்பு ; ii. வேங்கடேஸ்வர எட்டப்ப மஹாராஜா, எட்டையபுரம், ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1914 ; iv. உ.ப. 49+73 ; v. 18×12 செ.மீ. ; vi. ............ ; vii. ஷேக்ஸ் பியரின் "நீ விரும்பும் வண்ணம்" (As you like it) என்னும் நாடகத்தைத் தழுவி அமைந்துள்ளது இந்நூல். மூன்று அங்கங்கள் கொண்டது. இடையிடையே பாடல்களும் கொடுக்கப்பட்டுள்ளன. எஸ். எ. திருமலைப்பிள்ளை என்பார் ஆங்கிலத்திலும் தமிழிலும் நான்முகம் எழுதியுள்ளார். இவர் எட்டையபுரம் சமஸ்தானத்தில் ஆங்கில ஆசிரியராய் இருந்து வந்தார். viii. 610/1914/I.

O31,2

2054. i. வள்ளி நாடகம் ; முதற் பதிப்பு ; ii. வெங்கடேஸ்வர எட்டப்ப மகாராஜா ஐயன், எட்டயபுரம் ; தமிழ்ச்சங்க முத்திர சாலை, மதுரை ; iii. டிசம்பர், 1912 ; iv. உ.ப.+செ.மூ.ப. 52 ;

v. 22×14 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. முருகப் பெருமான் வள்ளியை மணம் கொண்ட நிகழ்ச்சி பற்றிய நாடகம். இடையிடையே பல இசைப் பாடல்கள் விரவி வருகின்றன. பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புகளும் அங்கங்கே தலைப்பில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 17/1913/I.

O31,2

**ஸ்ரீசெய்லா**

2055. i. நீலி வசீகரம் : முதற் பதிப்பு ; ii. ஜெனரல் சப்ளைஸ் கம்பெனி, சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1912 ; iv. உ.ப. 113 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. ஆங்கிலக் கவி செகப்பிரியர் எழுதிய "டேமிங் அப்தி ஷ்ரூ" என்னும் ஆங்கில நாடகத்தின் தமிழ் அமைப்பு. இது ஐந்து அங்கங்கள் கொண்டது. நாடக மாந்தர்களைப் பற்றிய குறிப்பு முகப்பில் உள்ளது. viii. 672/1912/I.

O31,2

**ஸ்ரீநிவாசய்யங்கார், சு.**

2056. i. குலசேகரன் : முதற் பதிப்பு ; ii. ஸ்ரீநிவாச அய்யங்கார் ; ஸ்ரீவித்தியா அச்சுக்கூடம், கும்பகோணம் ; iii. எப்ரல் 1913 ; iv. உ.ப. 2+40 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. பொற்கைப் பாண்டியன் வரலாறு பற்றியது இந் நாடகம். இவனைக்குறித்து இலக்கியங்களில் வந்துள்ள நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு புனையப் பெற்றது. பொற்கைப் பாண்டியன் வரலாற்றுச் சுருக்கமும், நாடக மாந்தர்கள் பற்றிய குறிப்பும் முதலில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இது மூன்று அங்கங்களைக் கொண்ட நாடகம். viii. 329/1913/II.

O31,2

**ஸ்ரீநிவாச ஐயர். எல்., நாகப்பட்டினம்**

2057. i. மதிவாணன் : முதற் பதிப்பு ; ii. எ. ஆர். பொன்னுஸாமி ஐயர், நாகப்பட்டினம் ; நீலலோசனி பிரான்ச் அச்சுக்கூடம், திருவாரூர் ; iii. டிசம்பர், 1911 ; iv. உ.ப. 56; v. 14×11 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. உண்மை நட்பை விளக்கும் ஒரு நாடகம். மாணவர்கள் நடிக்கும் பொருட்டு எழுதப்பட்டது. நாடக மாந்தர்களைப்பற்றிய குறிப்பு முதலில் உள்ளது. மூன்று அங்கங்கள் கொண்டது. viii. 134/1912/I.

O31.

**ஸ்ரீநிவாசாச்சாரி, கே. கே.**

**2058.** i. குணபூஷணம் அல்லது கடமை முரண் ; ii. ஸ்ரீநிவாசாச்சாரியார் ; விக்டோரியா பிரஸ், மதுரை ; iii. 1915 ; iv. உ.ப. 156 ; v. 22×14 செ.மீ. ; vi. 1–4–6 ; vii. உலக நீதியை உணர்த்தக் கூடியவையாய் 5 அங்கங்கள் கொண்ட நாடகம். "மனிதன் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கிறது" என்ற கொள்கையை இது அடிப்படையாகக் கொண்டது. நியாயம், கடமை, பக்தி இவற்றின் சிறப்பைச் சிறப்பாகக் கூறும் இந்நூலில் சமூகத்தின் நன்மையையும் முன்னேற்றத்தையும் கருதிச் சிற்சில குறைகளையும் விளக்கியிருக்கிறார் ஆசிரியர். viii. 529/1915/III.

O31,2

**ஸ்ரீவத்ஸர்**

**2059.** i. உலோபி ; முதற் பதிப்பு ; ii. ஜெனரல் ஸ்ப்ளைஸ் கம்பெனி, மயிலாப்பூர், மதராஸ் ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1912 ; iv உ.ப. 107 ; v. 19×12 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. மோலியர் என்பார் எழுதிய "உலோபி" ( The Miser ) என்னும் நாடகத்தின் தழுவல். ஐந்து அங்கங்கள் கொண்டது. எளிய பேச்சு நடையில் அமைந்தது. viii. 287/1913/I.

O31,2

**ஷண்முக முதலியார், போரூர்**

**2060.** i. சந்திரஹாஸா ; முதற் பதிப்பு ; ii. எஸ். ஜி. ஐயர் அண்டு கம்பெனி, திருவல்லிக்கேணி, சென்னை ; இந்தியன் பிரிண்டிங் ஓர்க்ஸ், சென்னை ; iii. எப்ரல், 1911 ; iv. உ.ப. 6+88; v. 21×14 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. இது ஐந்து அங்கங்கள் கொண்ட நாடகம். முன்பு கேரள நாட்டை ஆண்டு வந்த ஓர் அரசனின் மகனை சந்திரகாசன் பெற்றோர்களை இழந்து, செவிலித் தாயிடம் வளர்ந்து, குந்தள நாட்டு அமைச்சனின் சூழ்ச்சிக்கு ஆளாகி, இறுதியில் அமைச்சனின் மகளையும், அரசன் மகளையும் மணம் செய்து கொண்டு இன்பமாக வாழ்வதே இக்கதை. viii. 41/1911/III.

O31,2

**ஷேக்ஸ்பியர்**

**2061.** i. லீர் மகாராஜன் ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ் ; காக்ஸ்டன் பிரஸ், மதராஸ் ; iii. 1914 ; iv. உ.ப. 54 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. ஆங்கில மொழியில் செகப்பிரியர் எழுதிய லீர் அரசனின்

கதையைத் தழுவித் தமிழ் மொழியில் எளிய நடையில் எழுதப்பட்டுள்ளது. இப்பதிப்பகத்தார் சிறுவர்க்காக வெளியிட்ட கதைகள், நவீன தமிழ் நாவல்கள் ஆகியவற்றின் பட்டியல் இறுதியில் இணைக்கப்பட்டுள்ளது; viii. 439/1915/I.

O31,2

**ஸம்பத், ஓ.**

2062. i. கமலவதனு அல்லது கனவிற் கண்ட காதலி : முதற் பதிப்பு ; ii. ஓ. சம்பத், சென்னை ; கலாரத்நாகர அச்சுக் கூடம், சென்னை ; iii. ஜூன், 1914 ; iv. உ.ப. 68 ; v. 18×13 செ.மீ. ; vi 0–5–0 ; vii. கனவிற் கண்ட இளவரசியை மணம் செய்து கொள்ள முயலும் இளவரசனின் கதையைக் கொண்ட நாடகம். இரண்டு அங்கங்கள் கொண்டது. கதையின் வரலாறு நூல் முதலில் தரப் பெற்றிருக்கிறது. நாடக மாந்தர்களின் பட்டியலும் கொடுக்கப்பட்டுள்ளது ; viii 145/1914/III.

O31,2

## 894.8113 கதைப்பாட்டு

**அம்புஜம்மாள், ஸ்ரீரங்கம்**

2063. i. கெருட கர்வ பங்கம் : முதற் பதிப்பு ; ii. ராஜ கோபால அய்யங்கார், திருப்பாதிரிப் புலியூர் ; ஸ்ரீலக்ஷ்மி விலாச அச்சுக்கூடம், திருப்பாதிரிப்புலியூர் ; iii. டிசம்பர், 1912 ; iv. செ.மூ.ப. 15 ; v. 21×14 செ.மீ. ; v. 0–1–6 ; vii. திருமால் ஊர்தியாகிய கருடாழ்வாரின் செருக்கைப் போக்கிய புராண வரலாறு, பல்வேறு பாடல் மெட்டுக்களில் இந்நூல் பாடல்கள் அமைந்துள்ளன. கதைச்சொற் பொழிவு செய்வார்க்கு ஏற்றது. viii. 438/1913/I.

O31,3

**அலமேலு அம்மாள்**

2064. i. வள்ளியம்மன் சோபனம் : முதற் பதிப்பு ; ii. பி. வேங்கடாசல சாஸ்திரி ; வித்யா கல்பதரு அச்சுக் கூடம், கல்பாத்தி ; iii. மே, 1915 ; iv. செ.மூ.ப. 28 ; v. 15×12 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. சுப்பிரமணியக் கடவுள் வள்ளியை மணந்த கதை. 20 கட்டங்களாக இதைப் பாகுபாடு செய்துள்ளார். கதைச் சொற் பொழிவு நிகழ்த்துவோருக்குப் பயன்படும் முறையில் அமைந்துள்ளது. viii. 555/1915/II.

O31,3

**ஆதம் பாவா புலவர், மு., கன்னுக்கூர்**

2065. i. துருக்கி சண்டை : ii. மு. ஆதம் பாவா புலவர் ; ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திர சாலை ; iii. மார்ச், 1914 ; iv. செ.மூ.ப. 24 ; v. 21 × 14 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. அட்ரியா நோப்பலில் செய்த துருக்கி சண்டையைப் பற்றிய நாட்டுப் பாடல்கள். இதில் பல்கேரிய நாட்டுப் போர் முறைகள் விளக்கப்பட்டுள்ளன. இசைக்குச் சிறப்பிடம் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 858/1914/III.

O31,3

2066. i. துருக்கி சண்டை : முதற் பதிப்பு ; ii. மு. ஆதம்பாவா புலவர் ; ஷாஹுல் அமீதிய்யா அச்சியந்திரசாலை, iii. மார்ச், 1914 ; iv. ....... ; v. ... ....; vi. ........, vii. அட்ரியா நோப்பலில் துருக்கியர்கள் செய்த சண்டையை விவரிக்கும் பாடல்கள் (Bailed Style) வெவ்வேறு வகையான சந்தங்கள் அமைந்த பாடல்கள இடம் பெற்றுள்ளன. viii. 944/1914/II.

O31,3

**இரத்தின கிராமணி**

2067. i. ஸ்ரீ மதுரை வீரசுவாமி பராக்கிரமம் : முதற் பதிப்பு ; ii. இ. பார்த்தசாரதி நாயகர், சென்னை ; கோல்டன் அச்சுக்கூடம், சென்னை ; iii. செப்டம்பர், 1913 ; iv. செ.மூ.ப. 112 ; v. 21 × 14 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. தென்னாட்டில் வாழ்ந்து சிறந்த வீரச் செயல்கள் புரிந்த மதுரை வீரசாமியின் கதையைப் பாடலாகத் தருவது. கும்மி, விருத்தம், வர்ண மெட்டு, நடை என்னும் வகைகளில் பாடல்கள் உள்ளன. "மதுரை வீரசுவாமி வல்லபம்" என்றும் இதற்குப் பெயர் உண்டு. இதன் ஆசிரியர் சென்னை அயன்புரம் முனியப்ப கிராமணியின் மகன் என்பதும், இந்நூலை கலி 5013, பரிதாபி ஆண்டு, ஆனித் திங்கள் 7–ஆம் நாள் வியாழக்கிழமை, சட்டித் திதி, மக நட்சத் திரம் கூடிய நன்னாளில் முடித்ததாகவும் தெரிய வருகிறது. அப்பாசாமி உடையார், ம. தி. பானுகவி ஆகியோர் இதற்குச் சாத்துக்கவி பாடியுள்ளனர். viii. 195/1913/IV.

O31,3

**இராமலிங்க செட்டியார், சி. ஆ. வெ., சுப்பிரமணியபுரம்**

2068. i. கந்தரம்மானை : முதற் பதிப்பு ; ii. சிவராமன் செட்டியார், சிதம்பரம், ஸ்ரீவித்யா விநோதினி அச்சுக் கூடம், தஞ்சை ; iii. ஜூலை, 1912 ; iv. செ.மூ.ப.

7+258; v. 22×14 செ.மீ.; vi. 1-8-0; vii. வட மொழிக் கந்தபுராணத்தின் சங்கர சங்கிதையின் முதற் காண்டமாகிய சிவ ரகசியக் காண்டம் முருகப் பெருமான் பிறப்பையும் வெற்றியையும் உரைப்பதாகும். அது சம்பவ காண்டம், அசுர காண்டம், மகேந்திர காண்டம், யுத்த காண்டம், தேவ காண்டம், தட்ச காண்டம், உபதேச காண்டம் ஆகிய எழு காண்டங்களையுடையது. இவற்றுள் முதலாவது காண்டத்தைக் கச்சியப்ப சிவாசாரியர் கந்த புராணம் என்னும் பெயரில் 10,346 செய்யுளில் செய்துள்ளார். இதனைச் சுருக்கி சம்பந்த சரணலய சுவாமிகள் 1,049 செய்யுளாகக் கந்த புராணச் சுருக்கம் பாடியுள்ளார். இவற்றைப் பின்பற்றி யாவரும் எளிதில் உணரும் வண்ணம் சுப்பிரமணியபுரம் நகரத்தார் வேண்டுதலின்படி ஆசிரியர் இதனை இயற்றியுள்ளார். இது ஆறு காண்டங்களை யுடையது. தஞ்சாவூர் சதாவதானம் சுப்பிரமணி ஐயர் முதலிய பலர் இதற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். viii. 680/1912/III. O31,3

2069. i. **உண்ணமுலையம்மன் தவசுமாலை**: முதற் பதிப்பு; ii. அழகப்ப முதலியார், மயிலை; சிவஞான போதயந்திரசாலை, சென்னை; iii. செப்டம்பர், 1911; iv. செ.மூ.ப. 28; v. 16×12 செ.மீ.; vi. 0-4-0; vii. உண்ணமுலையம்மன் தவம் செய்து இறைவன் இடப்பாகம் பெற்ற வரலாற்றைக் கூறுவது. இது அம்மானைப் பாடல் முறையில் அமைந்தது. viii. 824/1911/III.

O31,3

**ஐயாசுவாமி பிள்ளை, ச. கே., கோவை (மொ.து.)**

2070. i. அரதன் விளிவு: முதற் பதிப்பு; ii. சி. பி. நாதமுனி நாயுடு, சென்னை; பி. ஆர். ராமையர் அண்டு கோ பிரஸ், சென்னை; iii. மார்ச், 1911; iv. செ.மூ. 347 அடிகள்; v. 18×12 செ. மீ.; vi. 0-1-6; vii. ஆங்கில மகா கவி டெனிசன் பிரபுவால் (Lord Tenuyson) இயற்றப்பெற்ற "மார்டி-டி-ஆர்தர்" (Morte 'D' Aruthur) என்னும் நூலின் மொழிபெயர்ப்பு ஆகும். ஆசிரியப்பாவில் ஆகியது. இதன் வரலாற்றுச் சுருக்கமும் அருஞ்சொற்களுக்குப் பொருள் விளக்கமும் முன்னும் பின்னுமாக இணைக்கப்பட்டுள்ளன. viii. 258/1011/II.

O31,3

**கந்தசாமி நாடார்**

2071. i. அருணசல சுவாமிகள் பூலோக நதியில் சித்து விளையாடல் அம்மானை; முதற் பதிப்பு; ii. கல்யாணசுந்தரக் கவிராயர்; சுப்பிரமணிய விலாசம் பிரஸ், சாத்தூர்; iii. ஜூன், 1912;

iv. செ.மூ.ப. 38; v. 20×13 செ.மீ.; vi. 0–4–0; vii. ஏரல் மாநகரில் சமாதி கொண்டருளும் அருணாசல நாடாரின் சித்து விளையாடல்களை விவரிப்பது. பூலோக நதி என்னும் நகரில் நிகழ்ந்த வியத்தகு செயல்களை அம்மானைப் பாட்டு நடையில் தருவது. கதைப் போக்குக்கு ஏற்ற தலைப்புக்கள் ஆங்காங்கே கொடுக்கப்பட்டிருக்கின்றன. கல்யாண சுந்தரக் கவிராயர், சுந்தர நாடார் ஆகியோர் இதற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். viii. 460/1912/III.

O31,3

**சண்முக கவிராஜர், கே., மிதிலைப்பட்டி**

2072. i. அரிச்சந்திர அம்மானை: முதற் பதிப்பு; ii. சுப்பிரமணிய சுவாமி, மைலம் & மெ.மு.மெ. மெய்யப்ப செட்டியார், ராச சிங்கை மங்கலம்; ஸ்ரீ பத்ம விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. மார்ச்சு, 1912; iv. செ.மூ.ப. 3+72; v. 22×14 செ.மீ. vi. 0–4–0; vii. வாய்மையுடைய அரிச்சந்திரனின் வரலாற்றை உரைப்பது. விவாக காண்டம் முதல் உத்தர காண்டம் ஈறுகப் பத்துக் காண்டங்களாகப் பாகுபாடு செய்யப் பெற்றிருக்கிறது. இரண்டடி கொண்ட கண்ணி முறையில் அமைந்தது. கலி 4970-ல் சித்தார்த்தி ஆண்டு வைகாசித் திங்கள் முதல் நாள் வெள்ளிக்கிழமை இதனை ஆசிரியர் செய்து முடித்ததாக மிதிலைப்பட்டி பாண்டிக் கவிராயர் பாடிய சாத்துக் கவியால் தெரிய வருகிறது. மேலும், இவர் "இசை விருத்தம் பதினேழாங், கண்ணி இரண்டாயிரத்திரு நூற்று நாற்பத்தாறு்ய், நடைபெறு அம்மானை செய்தான் குமாரசாமி நயமால் புத்திரன் சண்முகப்ப நாவலோனே" என்று கூறுவ தால் இதன் பாடல் அளவு தெரிய வருகிறது. மேலும், அழகிய சிற்றம்பலக் கவிராயர் முதலியோர் பாடிய சாத்துக் கவிகளும் உள. viii. 849/1912/I.

O31,3

**சிவகாமியம்மாள், எச்.**

2073. i. தமயந்தி சுயம்வரம்: முதற் பதிப்பு; ii. எச். சிவகாமி யம்மாள், சென்னை; கபாலி பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1913; iv. செ.மூ.ப. 24; v. 21×14 செ.மீ.; vi. 0-4-0; vii. தமயந்தி சுயம்வரத்தை இசைப் பாட்டில் தரும் நூல். கீர்த்தனைகள் வர்ண மெட்டுக்கள், சிந்து, கண்ணிகள் முதலியன சேர்ந்து அமைந்துள்ளன. இசைப் பாடலுடன் கதை சொல்வோருக்கு ஏற்றதாக அமைக்கப்பட்டது. viii. 553/1913/IV.

O31,3

**சுப்பிரமணிய தேசிகன், பொ., கரு:, பூவுற்றகுடி நகரம்.**

**2074.** i. இராமாயண அம்மானை, பாலகாண்டம்: முதற் பதிப்பு; ii. வை. மீனாக்ஷி சுந்தரஞ் செட்டியார், பூவுற்றகுடி நகரம்; ஸ்ரீகுஞ்சித சரண அச்சுக்கூடம், சிதம்பரம்; iii. மே, 1915; iv. செ.மூ. எ. 2113, ; v. 20×14 செ.மீ.; vi. 0–12–0; vii. இராமாயணக் கதையில் பாலகாண்டத்தை அம்மானைப் பாடல்கள் மூலம் எடுத்துச் சொல்கிறது இந்நூல். ஈரடிகளைக் கொண்ட 2,113 கண்ணிப் பாடல்கள் இதில் அமைந்துள்ளன. இறைவன் ஆசிரியரின் கனவில் இந்நூலையியற்றும் ஆர்வத்தையும் ஆற்றலையும் உண்டாக்கினார் என்பது ஆசிரியருடைய முகவுரையிலிருந்து தெரிகிறது. இராமகாதை மொழிந்த வால்மீகி, கம்பன், சீர்காழி அருணாசலக்கவி ஆகியோரை எடுத்துக் காட்டியுள்ளார். இவருள் சிறப்பாகக் கம்பனும், அருணாசலக் கவியும் அருளியவற்றை ஒட்டியே ஆசிரியர் இந்த அம்மானைப் பாடல் பாடியுள்ளார் என்று தெரிய வருகிறது. viii. 599/1915/II.

O31,3

**சூசையாப் பிள்ளை, ச. ரா.**

**2075.** i. நன் மரண அம்மானை; ii. சூசையாப்பிள்ளை; செயிண்ட் ஜோசப் இண்டஸ்டிரியல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. 1914; iv. உ.ப.+செ.மூ.ப. 186; v. 21×14 செ.மீ.; vi. 0–8–0; vii. இதற்குத் "திருமணத் திறவுகோல்" என்றும் ஒரு பெயர் உண்டு. கெட்ட நடத்தையும் சிற்றின்ப விருப்பும் கொண்ட ஓர் இளவரசனின் இதயத்தைத் தூய்மையடையச் செய்யும் நோக்கோடு அமைந்தது. ஈரடிச் செய்யுளாகிய கண்ணிவகைப் பாடல்களைக் கொண்டது. இந்நூல், சருக்கம் 12-க்குப் பிரிவு 100-க்குச் செய்யுள் 2040–ம், பாயிரச் செய்யுள் 60-ம் ஆகச் செய்யுள் 2100 கொண்டது. நூலின் இறுதியில் உள்ள பிற்சேர்க்கையில் பற்பல செயல்கள் முதலியவற்றின் முறையும் விளக்கப்பட்டுள்ளன. viii. 135/1915/II.

O31,3

**சூசையா பிள்ளை, சருகணி உபாத்தியாயர்**

**2076.** i. யேசுநாதர் சுவாமி திருப்பாடுகளின் பேரில் பிரலாபப் பாசுரம் (திரு வியாகுல ஒப்பாரி): ii. சூசையா பிள்ளை, சருகணி உபாத்தியாயர்; செயின்ட் ஜோசப் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. எப்ரல், 1911; iv. செ.மூ.ப. 12; v. 22×14 செ.மீ.; vi. ..............; vii. எசுநாதர் சிலுவையில் அறையப் பெற்று அடைந்த துயர நிகழ்ச்சியைக் குறித்து வழிபடும் பாடல். viii. 248/1911I/I.

O31,3

**தியாகராஜ ஐயர், பி.**

**2077.** i. கார்னேஷன் இண்டர் கார்ட்டன் பாட்டுகள்: முதற் பதிப்பு; ii. வி. கிருஷ்ணமூர்த்தி அய்யர், கூடலூர்; கிருஷ்ண விலாசம் பிரஸ், திருப்பாதிரிப்புலியூர்; iii. பிப்ரவரி, 1914; iv. உ.ப.+செ.மூ.ப. 117; v. 18×12 செ.மீ.; vi. 0-8-0; vii. "கிண்டர் கார்டன்" குழந்தைகளுக்கு ஏற்ற பாடல்களின் தொகுதி. இதில் பெரும்பாலும் கதை பற்றிய பாடல்களே மிகுதியாக உள்ளன. கதைகளும் உரை நடையில் முதலில் கொடுக்கப்பட்டுள்ளன. இவை தவிர கடவுள் வாழ்த்து, ராஜ வாழ்த்து, பள்ளி ஆய்வாளரை வரவேற்கும் பாடல்களும் உள்ளன. பிற்பகுதியில், கதைப் பாடல்களும், இரண்டு நாடகங் களும் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 723/1914/I.

O31,3

**தோத்தாத்திரி அய்யங்கார், எஸ்.**

**2078.** i. நூதன முறை சங்கீத கதா மஞ்சரி (இரண்டாம் பாகம்): முதற் பதிப்பு; ii. டி. பி. எஸ். அருணாசலம் பிள்ளை, பாளையங்கோட்டை; கார்டின் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1911; iv. உ.ப.+செ.மூ.ப. 42; v. 21×14 செ.மீ.; vi. 0-2-6; vii. சிறுவர்க்கேற்ற கதைகளும் கதைப்பாட்டுமாக அமைந்த நூல். கதைகளுக்கு உரிய விளக்கப் படங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. கதையோடு பிற பாடங்களைத் தொடர்புபடுத்தி எழுதப்பெற்ற குறிப்புக்களும் உள்ளன. viii. 858/1911/II.

O31,3

**நாதம், எஸ். ஆர்., சென்னை**

**2079.** i. ஐரோப்பிய யுத்த அம்மானை, முதல் பாகம்: முதற் பதிப்பு; ii. எஸ். யு. சங்கர தேவே அண்டு கம்பெனி, சௌகார்பேட்டை; பி. வி. டி. பிரஸ், மதறாஸ்; iii. மே, 1915; iv. செ.மூ.ப. 78; v. 21×14 செ.மீ.; vi. 0-8-0; vii. 1914-ல் நடந்து கொண்டிருந்த முதல் உலகப் போரைப்பற்றி விளக் கிடும் பாடல்களால் அமைந்த நூல். படங்களுடன் கூடிய இந் நூலில் அக்காலத்துப் போர் முறைகளும் போரின் காரணங் களும் கூடிய வரையில் தெளிவாகவும் எளிதாகவும் விளக் கப்பட்டுள்ளன. இடையிடையே பொருத்தமான தலைப்புகள் கொடுக்கப்பட்டிருப்பது பொருளை நன்கு உணர வாய்ப்பளிக் கிறது. viii. 502/1915/II.

O31,3

**புகழேந்திப் புலவர்**

2080. i. குருஷேத்திர மாலை ; முதற் பதிப்பு ; ii. நடேசப் பிள்ளை, சீர்காழி; ஸ்ரீகிருஷ்ண விலாச அச்சுக்கூடம், திருப்பாதிரிப் புலியூர் ; iii. டிசம்பர், 1912; iv. செ.மூ.ப. 28; v. 21×14 செ.மீ. ; vi. 0-1-0; vii. தஞ்சமடைந்த ஒருவனைக் குரு சேத்திரம் அனுப்ப வேண்டி கண்ணன் கோரியதை அருச்சுனன் மறுத்த காரணத்தால், கண்ணனுக்கும், பாண்டவர்களுக்கும் நடந்த போர் நிகழ்ச்சிகளை விவரிக்கும் கதைப் பாட்டு. viii. 264/1913/I.

O31,3

2081. i. கோவலன் கதை: முதற் பதிப்பு; ii. வைஜயந்தி பிரஸ், மதராஸ்; iii. ஜூலை, 1914; iv. செ.மூ.ப. 113; v. 21×14 செ.மீ. ; vi. 0–12–6 ; vii. படங்களுடன் கூடிய இந்நூல் கோவலன் வரலாற்றை நாட்டுப் பாடல்கள் வடிவில் தெரிவிக்கிறது. ஆசிரியன் வரலாறு முகவுரையில் சேர்க்கப்பட்டுள்ளது. மாதவிக்குப் பொருள் கொடுக்கச் சிலம்பை விற்கப் போன தன் கணவன் கோவலனை, ஆராயாது கொன்றுனெனப் பாண்டியன் மீது சினந்து, கண்ணகி மதுரையைத் தன் கற்பின் வலியால் நெருப்புக்கு இரையாக்கிய கதையைக் கூறுவது. கதைப் போக்கிற்கு ஏற்ற தலைப்புக்கள் இடையிடையே கொடுக்கப்பட்டுள்ளன. “மாதர் மஞ்சரி” பதிப்பு வரிசையில் இது ஆறுவது மலர். தெளிவான நல்ல பதிப்பு. இதனை “சித்திரப் பட பதிப்பு” என இதன் பதிப்பாசிரியர் குறிப்பிட்டுள்ளார். viii. 707/1914/III.

O31,3

2082. i. நல்லதங்காள் கதை ; ii. இ.மா. கோபாலகிருஷ்ணக் கோனார்; ஸ்ரீ கிருஷ்ண விலாச அச்சியந்திர சாலை, திருமங்கலம் ; iii. 1915; iv. செ.மூ.ப. 55 ; v. 22×15 செ.மீ.; vi. 0–3–0 ; vii. தமிழ் நாட்டில் நாடோடிக் கதையாய் விளங்கும் நல்லதங்காள் கதையைப் படத்துடன் விளக்குவது. அம்மானைப் பாடல் முறையில் அமைந்தது. படங்களுடன் கூடியது. கதைப் போக்கினைப் புலப்படுத்தும் தலைப்புகள் இடையிடையே தரப்பட்டுள்ளன. viii. 196/1915/IV.

O31,3

2083. i. மதுரைவீர சுவாமி கதை : முதற் பதிப்பு ; ii. குப்புசாமி நாயுடு அண்டு எம். கே. சந்தானக் கிருஷ்ணக் கோனார், மதுரை ; மியான் சாயிபு முஹம்மதியன் பிரஸ், மதுரை ; iii. ஆகஸ்ட், 1913 ; iv. செ.மூ.ப. 74 ; v. 21×14 செ.மீ.; vi. 0—3—0 ; vii. வீரசுவாமி என்பவர் மதுரையில் சிறந்த போர் வீரனாக விளங்கி, விசயரங்க நாயக்கரது வாயிற் காவலராய் இருந்தவர், வெள்ளையம்மையைச் சிறையெடுத்து அதன் காரணமாகக்

கொலையுண்டு, மீனாட்சிகோயில் தூணில் தெய்வமாய் அமர்ந் திருக்கும் பேறு பெற்றார். கதைப் போக்கிற்கு ஏற்ற தலைப்புகள் இடையிடையே உள்ளன. காசி காண்டத்தில் வியாசர் கவிகளில் சொல்லியதிலிருந்து இந்த மொழி பெயர்ப்பு எழுதப் பெற்றதாம். இந்நூலைப் படிப்போர்க்கும் கேட்போர்க்கும் உண் டாகும் பலன்கள் பின்னால் குறிக்கப்பட்டுள்ளன. படங்களும் இடையிடையே உண்டு. viii. 432/1913 III.

O31,3

2084. i. மதுரைவீர சுவாமி கதை: இரண்டாம் பதிப்பு; ii. எஸ். அய்யாசாமி பிள்ளை அண்டு இ. எம். கோபால கிருஷ்ணக் கோன், மதுரை; எம். எம். பிரஸ், மதுரை; iii. அக்டோபர், 1913; iv. செ. மூ. ப. 70; v. 20×14 செ. மீ.; vi. 0—3—0; vii. மதுரை நாயகர் ஆட்சியில் சிறந்து விளங்கிய மதுரை வீரன் என்னும் பெரு வீரனைப் பற்றிய வரலாறு. இவன் மரணமடைந்த பின் மீனாட்சி கோயில் வாயிலில் தெய்வமாக நின்றருளுகின்றான். கதையின் போக்கை விளக்கும் தலைப்புகள் இடையிடையே அமைந்துள்ளன. viii. 473/1913 IV.

O31,3

2085. i. வைகுந்த அம்மானை; முதற் பதிப்பு; ii. எஸ். கந்தசாமி பிள்ளை, ஸ்ரீமீனாம்பிகை அச்சியந்திரசாலை, மதுரை; iii. டிசம்பர், 1912; iv. செ. மூ. ப. 276; v. 21×14 செ. மீ.; vi. 0–4–0; vii. 'மகாவிந்தமென்னும் வைகுந்த அம்மானை' என்பது இதன் முழுப் பெயர். பாண்டவர்கள் அனைவரும் இவ்வுலகத்தை நீத்து வைகுந்தம் சென்ற நிகழ்ச்சியை விவ ரிப்பது. இந்த அம்மானைப் பாட்டின் இடையிடையே சில விருத்தப் பாக்களும் உள்ளன. கதைத் தொடரை விளக்கிச் சொல்லும் தலைப்புக்கள் அங்கங்கே கொடுக்கப்பட்டுள்ளன. viii. 850/1912/IV.

O31,3

**பெரியசாமி செட்டியார், வா. மு.**

2086. i. கம்பை வனத் தவமகிமை அம்மானை; முதற் பதிப்பு; ii. ஆ. வேலாயுதம் பிள்ளை; மஹமதியன் அச்சுக்கூடம், மதுரை; iii. ஜனவரி, 1913; iv. செ. மூ. ப. 100; v. 20×13 செ. மீ.; vi. 0—4—0; vii. காமாட்சியம்மை "கம்பைவனத்தில்" தவம் செய்து சிவபெருமானை அடைந்த வரலாற்றை உரைப்பது. இது காஞ்சித் தல புராண வரலாறு கும். அம்மானைப் பாட்டு நடையில் அமைந்தது. இடையிடையே சிற்சில விருத்தங்கள் வருகின்றன. விருத்தப் பாடலை விருத் தம் என்றும், அம்மானைப் பாடலை நடை என்றும் இந் நூல் குறிப்பிடுகிறது. viii. 493/1913/I.

O31,3

**பொன்னுசாமிப் பிள்ளை, ஜெ., தஞ்சாவூர்**

2087. i. சீர் கெட்ட குமரன் சரிதை : ii. தி ரில்ஜியஸ் ட்ரேக்ட் அண்டு புக் சொஸைட்டி ; எஸ். பி. சி. கே. பிரஸ், வேப்பேரி, சென்னை ; iii. 1912 ; iv. செ. மூ. ப. 32 ; v. 14×9 செ. மீ. ; vii. 0—0—9 ; vii. இது விவிலிய நூல் கதைகளில் ஒன்று. கதை நிகழ்ச்சிகள் சிறுசிறு தலைப்பு களில் ஓரடி செந்துறைப் பாடலால் பாடப்பட்டிருக்கிறது. இக் கதைக்கு அடிப்படையான வேதவாக்கியங்கள் நூலிறுதியில் தொகுத்துத்தரப்பட்டுள்ளன. viii. 217/1912/III.

O31,3

**மங்களாம்பாள், பட்டுக்கோட்டை**

2088. i. சாகுந்தலம் : முதற் பதிப்பு ; ii. மங்களாம்பாள், பட்டுக்கோட்டை ; ஸ்ரீ நாடியம்மன் அச்சுக்கூடம், பட்டுக் கோட்டை ; iii. நவம்பர், 1913 ; iv. செ. மூ. ப. 14 ; v. 20×13 செ. மீ. ; vi. 0—1—6 ; vii. சகுந்தலையின் வரலாற்று நிகழ்ச்சிகளைச் சுருக்கமாகப் பாடலில் தரும் நூல். பல்வேறு மெட்டுகளில் அமைந்த பாடல்கள் இதில் உள்ளன. viii. 233/1914/I.

O31,3

**மு[illegible]சாமி முதலியார், சூளை**

i. ஷோலாப்பூர் குரங்குகளின் ஜட்ஜிமெண்ட், இரண்டாம் பாகம் : (தொ. எ. 1905 பார்க்க); முதற் பதிப்பு ; ii. நாராயணசாமி முதலியார், களத்தூர் ; ஆதிகலைநிபதி அச்சுக்கூடம், சூளை, சென்னை ; iii. பிப்ரவரி, 1911 ; iv. செ. மூ. ப. 8 ; v. 21×14 ; செ.மீ. ; vi. 0—3—0; vii. குரங்குகள் கொலையாளியைக் கண்டுபிடிக்கத் துணை செய்ததும், அவைகள் சாட்சி சொன்னதும் பற்றிய நிகழ்ச்சியை விவரிப்பது. தமிழ் செய்தித் தாளில் வந்த செய்தியை அடிப் படையாக வைத்துப் பாடப்பெற்றது. viii. 497/1911/I.

O31,3

**யக்ஞும் அய்யர், டி. ஏ., சிவகிரி**

2089. i. கதைகளும் அபிநயப் பாட்டுக்களும் : முதற் பதிப்பு ; ii. டி. ஏ. யக்ஞும் அய்யர் ; ஸ்ரீ ராமநுஜம் ப்ரஸ், தென் காசி ; iii. ஆகஸ்ட், 1911 ; iv. உ. ப.+செ. மூ. ப. 1+48 ; v. 18×11 செ. மீ. ; vi. 0—3—0 ; vii. சிறுவர்க்கு ஏற்ற சில சிறு கதைகளும் கதைப்பாட்டுகளும் கொண்ட நூல். பன்னிரண்டு கதைகள் உள்ளன. viii. 411/1911/III.

O31,3

**ராமகிருஷ்ண முத்து நாடார், நா.**

2090. i. அருணாசல சுவாமிகளின் சித்து விளையாடல் அம்மானை ; முதற் பதிப்பு ; ii. கெ. மு. இராமசாமிக் கவிராயர், சிறுத் தொண்டநல்லூர் ; டார்லிங் பிரஸ், பாளையங்கோட்டை ; iii. ஜனவரி, 1911 ; iv. செ. மூ. ப. 28 ; v. 22×14 செ. மீ. ; vi. 0—4—0 ; vii. எரல் மாநகரத் தலைவர் அருணாசல சுவாமிகள் வரலாற்றையும் அவர் சமாதியானபின், அங்கே நிகழ்ந்த பல வியத்தகு நிகழ்ச்சிகளையும் விவரிப்பது. இது பெண்கள் பாடும் அம்மானைப்பாடல் முறையில் அமைந்தது. பாடல்களினிடை யிடையே கதைப்போக்கைத் தெரிவிக்கும் தலைப்புக்கள் உள்ளன. அமாவாசை, பவுர்ணமி நாட்களில் இவருடைய சமாதிக்கு மக்கள் திரளாக வந்து வணங்கி வழிபட்டு நற்பேறு பெற்றனர் என்றும் ஆசிரியர் குறித்துள்ளார். viii. 283/1911/I.

O31,3

**லாசரஸ், இ. சி. ம.**

2091. i. சமயோபகாரி சரித்திரப் பாமாலை : முதற் பதிப்பு ; ii. ஜெ. எஸ். செபஸ்டியன் ; கமர்ஷியல் அச்சுக்கூடம், உதகமந்து ; iii. டிசம்பர், 1911 ; iv. செ.மூ.ப. 31 ; v. 18×12 செ. மீ. ; vi. இலவசம் ; vii. ஏசுநாதர் சொன்ன நல்ல சமாரியன் உவமைக் கதையை அடியொற்றி அமைந்த பாட்டு. விவலிய நூலில் லூக்காவின் சுவிசேடம் (10, 25—35) பகுதியில் காண்கின்ற நிகழ்ச்சிகளை அடிப்படை யாகக் கொண்டு அமைந்தது. viii. 87/1912/I.

O31,3

**விசாலாக்ஷி அம்மாள், கும்பகோணம்**

2092. i. மார்க்கண்டேயர் சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. பு.- முனுசாமி நாயுடு, சென்னை ; சங்க நிதி விளக்க அச்சுக் கூடம், சென்னை ; iii. எப்ரல், 1913 ; iv. செ. மூ. ப. 36 ; v. 18×11 செ. மீ. ; vi. 0—3—0 ; vii. திருக்கட வூரில் தொண்டன் மார்க்கண்டனுக்காக எமனைக் காலால் உதைத்த வரலாறு. இசைப்பாடல் விருத்தம் முதலிய பாடல் களால் அமைந்தது. இசைப்பாடல்களுக்கு இராகதாளக் குறிப் புக்களும் உள. viii. 233/1913/II.

O31,3

**ஜெகராஜ சிங்கக் குருக்கள், மு. தி. ராம. ஆ .குன்னூர்**

2093. i. ராமாயண அம்மானை, ஆதிகாண்டம் : முதற் பதிப்பு ; ii. பொன்னுச்சாமி பிள்ளை அண்டு ஷண்முகவேலு குருக்கள் ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii.

ஜூன், 1911; iv. செ.மூ.ப. 206; v. 22×14 செ.மீ.; vi. 1—0—0; vii. கம்பர் தாம் இயற்றிய இராமாயணத்தில் பாலகாண்டத்தின்கண் எழாவதான கையடைப் படலத்தில் எட்டாவது செய்யுளுக்குரிய செய்தியை அடிப்படையாகக் கொண்டு பாடப்பெற்ற கதைப் பாட்டு. தசரதன் சம்பராசுரனைக் கொன்று இந்திரனுக்குத் துணை புரிந்த நிகழ்ச்சியை இது கூறுகிறது. viii. 727/1911/II.

O31,3

**ஸ்ரீநிவாஸராகவாசாரியர்**

2094. i. வேதாந்த தேசிக வைபவம்; ii. ஸ்ரீநிவாஸராகவாசாரியர்; நீமா பிரஸ், திருப்பாப்புலியூர்; iii. 1915; iv. செ.மூ.ப. 8; v. 15×10 செ.மீ.; vi.........; vii. காஞ்சியில் பிறந்த ஸ்ரீவைஷ்ணவ சமய ஆசானாகிய வேதாந்த தேசிகரின் வாழ்க்கைச் சிறப்புகளைப் பேசுவது. இவரது வாழ்க்கை வரலாறு ஈரடிச் செய்யுட்களில் அமைந்துள்ளது. "சீரார் கச்சியிலோரூராம், பேரானுயர்ந்த தவ்வூராம்" என்றாற்போல, எல்லாப் பாடலடிகளும் "ராம்" என்னும் முடிவைப் பெற்றுள்ளன. இவரது கல்வி, இவர் செய்த 'யாத்திரை' இவர் இயற்றிய பனுவல்கள் ஆகியவற்றை இந்த வாழ்க்கை வரலாற்றுப் பாடலில் காணலாம். viii. 343/1915/I.

O31,3

## 894·8113 கதைகள் : நவீனங்கள்

**அந்தோனிப் பிள்ளை, என். ஏ.**

2095. i. சுகுண சுந்தரி: முதற் பதிப்பு; ii. பி. முத்து வீர நாவலர், பூஞ்சோலை; பூலோக வியாஸன் பிரஸ், சென்னை; iii. ஜூன், 1912; iv. உ. ப. 2+32; v. 22×14 செ. மீ.; vi. 0—4—0; vii. தந்தையின் சொல்லை ஏற்று நடந்தவளும், கற்பிற் சிறந்து விளங்கியவளுமாகிய, சுகுண சுந்தரி என்னும் வணிக மாதின் வரலாற்றினைக் கூறுவது. பூஞ்சோலை முத்து வீர நாவலர் என்பவரும். சாமிக்கண்ணுப் புலவரும் இந்நூலாசிரியரையும், இந்நூற் பொருளையும் சிறப்பித்துக் கவிதை பாடியுள்ளனர். viii. 141/1912/III.

O31,3

2096. i. அதிசயமான கிளி: முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ்; காக்ஸ்டன் பிரஸ், மதுரை; iii. ஜூன், 1913; iv. உ. ப. 32; v. 18×12 செ. மீ.; vi. 0—1—0; vii. கிளிகளைப் பற்றிய ஆறு அறநெறிக் கதைகளைக் கொண்ட நூல். "சிறுவர்களுக்கான கதைப் புத்தக வெளியீட்டில்" இது ஒன்று. சிறுவர்க்கான கதை நூல்களின் வெளியீடுகளைப் பற்றிப் பின் மேலட்டையில் காணப்படுகின்றது; viii. 910/1913/II.

O31,3

**அமிர்தம் பிள்ளை, அ. க., திரிசிரபுரம்**

2097. i. கற்பினால் கணவனைத் திருத்திய சூளாமணி: முதற் பதிப்பு; ii. அ. சிவப்பிரகாசம் பிள்ளை; சந்திரா பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1912; iv. உ. ப. 20; v. 18×12 செ. மீ.; vi. 0—1—0; vii. இச்சிறு கதை மக்கள் பெற்றோர்க்குக் கீழ்ப்படிதல், கற்பு, பரத்தையரியல்பு, ஆண், பெண் இருபாலரும் மேற்கொள்ள வேண்டிய ஒழுக்கங்கள் முதலியவற்றைக் கற்பிப்பது. "தாமா கயற் கண்ணி" என்று தொடங்கும் தனிப்பாடலை அடிப்படையாகக் கொண்டு இக்கதை புனையப்பெற்றது. viii. 39/1912/II.

O31,3

**அய்யாசாமி அய்யர், வி., தென்கரை**

2098. i. சங்கரசுந்தரி; முதற் பதிப்பு; ii. வி. அய்யாசாமி அய்யர்; தென்கரை; மகமதியன் அச்சுக்கூடம், மதுரை; iii. பிப்ரவரி, 1914; iv. உ.ப. 3+168; v. 21×14 செ.மீ.; vi. 0-12-0; vii. இந்து சமுதாயத் திருமண முறைகளில் தற்காலத்தில் இருந்துவரும் சில சீர்கேடான முறைகளை இந்நூல் கடிந்துரைக்கின்றது. வரசுல்கம், கன்னியா சுல்கம், வயதுவந்தோர் இளம் பெண்களைத் திருமணம் செய்தல், தாய், தந்தை முதலியோர்க்கு அடங்கி நடவாமை முதலிய வற்றால் அளவற்ற தீங்கு விளையும் என்பதை விளக்கும் நோக்கத்துடன் இக்கதை அமைந்துள்ளது. viii. 592/1914/I.

O31,3

**அருணாசலம் பிள்ளை, வி. எஸ்.**

2099. i. சிதம்பர தேவர் சரிதம்; ii. வி. எஸ். அருணா சலம் பிள்ளை; மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை; iii. 1911; iv. உ. ப. 180; v. 22×14 செ. மீ.; vi. 1—0—0; vii. இது ஒரு நூதன கதை. 31 அத்தி யாயங்கள் கொண்டது. வீடு பேற்றுக்குக் காரணமான பல வகை வழிகளைக் கதை வடிவில் விவரிப்பது. இக்கதை நட்பு, ஒற்றுமை, அரசத் தொண்டு மக்களாட்சி முதலிய செய்திகளை உணர்த்துவதுடன், நமது உடலை விரும்பி ஏற்ற உயிர் யார்? எங்கேயிருந்து வந்தவன்? எங்கே செல்பவன்? என்பவை களை யாராய்ந்து பார்க்கத்தக்க விருப்பத்தை விளைவிப்பதற்காக வும் இயற்றப்பட்டது. viii. 532/1912/IV. O31,3

2100. i. அன்புள்ள சகோதரி: முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு அண்ட் ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1913; iv. உ.ப. 31; v. 18×13 செ.மீ.; vi. 0-1-0; vii. இதில் 'அன்புள்ள சகோதரி', 'இரவல் கேட்பா னேன்', 'பரிசுத்தமாக இரு'என்னும் மூன்று கதைகள் உள்ளன. இவை சிறுவர்க்கு வீட்டுப் பாடமாக அமையத்தக்க அறநெறிக் கதைகளாகும். viii. 976/1913/I.

O31,3

**அனவரத விநாயகம் பிள்ளை, எஸ்.**

**2101.** i. ஆபத்தில் சிநேகிதர் : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை, iii. அக்டோபர், 1911 ; iv. உ.ப. 2+36 ; v. 18×12 செ.மீ. vi. 0–1–6 ; vii. இது நீதி கதாமாலை வரிசையில் மூன்றும் புத்தகம். இந்த வரிசையில் அறத்தை விளக்கும் கதைகளே அமைந்திருக்கின்றன. தேவையான இடங்களில் விளக்கப் படங்களும் தரப்பட்டிருக்கின்றன. viii. 399/1911/V.

O31,3

2102. i. வெள்ளைப் பூனை : முதற் பதிப்பு ; ii. ஸி. குமாரசாமி நாயுடு அண்ட் ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1911 ; iv. உ.ப. 31 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. யட்சணி என்னும் தேவதைக் கதை. யட்சணி யின் மந்திர வன்மையால் பூனையாக்கி வளர்க்கப்பட்ட இளவரசி தன்சாபம் நீங்கி, ஓர் இளவரசனை மணந்த கதை ; பத்து அத்தியாயங்கள் கொண்டது. viii. 854/1911/IV.

O31,3

**ஆண்டாள் அம்மாள், ஆர்.**

2103. i. இந்துமுகி : முதற்பதிப்பு ; ii. ஆர். ஆண்டாளம்மாள்; ஸ்ரீசாரதாம்பாள் பிரஸ், மதுரை ; iii. மார்ச், 1911 ; iv. உ.ப. 289+1 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–8–0 ; இந்துமுகி ஒரு வீராங்கனை. இவள் பெண்களுக்கு வேண்டிய அறிவுக்கூர்மை, சாந்தம், தயை, கண்ணோட்டம் முதலியன மேன்மேலும் பெருகும் பொருட்டு பல அருஞ்செயல்களால் தற்காத்துக் கொண்டாள் என்று கதையில் விவரிக்கப்பட்டுள்ளது. இது இருபத்தைந்து "பரிச்சேதங்களாக"ப் பாகுபாடு செய்யப் பட்டுள்ளது. viii. 651/1911/I.

O31,3

2104. i. ஆர்ய சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. கணேஷ் அண்டு கம்பெனி, சென்னை ; கேம்பிரிட்ஜ் பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1915 ; iv. உ. ப. 287 ; v. 18×13 ; vi. 1–0–0 ; vii. அறநெறி கற்பிக்கும் கதைகளின் தொகுப்பு. புராணங் களிலிருந்து தொகுக்கப் பெற்றவை இக்கதைகள். இதிகாசங் களாகிய இராமாயணம், பாரதம் முதலிய பல நூல்களிலிருந் தும் சில தொகுக்கப்பட்டன. வாய்மை பேசி மேன்மை அடைந்த அரிச்சந்திரன் கதை, சூதாடி நாடிழந்த நிடத நாட்டரசனான நளன் கதை போன்ற 25 கதைகள் இதில் இடம் பெற்றுள்ளன. படங்களுடன் கூடியது இந்நூல். viii. 91/1915/II.

O31,3

**ஆலன், ஜே. சி.**

2105. i. பஞ்சதந்திரக் கதைகள் ; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்ட் கம்பெனி ; ஆனந்தா பிரஸ், சென்னை ; iii. 1914; iv. உ.ப. 42 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. திரு. டி. செல்வக் கேசவராய முதலியாரால் பள்ளிச் சிறுர்க்கென ஜே. சி. ஆலன் எழுதிய நூலினின்று மொழி பெயர்க்கப்பட்ட நூல். இந்நூலில் மூன்று தந்திரங்களே அடங்கியுள்ளன. படங்களுடன் கூடியது. viii. 306/1915/II.

O31,3

2106. i. ஆனந்தக் கண்ணுடி : முதற் பதிப்பு ; ii. வி. குமார சாமி நாயுடு அண்ட் சன்ஸ் ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1913 ; iv. உ.ப. 32 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. சிறுவர்களுக்குக் கீழ்வகுப்பில் வீட்டுப் பாடமாகப் பயன்படத் தக்க வகையில் எழுதப்பட்டது. அடங்காப் பிடாரி முதலிய ஒன்பது கதைகள் உள்ளன. இவை அறத்தை விளக்கும் கதைகள். viii. 1913/I.

O31,3

**இரங்கசாமி நாயுடு, தி., காஞ்சிபுரம்**

2107. i. தனபதி : முதற் பதிப்பு ; ii. எஸ். துரைசாமி முதலியார், சென்னை ; ரா. விவேகானந்த அச்சுக்கூடம், புரசை, சென்னை ; iii. பிப்ரவரி, 1915 ; iv. உ.ப. 159 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. இக்கதையில் மனிதன் அறநெறியில் செல்ல வேண்டுமென்பதும் மாதர்தம் கற்பின் வலிமையும் கூறப்பட்டுள்ளன. சிறப்பாகச் சாதகம் பொய்யாகாது என்பதும், ஊழ்வினையை ஒட்டியே நன்மை—தீமைகளை அடைய வேண்டி வருகிறதென்பதும் இக்கதையின் உட்கருத்தாகும்; தொடக்கம் முதல் இறுதிவரையில் இன்றியமையாத இடங்களில் மேற்கோள்களாகப் பல செந்தமிழ் நூல்களினின்றும் பாடல்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. viii. 679/1915/I.

O31,3

**இரங்காச்சாரி, வி., உடுமலைப்பேட்டை**

2108. i. இராமாயண கவுஸ்துபம் : முதற் பதிப்பு ; ii. எம். இராமநுஜாச்சாரி அண்டு ஸன்ஸ், சென்னை ; ஆர்.பி. பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1915 ; iv உ.ப. 91 ; v. 21×14 செ.மீ.; vi. 0–6–0; vii. இராமாயணக் கதையை உரைநடையில் தருகிறது இந்நூல். வால்மீகி இராமாயணத்தை அடியொற்றி அமைந்த உரைநடை நூல். 46 அத்தியாயங்களில் அமைந்துள் ளது. viii. 166/1915/I.

O31,3

இரத்தினம் பிள்ளை, தி., திரசிரபுரம்

2109. i. சுகந்த பரிமளாங்கி ; முதற் பதிப்பு ; ii. தி. இரத்தினம் பிள்ளை, எட்வர்ட் அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1911 ; iv. உ.ப. 36 ; v. 17×11 செ.மீ.; vi. 0–2–0 ; vii. ஆங்கிலேய நாவல்களின் போக்கையொத்து உரையாடல் வடிவில் எளிய இனிய தமிழ்நடையில் எழுதப்பட்டிருக்கிறது. இது ஒன்பது அத்தியாயங்களைக் கொண்டது. இல்லறத்தார்க்கு மகன் வேண்டுமென்பதும், அம்மகனால் உண்டாகும் புகழையும் மேற்கோளுடன் நன்கு புலப்படும்படி எழுதப்பட்டிருக்கிறது. viii. 22/1912/II.

O31,3

இராமச்சந்திர சாஸ்திரி, எஸ்.

2110. i. பீஷ்ம விஜயம் : ii. சுதேசமித்திரன் பவர் பிரஸ்; சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 161 ; v. 18×13 செ.மீ., vi. 0–8–0 ; vii. வடமொழியில் 1912-ஆம் ஆண்டு லக்ஷ்மணஸூரி என்பார் உரைநடையில் எழுதிய நூலை ஒட்டியமைந்த தமிழ்மொழி பெயர்ப்பு. "உச்சுவாஸம்" என்னும் பெயர் புனைந்த எழு பகுதிகள் இதில் உள. ஜி. சுப்பிரமணிய ஐயர் இதற்கு முகவுரை எழுதியுள்ளார் viii. 879/1915/II.

O31,3

இராமலிங்க முதலியார், டி.

2111. i. பங்கஜவல்லிக் கதை : திருத்திய பதிப்பு ; ii. எஸ்.பி. இராஜராமர், சென்னை ; சன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1913 ; iv. உ. ப. 96 ; v. 21×14 செ. மீ. ; vi. 0–8–0 ; vii. படித்த பெண்ணாகை இருந்தும் எங்ஙனம் ஒரு பெண் சிற்றின்ப வயப்பட்டாள் என்பதை இக்கதை விவரிக்கின்றது. உலகியலிலும், அறநூல்களிலும் தெளிவுண்டாக வேண்டும் என்னும் கருத்தால் இக்கதையில் "பிரசங்கம்" என்னும் ஒரு பொருளைப் புகுத்திப் பல அரிய செய்திகளை விளக்கிக் காட்டுகின்றார் ஆசிரியர். கோட்டாறு அ. ப. சைக்குத்தம்பி பாவலர் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார் ; viii. 375/1913/IV.

O31,3

2112. i. மோஹனசுந்தரி ; திருத்திய பதிப்பு ; ii. எஸ். பி. இராஜாராமர், சென்னை ; சன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை ; iii. ஜுலை, 1913 ; iv. உ. ப. 64 ; v. 21×14 செ.மீ.; vi. 0–6–0 ; vii. மாற்றுந்தாயின் கொடுமைகளைத் தாங்கிக் கொண்டு, நன்னிலை அடைந்த ஒருவனின் கதையை இந்நூல் விவரிக்கின்றது. இதில், மாற்றுந்தாய்க் கொடுமையும், பொறுமை காரணமாகப் பெண்களுக்கு உண்டாகும் வன்னெஞ்ச மும், தெய்வத் தன்மையும், தீமை செய்தோர் தீமையே அனுபவிப்பர் என்னும் உண்மையும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. குன்றத்தூர் மதுரகவி மாணிக்க முதலியார் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். viii. 376/1913/IV.

O31,3

**இராமசாமி அய்யர், எஸ். எ.**

2113. i. பத்மனுபன் : முதற் பதிப்பு ; ii. லலிதா விலாஸ் புஸ்தகசாலையார், திருவல்லிக்கேணி, மதருஸ் ; கமர்ஷியல் பிரஸ், சென்னை ; iii நவம்பர், 1912 ; vi. உ.ப. 214 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. காதலர்களின் எதிர் காலத்தில் நிகழும் நல்வாய்ப்பை பற்றி விவரிக்கும் ஒரு கதை. ஐந்து அத்தியாயங்கள் கொண்டது. viii. 116/1913/I.

O31,3

**இராமசாமி அய்யர், சு.**

2114. i. ஞானமிர்தம் (முதற்பாகம்) ; ii. சி. எஸ். இராதா கிருஷ்ண ஐயர் ; ஆரியன் அச்சுக்கூடம், கும்பகோணம் ; iii மார்ச்சு, 1913 ; iv. உ. ப. 11+179 ; v. 8×13 செ. மீ. ; vi. 0–10–0 ; vii. நூலாராய்ச்சியால் ஆனந்த மும், ஆனந்தத்தால் மனனமும், மனனத்தால் ஞானமும் ஞானத்தால் பக்தியும், பக்தியால் முக்தியும் பயக்கும் என்னும் தத்துவத்தை இக்கதை வெளிப்படுத்துகிறது. மகாமந்திரங் களில் சிறந்த பஞ்சாட்சர மகா மந்திரத்தை அடிப்படையாகக் கொண்டு இந்நூல் எழுதப்பட்டது. உடம்பினுள் உத்தமனை காணத்தூண்டும் நூல். இந்நாவலில் அறவுரைகளும், அரு ளுரைகளும் நிறைந்திருக்கின்றன. எட்டு அத்தியாயங்களைக் கொண்டது. viii 989/1913/I.

O31,3

**இராமஸ்வாமி அய்யங்கார், எஸ். வி, தஞ்சை.**

2115. i. நீதிவாக்கியக் கதைகள், உலக நீதி : முதற் பதிப்பு; ii. கே. நாராயணசாமி ஐயர். கும்பகோணம் ; சாராதா விலாச பிரஸ், கும்பகோணம் ; iii ஜனவரி, 1913 ; iv.

உ. ப. 28 ; v. 19×13 செ. மீ. ; vi. 0–1–6 ; vii மாணவர்க்கு அறநெறியைக் கற்பிக்கும் பொருட்டு இயற்றப் பட்டது. உலகநீதி தொடர்களில் இருபது சொற்றொடர்களுக்கு எற்ற கதைகள் இதில் உள்ளன. இவற்றில் பெரும்பாலும் இதிகாச புராணத்திலிருந்து எடுத்த கதைகளே உள்ளன. viii. 241/1913/I.

O31,3

2116. i. பிதா போக்கும் புதல்வி நோக்கும் : முதற் பதிப்பு ii. எஸ். வி. இராமஸ்வாமி அய்யங்கார், ஸ்டாண்டர்டு அச்சியந்திரசாலை, கும்பகோணம் ; iii. செப்டம்பர், 1913 ; iv. உ. ப. 64 ; v. 16×13 செ. மீ. ; vi. 0–2–6, vii. இங்கிலாந்து நாட்டுப் பெண்மணி மிஸ். எட்ஜ்வர்த் ( Miss Edgworth ) என்பார் இயற்றிய அரிய கதைகளுள் ஒன்று 'ஓல்ட்' பாய் ( Old boy ) என்பது இந்தச் சிறு நாடகக்கதையை அங்கங்கே இடத்திற்கேற்பவும் காலத்திற்கிணங்கவும் கூட்டியும் மாற்றியும் குறைத்தும் இத் தமிழ்நூலை ஆக்கியுள்ளார். மூன்று அங்கங்களாக இது உள்ளது. கதை உறுப்பினர்களைப் பற்றிய குறிப்பும் கொடுக்கப் பட்டிருக்கிறது. viii. 77/1913/IV

O31,3

2117. i. போஜ பட்டாபிஷேகம் ; ii. நாராயணஸ்வாமி அய்யர், கும்பகோணம் ; இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை ; iii. 1915- iv. உ. ப. 28 ; v. 19×12 செ. மீ. ; vi. 0–1–6 ; vii. தாரா நகரத்து இருந்து ஆண்ட பேரரசன் போசன். இளமை யில் சிற்றப்பனின் பொறாமைக்கு ஆளாகி, பின் அவனது கழிவிரக்கத்தால் தனது அரசைப் பெற்று வாழ்ந்தான். பேரசனின் இளமைக்கால நிகழ்ச்சி இதில் விவரிக்கப்பட்டிருக் கின்றது. அவன் முடி சூடியது வரையிலும் உள்ள வரலாறு இதில் உள்ளது. vii. 40/1915/IV.

O31,3

**இராமாநுஜலு நாயுடு, எஸ். ஜி., & பாலபாஸ்கரர், திரிசிரபுரம்**

2118. i. ஆநந்த கதாகல்பகம்-தொகுதி ; ii. எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு, திரிசிரபுரம்; சுதேசமித்திரன் அச்சுக்கூடம், சென்னை ; iii. பிப்ரவரி, 1914 ; iv. உ. ப. 13+572 ; v. 21×15 செ. மீ. ; vi. 2-10-0 ; vii. உலக நடை முறைகளைக் கதைகள் வாயிலாக மக்களுக்குக் கொடுக்க வேண்டும் என்னும் நோக்கத்தோடு தொகுக்கப்பட்டது. இதில் காணும் பொருள்கள் எல்லாம் திருவரங்கத்திலிருந்து வெளி வந்த "பிரஜாநுகூலன்" என்னும் இதழில் வெளி வந்த கட்டுரைகள் நூல் வடிவில் தொகுக்கப்பட்டிருக்கின்றன. இதன் முதற் பகுதியில் நாவல்கள் அடங்கியிருக்கின்றன. ஒவ்

வொரு மனிதருடைய உள்ளத்திலும் ஒளிந்து கிடக்கும் மறை பொருளை வெளிப்படுத்திக் காட்டும் தன்மையை உடையன. நான்கு பகுதிகளாக இது அமைந்துள்ளது. பதினெட்டுத் தொகுதிகளாக, பதினெட்டாண்டுகளில் வெளியிட்டு முடிக்க எண்ணித் தொடங்கியதில் இது முதலாவது, முகவுரையைப் படித்து விட்டு மேற் செல்லுமாறு படிப்பவர்களுக்குத் தொடக் கத்திலேயே, குறிப்புச் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 628/1914/I.

O31,3

**இராமாநுஜலு நாயுடு, எஸ். ஜி., திரிசிரபுரம்**

**2119.** i. கதா மோகன் ரஞ்சிதம் ; iii எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு ; ஷண்முக விலாஸ் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. 1915 ; iv. உ ப. 250 ; v. 21×14 செ. மீ. ; vi. 1–0–0 ; vii. சுவைபொதிந்த கதைகளும், நாவல்களும் இந்நூலில் அடங்கியுள்ளன. "நளச்சக்கரவர்த்தியின் கருணை" தொடக்க மாக, "கை தெரிந்த திருடன்" ஈறுக 69 பொருள்கள் இதில் விவரிக்கப்பட்டுள்ளன. "தமிழ் அபிமானம்" "இலக்கண ஞானம்" " தமிழ் மொழி பெயர்" என்பன தமிழ் மொழி வரலாறு தொடர்பானவை. இது "பிரபஞ்ச விலாஸம் புத்தக வரிசையில்" பதினான்காவது வெளியீடாகும். viii. 844/1915/IV.

O31,3

**2120.** i. சுகுமார திலகம் அல்லது கற்புஷ்லக்ஷணம் : முதற் பதிப்பு; ii. கி. இராம ஐயர் & எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு; பாக்கிய விலாஸ் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii நவம்பர், 1911 ; iv. உ.ப. 28 ; v. 22×14 செ.மீ. vi. 0–2–0 ; vii. இது ஒரு கற்புள்ள மங்கையின் பெருமையை வெளியிடுவதாக அமைந்துள்ளது. தன் வாக்கினால் காம எண்ணம் கொண்ட ஓர் ஆடவனைத் திருத்திய வரலாறு இதில் காணலாம். இது "பிரஜானுகூலன்" இதழில் முதலில் வெளிவந்து பின்பு நூல் வடிவில் தனியாக வெளி யிடப்பட்டது. viii. 517/1911/IV.

O31,3

**2121.** i. நாகரீக பாரிஜாதம் அல்லது பெண்மக்கள் துயரம் ; முதற் பதிப்பு ; ii. இராம ஐயர் ; பாக்கிய விலாஸ் பிரஸ், திருச்சி ராப்பள்ளி ; iii. ஆகஸ்ட், 1911 ; iv. உ. ப. 1+40; v. 21×14 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. இது பிரபஞ்ச விலாச வரிசையில் ஏழாவது நூல். விதவை மணத்தை வற்புறுத்தியும், பெண்கள் சமுதாயத்தில் முன்னேற்றம் காண வலியுறுத்தியும் விவரிக்கப்பட்ட கதைநூலின் தொகுப்பு.

மதங்களைப் பற்றி அறிஞர்கள் பலர் கூறிய கருத்துக்கள் சில அத்தியாயங்களின் முடிவில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 414/1911/III.

O31,3

2122. i. பிரபஞ்ச விலாஸம், இரஞ்சிதரத்தினம் : முதற் பதிப்பு ; ii. எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு, திரிசிரபுரம் ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. மே, 1911 ; iv. உ. ப. 32 ; v. 22×14 செ. மீ. ; vii. 0–2–6 ; உலகில் நிகழும் பல வேடிக்கை நிகழ்ச்சிகளைக் கதை போலத் தொகுத்துத் தருவது. அறம், இலக்கியம், வரலாறு, சமூகம் பற்றிய செய்திகளைக் குட்டிக் கதைகள் வாயிலாக எடுத்துரைப்பது. viii. 742/1911/II.

O31,3

2123. i. வித்தியா நவநீதம் அல்லது அறிவிற்கு உணவு : முதற் பதிப்பு ; (திருச்சிராப்பள்ளியின் புராதன விருத்தாந் தங்கள்); ii. கி. இராம ஐயர் ; பாக்கிய விலாஸ் பிரஸ், திருச்சி ராப்பள்ளி ; iii. ஆகஸ்ட், 1911 ; iv. உ. ப. 222 ; v. 21×14 செ. மீ. ; vi. 0–14–0 ; vii. பிரபஞ்ச விலா சம் என்னும் வரிசையில் இது ஐந்தாவது நூல். அறி விற்கு நல் விருந்தான பல கதைகளும் குறிப்புகளும் கொண்ட நூல். அறம் இலக்கியம், வரலாறு ஆகியவற்றை விளக்கும் கட்டுரைகளையும் சமூக நிகழ்ச்சிகளை விளக்கும் சிறுகதைகளையும் கொண்ட நூலாகும. viii. 412/1911/III.

O31,3

2124. i. ஜனகா மோஹன் சாதுரியம் அல்லது எலி பிடிக்கும் பொறி ; ii. கி. இராம ஐயர், பாக்கிய விலாஸ் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. ஆகஸ்ட், 1911 ; iv. உ. ப. 1+102; v. 22×14 செ. மீ. vi. 0–5–0 ; vii. பிரபஞ்ச விலாசம் வரிசையில் இது ஆறுவது நூல். இருபது அத்தியாயங்கள் கொண்ட புதினம். பொய் வாழ்க்கையை மேற் கொண்டிருந்த ஓர் அரசன் இறுதியில் சிறையில் தள்ளப்பட்டு ஒதுக்கப்பட்ட கதையை விவரிப்பது. viii. 413/1911/III

O31,3

**இராமு முதலியார், க.**

2125. i. அழகிய அதிவிவேக அமராவதி : முதற் பதிப்பு ; ii. வி. ஜெயவேலு முதலியார் ; பிரஸிடென்சி அச்சுக்கூடம், சென்னை ; iii. எப்ரல், 1915 ; iv. உ. ப. 133 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–12–0 ; vii. ஆங்கில நாவல் ஒன்றின் தழுவல் ஆகும். இதில் மனமொத்த காதலர் களின் வாழ்வில் ஏற்படும் இடையூறுகளும், முடிவில் அவர்கள்

மணந்து இன்பநிலை அடைவதும் விளக்கப்பட்டுள்ளன. நவீன மாயினும், நாடக முறையில் கதை மாந்தர் வாயிலாகக் கதை கூறப்பட்டுள்ளது. பத்து அத்தியாயங்கள் கொண்டது. viii. 442/1915/II.

O31,3

**இராஜகோபால அய்யங்கார், வி.**

**2126. i. அல்ஸஸ்டிஸ் என்ற** அன்புவல்லி : முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ் ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1915 ; iv. உ. ப. 87 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. அல்ஸஸ்டிஸ் என்ற கிரேக்க புராணக்கதையின் தமிழாக்கம் இது : இதில் "அயோல்காஸ் என்னும் தீவின் மன்னனை ஈசன் என்பான் பெலியஸ் எனும் தன் மாற்றுந்தாயின் மகனால் ஏமாற்றப்பெற்றுத் தன் மகன் ஜேசனுடன் நாட்டை விட்டு ஓடுகிறான். இறுதியில் தன் மகனின் ஆற்றலாலும் கடவுளின் அருளாலும் இழந்தவற்றை மீண்டும் பெற்று பெல்லஸின் பெண்களில் ஒருத்தியான அல்ஸஸ்டின்ஸ் என்பவளைத் தன் மகனுக்கு மண முடிப்பதை இக்கதை எடுத்துரைக்கிறது. viii. 271/1915/II.

O31,3

**2127.** i. கதைக்கொத்து—மலர் : முதற்பதிப்பு ; ii. வி. இராஜ கோபால அய்யங்கார் ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1912 ; iv. உ.ப. 70+ 2 ; v. 19×13 செ.மீ., vi. 0-3-0 ; vii. ஆத்திசூடி, கொன்றை வேந்தன் அறத்தொடர்களில் சிலவற்றை எடுத்துக்கொண்டு அவற்றின் பொருளை விளக்கத்தக்க கதைகளில் கொடுத்துள்ளார். இக்கதைகளில் பெரும்பான்மை, புராண இலக்கியங்களைத் தழுவியது. இறுதியில் கதைக் கொத்து இரண்டாவது மலரின் பொருளட்டவணை கொடுக்கப் பட்டிருக்கிறது. viii. 118/1912/IV.

O31,3

**2128.** i. கதைக்கொத்து—மலர் : 3 ; முதற் பதிப்பு ; ii. வி. இராஜகோபால அய்யங்கார், மினர்வா பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1912 ; iv. உ.ப. 68 ; v. 18×13 செ.மீ. vi. 0-3-0; சிறுவர்க்கேற்ற பல அறநெறிக் கதைகளின் தொகுப்பு. இடையிடையே குறள் முதலிய அற நூல்களிலிருந்து எடுத்துக்காட்டுகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. கதைத்தலைப்புக் களெல்லாம் பழமொழியாகவும் அறநூல் தொடர்களாகவும் அமைந்துள்ளன. எளிய நடையில் அமைந்துள்ளது. viii. 872/1912/IV.

O31,3

**2129.** i. கதைக்கொத்து—மலர் : 3 ; முதற் பதிப்பு ; ii. வி. ராஜ கோபால ஐயங்கார், மினர்வா பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1913 ; iv. உ. ப. 68 ; v. 18×13 செ.மீ. vi. 0-3-0;

vii. பற்பல அறங்களை விளக்கும் சிறுகதைகளின் தொகுப்பு. இதிலுள்ள அறநெறித் தொடர்கள் பெரும்பாலானவை பழமொழிகளே. viii. 180/1913/II.

O31,3

2130. i. கதைக் கொத்து—மலர: 3: நான்காம் பதிப்பு ; ii. ஸி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், மதரு ஸ்; iii. 1915 ; iv. உ. ப. 64 ; v. 19×13 செ. மீ.; vi. 0-3-0 ; vii. உலகநீதியை உணர்த்தும் 50 சிறுகதைகளைக் கொண்ட நூல். பலவகை உலகநீதிகளை எடுத்துக்காட்டி அவற்றைக் கதை மூலம் விளக்கியுரைக்கின்றது இந்நூல் ; படங்களுடன் கூடியது. viii. 298/1915/III.

O31,3

2131. i. கதைக் கொத்து ; ii. ஸி.குமாரசாமி நாயுடு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 80 ; v. 19×13 செ. மீ. ; vi. 0-5-0 ; vii. அறநெறிகளை விளக்கும் முப்பத்தெட்டுக் கதைகளைக் கொண்ட நூல். புராண இதிகாசக் கதைகளும் பிறவும் இதில் இடம் பெற்றுள்ளன ; படங்களுடன் கூடியது. viii. 299/1915/III.

O31,3

2132. i. கதைக் கொத்து—மலர்: 5 : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமிநாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1915 ; iv. உ.ப. 183 ; v. 19×13 செ. மீ., vi. 0-8-0 ; vii. பஞ்சதந்திரக் கதைகளை ஒட்டிய 59 அறநெறிக் கதைகளைக் கொண்ட ஒரு தொகுப்பு இந்நூல். திருக்குறளிலுள்ள கருத்துக்களுக்கேற்ற வகையில் கதைகள் அமைக்கப்பட்டுள்ளன. திருக்குறள் அறத்துப்பாலுக்கு 11 கதைகளும், பொருட்பாலுக்கு 48 கதைகளும் இதில் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு கதையின் தொடக்கத்திலும் அந்தக் கதையோடு தொடர்புடைய குறட்பாக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 475/1915/I.

O31,3

**இராஜகோபாலய்யங்கார், வி. எஸ். ஆர்., வேம்பனூர்**

2133. i. சக்லவல்லபி : முதற் பதிப்பு ;i i. வி. எஸ். ஆர். இராஜகோபாலய்யங்கார், வேம்பனூர் ; ஸ்ரீ ஹயவதன விலாஸ அச்சுக்கூடம், கும்பகோணம் ; iii. டிசம்பர், 1910; iv. உ. ப. 1+97 ; v. 19×12 செ. மீ.; vi. 0-6-0 ; vii. இது ஓர் இனிய தமிழ் நாவல். ஆண், பெண் இருவரும் ஒத்த மனத்தினராய் நோயற்ற வாழ்வு வாழ்வதே சிறந்த வாழ்வு என்னும் குறிக்கோளை மேற்கொண்டது இந் நவீனம். தலைவி

வின் பெயருக்கேற்றுற்போல் அவள் மாறுவேடம் பூண்டு அரும்பெரும் செயல்களை நிகழ்த்தியுள்ளார். viii. 475/1911/I. O31,3

2134. i. சண்பக மொட்டு ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், மதராஸ் ; iii. 1915 ; iv. உ.ப. 29 ; v. 18×13 செ. மீ.; vi. 0-1-6 ; vii. செண்பகம் என்னும் இளவரசியின் கதை; ஒன்பது அத்தியாயங்கள் கொண்டது ; சிறுவர்களின் பொருட்டு எழுதப்பட்ட நூலாகும். viii. 433/1915/IV.

O31,3

2135. i. செங்கை வளவன் : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ் ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1912 ; iv. உ.ப. 39 ; v. 19×13 செ. மீ. vi. 0-1-6 ; vii. பெருந்துன்பங்களைப் பொறுமையினால் மட்டுமே வெல்ல முடியும் என்ற உண்மையை விளக்கும் ஒரு நவீனக் கதை. இது பதினொரு அத்தியாயங்கள் கொண்டது. viii. 624/1912/I.

O31,3

2136. i. தங்கக் கிளி : முதற் பதிப்பு ; ii. கம்பர் விலாசம் சென்னை, பி. ஆர். ராமா ஐயர் அண்டு கம்பெனி, சென்னை ; iii. ஜனவரி; 1915 ; iv. உ.ப. 36 ; v. 18×13 செ. மீ.; vi. 0-1-0 ; vii. "கிரிம்மின் தேவதைக் கதைகளில்" ஒன்றினை ஒட்டி எழுதப் பெற்ற கதையே இந்நூல். எட்டு அத்தியாயங்களில் அமைந்துள்ளது. viii. 594/1915/I.

O31,3

2137. i. தங்கக்கிளி ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ் ; தி காக்ஸ்டன் பிரஸ் மதராஸ் ; iii. 1915 ; iv. உ.ப. 40 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-1-6 ; vii. கதைக்கொடி மலரின் இரண்டாவது இதழாக வெளிவந்த கதை நூல் ; பள்ளிச் சிறுவர், சிறுமியருக்காக எழுதப்பட்டது. எட்டு அத்தியாயங்கள் கொண்டது. viii. 434/1915/IV.

O31,3

2138. i. தென்னுலிராமன் கதை : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1912 ; iv. உ. ப. 1 + 43 ; v. 18×13 செ. மீ. ; vi. 0-2-0 ; vii. தெனுலிராமனைப்பற்றி வழங்கும் பல வேடிக்கைக் கதைகளின் தொகுதி. முப்பது கதைகள் இதில் உள்ளன. இவைகளெல்லாம் தெனுலிராமனுடைய அறிவுக் கூர்மையையும் சொல் வன்மையையும் காட்டுவனவாம். viii. 423/1912/IV.

O31,3

2139. i. ஸூக்ஷ்மதரிசி : முதற் பதிப்பு ; ii. ஆர். வெங்கடாசலம் அண்டு கம்பெனி, சென்னை ; கமர்ஷியல் பிரஸ், மதராஸ் ; iii. மே, 1913 ; iv. உ.ப. 4+64 ; v. 18×13 செ. மீ.; vi. 0-4-0 ; vii. கதைகள் மூலம் மாணவர்களுக்கு அறம் புகட்டும் நோக்கத்துடன் எழுதப்பட்டது. மரியாதை ராமன் என்னும் நீதிபதி நுட்ப அறிவினால் தீர்த்துவைத்த பல வழக்குகளைத் தெரிவிப்பது. நாற்பது வழக்குகள் பற்றிய கதைகள் உள்ளன. கதைகள் ஒவ்வொன்றின் தலைப்பிலும் அவற்றின் கருத்தமைந்த ஒவ்வோர் அறத்தொடரும் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது; viii. 653/1913/II.

O31,3

**இராஜகோபால பிள்ளை, ஜெ., திருநாகை**

2140. i. குமுதவல்லி திருமங்கை மன்னன் : இரண்டாம் பதிப்பு ; ii. கா. வெ. திருக்கச்சி நம்பிதாஸர், நாகபட்டினம் ; வைஜயந்தி அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜனவரி, 1914 ; iv. உ. ப. 16+110; v. 18×13 செ.மீ ; vi. 0-8-0 ; vii. வைணவ ஆழ்வார்களில் ஒருவரான திருமங்கை ஆழ்வாருடைய வாழ்க்கை வரலாற்றைச் சொல்வது இந்த நவீனம். அவர் குமுதவல்லியாரோடு நடத்திய இல்வாழ்க்கை, பிற புலவர்களோடு நிகழ்த்திய சொற்போர், அவர் பல ஊர்களுக்குச் சென்று திருமாலைப் பாடிப் புகழ்ந்த வரலாறு முதலியனவும் இந்நூலில் உள்ளன; viii. 449/1914/I.

O31,3

**இராஜகோபால ஆசாரியார், டி.**

2141. i. ரஹிமா ; ii. ஸி. குமாரசாமி நாயுடு அண்ட் ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1915; iv. உ.ப. 153; v. 19×13 செ.மீ. ; vi. 0-5-0 ; vii. ஒரு பெண் தனக்கு ஏற்பட்ட பலவித இன்னல்களை எதிர்த்துத் தான் காதலித்தவனையே மணம் செய்து கொண்டாள் என்பதை விளக்குகிறது, இக் கதை. மேலும், ஆங்கிலத்தில் ஜி. அர்னால்ட் பெர்னுண்டெஸ் என்பவரால் எழுதப்பட்ட நம் நாட்டுக் கதையின் மொழி பெயர்ப்பு. இதன் இறுதியில் ஸி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ் கம்பெனியார் சிறுவர் பொருட்டு வெளியிட்ட கதை. நூல்களின் பெயர்ப்பட்டியல் ஒன்றும் கொடுக்கப்பட்டிருக் கிறது; viii. 1074/1915/III.

O31,3

**இராஜூ செட்டியார், சி.எம்.**

2142. i. குசாவதி : முதற்பதிப்பு ; ii. சி. எம். இராஜூ செட்டியார், ஜி. ஆர். சி. பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1913 ; iv. உ.ப. 52 ; v. 21×14 செ.மீ.; vi. 0-12-0 ; vii. இதற்கு "வஞ்சக வனிதை" என்றும் ஒரு பெயருண்டு. ஒரு பெண் தீய நடத்தையால்

பொருளீட்டியதும், பின் நல்லாசானைச் சந்தித்துத் தமது முந்திய வாழ்வின் குற்றமுணர்ந்து, தான் ஈட்டிய பொருளை நல் வழிகளில் செலவிட்டுக் கழுவாய்த் தேடிக் கொள்ளும் நிகழ்ச்சி களையும் விவரிக்கிறது. கடைசியாக இறைவழிபாட்டில் ஈடுபட்டு மன ஒடுக்கமும் பெறுகிறாள். பத்து அத்தியாயங்கள் கொண்டது. விச்சூர் முத்துக்குமாரசாமி முதலியார் ஆங்கிலத்தில் முன்னுரை கொடுத்துள்ளார். பூவை. கலியாணசுந்தர முதலியார் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்; viii. 369/1913/III.

O31,3

**இராஜு செட்டியார், செ.**

2143. i. முத்தின் மோகம் : முதற் பதிப்பு ; ii. தென் மொழிக் கழகத்தார் ; பி. ஆர். ராம ஐயர் அண் கோ, சென்னை; iii. அக்டோபர், 1913 ; iv. உ. ப. 2+20 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. இது ஒரு புனைகதை. பள்ளிக்கூட மாணவர்களுக்கு ஏற்றவகையில் எழுதப்பட்டது. முத்து என்னும் இளைஞன் ஒருவனது வாழ்க்கையை விவரிப்பது. முத்து வின் படம் ஒன்றும் சேர்க்கப்பட்டுள்ளது; viii. 486/1914/I.

O31,3

**இராஜமையர், டி. எஸ்.**

2144. i. அருளானந்தன் அல்லது ஏமாறிய இலங்கை வர்த்த கன் ; ii. சி. தண்டபாணி, நாகை ; எம். வி. பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 64 ; v. 22×15 செ.மீ.; vi. 0–6–0 ; vii. அருளானந்தம் என்ற ஈழ நாட்டு வணிகன் ஏமாற்றப்பட்ட இரங்கத்தக்க கதையைக் கூறுகிறது இந்நூல். ஐந்து அத்தியாயங்கள் கொண்டது; viii. 9/1915/III.

O31,3

2145. i. இந்துலீகா: முதற் பதிப்பு; ii. டி. வி. கிருஷ்ண அய்யர், ஸ்காட்டிஷ் பிராஞ்சு பிரஸ், நாகப்பட்டினம் ; iii. ஜூன், 1912 ; iv. உ. ப. 2 + 89 ; v. 22 × 14 செ. மீ.; vi. 0–8–0 ; vii. இது ஒரு சமூக நவீனம். இந்து சமூகத்தில் நடை முறையில் இருந்து வரும் சில குறைகளை மக்கள் உணரும் வகையில் எழுதப்பட்டிருக்கிறது. பன்னிரெண்டு அத்தியா யங்கள் கொண்டது. "வரசுல்கம்", "ஆசார சீர்திருத்தம்", "பெண் கல்வி "சந்நியாசிகளின் கபடவேடம்" போன்ற பல நிகழ்ச்சிகள் படம் பிடித்துக் காட்டப்பட்டிருக்கிறது; viii. 67/1912/III.

O31,3

2146. i. மாதவி: முதற் பதிபபு; ii. ஆர். எம். வீர பிள்ளை; ஸாரதா விலாஸ புத்தக சாலை, நாகப்பட்டினம்; வைஜயந்தி பிரஸ், சென்னை; iii. ஏப்ரல், 1914; iv. உ.ப. 6+104; v. 19+13 செ.மீ.; vi. 0–6–0; vii. "மாதவனின் மாயக்கொலை" என்றும் இதற்கு ஒரு பெயர் உண்டு. இது ஒரு புனைந்துரைத் தமிழ்க் கதை. பணத்திற்காக ஒரு பெண் துணிந்துசெய்த செயல்களை விவரிக்கின்ற பத்து அத்தியாயங்கள் கொண்டது. ஒவ்வோர் அத்தியாயத்தின் தொடக்கத்திலும் முன்னோர் நூலின் மேற்கோள் செய்யுள் ஒன்று கொடுக்கப்பட்டிருக் கிறது. தமிழில் நாவல் இலக்கியத்தின் நிலை குறித்து முகவுரையில் ஆசிரியர் விரிவாக எழுதியுள்ளார். viii. 502/1914/II.

O31,3

2147. i. ஈனக் ஆர்டன். முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1914; iv. உ. ப. 40; v. 19×13 செ.மீ.; vi. 0–1–6; vii. ஆங்கிலக் கவிஞர் டென்னிசன் இயற்றிய "ஈனக் ஆர்டன்" என்ற காவியத்தைத் தழுவித் தமிழில் உரை நடையில் எழுதப்பெற்றது. விக்டோரியா அரசியால் ஆஸ்தான கவியாக ஏற்றுக்கொள்ளப்பட்டவர் டென்னிசன்; viii. 467/1914/IV.

O31,3

2148. i. ஊக்கமே உயிர்த் துணை: முதற் பதிப்பு; ii. என். வெங்கட்டராயலு அண்டு சன்ஸ், சென்னை; மினர்வா பிரஸ், சென்னை; iii. ஏப்ரல், 1914; iv. உ. ப. 31; v. 18×13 செ.மீ.; vi. 0–1–0; vii. ஊக்கத்தின் மேன்மையை ஒரு சமூகக் கதையின் வாயிலாக விளக்குவது. சிறு பிள்ளை களுக்கு ஏற்ற முறையில் எளிமையாக இந் நூல் அமைந்துள்ளது. பற்பல உலகியல் நிகழ்ச்சிகளை இடை யிடையே கலந்து தருகிறது; viii. 585/1914/II.

O31,3

**எக்ஞஸாமி, எஸ்., கும்பகோணம்**

2149. i. லலிதா அல்லது பொறுமையுள்ளவர் பூமியாள்வார்; ii. பி. ஆர். ராம அய்யர் அண்டு கோ, சென்னை, iii. 1915' iv. உ.ப. 46; v. 18×13; செ.மீ. vi. 0–4–0; vii. இளவரசி ஒருத்தியின் வீரச் செயல்களை விளக்குவதோடு "பொறுத்தார் பூமியாள்வார்" என்ற அறமும், இக்கதையில் விளக்கப்பட்டுள் ளது. பத்து அத்தியாயங்கள் கொண்டது. குழந்தை களின் பொருட்டு இயற்றப் பெற்ற நூல்; viii. 1037/1915/III.

O31,3

**ஏகாம்பர முதலியார், டி. பி. (தொ.து.)**

2150. i. அகட விகட சம்சாரிகள் : முதற் பதிப்பு; ii. டி. பி. ஏகாம்பர முதலியார், டைமண்டு அச்சுக்கூடம், மதராஸ்; iii. ஜூலை, 1914; iv. உ. ப.+செ. மூ. ப. 6+2 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. "சம்சார சனியன் என்னும் சாமார்த்திய அகட விகட சம்சாரிகள்" என்பது இதன் முழுப் பெயர். கணவனிடம் பற்றற்ற வஞ்சக மனைவியரைப் பற்றிய சிறு கதைகளின் தொகுப்பு. இத்துடன் கற்புடையவர்க்குரிய இலக்கணத்தை விளக்கிடும் செய்யுட்களும் சேர்ந்துள்ளன. இதில் 51 செய்யுள்கள் உரை விளக்கத்துடன் கொடுக்கப்பட்டுள்ளன. கற்புடைய "மீனாட்சி சரித்திரமும்" இறுதியில் உள்ளது; viii. 459/1914/III.

O31,3

2151. i. கடற்கரைவாஸம்: முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1913; iv. உ.ப. 1+28 ; v. 18×12 செ.மீ. ; vi. 0-1-0; vii. சிறுவர்களுக்கு வீட்டுப் பாடமாக அமைக்கத் தக்க சிறுகதை நூல். அறத்தை விளக்கும் வேடிக்கைக் கதைகளே இப்பகுதிகளில் உள்ளன. "கடற்கரை வாசம்" என்பது பதினொரு பாகங்களாக அமைந்த ஒரு நெடுங் கதை. இதனோடு " அதிசயமான அதிரஸம்" என்ற ஒரு சிறு கதையும் உள்ளது; viii. 909/1913/II.

O31,3

**கணேச முதலியார், பி.**

2152. i. ராஜ வீரசேனன் : முதற் பதிப்பு ; ii. பி. கணேச முதலியார், சென்னை; பிரின்ஸ் ஆப் வேல்ஸ் பிரஸ், சென்னை; iii. மே, 1914 ; iv. உ.ப. 91; v. 21×14 செ.மீ.; vi. 0-6-0; vii. அன்புணர்ச்சி, மற்ற உணர்ச்சிகளை எப்படி மீறிச் சென்றுவிடும் என்பதை விளக்கும் நவீனம். ஏழு அங்கங்கள் கொண்டது. இடையிடையே சில முதுமொழிகளும் பழம்பாடற் கருத்துக்களும் விரவி வருகின்றன. இந் நூலில் வரும் கதை மாந்தர்களின் பட்டியல் ஒன்றும் இடம் பெற்றிருக்கிறது; viii. 871/1914/II.

O31,3

**கதிர்வேல், க.ச.**

2153. i. விகடவினோத விசித்திரக் கதைகள்: முதற் பதிப்பு; ii. கே. எஸ். கதிர்வேல், விஜய விகடன் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1911 ; iv. உ.ப. 168; v. 18×11 செ.மீ.; vi. 0-8-0 ; vii. நீதிக் கருத்துக்களைக் கற்பிக்கும்

சிறந்த பலகதைகள் அடங்கிய தொகுப்பு. "விஜய விகடன்" இதழில் வெளியான கதைகளைத் தொகுத்து வெளியிட்ட நூல். ஒவ்வொரு கதையின் முதலிலும், அக்கதையின் கருத்தை வெளிப்படுத்தும் பாடல் ஒன்றும் தரப்பட்டுள்ளது. கதைகளின் இடையிலும் சில சிந்து, கண்ணி, கீர்த்தனம் போன்ற பாடல்களும் வந்துள்ளன. viii. 783/1911/I.

O31,3

**கந்தசாமி பிள்ளை (கவிராஜ), மதுரை**

2154. i. அகட விகட விலாச விநோதக் கதை : முதற் பதிப்பு; ii. என். முனிசாமி முதலியார், சென்னை ; முரஹரி அச்சுக்கூடம், சென்னை; iii. மார்ச், 1911; iv. உ.ப. 2+147 ; v. 21×14 செ.மீ.; vi. 0–8–0 ; vii. உருவகமாக எழுதப்பெற்ற ஒரு கதை. அறநூல்களை உணர்ந்து தீய பண்புகளை அகற்றி, நற்பண்புகளைப் பெற வேண்டுமென அறிவுறுத்துகிறது. தீயபண்புகள், நற் பண்புகள் ஆகியவற்றிற்குத் தனிப் பெயரிட்டு அழைத்து, அவற்றால் உண்டாகும் துன்பங்களையும் நன்மைகளையும் முறையே கதையாக எழுதியுள்ளார். இறுதியில் அறத்தை அடிப்படையாகக்கொண்ட நற்பண்பு வெற்றிபெறுவதாகக் காட்டப்படுகிறது. viii. 624/1911/II.

O31,3

2155. i. கனவினால் காரியத்தை முடித்த கமலமதியின் கதை; ii. என். முனுசாமி முதலியார், மதருஸ் டைமண்ட் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஜனவரி, 1911 ; iv. உ.ப. 2+90 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–8–0; vii. "ஆசைகளை அடக்க வேண்டும்" எனும் உட்பொருளைக் கொண்டது இந்நவீனம். "வரும்விதி வருமுன் பெருமதி துணைக் கொள்" என்னும் அறத்தை வலியுறுத்துவது. இந்நூலின் கதை மாந்தர் ஒவ்வொரு பெயரையும் புதுமையாயமைத்து அவற்றிற்கியைந்த காரணங்களைச் சுட்டிக்காடுட்கின்றார் ஆசிரியர். viii. 327/1911/I.

O31,3

2156. i. சாந்தபுரியின் காந்தாமணி : முதற் பதிப்பு, ii. சி.எ. செங்கல்வராய நாயுடு; ஸரஸ்வதி அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஜனவரி, 1914 ; iv. உ.ப. 2+168 ; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0; vii. மார்க்கண்டேயரைப் போல் விதியை மதியால் வெல்லலாம் என விளக்குவது. ஒருவர் செய்யும் நன்மை தீமைக்குத் தக்கவாறு இம்மை மறுமைப் பயன்கள் உண்டாகும் என்பதையும் இக்கதை விளக்கிக் காட்டுகிறது. ஒரு சில தமிழ்ச் செய்யுட்கள் இடையிடையே எடுத்தாளப்

பட்டுள்ளன. உயர்ந்த இடத்துப் பிறந்த பெண் பல துன்பங்களுக்கு ஆளாகி, மகிழ்ச்சியான வாழ்க்கை வாழ்கிருள் என்பதை இக்கதை விவரிக்கின்றது. viii. 797/1914/I.

031,3

2157. i. ஞான கல்யாணி : முதற் பதிப்பு ; ii. சி. எ. செங்கல்வராய நாயுடு, சென்னை ; கர்ஜன் பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1912 ; iv. உ. ப. 2+140 ; v. 22×14 செ. மீ. ; vi. 0—10—0 ; vii. நன்மதியுடையோர்க்கு நேர்ந்த இன்பமும், கெடுதியுடையோர்க்கு நேர்ந்த துன்பமும் இக்கதையில் தொகுக்கப்பெற்றிருக்கின்றன. உலகில் மக்களறிய வேண்டிய அறநெறித் தொடர்களின் கருத்தமைந்த பல பகுதிகள் இக் கதையில் இணைக்கப்பட்டிருக்கின்றன. எல்லாவற்றிற்கும், மேலாகக் கடவுள் சிந்தனையையும், பத்தியையும் வற்புறுத்திக் கூறுகின்றது. viii. 1039/1912/I.

O31,3

2158. i. ஞானசேகர நிர்த்தனேஸ்வரி : முதற் பதிப்பு ; ii. மா. வடிவேலு முதலியார், சூளை, & மயிலை சீதாபதிப் பிள்ளை, டைமண்ட் பிரஸ், சென்னை : iii. மார்ச், 1911 ; iv. உ. ப. 77 ; v. 20×14 செ. மீ. ; vi. 0—8—0 ; vii. வாழ்க்கையில் பற்றற்று மன அமைதியுடன் வாழ்தலை நோக்கமாகக் கொண்டு அமைந்த கதை. இது எழு பகுதிகள் கொண்டது. இக்கதைப் பகுதிகள் ஒவ்வொன்றின் தொடக்கத்திலும் அக்கதை நிகழிடமும், அதில் வரும் உறுப்பினரும் பற்றிய குறிப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. பொருத்தமான சில செய்யுட்களும் மேற்கோளாக எடுத்தாளப்பட்டிருக்கின்றன. viii. 209/1911/II.

O31,3

2159. i. மாய ராக்ஷதனை ஜெயித்த மனோன்மணி கதை : முதற் பதிப்பு ; ii. என். முனிசாமி முதலியார், நாகவேடு; முரஹரி அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1911 ; iv. உ. ப. 118 ; v. 21×14 செ. மீ.; vi. 0–8–0 ; vii. ஓர் அரசி தன்னிடமிருந்து பிரிந்த கணவனைத் தேடிக் கண்டுபிடித்த வரலாற்றை வழக்கு முறையில் உள்ள தமிழில் விவரிப்பது. viii. 529/1911/III.

O31,3

2160. i. விகட பூஷணி : முதற் பதிப்பு ; ii. பார்த்தசாரதி நாயுடு, இட்டா, சென்னை ; கோல்டன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஜூன், 1911 ; iv. உ. ப. 2+76 ; v. 22×13 செ. மீ.; vi. 0–6–0 ; vii. நற்பண்பு, தீய பண்புகளின் வேறுபாடுகளையும், அப்பண்புடையார் துய்க்கும் இன்பதுன்பங்களையும் கற்பனை முறையில் "விகட பூஷணி" என்றும் பெயரிட்டு, இனிய

முறையில் எழுதப் பெற்ற ஒரு தமிழ்க் கதை. பெண்களை மேன்மையாக நடத்த வேண்டும் என்றும், பெண்கள் தாம் புகுமிடத்தில் எல்லாருடைய அன்புக்கும் உரியவளாய் நடந்து நற்பேர் பெறவேண்டும் என்றும் கற்பிக்கின்றது. viii. 667/1911/III.

O31,3

2161. i. விகடவல்லி : முதற் பதிப்பு ; ii. என். முனிசாமி முதலியார், முராஹரி பிரஸ் & சித்திர விநாயகர் அச்சுக்கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1913 ; iv. உ. ப. 72 ; v. 22×14 செ. மீ.; vi. 0–4–0 ; vii. அன்புமிக்க மனைவியின் பெருந் தன்மை பற்றியும் கடமை பற்றியும் விளக்கும் கதை. இடையிடையே பல செய்யுட்கள் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. பணத்தையே மேலாக மதித்து பழி, தீமைகளுக்கு அஞ்சாத இரண்டு கயவர் இதில் சித்திரிக்கப் பட்டுள்ளனர். அடங்காப்பிடாரிகளான பெண்களைப் பற்றியும் இக்கதை சித்திரிக்கிறது. குண்டுணி, வாயாடி, கோபப் பிடாரி, பசாரி, கோள்சொல்லி என்றிவ்வாறு குணம் பற்றி மாந்தர்கள் பெயரிடப்பட்டுள்ளனர். பலவேடிக்கையான நிகழ்ச்சிகள் நிறைந்தது; viii. 134/1914/I.

O31,3

2162. i. விவேகாநந்தன் : முதற் பதிப்பு ; ii. எம். எ. பச்சையப்ப முதலியார், சென்னை, சித்திவிநாயகர் அச்சுக் கூடம், சென்னை ; iii. மே, 1914 ; iv. உ. ப. 86 ; v. 21×14 செ. மீ.; vi. 0–6–0 ; vii. விதியை மதியால் வெல்லலாம் என்ற முதுமொழியை விளக்குவது இந் நவீனம். ஏழு காட்சிகளாகப் பாகுபடுத்தப்பட்டுள்ளது. ஒவ் வொரு காட்சியிலும் இடம், கதை மாந்தர் பற்றிய குறிப்புக் கள் குறிக்கப்பட்டுள்ளன. கதை நிகழ்ச்சிகளுக்குப் பொருத்த மான பழம் பாடல்கள் மேற்கோளாக எடுத்தாளப்பட்டுள்ளன; viii. 918/1914/II. O31,3

2163. i. ஜெகஜ்ஜாலபுரட்டன் கதை : முதற் பதிப்பு ; ii. என். சரவண முதலியார் ; அமெரிக்கன் டைமெண்ட் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1912 ; iv. உ. ப. 44 ; v. 22×14 செ. மீ.; vi. 0–4–0 ; vii. 'பலவித சாமர்த்திய ஜெகஜ் ஜாலப் புரட்டன் கதை' என்பது இதன் முழுப் பெயர். கொடியோர்களிடத்திலே மிக விழிப்பாக நடந்துகொள்ள வேண்டும் என்றும், ஏமாற்றுவோர்க்கு ஆட்படாமல் தப்ப வேண்டும் என்றும் அறிவுறுத்தும் வகையில் இக்கதை உள்ளது. இது ஓர் வேடிக்கையான கட்டுக் கதை. இதனுள் அறிவூட்டும் பல அறநெறிக் கருத்துக்களை ஆசிரியர் அங்கங்கே பின்னிப் பிணைத்துள்ளார். இவ்வாசிரியர் ' கலியுகவர்த்த மானி ' என்னும் இதழின் ஆசிரியராவார்; viii. 30/1912/III. O31,3

**கல்யாண சுந்தராச்சாரி, பிக்கபாடி**

2164. i. இராமானந்த சர்மா சரித்திரம்; முதற் பதிப்பு; ii. எஸ். கல்யாணசுந்தர பத்தர், விஸ்வகுலோத்தாரண அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஜூலை, 1911 ; iv. உ. ப. 1+172+1 ; vi. 16×11 செ. மீ.; vi. 0–6–0 ; vii. ' விசுவப்பிராமணர் ' என்று அழைக்கப்படுகின்ற ஆசாரிகளின் உயர்வைப் பற்றி விளக்குகின்ற சமூக நவீனம். ' இராமசுனுர் என்று வழங்கும் இராமானந்த சர்மா சரித்திரம் ' என்பது இதன் முழுப் பெயர். பதினாறு அதிகாரங்களைக் கொண்டது. இந்நூலாசிரியர் 'பி. மணமங்களார்' என்னும் புனை பெயரோடு எழுதி வெளியிட்ட வேறு நூல்களின் பட்டியலும் நூலிறுதியில் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 254/1911/III.

**O31,3**

2165. i. கவாய்-லீலாவதி கதை : முதற் பதிப்பு; ii. வி. வடிவேலு முதலியார், வேளானூர் ; பிரசிடென்ஸி அச்சுக் கூடம், சென்னை ; iii. ஜூன், 1912 ; iv. உ.ப. 72 ; v. 18×11 செ. மீ.; vi. 0–4–0 ; vii. கவாய்-லீலாவதி என்ற அழகிய பெண்ணையும் குமுதன் என்கிற அரக்கனையும் கதைத் தலைவர்களாய்க்கொண்ட கதை. பல புலவர்கள் இயற்றியதை வடிவேல் முதலியார் என்பவர் பிழையற ஆய்ந்து வெளியிட்டிருக்கிறார். இதில் வேறுபல வியத்தகு கதைகளும் உள்ளன.; viii. 84/1912/III.

**O31,3**

**கன்னையதாஸர், வே.**

2166. i. திரிலோக மோஹனாங்கி : இரண்டாம் பதிப்பு ; ii. எம். கன்னைய்யா அண்டு கம்பெனியார், சிந்தாதிரிப்பேட்டை, மதராஸ் ரிப்பன் அச்சுயந்திர சாலை, சென்னை ; iii. ஆகஸ்ட், 1911 ; iv. உ. ப. 1+256 ; v. 18×12 செ. மீ.; vi. 1–0–0 ; vii. அரக்கர் உலகத்தில் இருந்த வியத்தகு செடிகளைக் கொண்டுவரப் புறப்பட்ட இளவரசனின் வீரச் செயல்களை விரிக்கும் கதை. இது பன்னிரண்டு அத்தியாயங்கள் கொண்டது. இளவரசன் மோகனாங்கியுடன் சேராமல் அசரீரிவாக்குப்படி பத்து நாட்கள் பத்துக்கதைகளைச் சொல்லிக் காலம் கடத்திய நிகழ்ச்சிகளை விவரிப்பது. இறுதியில் மோகனாங்கியைத் தன் ஊருக்கு அழைத்து சென்று மணம் செய்து கொண்ட நிகழ்ச்சியும் தரப்பட்டுள்ளது. தன் தந்தையின் அரசையும் திரும்பப் பெற்று ஆட்சி செலுத்தினான்; viii. 955/1911/III.

**O31,3**

**கன்னேயா நாயுடு, வே.**

2167. i. சமத்கார செந்திரவதனி : முதற் பதிப்பு ; ii. டி. ஆர். வெங்கடேச முதலி, சென்னே ; கலேக்கியான முத்திராக்ஷரசாலே, திருப்பதி ; iii. நவம்பர், 1914 ; iv. உ. ப. 72 ; v. 21×14 செ. மீ.; vi. 0–6–0 ; vii. ஒழுக்கமும் அன்பும் மிகுந்த ஒரு மனேவியின் வாழ்க்கையைப் பற்றிக் கூறும் கற்பனேக் கதையைக் கொண்டது இந்நூல் ; viii. 507/1914/IV.

O31,3

2168. i. கனகாங்கி : முதற் பதிப்பு ; ii. என். வேங்கடராயலு அண்டு சன், சென்னே ; ஜோதிஷ் மதி முத்திராக்ஷர சாலே, சென்னே ; iii. ஜூன், 1914 ; iv. உ. ப. 30 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. விலங்குகளிடத்து அன்பு செலுத்துமாறு தூண்டும் ஒரு சிறு கதை. இரண்டு பகுதிகளாக அமைந்துள்ளது ; viii. 105/1914/III.

O31,3

**கஜாம்பாள்**

2169. i. ஸ்ரீமதி : முதற் பதிப்பு ; ii. ஸ்ரீபால சுப்பிரமணியன் கம்பெனி, சென்னே ; சுதேசமித்திரன் ஸ்டீம் பிரஸ், சென்னே ; iii. பிப்ரவரி, 1913 ; iv. உ. ப. 22 ; v. 18×12 செ. மீ.; vi. 0–1–6 ; vii. இது அம்பரீச்ச உபாக்கியானத்தின் கதை. அம்பரீச்சன் மகள் திருமதியை நாரதபர்வத முனிவர்கள் விரும்ப, அவள் நாராயணனேயே கணவனுக அடைந்தாள். ஏமாற்றமுற்ற முனிவர்கள் அம்பரீச்சனுக்குச் சாபம் கொடுப்பதும், தம்மை ஏமாற்றிய திருமாலுக்கே சாபம் கொடுத்து, தாமும் பெண் விருப்பை விடுத்தார்கள் என இவ்வரலாறு கூறுகிறது. இவர் கொடுத்த சாபப்படியே திருமால் இராமனுகவும் திருமகள் சனகன் மகளாகவும் பிறந்தனர் என்று இராமன் பிறப்பிற்குத் தோற்றுவாய் செய்கிறது இக் கதை. ' பக்தி சந்திரிகா ' வரிசையில் இது முதல் நூல். viii. 717/1913/I.

O31,3

2170. i. காதர் அலி : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னே ; காக்ஸ்டன் பிரஸ், சென்னே ; iii. மே, 1912 ; iv. உ. ப. 16 ; v. 18×12 செ. மீ.; vi. 0–0–6 ; vii. இதில் ' காதர் அலி ' ' துஷ்டக் குருவிக்குஞ்சு ' ஆகிய இரண்டு கதைகள் உள்ளன. இவை நன்றியில்லாமை, கீழ்ப்படியாமை ஆகியவற்ருல் விளேயும் தீங்குகளே எடுத்துரைக்கிறது ; viii. 693/1912/II.

O31,2

**காளிதாச மகா கவி**

2171. i. மாளவிகாக்கினிமித்திரம் : இரண்டாம் பதிப்பு ; ii. வீ. இராமஸ்வாமி சாஸ்துருலு அண்ட் சன்ஸ், ஆதி சரஸ்வதி நிலைய பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1915 ; iv. உ. ப. 35 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. காளிதாச மகா கவி செய்த நாடகங்களில் ஒன்று மாளவிகை–அக்கனிமித்ரன் என்ற இருவரைக் குறித்து எழுதப் பெற்ற கதையாகும் இது. அறிவும் அன்புமுள்ள தோழன் இருந்தால் நினைத்தவை நடக்கும், நல்ல குலத்தவர் மனம் மேலானவற்றையே நாடும், கற்புடைய பெண்கள் கணவன் கருத்திற்கேற்ப நடப்பர் என்ற பெரும் அறங்களைக் கதை மூலமாக வெளியிடுகின்றது இந்நூல் ; viii. 289/1915/II.

O31,3

2172. i. விக்கிரமோர்வசி : திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. லாங்மன்ஸ் கிரின் அண்டு கம்பெனி, வைஜயந்தி பிரஸ், சென்னை, iii. மார்ச், 1915 ; iv. உ. ப. 48 ; v. 19×13 செ.மீ.; vi. 0–4–0 ; vii. இக்கதை காளிதாச பெருங்கவி செய்த மூன்று நாடகங்களில் ஒன்று. புரூரவ சக்ரவர்த்தி கேசியிடமிருந்து ஊர்வசியை மீட்ட கதை இது. இக்கதை, மேலானவர் தமக்கு என்ன வருத்தம் வந்தாலும், சரியான வழியிலேயே நடப்பார்கள். நலல பெண்கள் கணவன் விருப்பை விஞ்சி நடவார் என்பது போன்ற அறங்களை உணர்த்துகின்றது. "லாங்குமன்சு கம்பெனியார் வெளியிட்டு வரும் "புராதன நவீன கதா மஞ்சரி" வரிசையில் இந்நூல் ஆறுவது மலர் ஆகும் ; viii. 275/1915/II.

O31,3

**கிருஷ்ணசாமி, வி. வி.**

2173. i. கண்ணும் கண்ணீரும் : முதற் பதிப்பு ; ii. ஸி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. எப்ரல், 1915 ; iv. உ. ப. 26 ; v. 18×13 செ.மீ. ; vi, 0–1–0 ; vii. மணப்பெண்ணைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பைப் பெற்றோர்களிடம் ஒப்புவிப்பது எவ்வளவு சாலச் சிறந்தது என்பதை விளக்கும் சிறிய சமூகக் கதை. இதில் மணமகன் கோபாலனுக்கு விருப்பமில்லாத வேம்பு என்ற பெண்ணைப் பெற்றோர் மண முடிப்பதையும், இறுதியில் வேம்பு தன் நற் பணிவிடைகளால் கணவன் கோபாலனைக் கவரு வதையும் இக்கதை எடுத்துரைக்கிறது. இப்பதிப்பகத்தார் வெளி யிட்ட தமிழ் நவீன நாவல்கள், சிறுவர்களுக்கான கதைகள் ஆகியவற்றைக் குறித்த நூற்பட்டியல் நூலின் இறுதியில் சேர்க் கப்பட்டிருக்கிறது ; viii. 272/1915/II.

O31,3

**2174.** i. கார்காலத்துச் சந்திரிகை : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ் ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1914 ; iv. உ. ப. 24 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–1–0 ; vii. தென்னிந்தியத் திருமணத்தை ஒட்டிய ஒரு சமூகக் கதை. ஆறு சிறுசிறு அத்தியாயங்களாக வகுத்து எழுதப்பட்டிருக்கிறது. viii. 793/1914/IV.

O31,3

**2174–அ.** i. பெரும்புயல் [ஷேக்ஸ்பியர் கவிமாண்பு] ; முதற் பதிப்பு ; ii. ஜெனரல் சப்ளைஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை ; கபாலீஸ்வரர் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1912 ; iv. உ. ப. 43 ; v. 19×13 செ. மீ. ; vi. 0–6–0 ; vii. இது செகப்பிரியரின் நாடகமாகிய "டெம்பஸ்ட்" என்னும் நூலின் தமிழாக்கம். செகப்பிரியர் நாடகங்களைப் பயின்று, அவற்றைப்பற்றிய ஹாஸலிட், கோல்ரிட்ஜ், சுவன் பர்ன், ப்ராட்லி, ராலி, முதலியவர்கள் எழுதிய சிறப்புக் குறிப்புக் களும் இதனுடன் சேர்க்கப்பட்டுள்ளன. செகப்பிரியர் நாடகங் கள் அனைத்தையும் 20 நூல்களில் அடக்கி வெளியிடும் நோக்கததையும் இதில் ஆசிரியர் தெரிவித்துள்ளார். viii. 170/1913/I.

O31,3

**2175.** i. மூன்று பரதேசிகள் : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை, காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1914 ; iv. உ. ப. 48 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. திருவண்ணாமலைக்கு வருகை தந்த மூன்று துறவிகளைப் பற்றிய கற்பனைச் சிறு கதை. இத்துறவிகள் தம் மனைவியர்க்கு ஊறு செய்து, பின்னாளில் சென்றதை நினைத்து வருந்தியவர்கள். ஆகவே இவர்கள் இல்லறத்தில் நல்லறம் செய்து வாழாத வர்கள் என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். viii. 463/1914/IV.

O31,3

**கிருஷ்ணசுவாமி அய்யர், வி. எஸ்.**

**2176.** i. இராமாயண சங்கிரஹம் : முதற் பதிப்பு ; ii வி. எஸ். கே. சுவாமி அண்டு கோ., கயத்தாறு ; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. எப்ரல், 1914 ; vi. உ. ப. 13 ; v. 17×13 செ. மீ. ; vi. 0–0–6 ;

vii. தொடக்கப்பள்ளி மாணுக்கர்களுக்காக எழுதப்பட்ட இராமாயணக் கதையின் சுருக்கமாகும். பாலகாண்டம் முதல், யுத்த காண்டம் வரையில் ஆறு காண்டப் பெயர்களையும் தலைப்புகளாகக் கொடுத்து அந்த அந்தக் காண்டத்தில் காணும் சிறப்புச் செய்திகள் சுருக்கமாகத் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 198/1914/II.

O31,3

**கிருஷ்ணஸ்வாமி அய்யர், எம். எஸ்.**

2177. i. அன்பின் வலிமை ; ii. டி. கே. பாலசுப்ரமணிய அய்யர், சீரங்கம் ; வாணீ விலாஸ பிரஸ், ஸ்ரீரங்கம் ; iii. பிப்ரவரி, 1915 ; iv. உ. ப. 179 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–10–0 ; vii. திருமணம் உறுதி செய்யப்பெற்ற பெண்ணைக் கவர்ந்து மறைவாக வைக்க, அவளை மணமகன் துப்பறியும் அதிகாரியுடன் சென்று மீட்டதைப் பற்றிய துப்பறியுங் கதையே இந்நூல். பதினறு அத்தியாயங்கள் கொண்டது. "ஸ்ரீ வாணீ விலாசினீ" தொடரில் இது 28ஆம் வெளியீடு. viii. 777/1915/I.

O31,

2178. i. வேலையின் கூலி அல்லது கள்வர் கவர்ந்த கல்யாணப் பெண் : முதற் பதிப்பு ; ii. எம். எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யர், வெட்னஸ்டே ரிவ்யூ அச்சாபீஸ் & கிருஷ்ணவிலாச பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. ஜனவரி, 1912 ; iv. உ. ப. 1+92 ; v. 22+15 செ. மீ. ; vi. 0–6–0 ; vii. இது ஒரு துப்பறியும் கதை. முன்பின் அறியாதவர்களை அறியச் செய்து அவர்கள்பால் அன்புண்டாக்கி உலகை ஆட்டி வைக்கும் காலத்தின் ஆற்றலைக் காட்டுவது ; இருபது அத்தியாயங்கள் கொண்டது. உலக வழக்கு நடையில் இது அமைந்துள்ளது. viii. 246/1921/I.

O31

**கிருஷ்ணசாமி அய்யங்கார், என்., சிதம்பரம்**

2179. i. சந்திரவதன ; ii. என். கிருஷ்ணசாமி அய்யங்கார், வி. எஸ். வி. பிரஸ், சிதம்பரம் ; iii. 1915 ; iv. உ. ப. 131 ; v. 23×14 செ. மீ. ; vi. 0–8–0 ; vii; "பொறுமையே உயர்வு அளிக்கும்" என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்ட நவீனம். சாதாரண மக்களுக்கும் புரியும் வண்ணம் மிகவும் எளிய முறையில் எழுதப்பட்டுள்ளது. 15 அத்தியாயங்கள் கொண்டது. viii. 960/1915/I.

O31,3

2180. i. மீனாட்சி சுந்தரம்: முதற் பதிப்பு; ii. என். கிருஷ்ண சாமி அய்யங்கார், சிதம்பரம்; விநாயக சுந்தரவிலாசம் பிரஸ், சிதம்பரம்; iii. ஜூன், 1913; iv. உ. ப. 1+61; v. 22×14 செ. மீ.; vi. 0–5–0; vii. சமூக வாழ்க்கையைச் சித்தரிக்கும் ஒரு நாவல். இருபத்தொரு அத்தியாயங்கள் கொண்டது. viii. 36/1913/III.

O31,3

**கிருஷ்ணசாமி சர்மா, ஆர்.**

2181. i. இராயர் அப்பாஜி; ii. லலிதா விலாச புத்தகசாலையார், மதராஸ்; கமர்ஷியல் பிரஸ், சென்னை; iii. மே, 1913; iv. உ. ப. 25; v. 19×12 செ. மீ.; vi. 0–1–6; vii. "அதிரூப மந்திரி"; என்றும் இதற்கு பெயருண்டு. அப்பாஜி என்பார் இராயர் சமத்தானத்தில் அமைச்சராக விளங்கியவர். இவருடைய அறிவு நுட்பத்தையும் திறமையையும் வெளிப்படுத்தும் கதைகளில் பதினைந்து இந்நூலில் உள்ளன. பள்ளிப் பிள்ளைகளின் பொருட்டு இயற்றப்பட்டது. இந்நூலின் இறுதியில் "லலிதா விலாச புத்தகசாலையார்" விற்பனை செய்து வரும் சிறுவர்களுக்கான கதைகள், நவீன தமிழ், நாவல்கள் பற்றிய பட்டியல்கள் உள்ளன. viii. 903/1913/II.

O31,3

2182. i. மனோரமா; முதற் பதிப்பு; ii. விசாலாக்ஷி அம்மாள், பண்டிதை; லலிதா பப்ளிஷிங் ஹவுஸ், சென்னை; கபாலி பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1913; iv. உ. ப. 1+136; v. 18×13 செ. மீ.; vi. 0–8–0; vii. ஒருத்திக்குத் தனது உடன்பிறந்தாளால் ஏற்பட்ட துன்பங்களை இந்தத் துப்பறியும் கதை விரிக்கின்றது. மனோரமா இறுதியாக வாழ்ந்த ஆனந்த குடீரத்தில் தத்துவ ஆய்வு நிகழ்வதையும் இந்நூல் இறுதியில் காணலாம். "ஆனந்த குடீர அதிசயங்கள்" என்றும் இதற்கொரு பெயர் உண்டு. பதினாறு அத்தியாயங்கள் கொண்டது. viii. 446/1914/I.

O31,3

**கிருஷ்ணசாமி பாவலர், தெ.**

2183. i. வீஷ்மன்-வித்தகப் புதல்வன்; முதற் பதிப்பு; ii. என். வேங்கடராயலு அண்டு சன், சென்னை; ஜோதிஷ்மதி பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1914; iv. உ. ப. 26; v. 19×12 செ. மீ.; vi. 0–1–0; vii. பாரதத்தினின்றும் எடுத்தெழுதப் பெற்ற கதை. இக்கதை, புதிய முறையில் எளிய உரை நடையில் தரப்பட்டுள்ளது. இடையிடையே பாடல்கள் விரவி வருகின்றன. இது "மாணவர் ஓரணு வாசக" வரிசையின்பாற்பட்டதாகும். viii. 167/1914/IV.

O31,3

**கிருஷ்ணமாச்சாரியார், பி. ஆர்.**

**2184.** i. லண்டன் சாமர்த்தியத் திருடர்கள்—முதற் பாகம் ; முதற் ; பதிப்பு ; ii. எம். ஏ. ஷாஹுல் ஹமீது லப்பை, சென்னை ; ஷாஹுல் ஹமீதிய்யா அச்சுக்கூடம், திருவல்லிக்கேணி, சென்னை; iii. டிசம்பர், 1912 ; iv உ. ப. 2+267 ; v. 20×15 செ. மீ. ; vi. 1–0–0 ; vii. இதில் "நரைத்தலைச் சங்கம்" "காணுமற்போன கணவன்" "பயங்கரமான படு கொலை", "விநோதமான விஞ விடைப் பத்திரம்", "ராசாங்க உடன்படிக்கை" என்னும் ஐந்து கதைகள் அடங்கி இருக் கின்றன. இவற்றில் கயவர்களுடைய வரலாறு கூறப்பட்டிருப்பி னும், சிறப்பாய்க் கூறப்பட்டிருப்பது "ஹண்டருடைய வர லாறே." இந்நூல் தன்னைப் படிப்போர்க்குத் துப்பறியும் ஆற்றலையும், உலக நடவடிக்கைகளையும், நன்கறிவித்து நன்மையை விளைவிக்குமேயன்றி, ஒரு போதும் தீமை விளை விக்காது என்கிருர் ஆசிரியர். சிறப்பாய்க் காவல் துறையின ருக்குப் பெரிதும் பயன்படுமென்றும் குறிப்பிடுகிருர். viii. 787/1913/I.

O31,3

**கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி, டி.**

**2185.** i. கமலாபாய் : முதற் பதிப்பு ; ii. அம்பா விலாச புத்தகசாலை, திருவல்லிக்கேணி, வாணி பூஷணம் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1911 ; iv. உ.ப. 4+28 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. இது பேரரசர் அக்பர் காலத்தில் உண்மையிலேயே நடந்தது "கமலாபாய்" என்னும் இராசபுத்திர மங்கையைப் பற்றியது. இந்து முசுலீம் ஒற்று மைக்கு அக்பர் பாடுபட்டதும் அவரது பெருந்தன்மையும் இக் கதையில் விரிக்கப்படுகின்றது. இது ஐந்து அத்தியாயங்கள் கொண்டது. viii. 524/1911/I.

O31,3

**குப்புசாமி பிள்ளை, டி. எம்.**

**2186.** i. மீனுட்சிசுந்தரம் : முதற் பதிப்பு ; ii. டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு சன்ஸ் ; டி. வி. சி. பிரஸ், மதராஸ் ; iii. அக்டோபர், 1914 ; iv. உ. ப. 259 ; v. 18×13 செ. மீ. ; vi 0–12–0 ; vii. இந்நவீனத்தில் சமுதாயத்திற்கும் குடும்பத்திற்கும் ஆற்றவேண்டிய தொண்டு, நல்ல எண்ணம், செய்கை, சொல், ஒருமைப்பாடு முதலியவற்றை வலியுறுத்தி எழுதப்பட்டிருக்கிறது. 26 அத்தியாயங்களில் அமைந்துள்ளது. viii. 414/1915/I.

O31,1

குப்புசாமி முதலியார், சி. நா.

2187. i. அதிசயவல்லி என்னும் தலைவிதியால் நிலை குலைந்த விலையில்லா மாணிக்கம்; ii. இ. துரைசாமி முதலியார், மதராஸ் டைமண்டு அச்சுக்கூடம், சென்னை; iii. ஆகஸ்ட், 1914; iv. உ. ப. 147; v. 21×14 செ.மீ.; vi. 0–12–0; vii. "அளவிலாத் துன்பம் நேரிடினும் கற்பைச் காத்தல் பெண்டிரின் கடமை, அயலார், நண்பன், துறவி, குரு, அடிமை, இவர்களின் மனைவியரை விரும்புதல் மரணத் துக்கு வழி கோலும்" என்ற உயரிய கருத்துக்களை விளக்கும் நாவல். viii. 812/1914/III.

O31,3

2188. i. அற்புத நவநீத ரம்பை: முதற் பதிப்பு; ii. என். முனிசாமி முதலியார், மதராஸ் டைமண்ட் பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1912; iv. உ.ப. 2+283; v. 22×14 செ.மீ.; vi. 1–0–0; vii. "மதியானந்தவல்லி என்னும் அற்புத நவநீத ரம்பை" என்பது இதன் முழுப் பெயர். ஓர் இளவரசி, காணமற்போன தனது உடன்பிறந்தானைக்கீழ் உலகில் சிறை வைத்திருந்த பஞ்சமுகன் எனும் அரக்கனைக் கொன்று, மீட்டு வந்த வீரச் செயலை விளக்கும் வியத்தகு வரலாறு. viii. 8/1912/IV.

O31,3

2189. i. கண்ணுமணி: முதற் பதிப்பு; ii. ஜெயவேலு முதலியார், வேலூர், சென்னை; பிரஸிடென்ஸி பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1913; iv. உ.ப. 107+2; v. 21×14 செ.மீ.; vi. 0–8–0; vii. ஒரு பெண் இளவரசன் ஒருவனைத் துன்பத்திலிருந்து காப்பாற்றிப் பின்னர் அவனையே மணம் புரிந்து கொண்ட கதையை இந் நூல் விவரிக்கின்றது. "கணவன் உயிரைக் காத்த கண்ணுமணி" என்றும் இதற்குப் பெயர் உண்டு. ஒரு சில பாடல்களும் இடத்திற்குத் தக்கபடி எடுத்தளாப்பட்டுள்ளன. viii. 400/1914/I.

O31,3

2190. i. கலாவல்லபி என்னும் தலைவாங்கி ஆபூர்வ சிந்தாமணி, முதற் பதிப்பு; ii. எஸ். துரைசாமி முதலியார், ஆர். விவே கானந்தா பிரஸ், வேப்பேரி, சென்னை; iii. மே, 1911; iv. உ.ப. 1+279; v. 22×14 செ.மீ.; vi. 1–4–0; vii. மாயாவி ஒருவன் பல இளவரசிகளைக் கற்பு அழித்தமைக் காக மரண தண்டனை விதிக்கப்பட்ட வரலாற்றைக் கூறுவது. தீய செய்திகளை நீக்கி அறநெறிகளையும் ஒழுக்கங்களையும் குரு பக்தி, கடவுள் பக்தி, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருளை விளக்குவதாய் அமைந்துள்ளது. இம்மை, மறுமை, இன்ப, நல்வாழ்க்கையை விரும்புவார்க்குத் தக்க வழிகாட்டி. viii. 358/1911/II.

O31,3

**2191.** i. கலாவல்லபி என்னும் தலைவாங்கி ஆபூர்வ சிந்தாமணி : இரண்டாம் பதிப்பு ; ii. எஸ். துரைசாமி முதலியார், ராம நிலைய விவேகானந்தா பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1913 ; iv. உ.ப. 323 ; v. 21×14 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. "தலைவாங்கி ஆபூர்வ சிந்தாமணி" என்றும் இது குறிக்கப்படும். அறநெறிகளையும் ஒழுக்கங்களையும், "குரு பக்தி", "தெய்வ பக்தி", முதலியவற்றை உணர்த்தும் சிறந்த கதைகளைக் கொண்டது. இளவரசிகள் பலரது தலையைக் கொய்த கயவன் இறுதியில் "மரண தண்டனைக்கு" ஆளான கதையை இந்நூல் விவரிக்கின்றது. viii. 1012/1913/IV.

O31,3

**2192.** i. கற்பகவல்லி : முதற் பதிப்பு ; ii. எஸ். துரைசாமி முதலியார், விவேகானந்தா அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1913 ; iv. உ.ப. 216 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. "காலனை வென்று கணவனைக் காத்த கற்பகவல்லி" என்பது இதன் முழுப் பெயர். பல வியத்தகு நிகழ்ச்சிகள் இக்கதையில் உள்ளன. viii. 866/1913/III.

O31,3

**2193.** i. கனகவல்லி : முதற் பதிப்பு ; ii. எஸ். கே. பாட்சா நாயுடு, சென்னை ; ஸரஸ்வதி அச்சு இயந்திரசாலை, சென்னை, புரசை ; iii. நவம்பர், 1913 ; iv. உ.ப. 3+167 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. ஒரு பெண்ணின் வீரச் செயல்களை இந் நூல் விவரிக்கின்றது. "கள்ளர் குலம் கருவறுத்த கனகவல்லிக் கதை" என்றும் இதற்குப் பெயர் உண்டு. viii. 492/1914/I.

O31,3

**2194.** i. குணசுந்தரன் : முதற் பதிப்பு ; ii. என். முனிசாமி முதலியார், டைமண்ட் பிரஸ், மதராஸ் ; iii. டிசம்பர். 1912 ; iv. உ.ப. 210 ; v. 19×13 செ.மீ. ; vi, 0–8–0 ; vii. இதற்கு "மித்ருத் துரோகம்" என்றும் ஒரு பெயருண்டு. இது ஒரு துப்பறியும் நாவல். பதினாறு அத்தியாயங்கள் கொண்டது. "நன்மை விதைத்தால் நன்மை விளையும், தீமை விதைத்தால் தீமை விளையும்" என்னும் பழமொழியின் உண்மையை விளக்குவது. viii. 124/1913/II.

O31,3

**2195.** i. தங்க வேணிக் கதை : முதற் பதிப்பு ; ii. எம். வீரராகவலு நாயுடு, அமெரிக்கன் டைமண்ட் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1913 ; iv. உ.ப. 1+60 ; v. 17×13 செ.மீ. ; vi 0–6–0 ; vii. "மனோவுல்லாச தாம்பூலம் துப்பி என்னும் தங்க வேணிக் கதை" என்பது இதன் முழுப் பெயர். ஒரு இளவரசனும் அவனது தோழர்களும் நிகழ்த்திய

வீரச் செயல்களைப் பற்றி விரிக்கும் ஒரு "தேவதைக்" கதை. அரசர்களுக்குக் குடிகளொழுக்கமும், பெற்றோர்க்கு மக்களொழுக்கமும், கணவனுக்கு மனைவி யொழுக்கமும் ஆகிய உலக இயல்புகளை உரைப்பது. இல்லறம், துறவறம் என்னும் இரண்டு அறமும் நூற் பொருளுள் விளக்குவது. viii. 513/1913/I.

O31,3

2196. i. துயராளன் கதை : முதற் பதிப்பு ; ii. என். முனிசாமி முதலியார், திரிபுரசுந்தரி விலாச அச்சுக் கூடம், சென்னை ; iii. மே, 1913 ; iv. உ.ப. 168 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. "துக்கம் பெரிதென்றுரைத்த துயராளன் கதை" என்பது இதன் முழுப் பெயர். "வாழ்வும். தாழ்வும் மாறி மாறி வரும் என்பதை விளக்குவது கதை நிகழ்ச்சிகள் தொடர்பாக விளங்கும் வகையில் இடையிடையே பொருத்தமான தலைப்புக்கள் அமைக்கப்பட்டுள்ளன. viii. 638/1913/II.

O31,3

சாமி முதலியார், ஆரணி

2197. i. தாக்ஷாயணி அல்லது காதலின் வெற்றி : முதற் பதிப்பு; ii. வி. எஸ். கிருஷ்ணசாமி முதலியார், சென்னை, மதராஸ் டைமண்ட் அச்சுக் கூடம், சென்னை ; iii. செப்டெம்பர், 1913; iv. உ.ப. 96 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. துப்பறியும் நாவலாக அமைந்துள்ள இக்கதை, காதலால் ஏற்பட்டதாகக் கருதப்படும் கொலை நிகழ்ச்சியை விரிக்கின்றது ; எட்டு அத்தியாயங்கள் கொண்டது. உலக வழக்குச் சொற்களைக் கொண்டு, எளிய நடையில் அமைக்கப்பெற்றுள்ளது. viii. 39/1913/IV.

O31,3

2198. i. தேவராஜு : முதற் பதிப்பு ; ii. ஆர். வெங்கடாசலம் கம்பெனியார், சச்சிதானந்தம் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1914 ; iv. உ.ப. 100 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. தந்தையைச் சிறையிலடைத்துப் பொருளைக் கவர நினைத்த ஒரு நெறிகெட்ட மகனின் சூழ்ச்சிகளை விளக்கும் ஒரு துப்பறியும் நவீனம். ஒன்பது அத்தியாயங்கள் கொண்டது. viii. 301/1914/IV.

O31,3

2199. i. பத்மாசனி : முதற் பதிப்பு ; ii. டபிள்யூ. கோவிந்தசாமி முதலியார், கார்டியன் அச்சியந்திர சாலை, சென்னை ; iii. பிப்ரவரி, 1913 ; iv. உ.ப. 239 ; vi. 18×13 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. துப்பறியும் காவலரைப் போன்று துப்புத் துலக்கும் கன்னியின் கதை. பதினேழு அத்தியாயங்களைக்கொண்டது. "நன்மை விதைத்தால் நன்மையே

விளையும், தீமை விதைத்தால் தீமையே விளையும், கடவுளை நம்பினோர் கைவிடப்படார் "; என்னும் முதுமொழிப் பொருள் களுக்கு ஓர் இலக்கியமாய் உள்ளது. viii. 991/1913/I.

O31,3

2200. i. பர்த்தாவிற் கேற்ற பதிவிரதா சிரோன்மணி : முதற் பதிப்பு ; ii. எஸ். துரைசாமி முதலியார், சரஸ்வதி அச்சு இயந்திரசாலை, சென்னை ; iii. ஜூலை, 1914 ; iv. உ.ப. 228 ; v. 21×14 செ. மீ. ; vi. 0–12–0 ; vii. இந்நூல் கற்புடைய மங்கை ஒருத்தியின் பெருமையை விளக்கும் கதையாகும். கெடுமதி படைத்த மனிதர்களின் சூழ்ச்சியால் நிலையிழந்து வருந்தித் தன் கற்பின் வன்மையால் பழைய நிலையை அடைந்த அவளது துன்ப வரலாறே இக் கதை யாகும். viii. 434/1914/III.

O31,3

2201. i. பாதாள புவன ராணி, முதற் பாகம் : முதற் பதிப்பு ; ii. எஸ். துரைசாமி முதலியார், ஆர். விவேகானந்தா பிரஸ், சென்னை ; iii. மே, 1912 ; iv. உ.ப. 1+117 ; v. 21×15 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. " உல்லாசவல்லி என்னும் பாதாள புவன ராணி" என்பது இதன் முழுப் பெயர். நன்றி மறவாமையை வற்புறுத்திக் கூறுவதோடு அறம் பொருள், இன்பம், வீடு, என்னும் நாற் பொருள் உண்மையை வெளிப்படுத்துவது. வியப்பான பல நிகழ்ச்சிகளைக் கொண்டது ; viii. 768/1912/II.

O31,3

2202. i. பூலோக லட்சுமி கதை : முதற் பதிப்பு ; ii. என். முனுசாமி முதலியார் ; நாகவேடு அண்டு சி. நா. குப்பு சாமி முதலியார், சென்னை ; ஸரஸ்வதி அச்சு இயந்திர சாலை, சென்னை; iii. பிப்ரவரி, 1914 ; iv. உ.ப. 3+139 ; v. 22×14 செ. மீ. ; vi. 0—10—0 ; vii. ஒரு இளம் பெண் தனது கல்வி அறிவினால் எவ்வாறு துன்பங்களி லிருந்து விடுபட்டுத் தனது கணவனுடன் இன்ப வாழ்க்கை நடத்தினாள் என்பதை இந்நூல் விரிக்கின்றது. அத்தியாயப் பாகுபாடு இன்றி நீண்டு செல்லும் தொடர்கதை இது. "பொய் சொல்லாப் புண்ணியவதி" என்றும் இக் கதைக்குப் பெயர் உண்டு. viii. 1139/1914/I.

O31,3

2203. i. முத்தேவிமார் கதை : முதற் பதிப்பு ; ii. சி. வ. செங்கல்வராய நாயுடு ; விவேகாநந்தா அச்சுக் கூடம், சென்னை ; iii. ஜூலை, 1913 ; iv. உ. ப. 2+244 ; v. 22×15 செ. மீ. ; vi. 1—0—0 ; vii. இந்தக் கதையில் அறம், பொருள், இன்பம், வீடு, என்னும் நான்கு பொருளும், இறையன்பும், அரசர்க்குக் குடிப் படைகள் ஒடுக்கமும், கண

வனுக்கு மனைவி அடக்கமும், பெற்றோற்கட்கு மக்கள் ஒடுக்கமும், இல்வாழ்க்கைக்குக் காரணமான பல நிகழ்ச்சிகளும் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. வினையால் வருவது வந்தே தீரும் என்பதை வற்புறுத்தி உரைப்பது. பெண் மணிகளுக்குக் கற்பே சிறந்த அணிகலன் என்பதை எடுத்துக் காட்டுவது. படிப்பவர்களை இடையிடையே விளித்து, "கேளுங்கள்" என்று சுட்டுவதும், கதை மாந்தர்களின் பேச்சுக்களில் இவ்வாறே "கேளுங்கள்" என்று சொல்லி உரையாடுவதும் இக்கதையில் மிகுந்து காணப்படுகிறது; viii. 442/1913/III.

O31,3

2204. i. விவேகாநந்தக் கதை: இரண்டாம் பதிப்பு; ii. எஸ். துரைசாமி முதலியார், சூளை; ஆர். விவேகாநந்த பிரஸ், மதராஸ்; iii. ஜூலை, 1912; iv. உ. ப. 1+160; v. 22×14 செ. மீ., vi. 0—12—0; vii. "அபூர்வ மனோவுல்லாசனி என்னும் விவேகானந்தக் கதை" என்பது இதன் முழுப் பெயர். தேவதைக் கதைகளில் சம்மந்தப்பட்ட சில இளவரசர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும் செய்த வீரச் செயல்கள் பற்றி விளக்குவது. கடவுளின் தன்மை இத்தகையது என்று ஓர்ந்து இல்வாழ்க்கையில் கணவனுக்கு மனைவியும் தாய் தந்தையர்க்குத் தனயரும், அரசனுக்குக் குடிகளும் அடங்கி நடக்க வேண்டுமென்று ஆங்காங்குச் சுட்டிக் காட்டி நன்கு விளக்கப் பட்டிருக்கிறது. இக்கதை இம்மை மறுமைக்கு நல்வழிகாட்டி ஞானத்தை நல்குமென்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார்; viii. 108/1912/III.

O31,3

2205. i. வீரவல்லிக் கதை: முதற் பதிப்பு; ii. மெண்டு பத்மநாப நாயுடு, கிச்சினர் அச்சுக்கூடம், சென்னை; iii. செப்டெம்பர், 1913; iv. உ. ப. 2+144; v. 22×14 செ. மீ.; vi. 0—12—0; vii. "தீர மொழியை நேரில் முடித்த வீரவல்லிக் கதை" என்பது இதன் முழுப் பெயர். கற்புடை மாதர்களின் மேன்மையை விளக்கியதோடு, கணவனை மதியாத பெண்கள் அடையும் கேடுகளை விரித்துள்ளார். குடும்ப நலத்திற்கான நல்வழிகளை ஆங்காங்கே சுட்டிக் காட்டி எழுதியுள்ளார்; viii. 770/1913/III.

O31,3

## குமாரசாமி நாயுடு

2206. i. மூராது என்னும் துர்ப்பாக்கிய சாலியின் சரித்திரம்; முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு சன்ஸ்; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1913; iv. உ. ப. 60; v. 19×13 செ. மீ.; vi. 0—2—0;

vii. இது மிஸ். எட்ஜ்வொர்த் என்பவர் எழுதிய பாபுலர் டேல்சு என்பதன் தமிழ் மொழிப் பெயர்ப்பாகும். viii. 815/1913/VI.

O31,3

**கூடலிங்கம் பிள்ளை, எஸ்.**

2207. i. மங்கம்மாள் அல்லது மதுரைக்கரசி: முதற் பதிப்பு; ii. எஸ். கூடலிங்கம் பிள்ளை, மதுரை; ஸ்ரீ வித்தியா விநோதினி பிரஸ், தஞ்சை iii. டிசம்பர், 1912; iv. உ.ப. 2+183: v. .22×14 செ. மீ.; vi. 1—0—0; vii. மதுரையை ஆண்ட மங்கம்மாளின் வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு எழுதப் பெற்ற நவீனம். மங்கம்மாளின் ஆட்சிமுறை வியக்கத்தக்க முறையில் இருந்ததென்பதை எடுத்துக் காட்டுகிறது. இருபத்தைந்து அத்தியாயங்கள் கொண்டது; viii. 318/1913/I.

O31,3

2208. i. கூண்டு விட்டுக் கூண்டு பாய்தல்; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், காக்ஸ்டன் பிர்ஸ், சென்னை; iii. ஜூன், 1913; iv. உ. ப. 31; v. 18×12 செ.மீ.; vi. 0—1—0; vii. "கூண்டு விட்டுக் கூண்டு பாய்தல்" "தந்தையின் அன்பு" என இரண்டு அறநெறிக் கதைகளைக் கொண்டது. முதல் கதை பாக்தாத் நாட்டுத் தலைவரைக் குறித்த கதை. ஆறு அத்தியாயங்கள் கொண்ட நெடுங்கதையாகவும் உள்ளது. இரண்டாவது கதை இரண்டே பக்கங்கள் கொண்ட ஒரு சிறு கதை; viii. 911/1913/II.

O31,3

2209. i. ஆத்மநாதன் அல்லது காந்திமதியின் காதல்: முதற் பதிப்பு; ii. சாரதா விலாஸ் புத்தகசாலையார், நாகப்பட்டினம்; பி. ஆர். ராமையர் அண்ட் கம்பெனி, சென்னை; iii. மார்ச், 1915; iv. உ. ப. 148; v. 18×13 செ. மீ.; vi. 0—8—0; vii. இது ஒரு துப்பறியும் கதை. ஓர் ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர் விரும்பிப் பின் இடையில் பல துன்பங்களை அடைந்து இறுதியில் ஒன்றுகி மகிழ்ந்ததைக் கூறும் நவீனம். பன்னிரண்டு அதிகாரங்கள் கொண்டது இந்நூல். இந்நாவலின் இடையிடையே "ஆன்ம தத்துவம்" "உள தத்துவங்களைப் பற்றியும், உடல் தத்துவத்தைப் பற்றியும்", பதி பசு பாச இலக்கணங்களைப் பற்றியும், அகப் பொருளிலக்கணத்தைப் பற்றியும் எழுதப்பட்ட பகுதிகள் சிறப்பாகக் கவனிக்கத் தக்கவை; viii. 1004/1915/I.

O31,3

210. i. சந்திரோதயம் அல்லது அலைகடல் அளித்த அரசி; முதற் பதிப்பு; ii. டி. கிருஷ்ணசாமி அய்யர்; கார்டியன் பிரஸ், சென்னை; iii. ஏப்ரல், 1912; iv. உ. ப. 10+399; v. 18×12 செ. மீ.; vi. 1—0—0; vii. ஆங்கில நூலைத் தழுவிச் செந்தமிழ் நாட்டிற்கு இயைந்த வாறு எழுதப் பெற்றது. ஒரே கடவுள் என்ற உண்மையும் நாட்டின் நன்மைக்காகப் பாடுபட வேண்டும் என்ற நோக்கத்தையும் வற்புறுத்திக் கூறுவது இந்நாவல். அற நிலையங்களை நல்ல முறையில் காக்க வேண்டும் என்று அறிவுறுத்தும் நோக்கமும் இதில் காணப்படுகிறது. 20 அத்தியாயங்கள் கொண்டது. இதன் முன்னுரையில் நூலாசிரியர் நவீனப் புனைகதை பற்றியும், இவ்விலக்கியம் பற்றியும் நம் நாட்டில் ஏற்பட்டுள்ள முயற்சிகள் பற்றியும் விரித்துள்ளார்; viii. 816/1912/II.

O31,3

**கோபாலகிருஷ்ண பிள்ளை, வி., நாகை.**

2211. i. தனபாலன், முதற் பாகம்: முதற் பதிப்பு; ii. லலிதா விலாச புத்தக சாலை, திருவல்லிக்கேணி; ஆர். கிருஷ்ணசாமி சர்மா, ஆர். ராம ஐயர் அண்டு கம்பெனி, சென்னை; iii. ஜூலை, 1911; iv. உ. ப. 2+256; v. 18×13 செ. மீ.; vi. 0—12—0; vii. ஆங்கில மொழியில் மிஸ். மேரி காரெலை என்னும் பெண்பாற் புலவர் இயற்றியிருக்கும் "சாத்தானின் துக்கங்கள்" என்னும் அரிய கதையின் போக்கைப் பெரும்பான்மை தழுவியும், வேறு பல செய்திகளைப் புதுவதாக உடன் கூட்டியும், செந்தமிழ் நாட்டினுக்கு இயைந்தவாறு இயற்றப்பட்டிருக்கிறது. இது பதினைந்து அத்தியாயங்கள் கொண்டது; viii. 195/1911/III.

O31,3

2212. i. தனபாலன்: இரண்டாம் பாகம்: முதற் பதிப்பு; ii. லலிதா விலாச புத்தக சாலை, திருவல்லிக்கேணி, பி. ஆர். ராமய்யர் அண்டு கம்பெனி, சென்னை; iii. நவம்பர், 1912; iv. உ. ப. 1+194; v. 17×13 செ.மீ.; vi. 0—12—0; vii. "தனபாலன் அல்லது ஒரு பெரிய கோட்டீஸ்வரனின் ஆச்சரியமான அனுபவம்" என்பது இதன் முழுப் பெயர், மேரி காரெலை என்னும் ஆங்கில ஆசிரியர் எழுதிய நூலின் தழுவல். பதினைந்து அத்தியாயங்கள் கொண்டது. viii. 630/1912/IV.

O31,3

2213. i. பத்மரேகை அல்லது கற்பகச் சோலை அதிசயம்: முதற் பதிப்பு; ii. அய்யர் அண்டு கம்பெனி, சென்னை; பி. ஆர். ராம ஐயர் அன்ட் கோ, சென்னை; iii. ஏப்ரல், 1912; iv. உ. ப. 8+275; v. 18×13 செ.மீ.; vi. 0-12-0; vii. இது ஒரு துப்பறியும் தமிழ்க்கதை. மேல் நாட்டுக் கதாசிரியர்களின் போக்கையே பெரும்பாலும் தழுவி எழுதப்பட்டது. இருபத்தெட்டு அத்தியாயங்கள் கொண்டது. இளவரசி ஒருத்தி ஊர்க்காவலர் ஒருவரின் துணைகொண்டு கொள்ளைக் கூட்டத்தினரைக் கண்டுபிடித்ததும் ஈரிணைக் காதலர்களிடையே நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் விளக்குகிறது; viii. 238/1912/II.

O31,3

2214. i. பாதாளவரசி அல்லது ஒரு கோடீசுவரனின் துன்பங்கள்; ii. எம். வி. பிரஸ், சென்னை; iii. 1915; iv. உ.ப. 64; v. 22×14 செ.மீ.; vi. 0-4-0; vii. செல்வத்தால் தோன்றும் பண்பு வேறுபாடுகளைக் காட்டும் ஒரு நவீனம். எழு அதிகாரங்கள் கொண்டது. தீய செயல் செய்தார் அவ்வத் தீமைக்கு ஏற்ப நரகத்தில் துன்புறுவர் என்று படிப்பவரும் அச்சங்கொள்ளும் வகையில் நரகக் காட்சிகளை இந்நூல் வருணிக்கின்றது; viii. 8/1915/III.

O31,3

**கோபாலகிருஷ்ணமாசாரியன், வை. மு., திருவல்லிக்கேணி**

2215. i. சில இந்திய புராதன கதைகள்: முதற் பதிப்பு; ii. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியன், வைஜயந்தி அச்சுக்கூடம், சென்னை; iii. ஜூலை, 1914; iv. உ.ப. 93; v. 18×13 செ.மீ.; vi. 0-5-0; vii. இந்தியாவில் வழங்கி வரும் ஐந்து பழங்கதைகளைக் கொண்ட நூல். இதில் வீரவரன், பாடலீபுத்திரன், சிருங்கபுசன், சீமூதவாகனன், கடல்வீரன் ஆகிய கதைகள் அடங்கியுள்ளன; viii. 248/1914/III.

O31,3

2216. i. கோமளாங்கி: முதற்பதிப்பு; ii. என். வெங்கடராயலு அண்டு சன்ஸ், மினர்வா பிரஸ், மதராஸ்; iii. மார்ச், 1915; iv. உ.ப. 42; v. 18×13 செ.மீ.; vi. 0-1-6; vii. சிற்றன்னையின் கொடுமைக்கு இலக்கான பெண் ஒருத்தி தன் உடன் பிறந்தோர்களுடன் பல துன்பங்களடைந்து முடிவில் இறைவனருளால் மாபெரும் இன்ப நிலையை அடைந்ததை விளக்கும் கதை; viii. 378/1915/II.

O31,3

**கோவிந்தசாமி ஐயர், மு.**

2217. i. மனோன்மணி: முதற் பதிப்பு; ii. மு. கோவிந்த சாமி அய்யர், மதுரை; விவேகபாநு பிரஸ், மதுரை; iii. ஜூன், 1914; iv. உ.ப. 141; v. 21×14 செ.மீ.; vi. 0-12-0; vii. இது ஒரு சமூக நாவல். இதில் பற்பல அறங்களையும், ஒழுக்கங்களையும், தீமை செய்தாரடையும் துன்பங்களையும், விடாமுயற்சியால் அடையும் நன்மைகளையும் பற்றி விவரிப்பது. பதினைந்து அத்தியாயங்கள் கொண்டது. மு. ரா. கந்தசாமிக் கவிராயர் இதற்கு முகவுரை எழுதியுள்ளார்; viii. 1097/1914/II.

O31,3

2218. i. கோவிந்தன்: முதற்பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1914; iv. உ.ப. 32; v. 19×13 செ.மீ. vi. 0-10-0; vii. கொள்ளைக்காரனாகக் காட்டில் வாழ்ந்த கோவிந்தன் அரசனுக்கு உண்மையான ஊழியனாக மாறுகிறான். இவன் காட்டில் நிகழ்த்திய கொடுமைகள் முதலிய வற்றையும், அரசனது அன்பைப் பெற்றமையும் இக் கதை விளக்கிக் காட்டுகிறது. ராபின்ஹுட் தி அவுட்லா (Robinhood the outlaw) என்னும் ஆங்கிலக் கதையைத்தழுவி எளிய உரை நடையில் அமைந்தது இக் கதை. viii. 956/1914/I.

O31,3

**கோவிந்தராஜ முதலியார், கா. ரா.**

2219. i. சாரச நேத்ரி: முதற் பதிப்பு; ii. மெண்டு பத்மநாப நாயுடு; ராமநிலைய விவேகாநந்த முத்திராக்ஷர சாலை, சென்னை; iii. செப்டம்பர், 1911; iv. உ.ப. 3+145; v. 22×14 செ.மீ.; vi. 0-12-0; vii. உலக இயல்புகளை உள்ளடக்கியப் புனைந்துரை வகையால் இயற்றப் பட்ட நவீன கதை. பெண்களுக்கும், பிள்ளைகளுக்கும் அவர்களது விருப்பம் அறிந்து மணம் செய்விக்க வேண்டுமே யன்றிப் பெற்றோர் விருப்பம்போல் செய்யக் கூடாது என்பதைச் சீரிய நோக்கமாக வற்புறுத்துவது. இது பதினான்கு அத்தியாயங்கள் கொண்டது. இக் கதையினிடையே சித்திரக் கவிகள் இயற்றுமாறு கதை மாந்தருக்குக் கட்டளையிடுதலும் சில சித்திரக் கவிகளைப் பாடுதலும் குறிக்கப் பட்டிருக்கிறது. படங்கள் மூலமாகவும் சித்திரக் கவிகள் விளக்கப்பட்டிருக்கின்றன. viii. 956/1911/III.

O31,3

2220. i. கௌஸல்யா தேவி : முதற் பதிப்பு ; ii. என். வெங்கடராயலு அண்ட் சன், சென்னை, ஜோதிஷ்மதி முத்திராக்ஷரசாலை ; iii. செப்டம்பர், 1914 ; iv. உ.ப. 34 ; v. 19×12 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. இராமரின் தாயான கோசலையின் கதையைப் பற்றிக் கூறும் நூல். இராமாயணம் என்னும் பேரிதிகாசத்தினின்று எடுக்கப்பட்டது இக் கதை. viii. 168/1914/IV.

O31,3

**சங்கரலிங்க நாடார், ச. சு., சென்னை.**

2221. i. அநியாயபுரம் அகடவிகட கோர்ட் விசாரணை : முதற் பதிப்பு ; ii. க. பெ. ஸ்ரீநிவாசப் பிள்ளை, விஜய விகடன் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1914 ; iv. உ.ப. 165+3 ; v. 17×11 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. சிந்தாதிரிப்பேட்டை சதாவதானம் தெ. கிருஷ்ணசாமிப் பாவலரால் நடத்தப்பட்ட விகட ரத்தினம் இதழுக்குத் துணையாசிரியராக இந்நூலாசிரியர் இருந்தபோது எழுதியதவற்றுள் இதுவும் ஒன்று. இது வேடிக்கை நிகழ்ச்சிகள் பலவற்றைக் கொண்டது. உரையாடல் முறையில் அமைந்தது. தாயுமானவர் பாடல் போன்ற பழம் பாடல்களின் சொற்பொருள் அமைப்பு அடிப்படையில் வேடிக்கையான பாடல்கள் பல இதில் அங்கங்கே அமைந்துள்ளன. அகட விகட ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன் முதலியன கவனிக்கத் தக்கவை. இவைபோன்று அவ்விதழில் ஆசிரியர் எழுதியவை, கொடுஞ்சூரி விலாசம், விதவாவிவாக கேஸ், விநோத விகட புராணம், விநோத விகடக் கும்மி, விகடத் தெருப்புகழ், விகடாநந்தன், விகட ரத்தின மஞ்சரி என்பனவாம். இவை யெல்லாம் மேற் குறித்த இதழில் வெளிவந்தன. viii. 790/1914/I.

O31,3

**சங்கரலிங்கம் பிள்ளை, ஏ.**

2222. i. அல்லாவுதீன் அல்லது அற்புத தீபம் : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1912 ; iv. உ.ப. 79 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–2–6 ; vii. இரவிற் சொல்லிய அராபியக் கதைகளில் இது ஒன்று. சிறுவர் சிறுமியரும், எளிதில் கற்கும் வகையில் உரை நடையில் அமைந்தது. நூற்றுமுப்பது பத்திகளில் இக்கதை எழுதப்பட்டிருக்கிறது. viii. 420/1912/I.

O31,3

2223. i. நீதிக்கோபுரம்: முதற் பதிப்பு; ii. வி. குருசாமி நாயுடு சன்ஸ், காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1911; iv. உ.ப. 2+68; v. 8×13 செ.மீ.; vi. 0–2–0; vii. நீதிக்கோபுரம் என்னும் முதற்கதையின் பெயர் இந்நூலுக்கு வைக்கப்பட்டிருக்கிறது. இந்த முதற் கதை மனுச் சோழன் வரலாறு பற்றியது. இது போன்று அமைந்த பத்துக் கதைகளின் தொகுப்பு இந்நூல். கீழ் வகுப்பில் படிக்கும் சிறுவர்களுக்கு வீட்டுப்பாடமாக அமைக்கத்தக்கது என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். viii. 250/1911/III.

O31,3

2224. i. பூதநேசன்: முதற் பதிப்பு; ii. பி. துரைசாமிப் பிள்ளை, புரசவாக்கம், சென்னை; பிரசிடென்ஸி பிரஸ், சென்னை; iii. ஜூன், 1914; iv. உ.ப. 120; v. 22×14 செ.மீ.; vi. 0–8–0; vii. ரெய்னுல்ட் எழுதிய கதையான பாஸ்ட் (Faust) என்ற நவீனத்தைத் தழுவி எழுதப் பெற்றது. தீக்குணத்தால் தீயோர் வலைப்பட்டுச் சிறியோர் படும் துன்பங்கள், உவமை வடிவில் காட்டப்பட்டுள்ளன. பழங்காலத்தில் தமிழ் மக்களின் நாகரிகம், ஆண், பெண் களின் பண்புகள், கற்பின் மேன்மை, வாய்மை, பொதுமை, தெய்வபக்தி, முதலிய பல செய்திகள் பத்து அத்தியாயங் களில் சொல்லப்பட்டிருக்கின்றன. viii. 1108/1914/II.

O31,3

**சடகோபாச்சாரியார், எம். ஏ., கும்பகோணம்**

2225. i. கீர்வாணி: முதற் பதிப்பு; ii. சடகோபாச்சாரியார், ஆரியன் அச்சாபீஸ், கும்பகோணம்; iii. டிசம்பர், 1913; iv. உ.ப. 1+66; v. 21×14 செ.மீ.; vi. 0–6–0; vii. ஒழுக்கம், அறம், கற்பு, அன்பு முதலிய சிறந்த பண்புகள் உடையவளே நல்ல பெண் என்பதை இது தெரிவிப்பது. குடும்பப் பொறுப்பேற்று, நல்ல செய்கை களைச்செய்து பாராட்டுக்கு உரியவளாக விளங்க வேண்டும் என்பதை இந்தக் கீர்வாணியின் வரலாறு எடுத்துக் காட்டுகிறது. சில பாடல்களை ஆசிரியர் மேற்கோளாகக் காட்டி யுள்ளார். இந் நாவலைத் தவிர வனரோஜா, சுமதி, மோகன லீலா, லெட்சுமி காந்தன், தனஞ்செயன் என்னும் நாவல்களும் இவர் எழுதியுள்ளதாக இந்நூலின் அறிவிப் பிலிருந்து தெரிய வருகிறது. viii. 963/1913/IV.

O31,3

2226. i. தனஞ்செயன்; ii. லெக்ஷ்மி விலாஸ அச்சாபீஸ், கும்பகோணம்; iii. 1915; iv. உ.ப. 183; v. 19×13 செ.மீ.; vi. 0–12–0; vii. துப்பறியும் வல்லுநர் ஒருவரால் எப்படி ஒரு மனிதன் காப்பாற்றப்படுகிறான் என்பதையும், அவனுக்கு மண உறுதி செய்யப்பட்ட பெண் எப்படி அவளுடைய தாய் மாமனாரிடமிருந்து காப்பாற்றப்பட்டாள் என்பதையும் இவை போன்றவைகளையும் விளக்குகிறது. குறிப்பாக இளைஞர்கள் தாம் கற்ற கல்விக்கேற்ப வாழ்க்கையில் ஒழுக்கத்தைக் கைக்கொள்ள வேண்டும் என்றும் ஆசிரியர் அழுத்தமாகவும் கதையின் சிறப்பு நோக்கமாகவும் எழுதியுள்ளார். viii. 320/1915/III.

O31,3

2227. i. மோஹனலீலா : முதற் பதிப்பு ; ii. எம். ஏ. சடகோபாச்சாரியார், ஸ்ரீ வித்யா பிரஸ், கும்பகோணம் ; iii. ஜூன், 1913; iv. உ.ப. 52 ; v. 19×13 செ.மீ., vi. 0–5–0 ; vii. "அவன் அருளில்லாதார்க்கு யாதொன்றும் இல்லை" என்னும் ஆன்றோர் வாக்கை அடிப்படையாகக் கொண்ட கதை'. தமிழ், ஆங்கிலம், வடமொழி முதலிய மொழிகளிலுள்ள நூல்களைப் படித்த பட்டறிவைக் கொண்டு இதை ஆக்கியதாக ஆசிரியர் கூறுகிறார். நற்பண்பு—நல்லொழுக்கங்களையும் சிவ வழிபாட்டையும் சிறப்பாக இக்கதையில் சுட்டிக் காட்டியுள்ளார். viii. 907/1913/II.

O31,3

2228. i. வனரோஜா : முதற் பதிப்பு ; ii. எம். ஏ. சடகோபாச்சாரியார், ஆரியன் அச்சாபீஸ், கும்பகோணம் ; iii. அக்டோபர்; 1913 ; iv. உ.ப. 2+148 ; v. 20×14 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. கல்வி, கற்பு, உடன் பிறந்தோர் அன்பு, பெற்றோர்களின் கடமை, கணவனே தெய்வம் என்னும் பொருள்களைக் கொண்டு அமைந்தது இந்த நவீனம். அங்கங்கே கவிவாணர்களின் செய்யுட்களையும் இவர் எடுத்தாண்டுள்ளார். பன்னிரெண்டு அத்தியாயங்கள் கொண்டது. இந்நூலாசிரியரின் படமும், "சுந்தரி" என்னும் கதைத் தலைவியின் படமும், காந்திமதி வனரோசா என்ற படமும் இதில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்நாவலின் கதைத் தலைவர்கள் குறிப்பு முதலில் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 482/1913/IV.

O31,3

2229. i. ஸுமதி : முதற் பதிப்பு; ii. எம். ஏ. சடகோபாச்சாரியார் ஆரியன் அச்சாபீஸ், கும்பகோணம் ; iii. அக்டோபர், 1913; iv. உ.ப. 95; v. 20×14 செ.மீ.; vi. 0–7–0; vii. வாழ்வினிலே ஏற்படும் விளைவுகளைக் கண்டு தளராது நடக்கத் தக்க

மன வலிமையைப் பற்றி விவரிப்பது. அறம், அருள், பண்பு கல்வி, மானம், இறையன்பு இவற்றைக் கைவிடலாகாது என்று வற்புறுத்திக் கூறுவது. ஒன்பது அத்தியாயங்களைக் கொண்டது. தர்மாங்கதனும், சுமதியும், சாகுந்தலாவும், அரச மரபில் பிறந்தும் தங்களுக்கு நேர்ந்த துன்பத்தில் ஒருவரை யொருவர் வெறுக்காமல் கணவனைவிடத் தெய்வம் இல்லை என்று நடந்து நன்மையடைந்த விதத்தை விளக்கியுரைப்பது இக்கதை. viii. 483/1913/IV.

O31,3

2230. i. ஸுலோச்சனு உபாக்யானம்; ii. எம். சடகோபாச்சாரி: கும்பகோணம், லெக்ஷ்மி விலாஸ் அச்சாபீஸ், கும்பகோணம்; iii. 1915; iv. உ.ப. 34; v. 18×13 செ.மீ.; vi. 0–3–0; vii. ஆதிசேடன் மகள் சுலோச்சனு என்னும் கற்புக்கரசி, தன் கணவனுகிய இந்திரசித்தன் உயிர் மேலுலகிற்கு சென்றதென்று கேள்வியுற்று ராமபிரானின் அருளைப் பெற்று, தானும் தன் கணவனுடன் வீடு எகினுள் என்ற வரலாற்றைக் கூறுவது, viii. 321/1915/III.

O31,3

சந்திரகாசன் பிள்ளை, ரா., தூத்துக்குடி

2231. i. குசேல முனிவர் சரித்திரச் சுருக்கம் ; ii. சந்திர காசன், தூத்துக்குடி ; சைவப் பிரகாச அச்சியந்திரச் சாலை, தூத்துக்குடி ; iii. 1915 ; iv. உ.ப. 12 ; v. 16×11 செ.மீ. ; vi. 0–0–9 ; vii. தரித்திரமென்னும் அழியாப் பெருந்தவத்தினுல், பெருஞ் சிறப்புற்ற குசேல முனிவரின் அருங்கதை சுருக்கமாக விளக்கப்பட்டிருக்கிறது. இடையிடையே சிற்சில மேற்கோள் பாடல்களும் இடம் பெற்றுள்ளன. viii. 221/1915/II.

O31,2

2232. i. சந்திரகாசன் : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1913 ; iv. உ.ப. 93 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. இது ஒரு பழங்கதை. ஐந்து அத்தியா யங்களில் எழுதப்பட்டிருக்கிறது. இனிய பாடல்களில் சில இடையிடையே கொடுக்கப்பட்டுள்ளன. ஓராணு வாசக வரிசையில் இது ஒன்று. viii. 1052/1913/IV.

O31,3

சம்பத்து ஐயங்கார், ஒ.

2233. i. சுகுணரஞ்சனி : முதற் பதிப்பு; ii. லலிதா விலாச புத்தகசாலையார், சச்சிதானந்தா பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1912; iv. உ.ப. 139; v. 18×12 செ.மீ.; vi. 0–8–0;

vii. கொடியவன் ஒருவன் தனது மாற்றுந்தாயின் மகனை அழிப்பதற்காகச் செய்த கொடுமையான சூழ்ச்சிகளைப் பற்றி விவரிக்கும் ஒரு நவீனக் கதை. எழு அத்தியாயங்கள் கொண்டது. viii. 739/1912/IV.

O31,3

**சாமிநாத ஐயர், தி.அ.**

**2234.** i. விவேகசந்திரிகை : முதற் புத்தகம் ; முதற் பதிப்பு; ii. வி. குமாரசுவாமி நாயுடு அண்ட் சன்ஸ்; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1913; iv. உ.ப. 131; v. 18×13 செ.மீ.; vi. 0–4–0 ; vii. பள்ளிச் சிறுவர்களுக்கேற்ற ஒழுக்க முறைக் கதைகளின் ஒரு தொகுப்பு. புராண இதிகாசங்களிலிருந்து இக்கதைகள் எடுக்கப்பட்டன. எளிய உரை நடையில் ஆங்காங்கு மேற்கோள் காட்டித் தெளிவாக எழுதப் பெற்றது. நாற்பது கதைகள் இதில் உள்ளன. படங்களும் சில உள. இக்கதைகளில் எடுத்துக் காட்டிய மேற்கோள்கள் அகர வரிசையில் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளன. "விவேக சந்திரிகை" எனும் நீதிவாசக நிலவின் முதற் பகுதி இதுவாகும். viii. 912/1913/II.

O31,3

**சாமிநாத சர்மா, வெங்களத்தூர்**

**2235.** i. கௌரீ மணி : முதற் பதிப்பு; ii. வி. சாமிநாத சர்மா, சென்னை; பி. ஆர். ராமய்யர் கம்பெனி, சென்னை; iii. நவம்பர், 1914; iv. உ.ப. 48 ; v. 18×13 செ.மீ.; vi. 0–3–0 ; vii. திருவிளையாடற் புராணக் கதைகளில் ஒன்றான இக்கதை மாமியார் செய்கின்ற கொடுமைகளை ஒரு சிறந்த மருமகள், பொறுமையோடு தாங்கிக் கொண்டதை விளக்குகிறது. இது சென்னை செந்தமிழ்ச் சங்கத்திலிருந்து வெளிவரும் ஞான விருட்சத்தின் முதலாவது கதை ஆகும். viii. 728/1914/VI

O31,3

**சாமிநாயுடு, மா., சுல்தான்பேட்டை**

**2236.** i. சந்திர ரேகா : முதற் பதிப்பு; ii. மா. சாமி நாயுடு, சுல்தான் பேட்டை; தி இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1912; iv. உ.ப. 8+2; 16+8; v. 22×14 செ.மீ.; vi. 2–0–0; vii. இது செயல், இறையன்பு, முதலியவற்றை விளக்கும் வகையில் அமைந்த நவீனக் கதை. சந்திரன் விலங்குகள் எல்லாவற்றிற்கும் மனமகிழ்ச்சியைத் தருபவனாதலின் அப்பெயருக்கு ஏற்ப "சந்திர ரேகா" என்று பெயர் சூட்டப்பட்டிருக்கிறது. பன்னிரண்டு அத்தியாயங்களும், ஒவ்வோர் அத்தியாயத்திலும் சில "பரிச்சேதங்களும்" கொண்டது. நமது நாட்டவர் ஒழுக்கங்களினின்று வழுவாது இறைவனை

வணங்க வேண்டுமென்பதையும், ஆண்-பெண்களனைவருக்கும் கல்வி இன்றியமையாததென்பதையும், அதனால் நடைபெறும் நன்மைகளையும் மாதர்களால் நேரிடும் நன்மை தீமைகளையும் இந்நூல் இனிது விளக்கும். viii. 1018/1912/III.

O31,3

**சிங்காரவேலு ரெட்டியார், கே.பி., வாங்கூர்**

2237. i. மதிவல்லபன் மங்கை மோகனாள் : முதற் பதிப்பு ; ii. த. ஜெயவேலு முதலியார்; கவிப்பிரகாச் கணேசானந்த பிரஸ், சென்னை; iii. ஏப்ரல், 1914; iv. உ.ப. 1+93 ; v. 22×15 செ.மீ.; vi. 0–8–0 ; vii. திருமணத்திற்குமுன் இளங்காதலர் இருவர் அடைந்த இன்னல்களை விவரிக்கின்றது இந்நவீனம். கதைக்குத்தொடர்பான சில பாடல்களும் அங்கங்கே கொடுக்கப்பட்டுள்ளன. viii. 692/1914/II.

O31,3

**சிதம்பரம் பிள்ளை, நா., பரளச்செய்கோட்டையூர்**

2238. i. கற்புத்திருமலி: முதற் பாகம் ; முதற் பதிப்பு; ii. நா. சிதம்பரம் பிள்ளை; ஸ்ரீகோபால விலாச அச்சுக்கூடம், கும்பகோணம்; iii. மார்ச், 1913; iv. உ.ப. 57+3+4 ; v. 13×11 செ.மீ.; v;. 0–2–0; vii. கற்புத்திருமலி என்பாள் தமது கற்பின் சிறப்பால் பாம்பு கடித்து இறந்த தன் கணவனைக் கடவுள் அருளால் பெற்ற வரலாறு. பெண்களுடைய நடையுடை செயல்களும் பலவித அறச் செயல்களும் இதில் விவரிக்கப்பட்டுள்ளன. பல செய்யுட்கள் இக்கதையில் அங்கங்கே கதைக்கேற்றபடி எடுத்தாளப்பட்டுள்ளன. இவை தமிழ் இலக்கிய நூல், ஞானநூல் முதலியவற்றிலிருந்து எடுக்கப்பட்டனவாம். இதற்கு முன்னுரை வழங்கிய கும்பகோணம் பாகவத ரங்கநாதாச்சாரியார் இந்நூல் நல்லொழுக்கம், கல்வி, தெய்வ பக்தி, நல்ல அறம், முதலியவைகளை குழந்தைகளுக்கு உணர்த்துவதென்றும் இது பள்ளிப் பிள்ளைகளுக்குத் துணைப்பாடமாக அமைக்கத் தக்கதென்றும் கூறுகிறார். viii. 807 1913/I.

O31.3

**சிவசிதம்பரம் பிள்ளை, அ.ர.துரை**

2239. i. தனபாக்கியம் : முதற் பதிப்பு ; ii. வி. ஜெயவேலு முதலியார் ; பிரஸிடென்ஸி பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1914 ; iv. உ. ப. 98 ; v. 22×14 செ. மீ. ; vi. 0—6—0; vii. இந்த நவீனம் இறைவன் செயலின் வல்லமையைக் காட்டும் ஊடல் சுவை கலந்த நூலாகும். பாக்கியம் என்னும் இளவரசன் தனபாக்கியம் என்னும் பெண்ணுடன் உரையாடி அவளைக் காதலித்து நெருங்கியதும், அவளுடைய தோழியர்

தடுத்து வெவ்வேறு கதைகளும் செய்திகளும் உரைத்துத் தாம் கூறிய புதிரை விடுவித்தபின்பே சேரலாம் என்று உரைப்பதுமாக இத்தொடர்கதை செல்கிறது. viii. 723/1914/III.

O31,3

**2240.** i. **சிறுவர்க்கேற்ற கதைகள் :** முதற் பதிப்பு ; ii. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொஸைட்டி ; எஸ். பி. ஸி. கே. பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1911 ; iv. உ.ப. 1+55 ; v. 19×13 செ. மீ. ; vi. 0—2—0 ; vii. பிள்ளைகளுக்கு நற்பழக்கங்கள் ஏற்பட, தகுந்த சிறு கதைகளின் தொகுதி. "உதவி செய்தல்". "புரு", பறவைகளின் ஜீவியம், குடும்ப ஜீவியம், மீன்கள், பட்டுப் பூச்சி, வான ஜோதிகள், மரம், வீரர்கள் என்னும் இப்பொருள்களை வாரப் பொருள் என்னும் தலைப்பில் தந்து அவற்றின் கீழ் அவைபற்றிய கதைகளும் தரப்பட்டிருக்கின்றன. viii. 916/1911/III.

O31,3

**சின்ன தம்பி பிள்ளை, தி.கி. (மொ. து.)**

**2241.** i. ஸ்திரிமாச்சரியம் என்னும் துர்க்கிக் கதைகள்-முதற் பாகம் : முதற் பதிப்பு ; ii. கி. வே. திருமேனி பிள்ளை, புரசவாக்கம் ; கமலநாயகி அச்சியந்திரசாலை, சென்னை ; iii. டிசம்பர், 1912 ; iv. உ. ப. 192 ; v. 21×14 செ. மீ. ; vi. 0—12—0 ; vii. ஓர் அரசனுக்கு அவனுடைய அமைச்சர்கள் பெண்களின் மயக்குசெயல்களைப்பற்றி விவரிக்கும் கதைகளின் தொகுப்பு. அரசனுக்கு அரசியைப்பற்றிய குணங்களையும் எடுத்துச் சொல்லிக் குற்றவாளிகளுக்கு ஒறுத்தல் அளிப்பதில் காலங்கடத்தினுல் ஏற்படும் விளைவுகளையும் விவரிப்பது. இது ஒரு ஆங்கில மூலத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது. கதைகளில் வரும் அருஞ் சொற்களுக்கு ஆங்காங்கே அடிக்குறிப்பில் விளக்கம் தரப்பட்டிருக்கிறது. viii. 694/1912/IV.

O31,3

**2242.** i. ஸ்திரிமாச்சரியம் என்னும் துர்க்கிக் கதைகள்—இரண்டாவது பாகம் : முதற் பதிப்பு ; ii. கி. வே. திருமேனிப் பிள்ளை ; கமலநாயகி அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஜனவரி, 1914 ; iv. உ. ப. 193—382 (190) ; v. 22×14 செ. மீ. ; vi. 0—12—0 ; vii. துருக்கிக் கதைகள் பற்றிய ஆங்கில நூலின் மொழி பெயர்ப்பு. ஓர் அரசனுக்கு அவனது அமைச்சர்களால் கூறப்பட்ட கதைகளின் தொகுப்பு. பெண்களின் மயக்கும் செயல்களைப் பற்றியும், அரசியின் தந்திரத்தைப் பற்றியும் தீமைவிளைவிப்பவர்களை ஒறுப்பதில் காலங்கடத்துவதால் ஏற்படும் தொல்லைகள் பற்றியும் விளக்குகின்றது. அருஞ் சொற்களுக்கு விளக்கம் ஆங்காங்கே அடிக்குறிப்பில் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 140/1914/I.

O31,3

**சின்னத்தம்பி வாத்தியார்**

2243. i. ஆடல்பற்று : முதற் பதிப்பு ; ii. தோடி வெங்கடா சலய்யர், வித்தியா கல்பதரு அச்சுக்கூடம், கல்பாத்தி ; iii. மே, 1915 ; iv. உ. ப. 120 ; v. 21×14 செ. மீ. vi. 0—6—0 ; vii. இராமாயணத்தில் யுத்தக்காண்டத்தை விளக்கிடும் கதைப்பாட்டு. இதில் சேதுப்படலம் தொடங்கி அபி டேகப் படலம் வரைப் பல படலங்களாகப் பிரித்துக் கூறப்பட்டுள் ளது. பாட்டும் உரையும் கலந்து அமைந்தது. viii. 505/1915/II.

O31,3

**சின்னப்பநாத சுவாமிகள், சங். அ.**

2244. i. மனோரஞ்சித மனோன்மணி—முதற்பாகம் : இரண்டாம் பதிப்பு ; ii. சங். ஆரோக்கியநாத சுவாமிகள் & பால சுவாமி; புரொகிரஸிவ் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1911 ; iv. உ. ப. 14+304 ; v. 22×14 செ. மீ. ; vi. 1—0—0 ; vii. சுந்தரோமனோரஞ்ஜித்யம் என்னும் மனோரஞ்ஜித மனோன் மணி என்பது இதன் முழுப் பெயர். இதில் இந்நூலின் முதற் பகுதியாகிய பாலிகா பர்வம்—உபதேச காண்டம் பற்றிய பகுதிள்ளது. கத்தோலிக்க சமயச் சார்பான தமிழ் நவீனம். இடையிடையே ஞானச் செய்திகளும் நன்னடத்தைக்குத் தூண்டும்படியான பல நன்மதிகளும் விளக்கப்பட்டிருக்கின்றன. இருபத்தோர் அத்தியாயங்கள் உள. இந்நூலின் எஞ்சிய பகுதி கள் கன்னிகாபர்வம், சுமங்கலை பர்வம், வயோதிகபர்வம், அநுபந்தம் என்பவையாம். இவற்றை முறையே உபந்நியாச காண்டம், தர்ம காண்டம், அநுஷ்டான காண்டம், வைதீக காண்டம் என்றும் ஆசிரியர் குறித்துள்ளார். இவை வேறு தனி நூல்களாக வெளிவந்துள்ளன. கிருத்துவ புண்ணியங்களும் உலகியல் நல்லொழுக்கங்களும் மிகுதியாகச் சொல்லப்பட்டிருக் கின்றன, "தேவ வாக்கியம்", வேத சாஸ்திரம், ஞான சாஸ்திரம் முதலியனவும் எடுத்தாளப்பட்டிருக்கின்றன. viii. 803/1911/I.

O31,3

**சீதாராமய்யர், டி. எஸ்.**

2245. i. லெக்ஷிமி நாராயணன் : முதற் பதிப்பு ; ii. டி.எஸ். சீதாராமய்யர், திருநெல்வேலி பாலம் ; ஆரியப்பிரகாசினி அச்சுக்கூடம், திருநெல்வேலிப்பாலம் ; iii. ஜனவரி, 1915 ; iv. உ. ப. 30 ; v. 20×14 செ. மீ. vi. 0—3—0 ; vii. ஓர் இளவரசிக்கும் இளவரசனுக்கும் ஏற்பட்ட இன்னல்களைப்பற்றியும் பின்னர் அவர்கள் மணந்து அரசை அடைந்ததைப் பற்றியும் கூறும் நூல். எழு அத்தியாயங்கள் கொண்டது. viii. 141/1915/II.

O31,3

2246. i. **சிலசம்பண்ணன்:** முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சந்திரா பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1914 ; iv. உ. ப. 44 ; v. 18×13 செ. மீ. ; vi. 0—2—0 ; vii. ஓர் இளம் பிராமணன் தன்னுடைய நேர்மையான உழைப்பின் பயனால் ஓர் இளவரசியை மணந்த கதையைக் கூறும் நூல். பதின்மூன்று அத்தியாயங்கள் கொண்டது. viii. 314/1914/IV.

O31,3

2247. i. **சுகுண தீரன்**—முதற்பாகம்: முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை ; சந்திரா பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1914 ; iv. உ. ப. 1+417 ; v. 19×13 செ. மீ. ; vi. 1—0—0 ; vii. இதில் முதற் பகுதியைச் சார்ந்த முப்பது அத்தியாயங்கள் உள்ளன. ஓர் இளம் வீரன் தனது நற்பண்பால் இவ்வுலகத்தில் நலமுற வாழ்வதற்கு வேண்டியவற்றையெல்லாம் அடைந்த விதத்தினை விவரிக்கின்றது. viii. 957/1914/I.

O31,3

**சுந்தரம் ஐயர், வி.**

2248. i. கிரிஸெல்டா அல்லது பொறுமையுள்ள மனைவி: இரண்டாம் பதிப்பு ; ii. ஜெனரல் ஸப்ளைஸ் கம்பெனி, மயிலாப்பூர், மதராஸ் ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1912 ; iv. உ. ப. 44 ; v. 19×13 செ. மீ. ; vi. 0—3—0; vii. இத்தாலி நாட்டில் வால்டர் என்ற ஓர் அரசன் கிரிசெல்டா என்ற இடைக்குலப் பெண்ணை மணந்து கொண்டதையும், இன்பத்திலும் துன்பத்திலும் மனம் மாறாது கணவன் கருத்தறிந்து அவள் நடக்கின்றாளா என்பதை அரசன் ஆய்ந்து, எல்லாவற்றையும் தாங்கிப் பொறுமையோடிருந்த அவளைப் பாராட்டி, அரசன் மேன்மை செய்ததையும் உரைக்கும் கதை. viii. 286/1913/I.

O31,3

**சுந்தரராகவ ஐயங்கார், ஆர்.**

2249. i. கர்ணன்: முதற் பதிப்பு ; ii. சி. எஸ். ராதா கிருஷ்ண அய்யர், கும்பகோணம் ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1914 ; iv. உ. ப. 23 ; v. 19×13 செ. மீ. ; vi. 0—2—0 ; vii. இந்நூல் கொடையாளியான கர்ணனின் வரலாற்றைக் கொண்டது. வில்லிபுத்தூர்ராழ்வார் பாரதத்தினின்று எடுத்துத் தொகுக்கப் பெற்றது. இவ்வரலாறு ஐந்து அத்தியாயங்களில் விளக்கப்படுகிறது. viii. 579/1914/IV.

O31,3

**சுந்தரம் சாஸ்திரி, டி. எஸ்., சென்னை**

2250. i. வாலிவத கதை: முதற் பதிப்பு; ii. டி. எஸ். சுந்தரம் சாஸ்திரி, சென்னை; பிரிஸிடென்ஸி பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1911; iv. உ. ப. 14; v. 18×11 செ. மீ.; vi. 0—1—0; vii. மக்களை நல் வழிப்படுத்தற்கு உறுதுணையாகும் என்னும் கருத்துடன் ஆசிரியர் வெளியிடக் கருதிய தொடர்வரிசையில் இது ஒன்று. "சத் கதை வரிசை" என்பதில் இது இரண்டாவது வெளியீடு. வட மொழி நூலை அடியொற்றி எழுதப்பெற்றது. viii. 527/1911/IV.

O31,3

**சுந்தரேசன் செட்டியார், மு. சொ., தேவக்கோட்டை**

2251. i. தருமசீலன்: முதற் பதிப்பு; ii. மு. சொ. சுந்தரேசன் செட்டியார், தேவக்கோட்டை; சைவ சித்தாந்த அச்சி யந்திரசாலை, தேவக்கோட்டை; iii. மார்ச், 1911; iv. உ. ப. 12+158; v. 21×14 செ. மீ.; vi. 1—0—0; vii. தமிழ் நாட்டுப் பண்பாடுகள் விளங்க அமைந்தது. இந் நவீனம். கதைக்குட் கதைகளாய் அங்கங்கே சிறு கதைகளையும், பெரியோரால் இயற்றப்பட்ட கவிதைகளையும், முதுமையான பழமொழிகளையும் சேர்த்து அமைத்துள்ளார். சிற்சில இடங் களில் அகவல், பல்லவி, இலாவணி, அலங்காரச்சீர் முதலானவைகளைப் புதுமையாக இயற்றிக் கதைக்குப் பொருத்த மாகச் சேர்த்துள்ளார். இக்கதையில் முக்கியமான, பெற்றோர் களின் கடமை, பிள்ளைகளின் நன்னடத்தை, பெண்களுடைய பண்புகள், நட்பு, தயை, தாட்சண்யம் முதலானவை விவரிக்கப் பட்டுள்ளன. viii. 795/1911/I.

O31,3

**சுப்பய்யா ஐயர், கே., புதுக்கோட்டை**

2252. i. ஸ்ரீமதி என்னும் ஒரு பெண்ணின் சரித்திரம்: முதற் பதிப்பு; ii. கே. சுப்பய்யா அய்யர், புதுக்கோட்டை, அண்டு வி. கல்யாணராம அய்யர் அண்டு கோ, சென்னை; இந்தியன் பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. ஜூலை, 1911; iv. உ. ப. 1+231; v. 18×12 செ. மீ.; vi. 0—12—0; vii. யாவரும் எளிதில் படித்து உணரும் வண்ணம் இக் கற்பனைக் கதை ஆங்கிலேய நாவல்களின் போக்கை ஒட்டி உரையாடல் முறையில் எழுதப்பட்டிருக்கிறது. "அபகாரத்திற்கு உபகாரம்" என்னும் சிறந்த அறத்தைப் புலப்படுத்துவது. இருபத்தோர் அத்தியாயங்கள் கொண்டது; viii. 440/1911/III.

O31,3

**சுப்பிரமணிய பாரதி, அ.**

2253. i. இரமணீயம் : முதற் பதிப்பு ; ii. எஸ். ஜி. ஐயர் அண்ட் கம்பெனி, திருவல்லிக்கேணி, சென்னை ; சச்சிதாநந்தம் பிரஸ், கோமளேசுவரன்பேட்டை, சென்னை; iii. மார்ச், 1911; iv. உ.ப. 5+88 ; v. 18×12 செ.மீ., vi. 0-4-0 ; vii. அறிவூட்டும் பல சிறுகதைகளின் தொகுதி "இராஜதந்திர நீதி மாலிகா" என்னும் வரிசையில் பதின்மூன்று கதைகளும், "இரஞ்சித மஞ்சரி" என்னும் வரிசையில் அறுபத்து ஒன்பது கதைகளும் இதில் உள்ளன. இவற்றுள் ஒருசில. தமிழ்ப் புலவர்களின் திறமையை விளக்குவனவாக உள்ளன. இன் னும் சில பழமொழி விளக்கங்களாக உள்ளன. viii 333/1911/II.

O31,3

2254. i. நவநீதம் : முதற் பதிப்பு ; ii. லலிதா விலாச புத்தக சாலையார், சென்னை; பி. ஆர். ராமா அய்யர் அண்டு கோ ; iii. ஜூலை, 1912 ; iv. உ.ப. 49 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-3-0 ; vii. ஓர் இளைய மங்கை, தனது உடன்பிறந்தான் மீது கொண்டிருந்த அன்பை விளக்குவதை அடிப்படையாகக் கொண்டு அமைந்தது இக்கதை. ஒன்பது அத்தியாயங்கள் கொண்டது. viii. 225/1912/III.

O31,3

2255. i. பத்மினி : முதற் பதிப்பு ; ii லலிதா விலாச புத்தக சாலையார், சென்னை : கார்டியன் பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1912 ; iv. உ.ப. 36 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-3-0 ; vii. இது ஒரு வரலாற்றுப் புதினம். இராசபுத்திர வீரமணியாகிய இவன் நிகழ்த்திய வீரச் செயல்களை விவரிப்பது. பதினொரு அத்தியாயங்கள் கொண்டது; viii. 647/1912/II.

O31,3

2256. i. பத்மினி : இரண்டாம் பதிப்பு ; ii. லலிதா விலாச புத்தகசாலையார், திருவல்லிக்கேணி ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1914 ; iv. உ.ப. 11+36 ; v. 19×13 செ. மீ. ; vi. 0-3-0 ; vii. இது ஒரு வரலாற்று நவீனம். viii. 445/1914/II.

O31,3

2257. i. பாலவிநோதினி : எண் 2 ; ii. ஸ்ரீ பால சுப்ரமண்யம் அண்டு கம்பெனி ; சுதேசமித்திரன் ஸ்டீம் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1915 ; iv. உ.ப. 39 ; v. 18×13 செ. மீ.; vi. 0-4-6 ; vii. வேடிக்கைக் கதைகளின் தொகுப்பு. இதில் கோமுட்டி ஒருவனைக் கதைத் தலைவனாக வைத்து எழுதப்பெற்ற வேடிக்கைக் கதைகளும், தெனாலிராமன் கிருஷ்ணதேவராயர்து சபையில் செய்த வேடிக்கைகளும் கதை களாக உள்ளன, viii. 258/1915/II.

O31,3

**2258.** i. மதாலஸா : முதற் பதிப்பு ii. இ. பார்த்தசாரதி நாயுடு; சச்சிதாநந்த அச்சுக்கூடம், சென்னை ;. iii. அக்டோபர், 1914; iv. உ.ப. 56+1 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-3-0 ; vii. குவலயாசுவன் என்பவனின் உண்மை மனைவியான மதாலசாவினைப் பற்றிய புராணக் கதையைக் கொண்ட நூல். பத்து அத்தியாயங்களில் அமைந்தது. ஆசிரியரின் உருவப்படமொன்று முதலில் இடம் பெற்றுள்ளது. viii. 639/1914/IV.

O31,3

2259. i. பரதன் : முதற் பதிப்பு ; ii. ஸ்ரீ பால சுப்பிரமணியன் கம்பெனி, சென்னை ; திருவல்லிக்கேணி ; கல்விப்பிரகாசம் பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை ; iii. மார்ச், 1913 ; iv. உ.ப. 78 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. இராமனின் தம்பியாகிய பரதனது வரலாற்றை விளக்குவது, வால்மீகி இராமாயணத்திலிருந்து எடுத்து எழுதப்பெற்றது. பத்து அத்தியாயங்கள் கொண்டது. viii. 79/1913/II.

O31,3

**2260.** i. ஸ்நேகலதா : முதற் பதிப்பு ; ii. வரகவி. அ. சுப்ரமண்ய பாரதியார், சென்னை ; சச்சிதாநந்தா பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1914 ; iv. உ.ப. 84 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-5-0 ; vii. ஓர் இளம் வங்காளப் பெண் தன் பெற்றோர்கள் தன் திருமணத்திற்காகத் தர வேண்டிய வரதட்சணையைக் கொடுக்க முடியாமல் தொல்லைப்படுவதை அறிந்து, தன்னையே தீக்கிரையாக்கிக் கொண்ட நிகழ்ச்சியை விளக்கும் நூல். இதில் ஆசிரியரின் படம் ஒன்றும் சிநேகலதா என்ற பெண்ணின் படம் ஒன்றும் உள்ளன. விரைவில் "வரதட்சணையை ஒழிக்க வேண்டும்" என்னும் நோக்கத்துடன் புனையப்பட்டது இக்கதை. viii. 640/1914/IV.

O31,3

**2261.** i. ஜயலக்ஷ்மி : முதற் பதிப்பு ; ii. பி.எஸ். ராமகிருஷ்ணன் அண்டு கம்பெனி. திருவல்லிக்கேணி ; வாணிபூஷணன் அச்சுக்கூடம், சென்னை ; iii. எப்ரல், 1912 ; iv. உ.ப. 3+178 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. இது ஒரு துப்பறியும் நவீனம். ஆங்கிலப்புதினங்களைப் போன்றே எழுதப்பெற்றது. இருபத்திரண்டு அத்தியாயங்கள் கொண்டது. கட்டாயப்படுத்திச் செய்விக்கும் திருமணங்களைக் கண்டித்துரைப்பது. viii. 322/1912/II.

O31,3

**2262.** i. சுயம்பிரகாசம் அல்லது அநியாயமும், நியாயமும், ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ் ; சந்திரா பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1915 ; iv. உ.ப. 240 , v. 18×13 செ.மீ. ;

vi. 0-8-0 ; vii. இது ஒரு சமூகப்புதினம். நேர்மையாளன் வாழ்க்கையினுல் சுகமான வாழ்வு கிட்டும் என்பதை வலி யுறுத்தும் நவீனமே இது. viii. 953/1915/I.

**O31,3**

**சுவாமிநாத ஐயர், டி.ஏ.**

**2263.** i. ஆராயும் அங்குட்டன் கதை : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1911 ; iv. உ.ப. 40 ; v. 18×12 செ.மீ. ; vi. 0-1-6; vii. இது குழந்தைகள் பொருட்டு எழுதப்பட்ட கதை. இரக்கமில்லாதவர்கள் எல்லாரும் மூடர் களாயும், எப்போதும் துன்பம் மிகுந்தும் இருப்பார்கள் என்னும் கருத்தைப் புலப்படுத்துவது. அங்குட்டன் இரக்கமுள்ளவனுயும் திறமையுடையவனுயும், தன்னலம் பாராட்டதவனுயும் இருந்த தினுல் மேன்மையுற்றுன் என்பதை இது எடுத்துக்காட்டுகிறது. viii. 398/1911/IV.

**O31,3**

**2264.** i. நாற்பது திருடர் கதை : முதற் பதிப்பு ; ii. ஸி. குமார சாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1911 ; iv. உ. ப. 74 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-3-0 ; vii. அலிபாபாவும் நாற்பது திருடர்களும் என்னும் அராபிக்கதை. பன்னிரண்டு அத்தியாயங்கள் கொண் டது. சில படங்களும் இடையிடையே கொடுக்கப்பட்டுள்ளன. இளைஞர்க்கான காக்ஸ்டன் கதை வரிசையில் இது இரண்டாவது வெளியீடு. viii. 855/1911/IV.

**O31,3**

**சுவாமிநாத ஐயர், எஸ்., அரியூர்**

**2265.** i. ஜகஜ்ஜோதி : முதற் பதிப்பு ; ii. ஜெனரல் சப்ளை கம்பெனி, சென்னை ; பி. ஆர். ராமய்யர் அண்டு கம்பெனி, சென்னை ; iii. ஜூலை, 1913 ; iv. உ.ப. 24+148 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-8-0; vii. 'இந்திய வரலாற்றில் காதற்கதைகள்' (Romantic Stories from the Indian History) என்னும் ஆங்கில நூலிலுள்ள நூர்சகான் வரலாற்றை அடிப்படையாகக்கொண்டு சில மாறுதலுடன் கற்பனைக் கதையாக மாற்றிவிடுகிருர். இறை யன்பு, குருபக்தி, வீரத்தன்மை, முயற்சியின் மேன்மை, முத லிய அரிய அறங்களைப்பற்றியும் இக்கதையில் ஆங்காங்கே சுட்டப் பட்டிருக்கிறது. பல அரிய பழமொழிகளும் அறநெறித்தொடர் களும் ஆங்காங்கு விரவிக் கிடக்கின்றன. 13 அத்தியாயங்கள் கொண்டது இக்கதை. viii. 722/1913/III.

**O31,3**

**செங்கல்வராய முதலியார், டி.**

**2266.** i. அபிநவ கதைகள் : முதற் பதிப்பு ; ii. டி. செங்கல்வராய முதலியார், எஸ். பி. ஸி. கே. பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்டு, 1914 ; iv. உ.ப. 122 ; v. 22×14 செ.மீ.; vi. 0-6-0 ; vii. இது கற்பலங்காரம், தனபாலன், கோமளம், ஸுப்பையர், கிருஷ்ணன் எனும் ஐந்து கதைகளின் தொகுப்பாகும். கதையின் பெரும் பகுதி உரைநடையிலிருந்தாலும் சிற்சில இடங்களில் நாடக உரையாடல்களும் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 663/1914/III.

O31,3

**2267.** i. செம்படவன் : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1912 ; iv. உ.ப. 48 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-1-6 ; vii. ஒரு பரதவனும் பூதங்களும் தொடர்பு கொண்ட ஒரு வேடிக்கைக் கதை. viii. 420/1912/IV.

O31,3

**செல்வக்கேசவராய முதலியார், டி.**

**2268.** i. இரண்டாவது கதாவாசக புஸ்தகம் : திருத்தப்பட்ட பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, பம்பாய் ; எஸ். பி. ஸி. கே. பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1911 ; iv. உ.ப. 6+80 ; v. 18×12 செ.மீ. ; vi. 0-2-6 ; vii. அறநெறியைக் கற்பிக்கும் கதைகளின் தொகுதி. முதற் பகுதியைப் போலவே இது அமைந்துள்ளது. இதில் வரப்புயர, ஜீவகாருண்யம், பனைமரப் பாட்டு, இராஜாவை வாழ்த்தல், நாயும் நிழலும் என்னும் தலைப்புக்களில் பாடல்களும் சேர்க்கப் பட்டிருக்கின்றன. viii. 425/1911/IV.

O31,3

**2269.** i. இரண்டாவது கதாவாசக புஸ்தகம் : திருத்திய பதிப்பு ; ii. மாக்மிலன் அண்டு கம்பெனி ; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1913 ; iv. உ.ப. 84 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-2-6 ; vii. பெரும்பாலும் கதைகளைக் கொண்ட ஒரு பாட நூல். படங்களுடன் கூடியது. இருபத்து எட்டு கதைகள் உள்ளன ஈசாப்பின் கட்டுக்கதை, பஞ்ச தந்திரம், புராண இதிகாசங்கள் ஆகியவற்றிலிருந்து எடுச்சப்பெற்ற கதைத் தொகுப்பு. கொன்றை வேந்தன், வெற்றிவேற்கைப்பாட்டு பகுதிகளும் இதில் கொடுக்கப் பட்டிருக்கின்றன. viii. 674/1913/III.

O31,3

**2270.** i. முதலாவது கதாவாசக புஸ்தகம் ; ii. மாக்மில்லன் அண்டு கோ ; எஸ். பி. ஸி. கே. பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1911 ; iv. உ. ப. 64 ; v. 18×12 செ. மீ. ;

vi. 0-2-0 ; vii. சிறுவர்களுக்குக் கதை வாயிலாக அறங்களைக் கற்பிக்கும் நூல். இதிலுள்ள கதைகள் ஈசாப் என்பவர் இயற்றிய கட்டுக்கதைகளிலிருந்தும், பஞ்ச தந்திரத்திலிருந்தும், மகாபாரதத்திலிருந்தும் தெரிந்து எடுத்தனவாம். பலவகையான உருவப்படங்களும் இதில் கொடுக்கப்பட்டுள்ளன. "பெற்றோர் வளர்த்த அருமை" "நிலாவை அழைத்தல்" "பராக்குக் காட்டல்" "தாலாட்டு" "கைவீசுதல்", "சிற்றுண்டி" "உனக்கு என்ன வேண்டும்" "தாயின் அருமை" "மழையை அழைத்தல்" "அத்தை மகனை ஏசுதல்" என்னும் தலைப்புகளில் பாடல்களும் இதில் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 373/1911/IV.

O31,3

2271. i. மூன்றாவது கதாவாசக புஸ்தகம்; திருத்திய பதிப்பு; ii. மாக் மில்லன் அண்டு கம்பெனி, பம்பாய்; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1911; iv. உ.ப. 94; v. 18 × 13 செ.மீ.; vi. 0-3-0; vii. அறநெறியைக் கற்பிக்கும் கதைகளின் தொகுதி. ஈசாப்பின் கட்டுக்கதை, பஞ்சதந்திரம், பாரதம் ஆகியவற்றிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்ட கதைகளே இவை. சில கதைப் பாட்டுக்களும் இடையிடையே கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 708/1911/IV.

O31,3

2272. i. ராபின்ஸன் க்ருஸோ; ii. செல்வக்கேசவராய முதலியார், திருமணம்; கி. க. அ. சங்கத்தார்; அச்சுக்கூடம், சென்னை; iii. 1915; iv. உ.ப. 97; v. 16 × 12 செ.மீ.; vi. . . . . . . . . . . . . . . ; vii. ராபின்சன் குருசோ என்பவனுடைய வீரச்செயலை விளக்குவது. இது ஆங்கில மொழி நூலைத் தழுவித் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. மாணவர்களுக்கு ஏற்ற எளிய நடையில் எழுதப்பட்ட நூல்; viii. 60/1915/IV.

O31,3

2273. i. ராமனும் சீதையும்: முதற் பதிப்பு; ii. லாங்க் மன்ஸ் கிரீன் அண்ட் கம்பெனி; ஆனந்தா ப்ரஸ், சென்னை; iii. மார்ச், 1915; iv. உ. ப. 24; v. 19 × 13 செ. மீ; vi. 0-1-6; vii. புராணக் கதையான இராமாயணத்தின் சுருக்கம். பள்ளி மாணவர்களுக்கான துணைப்பாட நூலாக வைக்கும் முறையில் இந்நூல் அமைந்துள்ளது. படங்களுடன் கூடியது. viii. 308/1915/II.

O31,3

சேக்ஸ்பியர்

2274. i. வீண்வம்பு : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1914 ; iv. உ. ப. 48 ; v. 18×13 செ. மீ. ; vi. 0-1-6; vii. "மச் அடு அபவுட் நத்திங்" (Much Ado About Nothing) என்ற செகப்பிரியரின் ஆங்கில நாடகத்தின் கதையைத் தமிழில் தருவது, ஆங்கில நாடகக் கதைக்கொத்து வரிசையில் இது நான்காவதாகும். viii. 313/1914/IV.

O31,3

சேஷகிரி சாஸ்திரி, வி.

2275. i. ருக்மணி : முதற் பதிப்பு; ii. வி. சேஷகிரி சாஸ்திரி; வைஜயந்தி பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1914 ; iv. உ.ப. 102 ; v. 19×13 செ. மீ. ; vi. 0-6-0 ; vii. கண்ணபிரானின் மனைவி ருக்மணியின் வாழ்வும் தொண்டும் விவரிக்கப்பட்டுள்ளன. மனைவியர் ஒழுக்கத்தை விளக்குவதே இந்நூலின் குறிக்கோள் என்பது ஆசிரியர் முகவுரையிலிருந்து தெரிகிறது. எழு கதைகள் இதில் உள்ளன. இடையிடைப் பாடல்களும் கதைகளில் எடுத்தாளப்பட்டுள்ளன. "கிருஷ்ணவேணு கானம்", "குசேலர் கிருஷ்ணரைக் காணுதல்" என்பவற்றை விவரிக்கும் இரு படங்களும் இதில் உள்ளன. viii. 951/1914/III.

O31,3

சோமசுந்தரம் பிள்ளை, சே.

2276. i. அஞ்சனாட்சி : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு, ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1914 ; iv. உ. ப. 5+427 ; v. 19×13 செ. மீ. ; vi. 1-0-0 ; vii. இது ஒரு துப்பறியும் நவீனம். முதற் பகுதியே இதில் உள்ளது. எனவே, இரண்டாம் பகுதியில்தான் இக்கதையின் முடிவைக் காணலாம். இருபத்திரண்டு அத்தியாயங்கள் கொண்டது. இது ஆசிரியர் எழுதிய முதல் நூல். நல்ல இனிய செந்தமிழ் நடையில் அமைந்துள்ளது. இந்நாவலில் ஆசிரியர் எடுத்துக்காட்டியுள்ள பாடல்களுக்குரிய மேற்கோள் இட விளக்கம் இறுதியில் காட்டியுள்ளார். திருவாசகம், குற்றாலக் குறவஞ்சி, விநாயகபுராணம், திருவிளையாடல் புராணம் முதலிய நூல்களினின்று நூறு செய்யுட்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. viii. 954/1914/I. O31,3

2277. i. கமலாம்பிகை : முதற் பதிப்பு ; ii. எஸ். ஜி. ஐயர் அண்டு கம்பெனியார், திருவல்லிக்கேணி ; பி.ஆர். ராமையர் அண்டு கோ, சென்னை ; iii. எப்ரல், 1914 ; iv. உ. ப. 1+62 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. ஓர் இளவரசி தனது

கற்பினைமாண்பால் இன்பமாகவும் வெற்றிகரமாகவும் வாழ்க்கை நடத்திய விதத்தை இந்நூல் விளக்குகிறது. ஒன்பது அத்தியாயங்கள் கொண்டது. viii. 499/1914/II.

O31,3

**சோமசுந்தரம் பிள்ளை, எஸ். ஏ., சாத்தூர்**

2278. i. சிறுமணிச்சுடர்: முதற் பதிப்பு; ii. இ. மா. கோபால கிருஷ்ண கோனார், மதுரை; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை; iii. பிப்ரவரி, 1915; iv. உ.ப. 30; v. 18×13 செ. மீ.; vi. 0–1–6; vii. மனோரம்மியம் அல்லது சிறு மணிச் சுடர் என்ற இந்நூலில் 16 வேடிக்கையான சிறு கதைகள் உள்ளன. இவற்றில் ஒவ்வொன்றும் பல்வகைப்பட்ட உலகியலறிவை விளக்குவதாகும். viii. 895/1915/I.

O31,3

2279. i. பொன்மான்: முதற் பதிப்பு; ii. என். வெங்கடராயலு அண்டு சன், சென்னை; கே. ஆர். பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1915; iv. உ.ப. 14; v. 22×15 செ. மீ.; vi. 0–1–0; vii. உடன் பிறந்த ஆண் பெண் இருவரும் சிறு வயதில் புரப்பாரற்று ஆண் மானாகி, பின்னர் மனிதனாகி இருவரும் இன்பமெய்திய கதையினைக் கொண்ட நூல். ஐந்து அத்தியாயங்கள் கொண்ட ஒரு மந்திரக் கதை. இக்கதையில் வரும் அருஞ் சொல் விளக்கம் நூலிறுதியில் அமைந்துள்ளது. viii. 515/1915/I.

O31,3

**ஞானதிரவியம் குமரேசன் (மிஸிஸ்), ஆத்தூர்**

2280. i. சுகிர்தா: முதற் பதிப்பு; ii. மிஸஸ். ஞானதிரவியம் குமரேசன், ஆத்தூர், டி. ஏ. சி. பிரஸ், சேலம்; iii. 1914; iv. உ. ப. 3+279+10; v. 18×13 செ.மீ.; vi. 0–14–0; vii. இது ஒரு வேடிக்கைக் கதை. நாற்பத்திரண்டு அத்தியாயங்கள் கொண்டது. இந்து சமுதாயத்தாரிடையே காணப்படும் சிறுவர் திருமணத்தினால் உண்டாகும் கேடுகளைச் சுட்டிக்காட்டுகிறது. உண்மையான இந்திய தேசிய வாழ்க்கைக்-குப் பெண் கல்வி இன்றியமையாதது என்பதை வற்புறுத்திக் கூறுகிறது. நல்ல எளிய நடையில் அமைந்துள்ளது. பற்பல மேற்கோள்கள் ஆங்காங்கு எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன. viii. 497/1914/II.

O31,3

**ஞானப்பிரகாசம் பிள்ளை, ஜே.**

2281. i. வசீகரி : இரண்டாம் பதிப்பு ; ii. எ. வைத்தியநாத அய்யர் அண்டு கம்பெனி ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1911 ; iv. உ.ப. 5+384 ; v. 18×12 செ.மீ. ; vi. 1-0-0 ; vii. ஆங்கிலத்தில் என்றிவுட் என்பார் எழுதிய "ஈஸ்ட்லேன்" என்னும் நூலின் தழுவலாகும். இது இரு பத்து மூன்று அத்தியாயங்கள் கொண்டது.
viii. 981/i.1911/III.

O31,3

2282. i. **டிக் உட்டிங்டனும் அவன் பூனையும்** : முதற் பதிப்பு ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. மே, 1912 ; iv. உ.ப. 48 ; v. 18×13 செ. மீ. ; vi. 0-2-0 ; vii. இது நேர்மையையும், பொறு மையையும் உழைப்பையும் மேற்கொண்ட ஓர் ஏழைச் சிறுவன் பெரிய மனிதனுன நிகழ்ச்சியைக் கூறும் ஓர் ஆங்கிலக் கதை யின் மொழி பெயர்ப்பாகும். பதினுறு அதிகாரங்களாகப் பாகுபாடு செய்யப்பட்டிருக்கிறது. இதன் இறுதியில் "சுசீலை" என்னும் ஒரு சிறு கதையும் உள்ளது. viii. 701/1912/II.

O31,3

**டிசாமி, டி, எஸ்.**

2283. i. இஸபெல்லா சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. டி. கிருஷ்ண சாமி அய்யர் ; அலெக்ஸாண்டிரா பிரஸ், கும்பகோணம் ; iii. மே, 1912 ; iv. உ. ப. 1+48 ; v. 16×11 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. செகப்பிரியர் செய்த "மெஷர் பார் மெஷர்" என்னும் சிறந்த நாடகக்கதையைப் பின்பற்றி எழுதப்பெற்றது. செங்கோன்மை, உடன்பிறந்தோரிடம் அன்பு, தன்னலமின்மை கற்பு முதலிய அறங்களை விளக்குவது இக்கதை. இக்கதையை முதலில் "சர்வ வியாபி" என்னும் புதுவை வார இதழில் வெளியிட்டு, பின் நூல் வடிவில் வெளிப்படுத்தி இருக்கிறார் என்று தெரிகிறது. viii. 580/1912/II.

O31,3

2284. i. சண்டைக்காரி சாதுவாக்கப்பட்டது : முதற் பதிப்பு ; ii. டி. கிருஷ்ணசாமி ஐயர், கும்பகோணம் ; ஸ்ரீகிருஷ்ண விலாச பிரஸ், கும்பகோணம், அலெக்ஸாண்டரா பிரஸ், கும்பகோணம், ; iii. பிப்ரவரி, 1913 ; iv. உ.ப. 1+81 ; v. 16×11 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. கணவன் சொற்படி மனைவி நடத்தலே சிறந்த ஒழுக்கம் என்று சொல்லப்படும். இதன் தொடர்பாக ஐரோப்பியர்களுடைய கருத்தும் மேற் கூறிய கருத்தினையே ஒட்டியது என்பதனைக் காட்ட

"The Taming of the shurewed" தி டேமிங் ஆப் தி சுரூட் என்னும் செகப்பிரியர் நாடகத்தைக் கதையாக அமைத்து எழுதியுள்ளார். இது ஒரு நகைச்சுவைக் கதை. ஒன்பது பகுதியாக இக்கதைப் பிரித்தெழுதப்பட்டுள்ளது. viii. 789/1913/I.

O31,3

**2285.** i. நோருமணி : முதற் பதிப்பு ; ii. டி. எஸ். டி, சாமி, கும்பகோணம்; லாலி எலெக்ட்ரிக் பிரிண்டிங் பிரஸ், தஞ்சாவூர் ; iii. பிப்ரவரி, 1914 ; iv. உ. ப. 8+232 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. "காதல் பாதை கரடு முரடானது" என்னும் கருத்தை வெளிப்படுத்துகிறது. "வழிபறிப்போனுக்கு வாழ்க்கைப்பட்டவள்" என்று இதற்கொரு பெயர் உண்டு. பதினான்கு அத்தியாயங்கள் கொண்டது. கதை நிகழ்ச்சியை விளக்கும் சில படங்களும் இதில் உள்ளன. viii. 822/1914/I.

O31,3

**2286.** i. நோருமணி : 2-ம் பாகம், முதற் பதிப்பு ; ii. டி. எஸ். டி, சாமி, கும்பகோணம் ; லாலி எலெக்டிரிக் பிரிண்டிங் பிரஸ், தஞ்சாவூர் ; iii. ஜுலை, 1914 ; iv. உ.ப. 216 ; v. 18×13 செ.மீ. vi. 0–12–0 ; vii. "உண்மையான அன்பின் பாதை கரடு முரடானது என்பதை விவரிக்கும் ஒரு நவீனம். இதில் 15-ஆம் அத்தியாயம் முதல் 32–ஆம் அத்தியாயம்வரை உள்ளது. கதை நிகழ்ச்சியை விளக்கும் இரண்டு படங்களும் இடம் பெற்றுள்ளன. viii. 194/1914/VI.

O31,3

**2287.** i. வெரோனு நகரத்து இரு குலமக்கள் : முதற் பதிப்பு ii. டி. கிருஷ்ணசாமி ஐயர், கும்பகோணம் ; அலெக்ஸாண்டிரா பிரஸ், கும்பகோணம் & ஸ்ரீகிருஷ்ணவிலாசா பிரஸ், கும்பகோணம் ; iii. பிப்ரவரி, 1913 ; iv. உ. ப. 1+64 ; v. 16×11 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. ஆங்கிலக் கவிஞர் செகப்பிரியர் எழுதிய டூ சென்டில்மென் ஆப் வெரோனுவைத் தழுவியது இக்கதை. இது விசுவாசப் பிரமாணத்தின் உயர்வை வெளிப்படுத்துவது. ஆங்கிலக் கவிஞனின் திறமையான உரை நடையின் கருத்து புலப்படுமாறு தமிழில் அமைக்கப்பட்டது. எட்டுப் பகுதியாக இக்கதை பிரிக்கப்பட்டிருக்கிறது; viii.498/1913/I.

O31,3

**டேனியல், டெபே.**

**2288.** i. ராபின்சன் க்ருஸோ : ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 116 ; v. 19×12 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. ராபின்சன் குரூசோவின் கதை ஆங்கில மொழியிலிருந்து தமிழ் மொழி

யில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. ஆங்கிலத்தில் இந்நூல் முதன் முதல் 1719 ஆம் ஆண்டு வெளி வந்தது. அதன்பின் தான் இக்கதையை பலரும் வெவ்வெறு முறையில் எடுத்து எழுதி வெளியிட்டு வந்துள்ளனர். இது ராபின்சன் குரூசோவின் வாழ்க்கை வரலாற்றையும், அவனது வீர. செயல்களையும் விளக்குவது. ஒவ்வொரு மனிதர்க்கும் இன்ப துன்பமென்பது உண்டு என்பதையும் எடுத்துக் காட்டுவது; viii 1006/1915/IV.

O31,3

**2289. i. தக்காணத்துப் பூர்வ கதைகள்;** இரண்டாம் பதிப்பு; ii. கிறிஸ்டியன் லிடரேச்சர் சொஸைட்டி, சென்னை; சி.எல். எஸ். பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1910 ; iv. உ.ப. 1+321 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. தக்காணத்தில் மக்கள் வாய்மொழியாக வழங்கி வந்த கதைகளின் ஒரு தொகுப்பு. இருபத்து இரண்டு கதைகள் இதில் உள்ளன. சென்னைப் பள்ளிப் பாடநூல் இலக்கிய சங்கத்தாரின் அனுமதியுடன் மறுபதிப்பிடப்பட்டது. viii. 298/1911/IV.

O31,3

**2290. i. தங்கக்கிளி :** முதற் பதிப்பு ; ii. வி. கோவிந்தன் அண்டு பிரதர்ஸ், தஞ்சாவூர் ; வித்யா விநோதினி பிரஸ், தஞ்சாவூர் ; iii. அக்டோபர், 1914 ; iv. உ.ப. 126 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. கற்புள்ள மனைவி ஒருத்தி தன் கணவன்பால் கொண்ட அசையாத கற்பை விவரிக்கும் சமூகக் கதையைக் கொண்ட நவீனம். பதினொரு அத்தியாயங்கள் கொண்டது. நல்லவர்கள் எல்லாம் நன்மையடைதலும், தீயவகள் எல்லாம் தீமையடைதலும் உண்டு என்பதை இந்நாவல் நன்கு விளக்கும் ; viii. 446/1914/IV.

O31,3

**தங்கவேலுஸாமி தேவர், வீ., ராமநாதபுரம்**

**2291.** i. ஓர் பரத்தை : முதற் பதிப்பு ; ii. வீ. தங்கவேலுஸாமி தேவர், ராமநாதபுரம் சச்சிதானந்தம் பிரஸ், சென்னை ; iii. எப்ரல், 1914 ; iv. உ.ப. 4+24+400 ; v. 18×12 செ.மீ. ; vi. 1–4–0 ; vii. பரத்தையருடைய நடத்தைகளையும், அவர்களால் உண்டாகும் துன்பங்களையும் விவரிப்பது. இளைஞர்களில் பலர் பரத்தையர் வலையில் சிக்கித் தமது மூதாதையர் ஈட்டிய பொருளைத் தொலைத்து, தாங்களும் நோய் வாய்ப்பட்டு உழல்வதைக் கண்டு இரக்கத்தால் இது எழுதப்பட்டது. ஆண், பெண் இருவரும் இத்தகைய தீய நடத்தையால் சீர் அழிந்து வருதலை இந்நூல் கடிந்துரைக்கிறது. பரத்தையரால் கெட்டு அழிந்த முத்தண்ணு என்னும் ஒருவன் இராமேஸ்வரம், திருச்செந்தூர் முதலிய ஊர்களுக்குச் சென்று

இறைவனை வணங்கி பாடித் துன்பம் நீங்கி இன்பம் பெறுகிறான். இராமநாதசுவாமி, செந்தில் முருகன் ஆகியோரை இவன் வணங்கிப் பாடுவதாக அமைந்த வெண்பாக்கள் நூற்றைம்பது இதில் இடம்பெற்றுள்ளன. நூலாசிரியரின் வாழ்க்கை வரலாறு இந்நூலின் முதலில் சேர்க்கப்பட்டிருக்கிறது. சிவசங்கர பண்டிதர் வே. அரங்காச்சாரியார் முதலிய பலர் இதற்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர் ; viii. 222/1914/II.

O31,3

**தண்டபாணிப் பிள்ளை, சொ., நாகை**

**2292.** i. மதிமுகி, முதற் பதிப்பு ; ii. எ. டேவிட் & கம்பெனி, சென்னை ; டவுன் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1915 ; iv. உ.ப. 64 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. இது கொலை தொடர்பான துப்பறியும் நவீனம். முதற் பாகம் மட்டும் இதில் உள்ளது. நான்கு அத்தியாயங்கள் உள. ஆசிரியர் " நவீனம் " என்னும் பொதுத்தலைப்பில் ஒவ்வொரு திங்களும் வெளியிட்டு வரும் இதழ்களில் இதுவும் ஒன்றாகும்; viii. 174/1915/I.

O31,3

**2293.** i. மதிமுகி, இரண்டாம் பாகம்; முதற் பதிப்பு ; ii. டேவிட் கம்பெனி, சென்னை ; எம்.வி. பிரஸ், சென்னை ; iii. மார்ச்சு, 1915 ; iv. உ.ப. 65 ; v. 18×13 செ.மீ.; vi. 0–4–0 ; vii. ஒரு கொலையைப் பற்றியும் அதனுடன் நடந்த பல நிகழ்ச்சிகளையும் கூறி, அதற்கான விடையை இறுதியில் தருகிறார் ஆசிரியர். இது ஒரு துப்பறியும் நவீனம். viii. 968/1915/I.

O31,3

**2294.** i. மாயாவதி, முதற் பதிப்பு ; ii. டேவிட் கம்பெனி, சென்னை ; எம்.வி. பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1915 ; iv. உ.ப. 64 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. இந்நூலின் முழுப் பெயர் ''மாயாவதி அல்லது மதிமயக்கி வினை முடித்த மங்கை நல்லாள் '' என்பது. காதலித்துக் கைவிட்ட ஒரு ஆடவன் தன் மனம் வருந்தித் திருந்திய கதையைக் கூறும் நூல் ; viii. 969/1915/I.

O31,3

**தண்டபாணிப் பிள்ளை,என்.சி.(மொ.து.)**

**2295.** i. ராபின்சன் குரூஸோ ; ii. லலிதா விலாஸ் புக் டிப்போ ; கபாலி பிரஸ், சென்னை ; iii. 1914 ; iv. உ.ப. 99 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. ராபின்சன் குருஸோவின் கதை ஆங்கில மொழியினின்று தமிழில் மொழி

பெயர்க்கப்பட்டுள்ளது. இவன் செய்த கடற் பயணத்தில் நேர்ந்த பல நிகழ்ச்சிகளையும் இவனுடைய வீரச் செயல்களையும் விவரிப்பது. பதினான்கு அத்தியாயங்கள் கொண்டது. நூலின் இறுதியில் இப்பதிப்பகத்தார் வெளியிட்டுள்ள பல நூல்களின் விரிவான பட்டியல் உள்ளது ; viii. 564/1915/IV.

O31,3

**தாண்டவராய முதலியார், வித்வான்.**

2296. i. கதாமஞ்சரி: திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. லாங் மன்ஸ் கிரீன் அண்ட் கம்பெனி ; வைஜயந்தி பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1915 ; iv. உ.ப. 89; v. 19×13 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. அறிவையும் நற்பண்பையும் அளிக்கக் கூடிய 81 கதைகளின் தொகுப்பு. ஒவ்வொரு கதையிலும் "செல்வப் பொருளுக்குத் தீங்கு வரும், கல்வி பொருளுக்கு அழிவில்லை" அறிவில்லாதவன் பெண்களிடத்தும் தாழ்படுவான் என்பன போன்ற மெய்மைகள் விளக்கப்பட்டுள்ளன. இது "புராதன நவீன கதாமஞ்சரி" என்னும் தொடர் வெளியீட்டில் மூன்று வது மலராகும் ; viii. 276/1915/II.

O31,3

2297. i. பஞ்ச தந்திரம், முதற் பதிப்பு ; ii. சே. கிருஷ்ண மாச்சாரியார் & பு.க. சீனிவாசாச்சாரியார் ; கணேசா பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1911 ; iv. உ.ப. 1+108+42=151; v. 19×12 செ.மீ.; vi. 0–6–0 ; vii. சென்னைக் கல்விச் சங்கத்துத்தலைவராக இருந்த ரிச்சார்டுக் கிளார்க் என்பவரது ஆணை யினால் மகாராட்டிரத்தில் அச்சில் பதிப்பித்திருந்த பஞ்ச தந்திரக் கதையைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். இந்நூல் 1826 ஆம் ஆண்டு சென்னைக் கல்வி சங்கத்தினின்றும் முதல் பதிப் பாக வெளி வந்தது. இதனைப் பல சுவடிகளுடன் ஒப்பு நோக்கி திருத்தியமுறையில் அச்சிட்டுள்ளனர். இதில் காணும் அருஞ் சொற்களுக்கு உரை இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறது. தாண்டவராய முதலியார் வரலாறு முதலில் கொடுக்கப்பட்டிருக் கிறது ; viii. 437/1911/III.

O31,3

2298. i. பஞ்சதந்திரம், முதற் பதிப்பு ; ii. சு. அனவரத விநாயகம்பிள்ளை ; ஸ்ரீகபாலீஸ்வரர் பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1913 ; iv. உ.ப. 11+168 ; v. 19+13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. இப்பஞ்சதந்திரக்கதை மகாராஷ்டிர மூலத்திலிருந்து மொழி பெயர்க்கப் பெற்றது. சென்னைக் கல்விச் சங்கத்துத் தலைவரான ரிச்சார்டு கிளார்க்குத்துரை ஆணையின்படி 1825 ஆம் ஆண்டு இதை எழுதி முடித்தார். இதன் முதற் பதிப்பு 1826 ஆம் ஆண்டு சென்னைக் கல்விச் சங்கத்தினின்றும் வெளியிடப்பெற்றது. முதற் பதிப்பினைத் தழுவி இதனைப் பதிப்பாசிரியர் பதிப்பித்துள்

ளார். அருஞ் சொற்பொருளும் இறுதியில் சேர்த்திருக்கின்றார். தாண்டவராய முதலியார் வரலாறும் கொடுக்கப்பட்டிருக்கிறது. பதிப்பாசிரியர் முன்னுரையில் பஞ்சதந்திரத்தின் வரலாற்றைத் தக்க ஆதாரங்களுடன் விரிவாக எழுதியுள்ளார். viii. 154/1913/II.

O31,3

2299. i. பஞ்சதந்திரம் ; ii. ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனி ; கமர் ஷியல் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1913 ; iv. உ.ப. 11+188 ; v. 18×12 செ. மீ. ; vi. 0-5-0 ; vii. தாண்டவராய முதலியார் எழுதிய பஞ்சதந்திரத்தை எளி தாக்கி வெளியிட்ட பதிப்பு. நீளமாக இருந்த சொற்றொடர் களைச் சிறு தொடர்களாக மாற்றியமைத்தும், செய்திகள், கதை கள், கிளைக் கதைகள், ஆகிய வற்றிற்குப் பொருத்தமான பெயர் எண்கள் கொடுத்தும் பதிப்பிக்கப்பட்டுள்ளது. கதை களின் கருத்துக்களையும், பழமொழிகளையும், தடித்த எழுத்தில் அச்சிட்டுள்ளார்கள். பஞ்சதந்திரப் பெயரகராதி, செய்தி அக ராதி, அருஞ்சொற்பொருள் விளக்க அகராதி ஆகியவையும் அமைக்கப்பட்டிருக்கின்றன. நூலாசிரியர் தாண்டவராய முதலியாரின் வரலாற்றுச் சுருக்கம் முதலில் கொடுக்கப்பட் டிருக்கிறது. ஆறு சித்திரப்படங்களும் உள்ளன. viii. 151/1913/III.

O31,3

2300. i. பஞ்சதந்திரம் : இரண்டாம் பதிப்பு ; ii. சே. கிருஷ்ண மாச்சாரியார் & பு. க. சீனிவாசாச்சாரியார் ; கணேசா பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1913 ; iv. உ. ப. 1+132+44; v. 18×13 செ. மீ. ; vi. 0-6-0 ; vii. உள் நாட்டு மொழிப் படிப்பிற்குச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் 1915ஆம் ஆண்டுப் பாட நூலாக அமைக்கப் பெற்ற நூல், நூலாசிரியர் தாண்டவராய முதலியாரின் வரலாறு விளக்கமாக எழுதப் பட்டிருக்கிறது. இவர் கி. பி. 1850 ஆம் ஆண்டு மறைந்தனர் என்று தெரிகிறது. அருஞ்சொற் பொருள் ஈற்றில் கொடுக்கப் பட்டிருக்கிறது. viii. 2/1913/III.

O31,3

தாமரைப்பெண்

2301. i. பிரேம காந்தன் : முதற் பதிப்பு ; ii. வி. கோபாலசாமி அய்யங்கார், பி. ஆர். இராமய்யர் அண்டு கம்பெனி, சென்னை; iii. மார்ச், 1912 ; iv. உ. ப. 2+159 ; v. 21×14 செ. மீ. ; vi. 0-12-0 ; vii. சமூகத்தில் உள்ள சாதிப் பிரிவுகளையும் ஊழல்களையும் ஒழித்து மேலும் சீர்திருத்தம் உண்டாக்கத் தக்க அறநெறிகளைக் கற்பிப்பது இந்தக் கதை. ஒன்பது அதிகாரங்கள் கொண்டது. சிற்சில அறச் செய்யுட் களும் இடையிடையே எடுத்தாளப்பட்டுள்ளன. எதிர்ப் பண்புகளை

உடைய இரண்டு கதை மாந்தர்களுக்கிடையில் நிகழும் நிகழ்ச்சி களையும், உண்மை அன்பையும், நட்பையும் விளக்கும் கதை யாகும். viii.1026/1912/I.

O31,3

2302. i. **தாமோதரன் :** முதற் பதிப்பு ; ii. த. இ. அ. மண வாள நாயகர், மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூன், 1911 ; iv. உ. ப. 2+324 ; v. 21×14 செ. மீ. ; vi. 0–12–0 ; vii. இந்நூல் என்றி பில்டிங் என்பவர் ஆங்கிலத்திலியற்றிய "டாம்ஜோன்ஸ்" என்னும் நூலின் மொழி பெயர்ப்பாகும். தேவையற்றவையெனத் தோன்றியவற்றைத் தவிர்த்து, வேண்டுவனவற்றைச் சேர்த்து இது ஒருவாறு எழுதப்பட்டிருக்கிறது. ஆங்கிலம் கற்காத நமது நாட்டவரும் மேனுட்டாரின் தன்மையை ஒருவாறு அறியும் பொருட்டே இக்கதை மொழி பெயர்க்கப்பட்டது. ஒன்பது சம்புடங்களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொன்றிலும் பல அத்தி யாயங்களைக் கொண்டு அமைந்துள்ளது. viii. 28/1911/III.

O31,3

2303. i. **தாளில்லாக் கதவு :** முதற் பதிப்பு ; ii. சி. குமார சாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1913 ; iv. உ. ப. 32 ; v. 18 ×13 செ. மீ. ; vi. 0–1–0 ; vii. "தாளில்லாக் கதவு" "நேரம் தப்பாது" "நத்தை கற்பித்த பாடம்" "பேராசை பெரு நஷ்டம்" "நாணயம்", "வீண் வீரம் பேசாதே" என்னும் ஆறு சிறு கதைகளின் தொகுதி. சிறுவர்களுக்காக எழுதப் பெற்றது. சில கதைகள் மேல் நாட்டு நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டவை ; viii. 172/1913/IV.

O31,3

**[illegible]ச்சிற்றம்பலம் பிள்ளை, சி. (மொ. து.)**

2304. i. பனங்குளம் : முதற் பதிப்பு ; ii. கணேஷ் கம்பெனி கார்டியன் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1912 ; iv. உ. ப. 386 ; v. 19×13 செ. மீ. ; vi. 0–11–0 ; vii. ரமேஷ் சந்தர்தத்தர் என்பார் எழுதிய 'லேக் அப்பாம்ஸ்' என்னும் நாவலின் மொழிபெயர்ப்பு நான்கு கண்டமாக அமைந்துள்ளது. இவை முறையே கிராமம். பட்டணம், சேத் திரம், குளம் என்னும் தலைப்புக்களைக் கொண்டவை. ஒவ் வொரு காண்டத்திலும் பல அத்தியாயங்கள். உள viii. 202/1912/IV.

O31,3

திருஞானசம்பந்த முதலியார், மணி.

2305. i. பிராப்டிங்னுக் யாத்திரை: முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. டிசம்பர் 1914; iv. உ. ப. 163; v. 18×12 செ. மீ.; vi. 0-6-0; vii. ஆங்கில ஆசிரியர் "சொனதன் சுவிட்" எழுதிய கலிவரின் யாத்திரைகள் என்ற கதையில் இரண்டாவது கடற் பயணத்தைப் பற்றித் தமிழில் இந்நூல் தருகிறது. எட்டு அத்தியாயங்களில் அமைந்தது. viii. 986/1914/I.

O31,3

2306. i. லிலிபுட் யாத்திரை: முதற் பதிப்பு; ii. ஸி. குமாரசாமி நாயுடு சன்ஸ்; சென்னை, காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1913; iv. உ. ப. 2+111; v. 19×13 செ.மீ.; vi. 0-4-0; vii. கலிவர் கடல் பிரயாணங்கள் (Gulliver's Travels) என்னும் சிறந்த நூலை ஆங்கில மொழியில் சோநாதன் சுவிட் என்னும் புலவர் இயற்றியிருக்கிறார். இது ஆங்கிலேயரால் பெரிதும் போற்றிப் படிக்கத்தகுந்தது. இந் நூல் நான்கு பகுதியாக அமைந்துள்ளது. இவற்றுள் முதற் பகுதியான லிலிபுட் யாத்திரை என்பதன் மொழி பெயர்ப்பே இந்நூல். ஆங்கில மொழிக்கிணங்க மொழிபெயர்க்கப் பட்டுள்ளது, எட்டு அதிகாரங்கள் கொண்டது. viii. 814/1813/IV.

O31,3

திருநாவுக்கரசு முதலியார், மணி.

2307. i. சண்பகவல்லி: முதற் பதிப்பு; ii. கா. வடிவேலு முதலியார், முரஹரி அச்சுக்கூடம், சென்னை; iii. ஆகஸ்ட், 1911; iv. உ. ப. 2+20; v. 21×14 செ. மீ.; vi. 0-2-0; vii. ஆங்கில மொழியில் புகழ் பெற்ற செகப் பிரியர் எழுதிய வெனிஸ் வர்த்தகன் என்னும் நாடகக் கதையைப் பின் பற்றி எழுதப் பெற்றது. இடையிடையே பொருத்தமான தமிழ் நூல் செய்யுட்கள் மேற்கோளாகக் காட்டப் பட்டிருக்கின்றன. 'கதாரத்ன மாலிமை' வரிசையில் இது முதலாவது. viii. 326/1911/III.

O31,3

திருமலைக்கொழுந்து, அ., எட்டையபுரம்.

2308. i. உதயண கதா பீடம்: முதற் பதிப்பு; ii. அ. திருமலைக் கொழுந்து, எட்டயபுரம்; கார்டியன் பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1913; iv. உ. ப. 21+128; v. 18×13 செ. மீ.; vi. 1-0-0; vii. இது வடமொழியிலுள்ள கதாசரிக்சாகரம் என்ற நூலின் மொழி பெயர்ப்பு. இதன்கண்

வாருசி வரலாறும், குணாட்டியன் வரலாறும், உபகோசை வரலாறும் அமைந்துள்ளன. இவருள் குணாட்டியனே பெருங் கதையாகிய உதயணன் வரலாற்றை உலகத்தில் பரவ விட்ட வன். இப்பெருங்கதை உலகில் வெளிப் போந்து பரவிய வரலாற்றை இந்நூலால் அறியலாம். இந்நூலில் வந் துள்ள பிரதான தேவர், மனிதர் முதலாயினோரைப் பற்றிய குறிப்பு முதலிலும், அருஞ் சொல்லகராதி ஈற்றிலும் உள்ளன; viii. 992/1913/I.

O31,3

திருமலை முத்துப் பிள்ளை, மு.

2309. i. நல்ல தங்காள் சரித்திரம்—இரண்டாம் பாகம்: முதற் பதிப்பு; ii. எம் கிருஷ்ண பிள்ளை, மதுரை; ஸ்ரீ கிருஷ்ண விலாஸ் அச்சியந்திரசாலை, திருமங்கலம்; iii. செப்டம்பர், 1914; iv. செ. மூ. ப. 44; v. 21×14 செ. மீ.; vi. 0-2-0; vii. புகழ்பெற்ற நல்ல தங்காள் கதையை நாடகப்பாடல்களாக இந்நூல் தருகிறது. நாடகத்தில் பங்கு பெறுபவர்களின் பெயரும், நிகழ்ச்சியும் தரப்பட்டிருக் கின்றன. இது இந்நாடகத்தின் இரண்டாம் பகுதி ஆகும். 'நற்குலசேகரி' என்றும் இந் நாடக நூலுக்குப் பெயர் உண்டு. viii. 393/1914/IV.

O31,3

திருவேங்கடாசாரியார், செ.

2310. i. மோஹனராணி அல்லது பத்தாரத்நம்: முதற் பதிப்பு: ii. எஸ். அரங்கநாத முதலியார்; பாலவிர்த்தி போதினி, அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஜூலை, 1912; iv. உ.ப. 86; v. 22×15 செ. மீ.; vi. 0-8-0; vii. இரண்டு இளவரசிகளின் மயக்குஞ் செயல்களைப் பற்றி விவரிக்கும் கதை. இருபத்தோர் அத்தியாயங்கள் கொண்டது. ஒரு சில இடங் களில் கதையோடு இயைபுடைய சில பாடல்களையும் ஆசிரியர் எழுதியுள்ளார்; viii. 423/1912/III.

O31,3

2311. i. திலகவதி: முதற் பதிப்பு; ii. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. அக் டோபர், 1914; iv. உ. ப. 40; v. 19×13 செ. மீ.; vi. 0-1-6; vii. ஏழ்மையில் இருக்கும்போது மனக் கட்டுப்பாட்டுடன் இருப்பதன் நன்மையை விளக்கும் கதையே திலகவதி என்னும் இந்நூல். எட்டு அத்தியாயங்கள் கொண்ட ஒரு தொடர் கதை. இத்துடன் அமுத வாயார் என்னும் மற்றொரு சிறு கதையும் சொல்லப்பட்டிருக்கிறது; viii. 469/1914/IV.

O31,3

துரைசாமி ஐயங்கார், எம்.

2312. i. காதம்பரி: முதற்பாகம் : முதற் பதிப்பு ; ii. எம். துரைசாமி அய்யங்கார், சென்னை ; சதர்ன் ஸ்டார் பிரஸ், திருச்சிறுப்பள்ளி ; iii. பிப்ரவரி, 1911 : iv. உ. ப. 8+191+1 ; v. 22×14 செ. மீ. ; vi. 1-0-0 ; vii. ஹர்சர் காலத்தவராகிய பட்டபாணன் என்பவர் எழுதிய வடமொழி உரைநடைக் காவியத்தின் மொழிபெயர்ப்பு இந்நூல். வடமொழிக் காவியத்தின் சுவை குன்றுது வருணனைகள் முதலியனவெல்லாம் சிறப்பாக மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன. சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் மகாமகோபாத்யாய உ. வே. சாமிநாத அய்யர் இதற்கு முகவுரை எழுதியிருக்கிறுர். வடமொழிப் பயிற்சியில்லாத தமிழ் மாணவர்கள் காதம்பரியின் பொருளை உணர்வதற்கு மிகவும் பயன்படும் என்று முகவுரையில் குறித்துள்ளார்; viii. 594/1911/I.

O31,3

2313. i. காதம்பரி: இரண்டாம் பாகம் : முதற் பதிப்பு ; ii. வி. கல்யாணராம ஐயர் அண்டு கம்பெனி, சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட் 1911 ; iv. உ.ப. 91 (193-283); v. 21×14 செ. மீ. ; vi. 0-12-0 ; vii. வடமொழி நூலாகிய காதம்பரியின் மொழிபெயர்ப்பு. வடமொழி நூலினது சுருக்கமாக இது அமைந்துள்ளது. திருவாதி வடமொழிக்கல்லூரி முதல்வர் பண்டித ஆர்.வி. கிருஷ்ணமாச்சாரியார் "அபிநவபட்டபாண÷" அவர்களுடைய "காதம்பரீ சங்கிரகத்தின்" தமிழ் மொழி பெயர்ப்பாகும் இந்நூல்; viii. 857/1911/I.

O31,3

2314. i. **துருவாசரும் துரியோதனனும்** : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ்; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1913 ; iv. உ.ப. 16 ; v. 18×12 செ. மீ.; vi. 0-1-0 ; vii. துருவாசர், துரியோதனனிடத்திற்கு வந்தபோது அவருக்கு அமுது செய்வித்து, காட்டில் உறையும் தன் உடன் பிறந்தவர்களான பாண்டவர்களிடம் இது போன்ற விருந்தைப் பெற வேண்டும் என்று அனுப்பி வைக்கிருன். அவ்வாறே முனிவர் பாண்டவரிடம் மறுநாள் செல்லுதலும், கண்ணன் தன்அருளால் முனிவருக்கு நிறைவு உண்டாக்குவதும் பற்றிக் கூறும் பாரத வரலாறு குழந்தைகளுக்கு ஏற்ற முறையில் எளிமையாக மூன்று அத்தியாயங்களில் எழுதப்பட்டிருக்கிறது; vii. 1053/1913/IV.

O31,3

தெய்வசகாயர், ஞா.

2315. i. தினகரரின் திரு ஆட்பாடு அல்லது அற்ப நஷ்டத்துக்குக் கோடி லாபம் வந்த கதை ; ii. கிறிஸ்டியன் லிட்டரரி சொஸைட்டி; சி. எல். எஸ். பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ. ப. 127;

. 18×13 செ. மீ.; vi 0-4-0 ; vii. லுவீசி மாரிசட்டன் மிசியார் என்பார் எழுதிய ஆங்கில நூலின் மொழி பெயர்ப் பாகும். இது ஒரு கிறித்துவக் கதையாகும். "தினகரரின் ஒப்புவிப்பு", "தினகரரின் திரு ஆட்பாடு" என்பது இந்நூற் பொருளுக்கு ஏற்ற தலைப்பு ஆகும். 23 அத்தியாயங்கள் கொண்டது; viii. 63/1915/IV.

O31,3

**2316. i. தென்னிந்தியக் கதைகள் :** ii. லாங்மன்ஸ் கிரீன் அண்ட் கம்பெனி ; ஆனந்தா பிரஸ், சென்னை ; iii. 1914 ; iv. உ. ப. 57; v. 19×13 செ. மீ. ; vi. 0-3-0 ; vii. பள்ளி மாணவர் களுக்காக எழுதப்பெற்ற 9 கதைகளின் தொகுப்பு. படங்களுடன் கூடிய இந்நூலில் உள்ள கதைகள் தென்னிந்தியாவில் புகழ் பெற்ற கிராமக் கதைகளாகும்; viii. 307/1915/II.

O31,3

**தேவகுஞ்சரியம்மாள், பால சரஸ்வதி, திரிசிரபுரம்**

**2317.** i. கருநாடக யோகினி ஜாலக்கதை : முதற் பதிப்பு ; ii. பால சுப்பிரமணியன் கம்பெனி, சென்னை, சுதேசமித்திரன் அச்சுக் கூடம், சென்னை ; iii. மார்ச், 1912 ; iv. உ. ப. 2+80 ; v. 18×13 செ. மீ. ; vi. 0-4-0 ; vii. நமது நாட்டில் செவிவழிச் செய்தியாக வழங்கிவரும் தேவதைக் கதைகள் பல உள்ளன. அவற்றைத் தொகுத்து ஆங்கிலத்தில் எழுதப்பட்ட பெயிரி டேல்ஸ் (Fairy Tales) என்ற நூலை அடியொற்றி இந்நூலை எழுதி யுள்ளார். "பாதாள கன்னிகை கதை", நாலு இராச குமாரத்தி களின் கதை, எள்ளுப் பதுமை கதை, சௌந்தரி என்னும் வணக்கமுள்ள ஏழைப் பெண்ணின் கதை, மந்திரி பெண் மகா ராசாத்தியான கதை என ஐந்து கதைகள் உள்ளன. மேலும் தொடர்ந்து தனி நூல்களில் இவ்வகைக் கதைகளை வெளியிடுவதாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்; viii. 224/1912/III.

O31,3

2318. i. **தோட்டக்காரன் :** முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல் 1912 ; iv. உ. ப. 30 ; v. 19×13 செ. மீ. vi. 0-1-0 ; vii. தோட்டக்காரன், அசடனுக்கு வந்த அதிர்ஷ்டம் ' இரண்டேவார்த்தை, திருடனைப் போட்டோகிராப் பிடித்தது என்னும் நான்கு சிறுகதைகள் இதில் உள்ளன. இவற்றுள் முதல் கதை ஓர் ஆங்கிலக் கதையின் மொழி பெயர்ப்பு என்று தெரிய வருகிறது ; viii. 698/1912/II.

O31,3

நடேச சாஸ்திரி, எஸ். எம்.

2319. i. குமாரஸம்பவம் : முதற் பதிப்பு; ii. பஞ்சநதேஸ்வர அய்யர் சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1913 ; iv. உ. ப. 4+121 ; v. 18×13 செ. மீ.; vi. 0-12-0 ; vii. வடமொழியில் காளிதாசர் பாடிய "குமார சம்பவத்தின்" மொழி பெயர்ப்பு. முருகக்கடவுளின் பிறப்பைப் பொருளாகக் கொண்டது இது. இந்நூலின் முதல் எழு சருக்கங்களே இந் நூலில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. இந்த எழு சருக்கங் களே காளிதாசர் வாக்கு என்றும், எழுக்கு மேற்பட்ட பகுதி பிற்காலத்தில் ஏற்பட்ட வெள்ளி பாட்டுகள் என்றும் முகவுரையில் காரணம் காட்டி விளக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பகுதியிலும் லோக எண்களைக் கொடுத்துத் தனித் தனிப் பத்திகளாக மொழிபெயர்த்துள்ளார் ; ஒரு சில படங் களும் உள்ளன; viii. 993/1913/I.

O31,3

2320. i. தலையணை மந்திரோபதேசம் : நான்காம் பதிப்பு ; ii. எஸ். என். பஞ்சநதேஸ்வர், கார்டியன் பிரஸ், சென்னை ; iii. செப்டெம் பர், 1913 ; iv. உ. ப. 223 ; v. 19×13 செ. மீ. ; vi. 0-8-0; vii. கணவன் மனைவி உரையாடலாகத் தென்னிந்திய சமூக வாழ்க்கையைச் சித்திரிக்கும் ஒரு நவீனம் ; "நாயகி வார்த்தை கேளாதான் நாய் வாயில் சீலை", "தாய்க்குப்பின் தாரம்" என்னும் பழமொழிகளுக்கு எற்ப மனைவியர் வார்த்தையைப் பெண் புத்தி பின் புத்தி என்று இகழாது கேட்டுச் சிந்திக்க வேண்டும் என்று அறிவுறுத்துகிறது ; இதில் அம்மணிபாய் என்பாள் வாயிலிருந்து புறப்பட்ட மந்திரங்களை உலகிற்குத் துணையாக வெளிப்படுத்துவதாக ஆசிரியர் கூறுகிறார். 37 அத்தியாயங்கள் கொண்டது; viii. 323/1913/II.

O31,3

2321. i. நளோபாக்யானம் : முதற் பதிப்பு ; ii. ஜெனரல் சப்ளைஸ் கம்பெனி, சென்னை ; எட்டுவர்டு பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1911 ; iv. உ. ப. 1+120+3 படங்கள் ; v. 19×13 செ. மீ. ; vi. 0-12-0 ; vii. நளன் கலியால் துன்புற்று இறுதியில் அவனருளால் நல்வாழ்வு அடைந்ததைப் பற்றிய வரலாறு. பாரதத்திலிருந்து மொழிபெயர்க்கப்பெற்றது. இருபத்தைந்து சருக்கங்கள் கொண்டது ; viii. 633/1912/IV.

O31,3

2322. i. மிருச்சகடி : முதற் பதிப்பு ; i. பி. எ. இராம அய்யர், பாலக்காடு; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1913; iv. உ.ப. 92 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. வடமொழியில் சூத்திரகர் என்ற பேரரசனால் செய்யப்பட்டது இந் நாடகம். கி.பி. 200-ஆம் ஆண்டளவில் இது இயற்றப்பட்டதாகத் தெரியவருகிறது. இந்நாடகத்தைத் தழுவிக் கதை வடிவில் இந்நூல் ஆக்கப்பட் டிருக்கிறது. இதில் வரும் நியாய சபை முதலியவற்றை நோக்கின் அந்நாளிலேயே அறநெறி முறை நமது நாட்டில் சிறந்து விளங் கினமை புலனாகும்; viii. 544/1914/I. O31.3

**நடேசபிள்ளை, ஏ.**

2323. i. கல்யாணி : முதற் பதிப்பு ; ii. டி. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி ; சுதேசமித்திரன் பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1911 ; iv. உ.ப. 3+173 ; v. 18×12 செ. மீ. ; vi. 0—8—0 ; vii. இது ஒரு கற்பனைக் கதை. ஒன்பது அத்தியாயங்கள் கொண்டது. உலகியல் நிகழ்ச்சிகளை ஆசிரியர் நன்கு விவரித்துள்ளார். பரத்தையால் நேரிடும் இழிவும் துன்பமும் நன்கு விவரிக்கப்பட்டிருக்கின்றன. அறநிலையச் செல்வங்களை மனம் போனபடி செலவிட்டுத் தாம் என்ற ஆணவத்தில் மூழ்கி இருப்போர்களைக் கண்டித்துப் பேசுகிறது. வரகவி ஆ. சுப்பிரமணிய பாரதியார் இதற்கு முகவுரை எழுதியுள்ளார். viii. 749/1911/III.

O31,3

2324. i. கிருஷ்ணவேணி : முதற் பதிப்பு ; ii. டி. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி, சென்னை ; சச்சிதானந்த அச்சுக்கூடம், சென்னை ; கோமளேசுவரன் பேட்டை ; iii. டிசம்பர், 1910 ; iv. உ. ப. 4+139; v. 22×14 செ.மீ. vi.; *0-12-0* ; vii. இந்நூல் நம்நாட்டு மக்களும் சிறுவர்களும் படித்துச் செய்திகளை எளிதிலுணரத்தக்க சாதாரண நடையில் எழுதப்பட்டிருக்கிறது. சிறப்பாக வேளாளர், அந்தணர் என்று இவ்விருவருணத்தவர்களின் பழக்க வழக்கங்களால் நேரிடும் குறைகளையும், கடன் வாங்குவதால் நேரிடும் துன்பங்களையும் விளக்கியுள்ளார். தற்கால நாகரிகத்துக்கேற்ப திருமணம் மணமக்களின் இசைவையொட்டியே நடத்தப்பட வேண்டுமென்பது இக்கதையின் முக்கிய கருத்து. இது ஐந்து அத்தியாயங்களைக் கொண்டது ; viii. 347/1911/I.

O31,3

**நடேச முதலியார், சி. ஆ.**

2325. i. பணத்தால் வந்த பழி : முதற் பதிப்பு ; ii. சி. ஆ. நடேச முதலியார் ; அமெரிக்கன் டைமண்ட் ப்ரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1912 ; iv. உ. ப. 88+3 ; v. 22×14 செ. மீ. ; vi. 0—8—0 ; vii. பல்வேறுபட்ட மாந்தரின் பண்புகளை விவரிக்கும் ஒரு சமூக நவீனம். ஒன்பது அத்தியாயங்கள் கொண்டது. சில உறுப்பினர்களின் உரையாடல் பேச்சு வழக்கு நடையில் உள்ளது; viii. 565/1912/IV.

O31,3

**நமச்சிவாய முதலியார், கா.**

2326. i. இந்து தேச சரித்திரக் கதைகள் ; முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1913 ; iv. உ. ப. 5+152 ; v. 19×13 செ. மீ. ; vi. 0—5—0 ; vii. இந்திய வரலாற்றைக் கதையாக அமைத்து எழுதப்பட்டது. பாட்டனார், பேரனுக்குச் சொல்லும் வகையில் இது அமைந்துள்ளது. முப்பத்தொரு கதைகள் இதில் உள்ளன. இந்தியாவின் பழைய குடிகள், ஆங்கில அரசாட்சியின் சிறப்பு, "பட்டாபிஷேக வைபவம்" என்று மூன்று

பாடங்களும் பாடல்களாக அமைந்துள்ளன. படங்களும் அங்கங்கே கொடுக்கப்பட்டிருக்கின்றன. இது பள்ளி மாணவர் களுக்காக எழுதப்பட்டது ; viii. 813/1913/IV.

O31.3

2327. i. கண்ணப்பன் : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1913 ; iv. உ. ப. 32 ; v. 18×13 செ. மீ., ; vi. 0-1-0 ; vii. அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவராகிய கண்ணப்பரது வரலாற்றைச் சுருக்கமாகத் தருவது. பள்ளி மாணவர்களுக்கும், தமிழ் நடையைப் பயில்வாருக்கும் பயன்படுமாறு செய்யப்பட்டது. ஓரணு வாசக வரிசையில் இது நான்காவது ; viii. 563/1914/I.

O31,3

2328. i. புலவர் வறுமை: முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1911 ; iv. உ. ப. 1 + 32 ; v. 18×12 செ.மீ.; vi. 0-1-0 ; vii. ஆசிரியர் தாம் கேள்விப்பட்ட கதைகளோடு புனைந்துரையாகவும் சில கதைகளை ஆக்கியிருக்கிறார். பள்ளி மாணவர்க்கும் தமிழ் நடை பயில்வார்க்கும் பயன்படுமாறு இது செய்யப்பெற்றது. இனிய பாடல்கள் இடையில் விரவி வந்து படிப்போர்க்கு இன்பம் பயப்பது. ஓரணு வாசக வரிசையில் இது மூன்றுவது புத்தகம். viii. 32/1911/II.

O31,3

2329. i. விநோதக் கூற்றுக்கள் : முதற் பதிப்பு ; ii. வி. குமாசராமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1913; iv. உ. ப. 32; v. 18×13 செ.மீ.; vi. 0-1-0 ; vii. செவிவழிக் கதைகளும் புனைந்துரைக் கதைகளும் கொண்ட ஒரு சிறு நூல். பத்துக் கதைகள் இதில் உள்ளன. ஓரணுவாசக வரிசையில் இது ஆருவது வெளியீடு. viii. 171/1913/IV.

O31,3

2330. i. **நல்ல சிநேகிதர்கள்**; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1912; iv. உ.ப. 2+32; v. 18×13 செ.மீ.; vi. 0-1-0 ; vii. சிறுவர்க் கேற்ற பன்னிரண்டு அறநெறிக் கதைகளின் தொகுதி. சிறுவர் நீதிக் கதை வரிசையில் இது இரண்டாவது. இதில் அறத்தை விளக்கும் வேடிக்கைக் கதைகளே அமைந்திருக்கின்றன. தேவையான இடங்களில் விளக்கப் படங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 45/1912/II.

O31,3

2331. i. **நல்ல பிள்ளைகள்** : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1912 ; iv. உ.ப. 2+32 ; v. 19×13 செ. மீ.;

vi. 0-1-0 ; vii. அறநெறியை விளக்கும் வேடிக்கைக் கதைகளின் தொகுதி. இதில் " நல்ல பிள்ளைகள் " தொடக்கமாக "மன்னன் வாழ்க" ஈருகப் பன்னிரண்டு, கதைகள் உள்ளன. இவை கீழ் வகுப்பில் படிக்கும் சிறுவர் சிறுமிகட்கு வீட்டுப்பாடமாக அமைக்கும் நோக்கத்துடன் எழுதப்பட்டது ; viii. 421/1912/I.

O31,3

**நரசையர், டி.கே.வி.**

**2332.** i. மரகதமணி அல்லது பேராசைப் பெருமாட்டி : முதற் பதிப்பு, ii. இ. பார்த்தசாரதி நாயுடு, சென்னை ; ஸ்ரீ பத்மநாப விலாஸ அச்சுக்கூடம், சென்னை ; iii. மார்ச், 1911 ; iv. உ. ப. 13+10+456 ; v. 19×13 செ. மீ.; vi. 1-0-0 ; vii. மகளிர் தத்தம் நிலைமைக் கேற்பக் கணவரைப் பெறுதலே தகுதி. அங்ஙனம் பெறுதலில்லையாயின் துன்பமுறுவர் என்பதையும், பேராசையாலுண்டாகும் பெருந்தீங்கையும் விளக்கமாகக் கதைத் தலைவி மரகதமணி என்பாளின் வரலாறு விளக்குகிறது. கல்வி கேள்வியில்லாத மகளிர்க்கும் பொருள் விளங்கும்படி எளியநடையாலும், செவ்விதான நடையாலும், விளக்கப்பட்டுள்ளது. இது 50 அத்தியாயங்களைக் கொண்டது. பல செய்தித் தாள்களில் வந்த மதிப்புரைகளும் வேறு பலரது கருத்துரைகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சிலர் பாடிய சிறப்புப் பாயிரக் கவிதைகளும் முதலில் இடம் பெற்றுள்ளன ; viii. 643/1911/I.

O31,3

**2333.** i. **நல்லபாடம் :** முதற் பதிப்பு; ii. ஸி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன பிரஸ், சென்னை; iii. மே 1912 ; iv. உ. ப. 2+47 ; v. 19×12 செ.மீ.; vi. 0-1-6; vii. அறத்தை விளக்கும் வேடிக்கைக் கதைகளின் தொகுதி. கதைகளுக்கு எற்ற படங்களும் தரப்பட்டுள்ளன. இதில் நல்லபாடம் முதலிய பதினேரு கதைகள் உள்ளன ; viii. 692/1912/II.

O31,3

**2334.** i. **நற்பழக்கம்:** முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1912; iv. உ. ப. 62 ; v. 19×13 செ.மீ.; vi. 0-2-0 ; vii. பல நற்பழக்கங்களைப் பற்றி விளக்கும் ஓர் அறநெறிக் கதை ; இது மேல்நாடாகிய இங்கிலாந்தில் உள்ள குழந்தைகளைப் பற்றிய கதையைத் தழுவியது போல் உள்ளது ; viii. 419/1912/IV.

O31,3

நாகராஜன், பி. ஆர்.

2335. i. மோஹனு : முதற் பதிப்பு; ii. எம். ஆதி அண்ட் கம்பெனி யார், சென்னை, சந்திரா பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1911; iv. உ.ப. 1+92; v. 18×12 செ.மீ; vi. 0–5–0; vii. இது "பன்னிரண்டு அத்தியாயங்கள் கொண்ட ஒரு நவீனக் கதை". துன்பத்தில் துணை செய்பவனே அருமை நண்பன், கணவனிடத்தில் அன்பு உடையவளே கற்புடைய மனைவி, எவ்வளவு இடர்வரினும் இறை பக்தியால் யாவும் நீங்கும் என்னும் மூன்று உண்மைகளை அடிப்படையாகக் கொண்டது. viii. 876/1911/IV.

O31,3

நாகலிங்க செட்டியார், எஸ்., அருப்புக்கோட்டை

2336. i. முத்துக்காமாக்ஷி: முதற் பதிப்பு ; ii. எஸ். நாகலிங்க செட்டியார், அருப்புக்கோட்டை; கார்டியன் அச்சியந்திர சாலை, சென்னை ; iii. செப்டெம்பர், 1913 ; iv. உ.ப. 202 , v. 19×13 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. எதையும் ஆராய்ந்த பின்னரே உறுதி செய்ய வேண்டும் என்னும் உண்மையை விளக்கும் வகையில் உள்ளது இந்நவீனம். இருபத்து எழு அத்தியாயங்கள் கொண்டது. ஆங்காங்கு பல அறநெறித்தொடர்களுடன் எளிதில் படித்தறியக் கூடிய தெள்ளிய நடையில் எழுதப்பட்டுள்ளது ; viii. 325/1913/IV.

O31,3

நாராயணஸ்வாமி ஐயர், ஆர். எஸ்.

2337. i. அக்ஞாத வாஸம் என்னும் மாண்டவன் மீண்ட மாயம்: முதற் பதிப்பு; ii. ம. கோபால கிருஷ்ண அய்யர் & மு. ரா. கந்தசாமி கவிராயர்; விவேகபாநு பிரஸ், மதுரை; iii. மே, 1911; iv. உ.ப. 4 + 164 + 1; v. 21×14 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. இது ஒரு துப்பறியும் நாவல். 1885-ஆம் ஆண்டு நாடெங்கும் பேசப்பெற்ற மங்களாபுரம் கொலைபற்றியும், அதில் சோமு என்பார் இறந்ததும், அவரது பகைவன் தர்மராசு காணுமல் போனதும் நுட்ப நோக்குள்ள காவல்துறை வல்லுநராலும், இதன் உண்மை கண்டு பிடிக்கப்பப்படாமல் போனதும், இருபது ஆண்டுகளுக்குப் பின் இறந்த சோமுவின் மகனுல் உண்மை வெளிப்படுவதும் ஆகிய நிகழ்ச்சிகளைக் கொண்டது. முப்பத்து மூன்று அத்தியாயங்கள் இதில் உள்ளன. viii. 443/1911/II.

O31,3

**2338.** i. மாலினீ மாதவம் அல்லது தர்ம விஜயம்; ii. ஆர். எஸ். நாராயணஸ்வாமி அய்யர், மதுரை; தமிழ்ச் சங்கம் பிரஸ், மதுரை; iii. நவம்பர், 1914; iv. உ.ப. 148; v. 23×13 செ. மீ.; vi. 0-10-0; vii. அறம் வெல்லும் என்பதை விளக்கும் ஒரு துப்பறியும் நவீனம். இந்நவீனத்தின் தொடக்கம் துப்பறியும் கதையாகவும், முடிவு இன்பியலாகவும் இருப்பதுடன் வருணனையில் கற்பனை மிகுந்து வருகிறது. 24 அத்தியாயங்கள் கொண்டது. viii. 687/1914/IV.

O31,3

**2339.** i. நான்கு பாடகர்கள்: முதற் பதிப்பு; ii. சி.குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ்; சென்னை; iii. அக்டோபர், 1912; iv. உ.ப. 30; v. 18×13 செ.மீ.; vi. 0-1-0; vii. இளஞ்சிறுவர்க்கேற்ற மூன்று கதைகள் கொண்டது. அவையாவன நான்கு பாடகர்கள், புயல், பெரிய மனிதர் என்பனவாம்; viii. 421/1912/IV.

O31,3

**2340.** i. நீதிகதா மஞ்சரி, விக்டோரியா நல்லரசி; முதற்பதிப்பு; ii. ஸி. குமாரசாமி நாயுடு அண்ட் ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1913; iv. உ.ப. 2+75; v. 18×13 செ.மீ.; vi. 0-2-6; vii. மாணவர்களுக்கு அறநெறியைக் கற்பிக்கும் பொருட்டு எழுதப்பெற்ற நீதி கதாமஞ்சரி வரிசையில் இது ஒன்று. விக்டோரியா நல்லரசியின் இரக்கம் முதலிய பதினான்கு சிறு கதைகள் உள்ளன. கதைகள் பலவும் மேனாட்டுக் கதைகளே. viii. 4/1913/I.

O31,3

நெல்லையப்ப முதலியார், எம்.ஏ.

**2341.** i. குணசுந்தரி: முதற் பதிப்பு; ii. எம். ஏ. நெல்லையப்ப முதலியார்; எட்வர்ட் அச்சுக்கூடம், சென்னை; iii. மே, 1912; iv. உ. ப. 91; v. 18×13 செ.மீ.; vi. 0-8-0; vii. குண சுந்தரி அல்லது இல்லற பொக்கிஷம் என்பது இதன் முழுப்பெயர். கற்புடைய மனைவி தனது ஏழைக்கணவரிடம் எந்தப்பயனும் கருதாது அன்பு செலுத்துவதினால் ஏற்படும் நன்மைகளைப் பற்றி விவரிக்கும் கதை. இல்லறத்திற்கு வேண்டிய சில அரும் பெரும் தொடர்கள் இந்நவீனத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. பொருத்தமான சில அறநெறிச் செய்யுள் முதலியனவும் அங்கங்கே கொடுக்கப்பட்டிருக்கின்றன. பதினைந்து அத்தியாயங்கள் கொண்டது. viii. 24/1912/III

O31,3

**2342.** i. வித்தியாநந்தர்: முதற் பதிப்பு; ii. எம்.ஏ. நெல்லையப்பர், சென்னை; ஸ்மார்ட்டன் அச்சுக்கூடம், சென்னை; iii. ஏப்ரல், 1911; iv. உ. ப. 6+388; vi. 18×13 செ.மீ; vi. 1-4-0; vii. காதல் திருமணங்களை ஆதரிக்கும் விதத்தில் எழுதப்பட்ட ஒரு நவீனம். இலக்கிய நடையாய் இந்நாவல் அமையா விட்டாலும், ஒழுக்கத்திற்கும் இன்ப நிகழ்ச்சிகளுக்கும் வாழ்க்கையின் நடைமுறைக்கும், ஏற்ற விதத்திலும், யாவரும் உணரும் எளிய நடையில் இந்நவீனம் பின்னப்பட்டிருப்பதாக ஆசிரியர் கூறுகிறார். இது நான்கு பகுதிகளாகப் பாகுபாடு செய்யப்பட்டிருக்கிறது. குசராத் நாட்டைச் சார்ந்த வைத்திய சாஸ்திரி மணி சங்கர் கோவிந்தசி என்பாருக்கு உரிமையாக்கப் பட்டிருக்கிறது. மணி சங்கர் கோவிந்தசியின் வாழ்க்கைச் சுருக்கம் முதலில் எழுதப்பட்டிருக்கிறது. viii. 49/1911/II.

O31,3

**2343.** i. ப்ராஸ் கோவியா : முதற் பதிப்பு ; ii. டி. வெங்காஜி குப்புசாமி அய்யர் அண்டு கம்பெனி, திருச்சிராப் பள்ளி, செயிண்ட் ஜோசப் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. நவம்பர், 1912 ; iv. உ. ப. 36 ; v. 18×12 செ. மீ.; vi. 0-2-0 ; vii. யோங்ச் என்பார் எழுதிய " சிறந்த செயல்கள் " (Book of Golden deeds) என்னும் கதைத் தொகுதியிலிருந்து எடுக்கப்பட்டது. ரசிய நாட்டில் சைபீரியா விற்கு நாடுகடத்தப்பட்ட தளபதியான லோப் யோலாப் என்பவரது மகளாகிய ப்ராச்கோவியாவின் வரலாற்றை விவரிப்பது. இவள் விடாமுயற்சியுடன் தன் தந்தைக்காக ரசியப் பேரரசனைக் கண்டு மன்னிப்புப் பெற்றதும், அவள் தேவனுக்குக் கன்னிகையாக ஊழியம் செய்ததும் ஆகிய நிகழ்ச்சிகள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை. பிள்ளைகள் பெற்றோருக்குப் பணிந்து தொண்டு செய்வதை அறிவுறுத்தும் ஒரு அறநெறிக் கதையாகவும் உள்ளது. viii. 672/1912/IV.

O31,3

பக்தவத்ஸலம், டி.

**2344.** i. மனமோஹன மாணிக்கம் : முதற் பதிப்பு ; ii. மெண்டு. பத்மநாப நாயுடு, சென்னை ; ரா. விவேகாநந்தா அச்சுக் கூடம் ; iii. டிசம்பர், 1911 ; iv. உ. ப. 5×320 ; v. 21×14 செ. மீ.; vi. 1-4-0 ; vii. இந்துக்களிடையே நிலவிவரும் விரும்பத்தகாத பழக்க வழக்கங்களை எள்ளி நகையாடி எழுதப்பட்ட ஒரு தேவதைக் கதை. இதுவரை வெளியான தமிழ்ப் புதினங்களைப் படித்த வரான திரு. ர. சீனிவாசலு நாயுடு என்பார், இது " ஆங்கில கதாப் பிரசங்கங்களில் அரசுரிமை வாய்ந்த

ஸர்வால்ட்ஸ்காட் என்பாரைப் போல் இயற்கை வனப்பும் ஷேக்ஸ்பியரைப் போல், பாத்திர வர்ணனைகளும் இதில் அமைந்துள்ளன " எனக் கருத்தறிவித்துள்ளார். இது முப்பத்திரண்டு அத்தியாயங்கள் கொண்டது. இது செல்வ கேசவராய முதலியாரின் தூண்டுதலின் பேரில் எழுதப்பட்ட தாக ஆசிரியர் கூறுகிறுர். viii. 887/1911/IV.

O31,3

2345. i. முக்தமாலா—முதற் பாகம் : முதற் பதிப்பு ; ii. டி. பக்தவத்சலம், சென்னை ; விவேகாநந்தா பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1915 ; iv. உ. ப. 38 ; v. 19×13 செ. மீ.; vi. 0–4–0 ; vii. இந்து சமுதாயத்தில் புதிய நாகரிகத்தினுல் ஏற்படும் வெறுக்கத்தக்க செயல்களை விவரிக்கும் சமூகக் கதை. இதற்கு "அண்ட பகிரண்ட அதிவினோதக் கதை " என்றும் ஒரு பெயர் உண்டு. viii. 439/1915/I.

O31,3

பகவந்த ராவ், வி.

2346. i. ஐங்கதைக் கொத்து : முதற் பதிப்பு ; ii. வி. பகவந்த ராவ் ; கல்யாணசுந்தரம் பவர் பிரஸ், தஞ்சை ; iii. டிசம்பர்; 1911 ; iv உ. ப. 108 ; v. 19×11 செ. மீ.; vi. 0–5–0 ; vii. " நற்பழக்கம் நல்லவனுக்கும் "; " மந்திரக்குழலூதி கதை ", " ஒரு கிழச் சந்நியாசியின் கதை ", " ரொம்ப நல்லது ", " சேலாட்டு லேடி " என்னும் ஐந்து கதைகளின் தொகுதி. இரண்டாவது கதையின் பின் , " குழந்தை மோகம் " என்னும் தலைப்பில் ஆங்கிலப் பாடல்களும் அவற்றிற்குத் தமிழ் மொழிபெயர்ப்பும் கொடுக்கப்பட்டுள்ளன. பார்னலின் எர்மிட், புரோனிங்க்சின், பைட்பைப்பர் ஆப் ஆமிலின், டென்னிசனுடைய லேடி ஆப் செலட்டும், மற்றும் இரண்டு நாடோடிக் கதைகள் ஆகிய வற்றை மூலமாகக் கொண்டு செய்யப்பெற்றது. viii. 261/1912/I.

O31,3

2347. i. பச்சைத் தேவதை : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1913 ; iv. உ. ப. 19; v. 18×13 செ. மீ. ; vi. 0–1–0 ; vii. சிறுவர் களுக்கான கதைகள் வரிசையில் இது ஒன்று. தொடக்கப் பள்ளிகளில் வீட்டுப் பாடமாக அமைப்பதற்காக எழுதப்பெற்றது. அருஞ்சொற்களும் கடின சந்திகளும் நீக்கப்பட்டுத் திருத்த

மாக அச்சிடப் பெற்றது. பச்சைக் குள்ளத் தேவதையினது மாயைச் செயல்களைப் பற்றி விவரிப்பது இக்கதை. viii. 5/1913/I.

O31,3

**பத்மநாபம் பிள்ளை, பெ. ரா.**

**2348.** i. அபயமதி அல்லது மெய்க்காதலி : முதற் பதிப்பு ; ii. என். முனிசாமி முதலியார் ; முரஹரி அச்சுக் கூடம், சென்னை ; iii. செப்டம்பர், 1912 ; iv. உ ப. 2+96 ; v. 22×14 செ. மீ.; vi. 0–8–0 ; vii. இரு நண்பர்கள் தங்கள் மனைவியரை விட்டு நீண்ட நாள் பிரிந்திருப்பதையும், அக்காலங்களில் இரு சாரார்க்கும் நேர்ந்த இடையூறுகளையும், பின்பு ஊழ்வலியால் ஒன்று கூடுதலையும் சிறப்பு நிகழ்ச்சிகளாகக் கொண்டது. மனைவியர், தத்தம் கணவரை அடையாளம் கண்டுகொள்ளக் கூடாத நிலையிலிருந்ததாகவும் கணவன்மார் அவர்களுக்கு முன்பு நிகழ்ந்த செய்திகளை நினைப்பூட்டி நம்பிக்கை ஏற்படுத்தியதாகவும் பின்பு அவர்கள் இன்புற்று வாழ்ந்ததாகவும் கதை முடிகின்றது. viii. 7/1912/IV.

O31,3

**2349.** i. இருபாம்பாள் : முதற் பதிப்பு ; ii. எஸ். கே. பாட்சா நாயுடு அண்டு கம்பெனி, சென்னை ; மெர்க்குரி பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1913 ; iv. உ. ப. 3+95 ; v. 21×14 செ. மீ.; vi. 0–8–0 ; vii. இது எளிய நடையில் எழுதப்பெற்ற ஒரு செந்தமிழ்ப் புதினம் அறநெறி, செங்கோல் முறை, கற்பு, நட்பு, காதல் முதலிய பல செய்திகளைப் பற்றி இது விளக்குகிறது. 22 அத்தியாயங்கள் கொண்டது . ஒரு சில அறநெறிச் செய்யுட்களும் எடுத்தாளப்பட்டுள்ளன. viii. 109/1914/I.

O31,3

**2350.** i. பம்பண்ணனும் பலவுடலும் : முதற் பதிப்பு; ii. என். வெங்கட ராயலு அண்டு சன்ஸ், மினர்வா பிரஸ், சென்னை ; iii. எப்ரல், 1914 ; iv. உ. ப. 36; v. 19×12 செ. மீ.; vi. 0–1–0 ; vii. பம்பண்ணன் என்பவன் ஒரு யட்சிணி தேவதையின் வரத்தால் பலப்பல உடல் எடுத்தாலும், மனித அறிவு மாருமல் இருக்கும் வரம் பெற்ருன். கலைமான், காட்டு வாத்து, சுண்டெலி என்று இவ்வாருகப் பல்வேறு விலங்குகளாக வடிவெடுத்து இறுதியில் தனது முந்திய மனித உருவைப் பெறுகிருன். இது செவி வழிச் செய்தியாக வழங்கிவரும் கதைகளிலிருந்து தொகுத்து எழுதப்பட்டது. viii. 583/1914/III.

O31,3

பவானந்தம் பிள்ளை, எஸ்.

2351 i. மந்திர வீணை அல்லது மெய்மை பொய்மைகளைப் பற்றிய கதை : இரண்டாம் பதிப்பு ; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கம்பெனி ; வி. ராமஸ்வாமி சாஸ்திரிலு அண்டு ஸன்ஸ் ; ஆதி சரஸ்வதி நிலயம் பிரஸ், சென்னை iii. மார்ச், 1915 ; iv. உ. ப. 32 ; v. 19×13 செ. மீ.; vi. 0–4–0 ; vii. உண்மையும் அதன் வெற்றியும் விளங்கச் செய்யும் சிறு கதை நூல். சத்தியவான் எனும் சிறுவன் சாது எனும் கொடியவனிடத்து அல்லலுற்று, முடிவில் வாய்மை தவருத நோன்பினுல் மந்திர வீணை ஒன்றைப் பெற்றுப் பெரும்பேறு பெற்றதை இக்கதை எடுத்துச் சொல்கிறது. இது மெய்மை பொய்மைகளைப் பற்றிய ஓர் இனிய கதை. viii. 290/1915/II.

O31,3

2352. i. பரமார்த்த குரு கதை : முதற் பதிப்பு ; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்ட் சன்ஸ் ; வைஜயந்தி பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1915 ; iv. உ. ப. 55 ; v. 19×13 செ. மீ.; vi. 0–4–0 ; vii. மூடக்குருவையும் மடச் சிஷ்யர்கள் ஐவரையும் பற்றிய வேடிக்கைக் கதை. பரமார்த்த குருவென்று அழைக்கப்பெற்ற அறிவிலியானவர் மடமையே உருக்கொண்டு வந்த மட்டி, மடையன், பேதை, மிலேச்சன், மூடன் என்னும் பெயருடைய சிஷ்யர்களுடன் சேர்ந்து செய்த பாதயாத்திரையும் இறுதியில் இக குருவானவர் மடமைக்குப் பலியானதையும் இக்கதை எடுத் துரைக்கிறது. வீரமாமுனிவர் எழுதிய கதையை நல்ல தமிழில் ஆசிரியர் திருத்தமுற மாற்றி எழுதியுள்ளார். புராதன நவீன கதா மஞ்சரி வரிசையில் இது நான்காவது மலர் ஆகும். viii. 274/1915/II.

O31,3

பன்யன்

2353. i. பரதேசியின் மோட்சப் பிரயாணம் : நான்காம் பதிப்பு ; ii. ரிலிஜியஸ் டிராக்ட் அண்ட் புக் சொஸைட்டி, மதராஸ் ; எஸ். பி. ஸி. கே. பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1910 ; iv. உ ப. 498 ; v. 18×12 செ. மீ. ; vi. 0–14–0 ; vii. பன்யன் என்பவரால் ஆங்கிலத்தில் இயற்றப்பட்ட "பரதேசியின் மோட்சப் பிரயாணம்" என்ற நூலைப் புதிய முறையில் தமிழில் மொழிபெயர்த்தவர் பால் ஐயராவார். ஒருவன் நில உலகத்திலிருந்து மேலுலகிற்குச் செல்வதாகக் கனவு காண் பதைப் போல இதன் ஆசிரியர் விளக்குகின்றார். இங்கிலாந்து நாட்டுச் சன்மார்க்க சங்கத்தார் இதைச் சுமார் முப்பது மொழிகளில் அச்சிட்டிருக்கிறார்கள். நம் நாட்டிலும் பெரும் பாலும் எல்லா மொழிகளிலும் அச்சிட்டிருக்கிறார்கள்.

தமிழில் இதை மொழிப் பெயர்க்கும் போது இதன் ஆசிரியர் மூலத்தில் உள்ளதை உள்ளபடி எடுத்தியம்புகிறார். இந்நூலில் வரும் கவிப் போக்குகளைத் தமிழ் இராகங்களுக் கேற்ப மொழி பெயர்த்திருக்கிறார். இது இந்நூலின் முதற் பங்கு. இந்நூல், சுவிசேஷ பிரபல்லியமிசுன் சங்கத்தாரால் (S. P. C. K.) 1793ல் தமிழில் முதலாவதாக அச்சிடப் பட்டதென்று அறிகிறோம். இந்நூல் முழுவதும் 1853-ல் யாழ்ப்பாணம் மானிப்பாய் அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப் பட்டிருக்கிறது. viii. 256/1911/I.

O31,3

பாண்டிய நாடார், மதுரை

2354. i. வித்தியாதரன் : முதற் பதிப்பு ; ii. ஏ. பாண்டிய நாடார் ; சச்சிதானந்தம் பிரஸ், விருதுபட்டி ; iii. ஜூன், 1913 ; iv. உ. ப. 2+94+1 ; v. 21×14 செ. மீ.; vi. 0–12–0 ; vii. உலக வாழ்க்கைக்கு இன்றியமையாத கல்வியின் பெருமை, செல்வத்தின் சிறப்பு, ஒற்றுமையின் பயன் முதலிய பலவற்றைக் குறிக்கோளாகக் கொண்டு அமைந்தது. அதோடு இறையன்பு அரசப் பற்று, ஆகியவற்றையும் வற்புறுத்திக் கூறுவது. ஐந்தாம் சார்சு அரசரை வாழ்த்துவதுடன் முடிகிறது. ஒன்பது அத்தியாயங்கள் கொண்டது. மத போதனையைப்பற்றி எச்சரிக்கை - என்னும் சுதேசமித்திரன் வெளியீடு இதன் இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறது. viii. 682/1913/II.

O31,3

பாலசரஸ்வதி தேவ குஞ்சரியம்மாள், திரிசிரபுரம்

2355. i. மங்களாம்பாள் : இரண்டாவது பதிப்பு ; ii. எஸ். ஜி. ஐயர் அண்டு கம்பெனி, திருவல்லிக்கேணி, சென்னை; சச்சிதானந்த பிரஸ் ; கோமளீஸ்வரன்பேட்டை, சென்னை; iii. செப்டம்பர், 1911 ; iv. உ. ப. 2+164 ; v. 18×12 செ. மீ.; vi. 0–8–0 ; vii. இந்நவீனம் பதினாறு அத்தி யாயங்களைக் கொண்டது. இது முதலில் செய்தித்தாள் வாயிலாக வெளியிடப்பட்டது. பின்னர் நூல் வடிவில் ஆசிரியர் இதனை வெளியிட்டிருக்கிறார். இதில் இறைவனின் சிறப்பு, கற்பு நிலை, பக்தி நெறி, கணவன் மனைவி பற்று நல்லோர் தீயோரியல்பு, பொறுமை, பெண்டிர் அன்பு, முன்னோர் பற்று, நட்பு, முதலிய பல அறங்கள் அடங்கி இருக்கின்றன. viii. 259/1911/IV

O31,3

பாலசுந்தர முதலியார், டபிள்யூ. டி.

2356. i. சந்திரானனு : முதற் பதிப்பு ; ii. ஆர். வெங்கடாசலம் அண்ட் கம்பெனி, சென்னை ; பாரிஜாத பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1912 ; iv. உ. ப. 1+100 ; v. 18×13 செ. மீ. ; vi. 0-5-0 ; vii. கணவன் மனைவியர் காதலின் மேன்மையை விளக்குவது ; பன்னிரண்டு அத்தியாயங்கள் கொண்டது. ஒரு பெண் தனக்கு அமையும் கணவனது இயல்புகளை நன்கு தெரிந்து காதலிப்பதே சிறந்தது என்பதை எடுத்துக் காட்டுகிறது. ஒரு சில பாடல்களும் இடையிடையே கொடுக்கப்பட்டிருக்கின்றது. viii. 795/1012/I.

O31,3

2357. i, புவனசுந்தரி : முதற் பதிப்பு ; ii. ஆர் வெங்கடாசலம் அண்டு கம்பெனி, சென்னை ; ஸ்ரீ பாரிஜாத பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1912 ; iv. உ. ப. 67 ; v. 18×13 செ. மீ. ; vi. 0-4-0 ; vii. தனது விருப்பத்திற்கு மாறாக மணந்த கணவனிடமிருந்து தனது காதலின் குறிக்கோளை அடைந்த ஒரு காதலியின் வரலாற்றை விவரிப்பது. அந்த நாட்டில் நிகழ்ந்த உள்நாட்டுப் போரைப் பற்றியும் விவரிக்கிறது. பன்னிரெண்டு அத்தியாயங்கள் கொண்டது. viii. 723/1912./IV-

O31,3

பாலராஜம் பிள்ளை, பெ. சூ.

2358. i. அங்கத்தை மெச்சிப் பங்கமடைந்த மேனுமினுக்கி ; முதற் பதிப்பு ; ii. என். முனிசாமி முதலியார் ; சித்தி விநாயகர் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1914 ; iv. உ. ப. 88 ; v. 22×14 செ. மீ. ; vi. 0-8-0 ; vii. இந்தக் கற்பனைக் கதையில் ஆணவங்கொண்ட ஓர் இளவரசி தன் அழகை மிகைப் படுத்திக்கொண்டிருந்த காரணத்தினால் அடைந்த இன்னல்கள் விளக்கப்பட்டிருக்கின்றன. ஐந்து கதைகள் உள்ளன. இடையிலேயே சிற்சில வேடிக்கைப் பாடல்களும் உள்ளன ; பாங்கி மேனுமினுக்கி தன் கற்பு நிலை கழறுதல் பற்றிய நொண்டிச் சிந்துப் பாடல்களும் உள. viii. 25/1914/IV.

O31,3

2359. i. புஷ்பகாந்தி என்னும் பூவையர் பூஷணம் : முதற் பதிப்பு ; ii. எம். சரவண முதலியார், சென்னை ; முரஹரி பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1914 ; iv. உ. ப. 96; v. 22×14 செ. மீ. ; vi. 0-8-0 ; vii. இந்து சமுதாயத்தில் பெண்களுக்குக் கொடுக்கப்பட வேண்டிய உரிமையை இந்நூல் விவரிக்கின்றது. பெண்கள் குடும்பச்சீர் உடையவர்களாய்க் கண

வினையும் குழந்தைகளையும் காத்து நல்வாழ்வு, வாழ வழி காட்டுகிறது. "பெண்டிர் ஒழுக்கப் பிரசங்கம்" என்னும் பகுதி பெண்களுக்கு என அமைந்த அறநெறிக் கோவையாக அமைந் துள்ளது. இருபது அத்தியாயங்கள் கொண்டது இந்நூல். viii. 218/1914/II.

O31,3

பாலவேங்கட பங்காருசாமி நாயுடு, ஸி. பி.

2360. i. கிருஷ்ணஷ்ட கல்யாணம் : முதற் பதிப்பு ; ii. ஸி. பி. பாலவேங்கட பங்காருசாமி நாயுடு, ராமநிலைய விவேகாநந்த அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1912 ; iv. உ. ப. 6+218 ; v. 18×12 செ. மீ. ; vi. 1–0–0 ; vii. பாகவதத் தின் தசமச்கந்த சாரமாக உள்ளது இந்நூல், உலகத்தாருக்கு எண்வகைப் பேறுகளைக் கொடுக்கும் எட்டு இலக்குமிகள் கண்ண பெருமானை மணந்த வரலாறுகளைக் கூறுவது. யாவரும் எளிதில் உணரும் பொருட்டு உரை நடையில் உரையாடல் வடிவில் எழுதியுள்ளார். ஒவ்வொரு கதையையும் பல காட்சிகளாகப் பகுத்து அமைத்துள்ளார். கே. ராசாராவு என்பவரால் வட மொழியிலிருந்து மொழி பெயர்க்கப்பட்ட சுலோக வியாக்கியான மும், "ஸ்ரீ கிருஷ்ண பாலலீலையும்" இதனுடன் சேர்த்து வெளியிடப்பெற்றிருக்கிறது. viii. 748/1912/III.

O 31,3

பாலாம்பாள், வி.

2361. i. சாணக்ய சாகஸம் என்னும் சந்திரகுப்த சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. எம். கோபாலகிருஷ்ணையர், மதுரை ; விவேகபாநு பிரஸ், மதுரை ; iii. பிப்ரவரி, 1915 ; iv. உ. ப. 192 ; v. 22×14 செ. மீ. ; vi. 1–0–0 ; vii. தன் சூழ்ச்சியால், மகத நாட்டைச் சேர்ந்த நந்தர்களை அழித்து, சந்திரகுப்த மௌரியனை அரசனாக்கிய சாணக்கியனைப் பற்றிய வரலாற்றுப்புதினம். மதுரை கோபால கிருஷ்ணையர், ஆர். எஸ். நாராயணசாமி அய்யர் ஆகியோர் இதற்கு முன்னுரை எழுதியுள்ளனர். "முத்ரா ராட்சம்", "பிரசண்ட சாணக்கியம்" என்னும் வடநூல்களும், "முத்ராமஞ்சுசம்" என்ற கன்னட நூலும், இந்நவீனம் எழுதுவதற்கு துணை புரிந்த முதல் நூல்களாம். அக்கால எழுத்தாளர் ஒரு சிலரைப் பற்றிய குறிப்பும், ஆசிரியை இந்நூலை ஆக்கிய விதம் பற்றிய சில செய்திகளை முன்னுரையில் வெளிப்படுத்தியுள்ளார். viii. 682/1915/I.

O31,3

**பிரசன்ன ஸ்ரீநிவாசன்**

2362. i. கைமன் : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1914 ; iv. உ. ப. 36 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–1–6 ; vii. ஆங்கிலக் கவிஞர் சான் டிரைடன் எழுதின கைமனும் இபிசுனியாவும் (cymon sphigenia) என்ற கதையின் தமிழ்மொழிபெயர்ப்பே இந்நூல். viii. 466/1914/IV..

O31,3

2363. i. புதிய வனத்துக் குழந்தைகள் : ii. முதற் பதிப்பு ; குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1915 ; iv. உ. ப. 243; v. 19×13 செ. மீ. ; vi. 0–10–0 ; vii. பிரடெரிக் மாரியட் எழுதிய நாவலான "தி சில்ரன் ஆப் தி நியூ பாரஸ்ட்" என்பதன் தமிழாக்கமே இந்நூல். 30 அத்தியாயங்கள் கொண்டது. இது ஆங்கில நாட்டு வரலாறு தழுவியதோர் வரலாற்று நவீனம். viii. 717/1915/I.

O31,3

**பெரியசாமி பிள்ளை, வா. வ.**

2364. i. இராஜாத்தி அல்லது எட்டு வருஷப் பிரிவு : முதற் பதிப்பு ; ii. எஸ். மூர்த்தி அண்டு கம்பெனி, கபாலி அச்சுக் கூடம், சென்னை ; iii. ஜூன், 1915 "; iv. உ. ப. 219 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–12–0 ; vii. இரண்டு படங்களடங்கிய ஒரு துப்பறியும் புதினம். இரங்கூனில் வெளியான இரஞ்சித போதினி என்னும் இதழ் வாயிலாய் வெளியிட்டுப் பின் நூலாகத் தொகுத்துள்ளனர். எட்டு ஆண்டுகள் சொல்லுதற் கரிய துன்பங்களை அடைந்து முடிவில் தான் விரும்பிய அத்தானையே மணக்கும் மங்கையெழிலாள் ஒருத்தியைப்பற்றிய நவீனம். கதையின் இடையிடையே கருத்தமைந்த பழம்பெரும் செய்யுட்கள் சிலவற்றை மேற்கோள் காட்டியிருக்கிறார் ஆசிரியர். 17 அத்தியாயங்கள் கொண்டது. எஸ். பி. சி. கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் இதற்குச் சாத்துக்கவி கொடுத்துள்ளார். viii. 874/1915/II.

O31,3

**பொன்னல், ஒய். ஜி.**

2365. i. பிசாசை வென்ற வீரன் : முதற் பதிப்பு ; ii. மினர்வா பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1914 ; iv. உ. ப. 40 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–1–0 ; vii. "பாவத்தின் பிடியிலிருந்து இயேசு" எங்ஙனம் மீட்க முடியும் என்பதை விளக்

கும் சிறிய கதை. பத்து அதிகாரங்கள் கொண்டது. இறை வழிபாட்டுப் பாடல்கள் ஐந்து, நூல் இறுதியில் இடம் பெற்றுள்ளன. நூலாசிரியரின் உருவப் படமும் முகப்பில் உள்ளது. viii. 106/1914/III.

O31,3

2366. i. **போலி ராஜகுமாரன் :** முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1912 ; iv. உ. ப. 39 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–1–6 ; vii. இது ஒரு பாரசீகக் கதையின் தழுவல். இளவரசனாக நடித்த ஓர் தையற்காரனின் கதை. இதன் இறுதியில் "இடையன் வர்த்தகனானது" "புத்திக்குச் சம்மானம்" என்னும் இரண்டு வேடிக்கையான சிறு கதைகளும் உள்ளன. viii. 699/1912/II.

O31,3

**மரியசூசை முதலியார், பொன்.**

2367. i. ரோஜாலி ; ii. லாலி எலக்டிரிக் பிரிண்டிங் பிரஸ், தஞ்சாவூர் ; iii. 1915 ; iv. உ. ப. 196 ; v. 16×11 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. காதலின் வெற்றியை எளிய இனிய நடையில் விளக்கும் ஒரு நவீனம். 19 அத்தியாயங்கள் கொண்டது. எளிய நடையில் எழுதப்படும் இனிய கதையைப் படிக்க விரும்புவோர் சிலராயிருப்பினும், அவர்களுக்காகவே, எளிய நடையில் இக்கதையை வெளியிடத் துணிந்தேன் என்று ஆசிரியர் தமது முகவுரையில் குறித்துள்ளார். இதனால் அக்கால உரைநடையின் தன்மை பற்றிய பொதுக்கருத்து புலனாகும். viii. 25/1915/ IV.

O31,3

2368. i. **மரியாதை ராமன் கதை :** முதற் பதிப்பு ii. லலிதா விலாஸ புஸ்தகசாலையார், மதராஸ் ; கமர்ஷியல் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1913 ; iv. உ. ப. 1+40 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. மரியாதை ராமன் என்னும் நீதிபதியிடம் வந்த சில வழக்குகளும் அவற்றில் அவர் கூறிய தீர்ப்பும் பற்றிக் கூறும் கதைகளின் தொகுதி இந்நூல். இருபத்தொரு கதைகள் இதில் உள்ளன. சிறுவர் சிறுமிகளும் விரும்பிப் படிக்கத் தகுந்த எளிய நடையில் உள்ளன. இதன் இறுதியில் "லலிதா விலாச புத்தகசாலையார்" வெளிப்படுத்தியுள்ள புதினங்களின் பட்டியல் அமைந்துள்ளது. viii. 965/1913/I.

O31,3

மலைமகள்

2369. i. முரளீதரன் : முதற் பதிப்பு ; ii. விவேக போதினி ஆபீஸ், மதராஸ் ; பி. ஆர். ராம அய்யர் அண்டு கோ, மதராஸ் ; iii. அக்டோபர், 1914 ; iv. உ. ப. 82 ; v. 22×14 செ. மீ. ; vi. 0-10-0 ; vii. இது ஒரு சமூக நவீனம். செல்வ நிலையில் உள்ள இளம் பெண் எவ்வாறு குறிப்பிடத்தக்க பொறுமையினாலும், கணவன்பால் கொண்ட பற்றினாலும் சிறப்பெய்தினாள் என்பதை விளக்கும் நவீனம். சென்னை மெரினாக் கடற்கரையின் படம் ஒன்றும், எழும்பூர் புகைவண்டி நிலையத்தின் படம் ஒன்றும் இடம் பெற்றுள்ளது. 17 அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. viii. 648/1914/IV.

O31,3

2370. i. மறுபடி முயற்சி செய் : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1913 ; iv. உ. ப. 32 ; v. 19×13 செ. மீ. ; vi. 0-1-0 ; vii. "மறுபடி முயற்சி செய்" முதலிய ஆறு கதைகளின் தொகுதி. சிறுவர்க்காக எழுதப்பெற்றது. அறத்தையும் நல்லொழுக்கங்களையும் கற்பிப்பது. viii. 174/1913/IV.

O31,3

மஹேசகுமார சர்மா (மொ. து.)

2371. i. சந்திரசேகரன் : இரண்டாம் பதிப்பு ; ii. ஜெனரல் சப்ளைஸ் கம்பெனி, கார்டியன் பிரஸ், சென்னை ; ii. ஜனவரி, 1912 ; iv. உ.ப. 2+226 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. வங்காள மொழியில் பங்கிம் சந்திர சட்டோபாத்தியாயர் இயற்றிய நவீனத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு. ஆறு பாகங்களையும், முப்பத்து ஏழு அத்தியாயங்களையும் கொண்டது. மூல நூலாசிரியரைப் பற்றிய வாழ்க்கைக் குறிப்பும் முதலில் உள்ளது. புதினத்தின் இடையில் வரும் செய்யுட் பகுதியைத் தமிழ் மொழிபெயர்ப்பிலும் பாடல் வடிவில் ஆசிரியர் அமைத்துள்ளார். viii. 671/1912/I.

O31,3

மாணிக்கவாசகப் பிள்ளை, மா.

2372. i. மனோரஞ்சிதம்—பாகம் II: முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1914 ; iv. உ.ப. 420 ; v. 18×13 செ.மீ. ; vi. 1-0-0 ; vii. இந்த நூல், இரண்டாவதும், இறுதிப் பகுதியும் ஆகும். இதில் 14 ஆம் அதிகாரம் தொடங்கி, 26-ஆம் அதிகாரம் வரை உள்ளன.

"ஒரு மடாதிபதி மகளின் வரலாறு" என்பது இதற்குரிய மற்றொரு பெயர். ஒரு சில பாடல்களும் இடையிடையே அமைந்துள்ளன. ஆசிரியரின் உருவப் படமும் முகப்பில் தரப்பட்டிருக்கிறது. viii. 983/1914/IV.

O31,3

மாதவராய முதலியார், அ. ரா

2373. i. கனகரத்தினம் அல்லது கற்பை காத்தும் காதலனை இழந்த கன்னி : முதற் பதிப்பு ; ii. என். முனுசாமி முதலியார், சென்னை ; சுதேசமித்திரன் பவர் அச்சுக் கூடம், சென்னை; iii. டிஸம்பர், 1914 ; iv. உ.ப. 168 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. துன்பியல் புதினம். இதில் காதலனையே கணவனாகக் கற்பனை செய்து, தன் பெண்மையை காக்கப் பல துன்பம் எய்தி முடிவில் வென்றும், தன் காதலனை இழக்கும் ஒருத்தியின் துன்பியல் கதை. பதினெட்டு அத்தியாயங்கள் கொண்டது. தற்காலத்திய இந்து மத ஒழுக்கங்களை யொட்டிக் கற்பனையாக எழுதப்பெற்றது. viii. 852/1915/II.

O31,3

2374. i. மதிசூதனன் : முதற் பதிப்பு ; ii. என். முனுசாமி முதலியார் ; சுதேசமித்திரன் பவர் அச்சுக் கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1914 ; iv. உ.ப. 196 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. மதிசூதனன் எனும் படைத்தலைவரின் பட்டறிவினை விளக்கும் கதை. அவனது வாழ்க்கைப் போராட்டங்களை விளக்கும் நவீனம். கதையின் இடையிடையே பழங்காலச் செய்யுட்களிலிருந்து கருத்துக்கள் விளக்கப்பட்டுள்ளன. 15 அத்தியாயங்கள் கொண்டது. viii. 850/1915/II.

O31,3

2375. i. ஜெகதல ஜெகஜ்ஜோதி : முதற் பதிப்பு ; ii. வி.எம். ஸ்ரீநிவாச முதலி, சென்னை ; சுதேசமித்திரன் ஸ்டீம் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1913 ; iv. உ.ப. 3+126 ; v. 19×12 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. "துன்புற்றுச் சுகானந்தம் எய்திய ஜகதல ஜெகஜ்ஜோதி" என்பது இதன் முழுப்பெயர். உரை நடை முறையில் நாடகப் பாங்காக இக்கதை அமைந்துள்ளது. இடையே சில பழம் பாடல்களும் சேர்க்கப் பட்டிருக்கின்றன. கதைத் தலைவனின் வீரச் செயல்களை இந் நூல் விவரிக்கின்றது. viii. 598/1913/IV.

O31.3

**மாதவராவ் முதலியார், எஸ். எல்.**

2376. i. சிவசாமி அல்லது நாட்டுபுறத்தான் நகரப் பிரவேசம் : முதற் பதிப்பு ; ii. எஸ். எல். மாதவ ராவ், சென்னை ; பிரஸிடென்சி பிரஸ், மதருஸ் ; iii. நவம்பர், 1914. iv. உ.ப. 64 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii; கல்வி கற்பதற்காக நகரத்தை நோக்கி வந்த சிற்றூர்ப் பகுதியைச் சார்ந்த மாணவனைப் பற்றிய வேடிக்கையான கதை. இந்த ஆசிரியர் "சிங்கை இந்திய நேசன்", "பிறுங்கு ஞான சாரியன்" என்னும் இதழ்களின் நிறுவனர் ஆவர். viii. 660/1914/IV.

O31, 3

2377. i. சிவசாமி II அல்லது நாட்டுப் புறத்தான் நகரவாசம் ; ii. எஸ். துரைசாமி முதலியார் ; விவேகானந்த அச்சுக் கூடம், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 62 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. கார்வேட்டி நகரமென்னும் சிற்றூர்ப் பகுதியிற் பிறந்தவனுகிய சிவசாமி, அவ்வூரினின்று பட்டணத்திற்கு வரும் போது முதலில் பல துன்பங்களையடைந்து, பள்ளிக்குச் சென்று, நகரியல் நுகர்ந்து துணிவு கொண்டு, பின்பள்ளியில் அவன் காட்டும் தன்மையையும் தேர்வில் தேர்ந்து உயர்ந்து, சிறந்த அலுவல் மேற்கொள்வதும் சிற்றூரிலிருந்து வந்த இவன் சிற்றூரைச் சார்ந்தவர்களை எள்ளி நகையாடுவதும், மணம் செய்து கொண்டு இன்பத்துடன் வாழ்ந்து கொண்டிருப்பதும் இவை போன்ற செய்திகள் பிறவும் விளக்கப்பட்டிருக்கின்றன. viii. 10/1915/IV.

O31, 3

2378. i. மாயத் தாமரை : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்ட் ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1912 ; iv. உ. ப. 51 ; v. 19×12 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. விராதன் என்ற பெயருடைய இளவரசன் ஒரு மாயத் தாமரையின் துணை பெற்று அதனுல் பல வியத்தகு செயல்களை நிகழ்த்தியது பற்றிய கதை ; எட்டு அத்தியாயங்கள் கொண்டது ; viii. 7/1913/I.

O31, 3

**மார்ஸ்டன், ஈ.**

2379. i. இந்து தேச கதா மஞ்சரி : முதற் பதிப்பு ; ii. மாக் மில்லன் அண்ட் கம்பெனி ; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1913 ; iv. உ. ப. 5+252 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. இந்திய வரலாற்றில் சிறப்பிடம் பெறுபவர்களின் வரலாறுகளையும், அவர்கள், காலத்தில் நிகழ்ந்த போர்கள், பிற செய்திகள் ஆகியவற்றையும் கதை

[illegible] அமைத்துக் கூறும் நூல். இது ஆங்கில மொழியில் எழுதப் பெற்ற "இந்து தேசச் சரித்திரக் கதைகளின் மொழி பெயர்ப்பு. 54 கதைகள் இருக்கின்றன. இவை பழங்காலம் தொட்டு இந்தியா இருந்த நிலைமையையும், ஒருவர் பின் ஒருவ்ராக வந்த பல இனத்தாரைப் பற்றியும், வரலாற்றையும், பண்பாடு முதலியவற்றையும் விரித்து உரைப்பதாகும். படங் களும் பல உள்ளன. viii. 838/1913/II.

O31,3

மார்ஸ்டென் இ. & கலியாணசுந்தரம் ஐயர், எஸ்.

2380. i. ஐந்தாவது கதா வாசக புஸ்தகம்; ii. மாக்மில்லன் அண்ட் கம்பெனி லிமிடெட்; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், சென்னை; iii. ஜூன், 1913; iv. உ. ப. 5+138; v. 19×13 செ.மீ.; vi. 0–5–0; vii. சிறுவர்க்கேற்ற முப்பத்து எட்டுக் கதைகள் அடங்கிய நூல். ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு அறநெறியைக் கற்பிக்கிறது. நூலின் முதலிலுள்ள அட்டவணை யில் ஒவ்வொரு கதைக்கும் பொருத்தமான அறத் தொடர்கள் எழுதப்பட்டிருக்கின்றன. ஈசாப் கட்டுக் கதைகள், பாரதம், பஞ்ச தந்திரம் என்னும் நூல்களிலிருந்து எடுக்கப்பட்டனவே இக் கதைகள். இடையிடையே செய்யுட்களில் அமைந்த கதைப் பாட்டுக்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. பலவகையான உருவப் படங்களும் இதில் உள்ளன. viii. 805/1913/I.

O31,3

2381. i. மாரிக் காலக் கதை: முதற் பதிப்பு; ii. ஸி. குமார சாமி நாயுடு அண்டு சன்ஸ்; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1914; iv. உ.ப. 32; v. 19×13 செ.மீ.; vi. 0–1–0; vii. செகப்பிரியர் நாடகத்திலிருந்து லேம் பால் எண்பவரால் கதையாக்கப் பெற்ற ஆங்கில நூலின் தமிழ்ச் சுருக்கம். ஆங்கில நாடகக் கதைக் கொத்து வரிசை யில் இது மூன்றுவது கதையாகும். viii. 975/1914/III.

O31,3

மீனாட்சி சுந்தரம்பாள்

2382. i. ஜயசீலன்: முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ்; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1913; iv. உ. ப. 8+318; v. 18×13 செ.மீ.; vi. 1–0–0; vii. இந்நவீனம் சமுதாயச் சீர்திருத்தத்தை விளக்கு வது. இதனுள் பிராமண குடும்பத்தில் காணும் சில குறை பாடுகளும் பிராமணர் மேற்கொள்ள வேண்டிய சில சீர்திருத் தங்களும் இடம் பெற்றிருக்கின்றன: "கதையுள் வரும் பெரும் [illegible]ான செய்திகள் நான் நேரில் கண்டவை. ஆகையால், வாசிப்போருக்கு இதில் இயற்கைக்கு மாறுக யாதும்

தோன்றுது என்று நம்புகிறேன்" என்று ஆசிரியர் முகவுரை யில் கூறியுள்ளார். 36 அத்தியாயங்கள் கொண்டது. இறுதி அத்தியாயம் "ஆங்கில இந்திய ஐக்கியம்" என்று உள்ளது. viii. 383/1913/I.

O31,3

2383. i. ஜயசீலன் : இரண்டாம் பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, மதராஸ் ; கார்டியன் பிரஸ், சென்னை; iii. 1915 ; iv. உ. ப. 318 ; v. 19×13 செ.மீ.; vi 1–0–0 ; vii. பெண் கல்வியைப்போற்றி அத்தகைய கல்வியினுல் குடும்பத்தில் பெண்கள் நிலையைப் உயர்த்தும் கருத் தோடு எழுதிய சமூக நவீனம் ; 36 அத்தியாயங்கள் கொண் டது. இதனுள் பிராமணக் குடும்பத்திற் காணும் சில குறை பாடுகளும் பிராமணர் மேற்கொள்ள வேண்டிய சில சீர்திருத் தங்களும் இடம் பெற்றிருக்கின்றன. "லேடி பென்சன் என்பார் இந்நூலுக்கு முகவுரை எழுதியுள்ளார்கள். viii. 825/1915/IV.

O31,3

2384. i. **முகமதியக் கதைகள் ;** ii. லாங்மன்ஸ் கிரீன் அண்ட் கம்பெனி ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ. ப. 60 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. இசுலாமியக் கதைகள் ஆறு இதில் அடங்கியுள்ளன. "லாங் மன்ஸ் இந்தியக் கதைகள்" வரிசையில் இது ஒன்று. படங் களுடன் கூடியது. viii. 298/1915/IV.

O31,3

**முத்துசாமி ஐயர், எம்.**

2385. i. அர்ச்சுனன் தீர்த்த யாத்திரை : முதற் பதிப்பு ; ii. ஸி. குமாரசாமிநாயுடு அண்டு ஸன்ஸ் ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1914 ; iv. உ.ப. 32 ; v. 19×13 செ. மீ. ; vi. 0–1–6 ; vii. பாண்டவர் கரந் துறை வாழ்வு காலத்தில் அருச்சுனன் மேற்கொண்ட தெய்வ நீராடற் பயணத்தை விளக்கும் பாரதக் கதை. இந்த இதி காசக் கதையை உரை நடையில் அமைத்துள்ளார் ஆசிரியர். ஆறு அத்தியாயங்களாகப் பகுத்து எளிய முறையில் இதனை எழுதியுள்ளார். பாடல்களும் ஒரு சில இடையிடையே உள்ளன. சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரியின் தலைவராயிருந்த எச்.எஸ். டன்கன் துரைக்கு ( H. S. Duncen ) இந்நூலை ஆசிரியர் காணிக்கையாக்கியுள்ளார். viii. 977/1914/III.

O31,3

2386. i. திரௌபதியின் துயரம் : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன பிரஸ் ; சென்னை ; iii. நவம்பர், 1914 ; iv.

உ. ப. 72 ; v. 19×13 செ. மீ. ; vi. 0—2—6 ; vii. பாண்டவர்கள் துரியோதனனைச் சார்ந்தோரிடம் சூதாடித் தோற்றதன் விளைவாகத் திரௌபதியடைந்த துயரத்தை விளக்கும் பாரதக் கதையே இச் சிறு நூல். viii. 465/1914/IV.

O31,3

**முத்துசாமி அய்யர், வே.**

2387. i. பத்மினி : முதற் பதிப்பு ; ii. வே. முத்துசாமி ஐயர், விக்டோரியா அச்சுக்கூடம், வேலூர் ; iii. மார்ச்சு, 1913 ; iv. உ. ப. 7+146+1 ; v. 18×13 செ. மீ. ; vi. 0—12—0 ; vii. தோட்டக் காடு இராம கிருஷ்ண பிள்ளை ஆங்கிலத்தில் எழுதியுள்ள பத்மினி என்னும் நூலின் கதைப் போக்கைத் தழுவி எழுதப்பட்டுள்ளது. இது ஒரு வரலாற்று நவீனம். இதிலுள்ள நிகழ்ச்சிகள் பெரும்பாலும் உண்மையானவை. பதினேழு அத்தியாயங்கள் கொண்டது. கா. நமச்சிவாயம் முதலியார் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். viii. 875/1913/I.

O31,3

2388. i. பத்மினி : இரண்டாம் பதிப்பு ; ii. வே. முத்துசாமி அய்யர், மதுரை ; தமிழ்ச் சங்கத்து முத்ராசாலை, மதுரை ; iii. அக்டோபர், 1914 ; iv. உ. ப. 168 ; v. 18 × 13 செ. மீ. ; vi. 0—12—0 ; vii. திரு. டி. இராமகிருஷ்ண பிள்ளையின் இதே பெயருள்ள ஆங்கில நவீனத்தின் தமிழ் மொழிபெயர்ப்பே இந்நூல். நீதிபதி டி. சதாசிவ அய்யர் முதற் கொண்டு பலர் இதற்குக் கருத்துரை வழங்கியுள்ளனர். திரு. கா. நமச்சிவாய முதலியார் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். பிழை திருத்தப்பட்டியல் ஒன்றும் இதனுள் உள்ளது. கி. பி. 17 ஆம் நூற்றாண்டில் தென்னிந்தியாவில் நிகழ்ந்த வரலாற்றினை அடிப்படையாகக் கொண்டது இந்நூல். viii. 550/1914/IV.

O31,3

2389. i. நன்றியற்ற சண்டாளர் சகவாசம் ; ii. சி. எம். நடேச முதலியார் ; சிவகாமி விலாச அச்சுக் கூடம், சென்னை ; iii. 1915 ; iv. உ. ப. 191 ; v. 21×14 செ.மீ. ; vi. 0—8—0 ; vii. பொறுமையால் விளையும் இன்னலை விளங்கப் புகலும் பல நாட்டாரின் அரிய கதைகள் இந் நூலில் விளக்கப்பட்டிருக்கின்றன. பொறுமைகளின் விளைவுகள் இன்னவென இது விளக்குவதால் தீ நட்பினின்றும் நீங்குவதற்குத்தக்க பெருந்துணை புரிவதாகும். இதில் சேர்த்துள்ள பொருள்கள் பல நூல்களினின்றும் தொகுத்து எழுதப் பெற்றதாகும். viii. 667/1915/IV.

O31,3

**முனுசாமி முதலியார், சிறுமணவூர்**

2390. i. நாரதர் கலகம் — இரண்டாம் பாகம்: இரண்டாம் பதிப்பு; ii. முனுசாமி முதலியார், சிறு மணவூர்; சிவகாமி விலாச அச்சுக் கூடம், சென்னை; iii. டிசம்பர், 1910; iv. உ. ப. 163; v. 21×14 செ.மீ.; vi. 0—6—0; vii. நாரதர் உண்டாக்கிய குழப்பத்தால் நேர்ந்த புராண வரலாறுகள் பலவற்றைத் தொகுத்துத் தருவது. ஆங்காங்கே பொருத்தமான பல மேற்கோள் பாடல்கள் இடையிடையே சேர்க்கப்பட்டுள்ளன. viii. 881/1911/I.

O31, 3

2391. i. நாரதர் கலகம்—மூன்றும் பாகம்: முதற் பதிப்பு; ii. முனிசாமி முதலியார்; சிவகாமி விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1910; iv. உ.ப. 164; v. 21×14 செ.மீ.; vi. 0—6—0; vii. நாரதர் தலையீட்டினுல் ஏற்பட்ட குழப்பங்கள் புராண இதிகாசங்களிலிருந்து எடுத்து எழுதப் பட்டுள்ளன. இதனை ஆசிரியர் நான்கு பகுதியாகக் வெளியிட்டிருக்கிருர் என்று தெரிய வருகிறது. இவற்றுள் அடங்கிய முக்கிய நிகழ்ச்சிகளின் அட்டவணையொன்று இந்நூல் முகப்பிலுள்ளது. viii. 89/1911/I.

O31,3

2392. i. நாரதர் கலகம்: நான்காம் பாகம்: முதற் பதிப்பு; ii. முனிசாமி முதலியார், சிறு மணவூர்; சிவகாமி விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. எப்ரல், 1911; iv. உ. ப. 119; v. 21×14 செ. மீ.; vi. 0—6—0; vii. நாரதர் தொடர்புடைய புராண வரலாறுகளிலிருந்து எடுத்து எழுதப் பெற்றது. அநேக புராணங்களை ஆராய்ச்சி செய்து ஆசிரியர் இந்நூலை ஆக்கியுள்ளார். viii. 414/1911/IV.

O13,3

**மூர்த்தி முதலியார், ச. தா. இரங்கூன்**

2393. i. தியாகராஜன்: முதற் பதிப்பு; ii. முனிசாமிப் பிள்ளை களத்தூர்; ஸ்ரீஜீவரத்ந திரு விநாயக சம்பந்தர் அச்சுக்கூடம், சென்னை; iii. பிப்ரவரி, 1913; iv. உ.ப. 5+182; v. 18×12 செ. மீ.; vi. 0—8—0; vii. கதை வழியாக நற்பண்புகளைக் கற்பிக்கும் ஓர் இனிய தமிழ்ப் புதினம். பன்னிரண்டு அத்தியாயங்கள் கொண்டது. இடையிடையே சில செய்யுட்களும் எடுத்தாளப் பட்டுள்ளன. இதில் கல்வி, அடக்கம், பிறரிடம் அன்பு, நல்லார் கேண்மை, பெண் கல்வி, முதலியன வற்புறுத்திக் கூறப்படுகின்றன. viii. 792/1913/I.

O31,3

**2394.** i. **மூன்று பூதங்கள்** : முதற் பதிப்பு ; ii. வி. குமார சாமி நாயுடு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1913 ; iv. உ. ப. 32 ; v. 19×13 செ. மீ. ; vi. 0—1—0 ; vii. "மூன்று பூதங்கள்", "சின்னத் தம்பியும் பூதமும்", 'வீண் திகில்', என்னும் மூன்று தேவதைக் கதைகள் இதில் உள்ளன. இவற்றுள் மூன்று பூதம் என்பது தண்ணீர், நெருப்பு, நீராவி, என்னும் மூன்றின் வன்மையை புலப்படுத்தும் அறிவியல் தொடர்பான கதை. viii. 173/1913/IV.

O31,3

**மைகேல் அய்யர்**

**2395.** i. பணப்பை—இரண்டாம் பாகம் : முதற் பதிப்பு ; ii. எ. ஆர். ஜான் அய்யர் ; நல்ல ஆயன் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1911 ; iv. உ.ப. 356 ; v. 16×11 செ.மீ. ; vi. 0—6—0 ; vii. இது "நல்ல ஆயன்" எனும் இதழுக்காக எழுதப் பெற்றது. பேராசைக் காரனொருவன் பணத்தையே தெய்வமாக நம்பிக் கொண்டிருந்து பலப்பல குற்றங்கள் புரிந்து, இறுதியில் திருந்தி ரோமன் கத்தோலிக்கனாக மாறி, அமைதியான நல்வாழ்க்கையை நடத்திய வரலாறு, இரண்டாம் பாகத்தில் இருபத்து ஒன்றும் அத்தியாயம் தொடங்கி ஐம்பத்து ஆறும் அத்தியாயத்துடன் கதை நிறைவுறுகிறது. viii. 664/1911/III.

O31,3

**2396.** i. பணப்பை—முதல்பாகம் : இரண்டாம் பதிப்பு ; ii. எ. ஆர். ஜான ஐயர், சென்னை. "நல்ல ஆயன்" அச்சுக் கூடம், சென்னை ; iii. அக்டோபர், 1912 ; iv. உ.ப. 256 ; v. 17×11 செ.மீ. ; vi. 0—5—0 ; vii. பணத்தையே கடவுளாக மதிக்கும் பேராசைக்காரன் ஒருவன் பல குற்றங்கள் புரிந்து, கடைசியில் திருந்தி, ரோமன் கத்தோலிக்கனாக மாறி எளிய வாழ்க்கையை நடத்திய வரலாற்றைக் கூறுவது ; இருபது அத்தியாயங்கள் கொண்டது. சாதி சமூகக் கட்டுப் பாடுகளைப் பற்றியும் படியாதவர் படும் பாடுகள் பற்றியும் விளக்கமாகக் குறித்துள்ளார். viii. 277/1912/IV.

O31,3

**ரங்கசாமி அய்யங்கார், எஸ். வி.**

**2397.** i. நந்தனும் மோகனாங்கியும் : முதற் பதிப்பு ; ii. மானேஜர், ஆக்ஸ் போர்டு யூனிவர்சிடி பிரஸ், சென்னைக் கிளை ; சினிவாச வரதாச்சாரி ஆண்டு கம்பெனி, சென்னை ; iii. மார்ச், 1914 ; iv. உ.ப. 28 ; v. 19×13 செ.மீ. ;

vi. 0—1—3 ; vii. பள்ளி மாணவர்களுக்கேற்ற ஓர் எளிய சிறு கதை ; ஆக்ச்பார்ட்கதைப் புத்தக வரிசையில் இது ஒன்று. ஆங்கிலத்திலுள்ள நூற் பொருளைத் தழுவி அமைந்துள்ளது, viii. 342/1914/II.

O31,3

2398. i. பாம்பிய நகரத்தின் அந்திய காலம் : முதற் பதிப்பு ; ii. எஸ் வி. ரங்கசாமி அய்யங்கார், சென்னை ; ஆகஸ்பார்ட் யுனிவர்சிடி பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1914 ; iv. உ.ப. 179 ; v. 18×13 செ. மீ. ; vi. 0—8—0 ; vii. "லார்ட் லிட்டன்" எழுதிய "பாம்ப் பேயின் அந்திய காலம்" (Last Days of Pompeii) என்ற நூலின் தமிழாக்கமே இந்நூல். ஐந்து காண்டங்களும் அவற்றுள் பல அத்தியாயங்களும் ஆக இது அமைந்துள்ளது. viii. 909/1914/IV.

O31,3

**ரங்கசாமி ஐயங்கார், எஸ்.**

2399. i. பவளக் கொடி : முதற் பதிப்பு : ii. எஸ். ரங்கசாமி அய்யங்கார், சென்னை ; டி. வி. சி. பிரஸ். சென்னை ; iii. ஜனவரி, 1914 ; iv. உ. ப. 107 ; v. 18×13 செ. மீ. ; vi. 0—6—0 ; vii. பவளக் கொடி என்னும் மங்கையைப் பற்றிய கதை. புகழேந்திப் புலவர் பாடிய பவளக் கொடி மாலை என்னும் செய்யுள் நூலைத் தழுவி யது. இடையிடையே சில உயர்ந்த கருத்துக்களையும், அழகிய கற்பனைகளையும் சேர்த்து எழுதப்பட்டிருக்கிறது. viii. 493/1914/I.

O31,3

**ரங்கநாத ராவ், வி.**

2400. i. பால ராமாயணம் : முதற் பதிப்பு ; ii. வி. ரங்கநாத ராவ், சென்னை ; ஸ்ரீ வாணி பூஷணம் பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1914 ; iv. உ.ப. 1+56 ; v. 19×13 செ.மீ. ; vi. 0—4—0 ; vii. மராட்டி மொழியில் வாசு தேவ கோவிந்த ஆப்டே என்பவர் எழுதிய நூலி லிருந்து தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது. இராமாயணத் திலுள்ள சிறப்பு நிகழ்ச்சிகளைக் குழந்தைகளுக்காகச் சுருக்க மாக எடுத்துரைப்பது. இராமாயணத்தின் ஏழு காண்டங் களின் வரலாறும் இதில் தொகுக்கப்பட்டிருக்கிறது. நான்கு படங்களும் உள்ளன. viii. 3/1914/II.

O31,3

**ரங்கராஜு, ஜே. ஆர்.**

2401. i. மோஹன சுந்தரம் : முதற் பதிப்பு ; ii. ஜே. ஆர். ரங்கராஜு பிரதர்ஸ், சென்னை ; கார்டியன் அச்சுக் கூடம் ; iii. பிப்ரவரி, 1911 ; iv. உ.ப. 180 ; v. 22×14 செ. மீ. ; vi. 0—12—0 ; vii. சித்திரப் படங்களுடன் கூடிய ஒரு துப்பறியும் இனிய தமிழ்ப் புதினம். இதன் ஆசிரியர் இராதாம்பாள், சந்திர காந்தா என்னும் புதினங்களை எழுதிப் புகழ்பெற்றவர். கதை மாந்தர்க்குத்தக்க உரையாடல்களை இவ்வாசிரியர் மிகுதியாகக் கையாண்டிருக்கிறார். viii. 713/1911/I.

O31,3

**ராம், எ. பி.**

2402. i. புத்திமானே பலவான் : முதற் பதிப்பு ; ii. எஸ். ஜி. அய்யர் அண்டு கோ., கல்வி பிரகாசம் பிரஸ், சென்னை ; iii. நவம்பர், *1911*; iv. உ.ப. 160 ; v. 18×12 செ.மீ. ; vi. 0—6—0 ; vii. "புத்திமானே பலவான்" என்னும் பழமொழியை மெய்ப்பிக்கும் ஒரு நவீன கதை. பதின் மூன்று அத்தியாயங்கள் கொண்டது. ஒரு பேராசைக்காரன் தன்னுடைய அடிமையினால் திருந்திய கதையை விவரிப்பது இந்நூல். viii. 170/1912/I.

O31, 3

**ராமஸ்வாமி அய்யர், எஸ். ஏ.**

2403. i. அமீர்ஸிங் ; ii. எஸ் ஜி. அய்யர் அண்ட் கம்பெனி; சுதேசமித்திரன் பவர் பிரஸ் ; iii. டிஸம்பர், 1914 ; iv. உ.ப. 223 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. கிழக்கிந்தியக் கம்பெனியார் வருகைக்குப் பிறகு இந்தியச் சிற்றரசர்களின் முறையற்ற ஆட்சி எவ்வாறு முடிவடைந்தது என்பதை விளக்கிடும் நவீனம். அமீர்சிங் எனும் சிற்றரசனுக்கு துன்பம் ஏற்பட்டதாகவும் இறுதியில் கிழக்கிந்திய கம்பெனியாரால், இழந்த நாட்டை மீண்டும் பெற்றதாகவும் கதை செல்கிறது. ஆறு அத்தியாயங்கள் கொண்டது. viii. 256/1915/II.

O31,3

**ராமஸ்வாமி ஐயர், வி. எஸ்.**

2404. i. இந்திய மாயா விநோதக் கதைகள் : முதற் பதிப்பு ; ii.. வி. எஸ். ராமசுவாமி ஐயர் ; கமர்ஷியல் அச்சுக் கூடம், சென்னை ; iii. ஜூன், 1912 ; iv. உ.ப. 2+96 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. இது ஐந்து தேவதைக் கதைகளின் தொகுப்பு. சித்திரப் படங்களுடன்

கூடியது. "கார்னேசன் தர்பார் வெளியீட்டில் இது இரண்டாவது; இதிலுள்ள கதைகளாவன இரண்டு இராஜபுத்திரிகள், லிங்கோவும் ராக்ஷதனும், மத்ஸ்ய ராஜன், பேசும் ஆமை, ஜோதிமதி" ஆகியனவாம். viii. 947/1912/II.

O31,3

**ராமஸ்வாமி ஐயர், எஸ். ஏ., மாயவரம்**

2405. i. லீலாவதி : முதற்பதிப்பு ; ii. எஸ். ஜி. அய்யர் அண்ட் கம்பெனி, சென்னை ; பி. ஆர். ராமய்யர் அண்டு கோ., சென்னை ; iii. ஜூன், 1912 ; iv. உ.ப. 226 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–10–0 ; vii. "நல்ல குணங்கள் நற்பயனை அளிக்கும்" என்னும் பழமொழியை விளக்கும் ஒரு சமூகக் கதை. எழு அத்தியாயங்கள் கொண்டது. எளிய பேச்சு நடையில் அமைந்துள்ளது. viii. 70/1912/III.

O31,3

**ராஜகோபால அய்யங்கார், வி.**

2406. i. மல்லிகா என்ற மதன மனோஹரி : முதற்பதிப்பு ; ii. வி. ராஜகோபால் அய்யங்கார் ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. மே, 1911 ; iv. உ.ப. 32 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. "க்யூபிட்டும் சைகியும்" என்னும் கிரேக்கக் கதையின் தழுவலாகும் இந்நூல். நம் நாட்டுப் புராணக் கதைகளுக்கு ஏற்றவாறு ஆங்காங்கே சில மாறுதல்கள் செய்யப்பட்டுள்ளன. இது "பால பக்ஷிணீயம்" என்கிற வரிசையில் முதலாவதாக வெளி வந்துள்ளது. இது ஒன்பது அத்தியாயங்களைக் கொண்டது ஆகும். viii. 735/1911/II.

O31,3

**ராஜம் அய்யர், டி. எஸ்.**

2407. i. பிரபஞ்ச விலாசம்—புத்தகம்—10. ; யாமனீ பூர்ண திலகம் : முதற்பதிப்பு ; ii. எஸ். ஜி. ராமாநுஜுலு நாயுடு, திருச்சிராப்பள்ளி ; சுதேசமித்திரன் ஸ்டீம் பிரஸ், சென்னை ; iii. மே, 1912 ; iv. உ.ப. 18 ; v. 23×15 செ.மீ. ; vi. 0–1–3 ; vii. வடமொழிக் கவிஞர் பில்கணர் என்பார் தம்மிடம் மாணவியாக இருந்த இளவரசி ஒருத்தியைக் காதலித்து மணமுடித்த கதையை விவரிப்பது. இது எட்டு அத்தியாயங்கள் கொண்டது. வழக்கறிஞரும், விலைமகளும் செய்கையில் ஒன்றான வேடிக்கைக் குறிப்பு ஒன்றும் இதன் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளது; viii. 661/1912/II.

O31,3

**ராஜா சாஸ்திரியார், எஸ்.**

**2408.** i. சாரதாநந்தர் அல்லது ஸலேஸமிரா : முதற் பதிப்பு ; ii. எஸ். ராஜா சாஸ்திரியார் ; வாணீபூஷணம் பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை ; iii. டிசம்பர், 1910 ; iv. உ.ப. 1+14+48 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. இந்த வரலாறு வடமொழியிலிருந்து தமிழில் எழுதப்பட்டுள்ளது. வரகவி அ. சுப்பிரமணிய பாரதியாரின் உதவியைக் கொண்டு இதன் ஆசிரியர் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். இதில் அமைச்சரின் அறிவுக்கூர்மை, துறவிகளின் பொறுமை, முதலான பலவும் விவரிக்கப் பட்டுள்ளன. இக்கதையின் வரலாற்றுச் சுருக்கமும் முதலில் தரப்பட்டுள்ளது. இது ஒன்பது அத்தியாயங்கள் கொண்டது. viii. 552/1911/I.

O31,3

**2409.** i. லபுடா யாத்திரை : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு, ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1914 ; iv. உ.ப. 107 ; v. 18×12 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. ஆங்கில ஆசிரியர் ஜொனதன் சுவிப்ட் (Jonathan Swift) எழுதிய கலிவரின் பிரயாணங்கள் என்ற கதையில் இரண்டாவது கடற் பயணத்தைப் பற்றித் தமிழில் தரும் நூல். பதினொரு அத்தியாயங்கள் கொண்டது. viii. 987/1914/IV.

O31,3

**வடிவேலு செட்டியார், ப., கொரக்கோட்டை**

**2410.** i. தாசியால் மோசம் போன சந்திரசேகரன்—முதற் பாகம் : முதற்பதிப்பு ; ii. ப. வடிவேலு செட்டியார், கொரக்கோட்டை ; பெரியநாயகியம்மன் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1911 ; iv. உ.ப. 41 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. விலைமகள் ஒருத்தியின் வலையில் பட்டுச் சந்திரசேகரன் என்பான் தன் பொருளையெல்லாம் இழந்த நிலையில் புரப்பாரற்று விரட்டப்படுகிறான். எட்டு அத்தியாயங்கள் முதற் பகுதியில் உள்ளன. இரண்டாம் பகுதியில் சந்திரசேகரன் மனைவி தன் துணைவனைத் தேடி அடைந்த நற்செய்தியைக் குறிப்பதாக ஆசிரியர் கூறியுள்ளார். ஆறுவது அத்தியாயத்தில் சிவநாமாவளி, உலகம் நிலையாமை, தெய்வபக்தி இவற்றைக் கற்பிக்கும் ஓர் ஆசானைப் பற்றிய நிகழ்ச்சி விவரிக்கப்பட்டிருக்கிறது. விலைமகளிர் தம் வாழ்க்கை நிலையும் அவர்கள் செய்யும் மயக்குச் செயல்களும் விரிவாக எழுதப்பட்டிருக்கின்றன. viii. 447/1912/.I

O31,3

வடிவேலு முதலியார், அ.

2411. i. மாயா சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. அ. வடிவேலு முதலியார், திருக்கழுக்குன்றம் ; திரிபுரசுந்தரி விலாச அச்சுக்கூடம் ; iii. அக்டோபர், 1914 ; iv. உ.ப. 52 ; v. 14×11 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. அத்வைத தத்துவத்தின் மாயைக் கொள்கையை விளக்கும் வகையில் அமைந்த சிறு கதை. இது குணம், செயல்களை உருவகமாக அமைத்துக் கூறும் கற்பனைக் கதை. உண்மையை விளங்கச் செய்வதற்கு இக்கதையை ஒரு கருவியாக ஆசிரியர் கொள்கின்றார். viii. 407/1914/IV.

O31,3

வயித்தியனாதய்யர், எம்.

2412. i. விவேகவதி [மாந்தர் நீதி] ; ii. சி. எ. செங்கல்வராய நாயுடு. ; தனியாம்பாள் விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1915 ; iv. உ.ப. 146; v. 21×14 செ.மீ. ; vi. 0-12-0 ; vii. விவேகவதி எனும் மங்கை நல்லாளின் கதை. பல இடுக்கண் உற்றபோதும் தன் கற்பை பேணிக் காத்து முடிவில் வெற்றி பெறும் நிகழ்ச்சியை இந்நூல் விளக்குகிறது. இடைஇடையே நல்லறங்களைப் புகட்டும் பழமொழிகளையும் செய்யுட்களையும் ஆசிரியர் கையாண்டிருக்கிறார். மாந்தர் நீதி (பக் : 87-90) என்னும் ஒரு அற நூலே இக்கதை நடுவில் வருகிறது. viii. 154/1915/II.

O31,3

வயித்தியனாதையர், ஜி.

2413 i. ஹிதோபதேசக் கதைகள் ; ii. ஜி. வைத்தியனாதய்யர் ; ஜோசப் இண்டஸ்டிரியல் பிரஸ், திருச்சி ; iii. எப்ரல், 1915 ; iv. உ.ப. 12 ; v. 16×11 செ.மீ. ; vi. 0-0-3 ; vii. வட மொழியிலுள்ள அருளுரைக் கதைகள் நான்கின் தமிழ்த் தழுவல் கதைகள். இதில் 'அதிக செட்டு' 'அதிக தீனம்', 'மோசம் போன கற்பூரத் திலகன்', 'இடத்தைக் கொடுத்தால் மடத்தைப் பிடுங்குவான்' 'ஏமாந்த பிராமணன்' எனும் நான்கு அறிவுக் கதைகள் அமைந்துள்ளன. viii. 179/1915 II.

O31,3

2414. i. வர்த்தகன் : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு & ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ்., சென்னை ; iii. அக்டோபர், 1913 ; iv. உ.ப. 24 ; v. 19×13.செ.மீ.; vi. 0-1-0 ; vii. வர்த்தகன், பெண்மான் என்னும் இரண்டு கதைகள் இதில் உள்ளன. பூதங்களின் துணையினால்,

வியக்கத்தகு நிகழ்ச்சிகள் நிகழ்வதைக் குறிப்பிடுவன. அற்புதக் கதைத் தொடர் வரிசையில் இது முதற் புத்தகம் ஆகும்; viii. 816/1913/IV.

O31,3

**வாசுதேவ ராவ், வி., பரோடா**

**2415.** i. குணசேகரன் : முதற் பதிப்பு ; ii. வி. வாசுதேவ ராவ், பரோடா ; கார்டியன் அச்சுக்கூடம், சென்னை; iii. ஜனவரி, 1911 ; iv. உ.ப. 3+142 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-10-0 ; vii. இப்புதினத்தில் இடையிடையே சில துன்ப நிகழ்ச்சிகள் விரவிவரினும் ஈற்றில் திருமண நிகழ்ச்சியோடு இன்பமாக முடிவு பெறுகிறது. இது மாற்றாந் தாயின் கொடுமை, உடன் பிறந்தோரிடம் அன்பு, தெய்வ பக்தி நாட்டுப்பற்று, நல்ல குடும்பப் பெண்களின் இயல்பு கள் போன்றவற்றை விளக்கிச் செவ்விய நடையில் அமைந்துள்ளது. பதின்மூன்று அத்தியாயங்கள் கொண்டது. viii. 481/1911/I.

O31,3

**வால்டர் ஸ்காட், ஸர்.**

**2416.** i. ஐவன்ஹோ—பிற்பகுதி : முதற் பதிப்பு ; ii. வி. ராஜகோபால ஐயங்கார் ; கார்டியன் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1911 ; iv. உ.ப. 9+100 ; v. 18×12 செ.மீ. ; vi. 0-6-0 ; vii. ஆங்கில மொழியில் ஸர். வால்டர்ஸ்காட் எழுதிய ஐவன்ஹோவின் தமிழாக்கம் இந் நூல். இந்நூலை ஸ்காட் 1819 ஆம் வருடம் வெளியிட்டார் என்பர். மூல நூலைச் சுருக்கமாகத் தமிழ்ப்படுத்தி உள்ளனர். இதில் பன்னிரண்டு அத்தியாயங்கள் உள்ளன. எஸ். பஞ்சாபகேச அய்யரின் தூண்டுதலால் ஆசிரியர் இப் பணியை மேற்கொண்டார் என்று தெரிகிறது. viii. 594/1911/IV.

O31,3

**2417.** i. விக்கிரமாதித்தன்—இரண்டாம் பாகம் ; ii. லாங்கு மென்ஸ், கிரீன் அண்டு கம்பெனி, சென்னை ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 165 ; v. 21×14 செ.மீ. ; vi. 1-0-0 ; vii. சிறப்புற்று விளங்கிய விக்கிரமாதித்தனுடைய கதையை விளக்குவது ; பல சுவடிகளை ஆராய்ந்து அனைவரும் படிக்கத்தக்கவாறு பதிப்பிக்கப் பெற்றது. 'புராதன நவீன கதாமஞ்சரி' வெளியீட்டு வரிசையில் இது முதலாவது. viii. 534/1915/IV.

O31,3

**விசாலாக்ஷி அம்மாள், பண்டிதை**

2418. i. உமா : முதற் பதிப்பு; ii. பண்டிதை விசாலாக்ஷி அம்மாள்; கார்டியன் அச்சுக்கூடம், சென்னை; iii. மார்ச், 1913; iv. உ.ப. 101; v. 19×13 செ.மீ.; vi. 0–8–0; vii. ஒரு பெண் தன்னைத் திருத்திக் கொண்டு நற்பெயரெடுத்த விதத்தை விளக்குவது. இவள் சிறந்த கற்புடையவளாய் இன்ப துன்பங்களில் மனத்தைச் சமப் படுத்திப், பெற்றோர்க்குப் பணி விடை செய்து, பிறருக்குத் துணை செய்து, இறுதியில் ஆன்மாவை ஆய்வதில் ஈடுபட்டுப் புகழ் பெறுகிறாள். இன்பத்தையும் துன் பத்தையும் ஒன்றாக எண்ணி உலகில் வாழ இது வழிகாட்டுவது. பதினாறு அத்தியாயங்கள் கொண்டது; viii. 217/1913/II.

O31,3

2419. i. தேவி சந்திர ப்ரபா : இரண்டாம் பதிப்பு; ii. பண்டித விசாலாட்சி அம்மாள்; கம்மெர்ஷியல் அச்சுக்கூடம், சென்னை; iii. ஜனவரி, 1913; iv. உ.ப. 190; v. 18×13 செ.மீ. ; vi 0-10–0; vii. பங்கிம் சந்தர் சட்டர்ஜி வங்காள மொழியில் எழுதிய பிரபுல்லா அல்லது தேவி சௌதுராணி (Proiphulla or (Devi Chaudu Rani) என்னும் நூலின் தழுவலேயாகும். இரண்டு பகுதிகளாக இது அமைந்துள்ளது. viii. 870/1913/I.

O31,3

2420. i. மஹீசுதா : முதற் பதிப்பு; ii. விசாலாக்ஷி அம்மாள், வைஜயந்தி பிரஸ், சென்னை; iii. ஜூன், 1911; iv. உ.ப. 1+86; v. 22×14 செ.மீ.; vi. 0–8–0; vii. பெண் கல்வியை யும் பெண்களின் கற்பு நெறியையும் வலியுறுத்திக் கூறும் நூல். இருபத்து மூன்று அதிகாரங்கள் கொண்டது இக்கதை. viii. 141/1911/III.

O31,3

2421. i. மஹேசஹேமா : முதற் பதிப்பு ; ii. பி. விசாலாக்ஷி அம் மாள் கார்டியன் அச்சுக்கூடம்; iii. ஏப்ரல், 1912 ; iv. உ.ப. 1+82; v. 21×15 செ.மீ.; vi. 0–8–0; vii. இளமைத் திரு மணத்தைக் கண்டித்தும் இரண்டு காதலர்களின் வாழ்க்கையின் வருங்காலத்தின் விளைவுகளை விளக்கியும் எழுதப்பட்டுள்ள ஒரு சமூக நவீனம். மங்கையர் தமது கற்பை மேன்மையாகப் போற்ற வேண்டும் என்று அறிவுறுத்துகிறது; viii. 818/1912/II.

O31,3

2422. i. ராஜப் பிரபா : முதற் பதிப்பு; ii. ஹிதகாரிணி ஆபீஸ், மயிலாப்பூர், சென்னை; பி. ஆர். ராமைய்யா அண்டு கோ., சென்னை, iii. மே, 1914; iv. உ.ப. 1+107 ; v. 18×13 செ.மீ.; vi. 0–6–0 ; vii. உலகியல் அறங்களை எடுத்

துரைக்கும் ஒரு நவீனம். அறநெறிக் கருத்துக்கள் இதில் நிரம்ப உள்ளன. தமக்கை, தனது கெட்ட எண்ணத்துடனும் கொடுமையான நெஞ்சத்துடனும் இருந்து தனது தங்கைக்குப் பல கொடுமைகள் புரிந்தாலும், தங்கை தனது குறையாத பொறுமையாலும், நற் பண்பாலும், நன்னடத்தையாலும் தனது வாழ்வில் முன்னேற்றம் அடைந்த விதத்தை இது விவரிக்கின்றது. இருபது அத்தியாயங்கள் கொண்டது. இந்நூலாசிரியை இயற்றிய பிற புதினங்களின் பட்டியலும் இதில் கொடுக்கப்பட்டுள்ளது; viii. 795/1914/II.

O31,3

2423. i. ஜ்வலிதாங்கி: முதற் பதிப்பு; ii. விசாலாக்ஷி அம்மாள், கார்டியன் அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1911; iv. உ.ப. 1+93; v. 22×15 செ.மீ.; vi. 0-8-0; vii. ஆங்கிலக் கவிஞர் செகப்பிரியரின் "நகைபிழை நாடகம்" (A Comedy of Errors) என்னும் நாடகத்தைத் தழுவிய தமிழாக்கம். கற்பின் பெருமையை எடுத்துரைப்பது. தேறுதல் என்ற பகுதியில் "தர்ம மர்மம் அல்லது அதிசய சதிபதிகள்" (பக்கம் 84) என்னும் ஒரு சிறு நாடகமே இதில் அமைந்துள்ளது; viii. 356/1912/I.

O31,3

2424. i. ஜெயத் ஸேனு: முதற் பதிப்பு; ii. ஜீ. சி. லோகநாதம் பிரதர்ஸ், கார்டியன் அச்சுக்கூடம்; சென்னை; iii. ஏப்ரல், 1911; iv. உ.ப. 92; v. 22×14 செ.மீ.; vi. 0-8-0; vii. பெண்களின் இளமைத் திருமணத்தைக் கண்டித்தும் பெண் கல்வியைப் போற்றியும் எழுதப்பட்ட ஒரு நவீனம். இது புதுமையாயும் திறமையாயும் படிப்பவர்களுக்கு இன்பமாயும் அமைந்திருப்பதாக ஆசிரியர் முன்னுரையில் கூறுகிறுர்; viii. 544/1911/II.

O31,3

2425. i. ஸ்ரீகரீ: முதற் பதிப்பு; ii. விசாலாக்ஷி அம்மாள், பண்டிதை; வைஜயந்தி பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1911; iv. உ.ப. 1+88; v. 22×14 செ.மீ.; vi. 0-8-0 vii. கணவனிடம் அன்பு இல்லாவிடில் பெண்களுக்கு இம்மை மறுமை இன்பங்கள் கெடும் என்னும் கருத்தை விளக்கும் நூல். கணவனை இழந்த பெண்களுக்கு இறைவழிபாடே நாடோறும் ஆற்ற வேண்டிய கடமையாகும். அறிவு மயக்கம் அடையா வண்ணம் வழிபாடு, தியானம் முதலியவைகளைச் செய்தால் எல்லா விருப்பங்களும் நிறைவேறும். பெண் கல்வியையும், பெண்கள் இல்லற வாழ்வு, கைம்பெண்களின் துறவற வாழ்வு முதலியவற்றை நம் நாட்டிற்கு ஏற்றபடி அழகிய தமிழில் சித்திரித்துள்ளார்; viii. 528/1911/I.

O31,3

**2426.** i. ஸ்ரீமதி ஸரஸா : முதற் பதிப்பு; ii. விசாலாக்ஷி அம்மாள்; வைஜயந்தி பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1911; iv. உ.ப. 1+86; v. 21×14; செ.மீ.; vi. 0–8–0; vii. இது ஒரு துன்பியல் புதினம். இம்மை மறுமையறங்களை இனிமையோடு விவரிப்பது. தம் காலத்து நடந்த நிகழ்ச்சிகளைப் பின்னணியாக வைத்து இக்கதையை ஆசிரியர் எழுதியுள்ளார். நாடெங்கும் நல்லறிவு பரவி நல்ல வழியில் நடக்க வேண்டும் என்னும் நோக்குடன் இதனை ஆக்கியதாக ஆசிரியர் கூறுகிறார்; viii. 492/1911/IV.

O31,3

**2427.** i. ஸாதனை ; ii. ஹிதகாரணி ஆபீஸ், மயிலாப்பூர், மதராஸ் ; பி. ஆர். ராம ஐயர் அண்டு கோ, மதராஸ் ; iii. 1915 ; iv. உ.ப. 82 ; v. 19×12 செ.மீ., vi. 0–6–0 ; vii. இது ஒரு துப்பறியும் புதினம், எளிய நடையில் அமைந்தது. ஆண்டிபட்டி சமீன்தார் பெத்தாச்சி செட்டியார் அவர்களுக்கு இந்நூலை உரிமையாக்கியுள்ளார் ஆசிரியர். இந்நூலாசிரியர் இயற்றிய பிற நாவல்களின் பட்டியலும் முதலில் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 611/1915/III.

O31,3

**2428** i. விசித்திர வைத்தியன் : முதற் பதிப்பு; ii. என். வெங்கட்டராயலு அண்டு சன், சென்னை; ஜோதி முத்திராக்ஷர சாலை, சென்னை; iii. மே, 1914; iv. உ.ப. 40; v. 18×13 செ.மீ.; vi. 0–2–0; vii. குழந்தைகளுக்கேற்ற சுவையான சிறு கதைகளின் தொகுதி; viii. 107/1914/III.

O31,3

**விசுவநாத கனபாடிகள், ஓ. எஸ்., சென்னை**

**2429.** i. கதாமிருதசாகரம் : முதற் பதிப்பு; ii. ஓ. எஸ். விசுவநாத கனபாடிகள், சென்னை; சுதேசமித்திரன் ஸ்டீம் பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1914; iv. உ.ப. 2+84; v. 22×14 செ.மீ.; vi. 0–6–0; vii. "கதாமிர்த சாகரம்" என்னும் வரிசையில் இது முதற் தொகுதியாகும். இக்கதை ஒன்பான் சுவைகளும் அமைந்து உலகியலறம், ஆண் பெண்களின் பண்புகள், நன்மை, தீமைகள், தெய்வத்தை வழிபடும் வழி, கல்வி, ஞானம், முதலிய எல்லாச் செய்திகளையும் எடுத்துரைக்கின்றது. இக்கதையில் வரும் அத்தியாயங்களை 'ராஜ்ய தரங்கம்', 'அபிஷேக தரங்கம்' என்றார் போல தரங்கம் என்ற பெயரால் அழைக்கின்றார். viii. 639/1914/II.

O31,3

2430. i. வினை தீர்த்த வெங்கடேசன் : முதற் பதிப்பு; ii. கிரேவ்ஸ் குக்ஸன் அண்டு கோ., ஸ்காட்டிஷ் பிரஸ், மதராஸ் ; iii. எப்ரல், 1915; iv. உ.ப. 32; v. 16×12 செ.மீ.; vi. 0–1–6 ; vii. திருப்பதியில் எழுந்தருளியுள்ள வெங்கடேசனை நினைத்து வேண்டியவர்களின் பிணிகள் எவ்வாறு தீர்ந்தன என்பதை விளக்கிடும் வரலாற்றுக் கதைகள். இதில் கூந்தல் பிரார்த்தனை, பாஷாணப் பிரசாதம், மன்ரோ பிரபு கங்காளம், வில்லியம் துரை தண்ணீர்ப்பந்தல், ஆயிரக்கால் மண்டபம் எனும் கதைகள் அடங்கியுள்ளன. ஒவ்வொரு கதையும் வெங்கடாசல பதியின் வன்மையின் பெருமையைக் காட்டுகின்றன; viii. 359/1915/II.

O31,3

**விசுவநாத சாஸ்திரி, என்.**

2431. i. கோவிந்தன் அல்லது மாயாஜெயம் : முதற் பதிப்பு; என். விஸ்வநாத சாஸ்திரி, சென்னை ; கார்டியன் அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1913; iv. உ.ப. 4+204; v. 18×12 செ.மீ.; vi. 0–10–0; vii. தென்னிந்திய பிராமணர்களிடையே விளங்கிவரும் சில மூடப் பழக்கவழக்கங்களை இந்தச் சமூகக்கதை விவரிக்கின்றது. அறநெறியைப் புகட்டும் பொருள்களும், மதத் தொடர்பான இறையன்பு, ஆன்ம தத்துவம் ஆகியவையும் விவரிக்கப்பட்டுள்ளன. கற்பைக் காத்தல் வேண்டும் என்பதற்கு அடிப்படையாகப் புராணங்களிலிருந்து மேற்கோள்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. இப்புதினம் இருபத்தெட்டு அத்தியாயங்கள் கொண்டது; viii. 551/1914/I.

O31,3

**விசுவநாத ஐயர், டி. எச்.**

2432. i. சந்திரகலா : முதற் பதிப்பு ; ii. டி. எச். விஸ்வநாத அய்யர்; விநாயக சுந்தர விலாஸம் பிரஸ், சிதம்பரம்; iii. மார்ச், 1913; iv. உ.ப. 59; v. 21×14 செ.மீ. ; vi. 0–6–0; vii. உறுதியான காதலைக் கொண்ட ஓர் இளவரசியின் கதையை விளக்குவது. இரண்டு பகுதிகளாக அமைந்துள்ளது ; viii. 901/1913/I.

O31,3

**விநாயகமூர்த்தி செட்டியார், கொ. ச.**

2433. i. அசாசூரன் கதை : முதற் பதிப்பு : ii. ஆ. நாதமுனி முதலியார் & சி. வ. துரைசாமி முதலியார்: பெரியநாயகி அம்மன் அச்சுக்கூடம், சென்னை; iii. செப்டம்பர், 1908 ; iv. உ.ப. 56; v. 21×14 செ.மீ.; vi. 0–6–0; vii. "ஆருக்கும் அஞ்சாத அசாசூரன் கதை" என்பது இதன் முழுப் பெயர்.

வீரகேசரி என்னும் சூரனைப் பற்றிய கதையாகும். கதைத் தொடர்புடைய இசைப்பாடல்களும் ஒரு சில உள; viii. 581/1912/IV.

O31,3

2434. i. ஆருக்கும் அஞ்சாத அசாசூரன் கதை: இரண்டாம் பதிப்பு; ii. சி. வே. துரைசாமி முதலியார்: பெரியநாயகி யம்மாள் பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1912; iv. உ.ப. 56; v. 21×14 செ.மீ.; vi. 0–6–0; vii. அசாசூரன் மூன்று மனைவிகளோடு வாழ்ந்திருத்தலும், பின் தன்னூரைவிட்டு வேற்று நாடு சென்று ஓர் இளவரசியைத் திருமணம் செய்தலும், அங்கே திருடர்களை அடக்கியும், பூதத்தைக் கொன்றும், அரக்கி களைக் கொன்றும் ஆற்றிய வீரச் செயல்களையும் இக்கதை விவரிக்கிறது; viii. 248/1912/IV.

O31,3

2435. i. ஆருக்கும் அஞ்சாத அசாசூரன் கதை: இரண்டாம் பதிப்பு; ii. கு. அ. நடேச முதலியார், அமெரிக்கன் டைமன் பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1912; iv. உ.ப. 69; v. 22×14 செ.மீ.; vi. 0–6–0; vii. இப்பதிப்பில் சில மாறு தல்களுடன் படங்கள் ஆங்காங்கே சேர்க்கப்பட்டுள்ளன; viii. 566/1912/IV.

O31,3

2436. i. **விரோணு நகரத்து இரு ஆடவர்கள்**: முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ்: காக்ஸ்டன் பிரஸ், மதருஸ்; iii. நவம்பர், 1914; iv. உ. ப. 40; v. 19×13 செ. மீ.; vi. 0—2—0; vii. செகப்பிரியரின் "விரோணு நகரத்து இரு ஆடவர்கள்" என்ற நாடகத்தை ஒட்டி லாம்ப் என்பவர் எழுதிய கதை தமிழில் மொழிபெயர்த்துத் தரப்பட்டிருக்கிறது. இது ஆங்கில நாடகக் கதைக் கொத்து வரிசையில் ஆறுவதாகும்; viii. 791/1914/IV.

O31,3

**வீரராகவய்யங்கார், எம். கே.**

2437. i. செல்வராமன்: முதற் பதிப்பு; ii. பாஸ்கர் அண்டு கம்பெனி: எட்வர்ட் அச்சுக்கூடம், சென்னை; iii. பிப்ரவரி, 1911; iv. உ. ப. 1+79; v. 18×13 செ. மீ.; vi. 0—4—0; vii. கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்றும் அவரவர்கள் செய்யும் தீமைகளின் பயன்களை இவ்வுலகில்அவரவர் களே துய்க்க வேண்டும் என்றும், முயற்சியுடையார் இகழ்ச்சி அடையார் என்றும் கூறும் சில அடிப்படைக் கருத்துக்களைக் கொண்டு இக்கதை விவரிக்கப்பட்டுள்ளது; viii. 456/1911/I.

O31,3

**வீரராகவாச்சாரியார், கே. ஏ.**

2438. i. இந்திய சரித்திரக் கதைகள் : புதிய பதிப்பு ; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கம்பெனியார், சென்னை ; லாரன்ஸ் அசைலம் பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1912 ; iv. உ. ப. 7+134+1 படம் ; v. 18×12 செ. மீ. ; vi. 0—5—0 ; vii.. பள்ளியில் பயன்படுவதற்காக எழுதப் பெற்றது. பல படங்களுடன் கூடியது. இருபத்தெட்டு அத்தியாயங்கள் உள்ளன " விக்டோரியா மகாராணியாரைப் பற்றித் தொடங்கி ஆங்கிலேய ரால் இந்தியாவுக்குண்டான நன்மைகள் என்பதோடு முடிகிறது; viii. 836/1912/I.

O31,3

**வெங்கட்ராம அய்யர், கே., கும்பகோணம்**

2439. i. அரவிந்தன்—கமலாக்ஷி : முதற் பதிப்பு ; ii. டி. கிருஷ்ணஸ்வாமி ஐயர், கும்பகோணம் ; ஸ்ரீவித்தியா பிரஸ், கும்பகோணம் ; iii. செப்டெம்பர், 1912 ; iv. உ. ப. 1+40 ; v. 16×10 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. செகப்பிரியர் எழுதிய (As you like it) ஆங்கில நாடகத் தினைத் தழுவிச் சிறுவர்பொருட்டு எழுதப் பெற்றது. சிறுவர் களுக்கு அகலப்படிப்பு நூலாகவும் அவர்களுக்குப் பிற நாட்டு இலக்கியப் பாங்கை உணர்த்தத் தக்கதாகவும் இது அமைந் துள்ளது; viii. 942/1912/III.

O31,3

2440. i. ஈனக் ஆர்டன் முதலியன : முதற் பதிப்பு ; ii. டி. கிருஷ்ணசாமி ஐயர், கும்பகோணம் ; ஸ்ரீ கிருஷ்ண விலாச பிரஸ், கும்பகோணம் & ஹயவதன விலாச பிரஸ், கும்பகோணம் ; iii. டிசம்பர், 1912 ; iv. உ. ப. 2+66 ; v. 16×11 செ. மீ. ; vi. 0—3—0 ; vii. டென்னிசன் எழுதிய ஈனக் ஆர்டன் முதலிய மூன்று கதைகளை ஆவ்தோர்ன் என்பார் எழுதிய வொண்டர் புக் (Wonder Book) என்னும் ஆங்கில நூலிலிருந்து தமிழில் இதன் ஆசிரியர் மொழி பெயர்த்துள்ளார். பைலிமன் பாசிச் என்னும் இரண் டாம் கதைக்கு விருந்தோம்பல் என்னும் தலைப்பும், தி பிக்மிச் என்கிற கதைக்கு " வாமன ராஜ்ஜியம் " என்னும் தலைப்பும் கொடுத்துள்ளார் ; viii. 849/1913/I.

O31,3

2441. i. உல்லாஸன் சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. இந்து எடுகேஷனல் டிரேடிங் கம்பெனி, கும்பகோணம் ; ஸ்ரீ கிருஷ்ண விலாஸ் பிரஸ், கும்பகோணம் ; iii. ஜனவரி, 1913 ; iv. உ. ப. 2+100 ; v. 16×11 செ. மீ. vi. 0—5—0 ; vii. ஏறக்குறைய 3,000 வருடங்களுக்கு முன் கிரேக்க மகாகவி ஹோமர் என்பார் "இலியத்", "ஒடிஸ்ஸி"

என்னும் இரண்டு நூல்களைச் செய்தார். இவற்றுள் "ஒடிஸ்ஸி" என்பது இலியத் காவியத்தின் தொடர்ச்சியே யாகும். "ஒடிஸ்ஸி" காவியத்தின் தலைவனான வீரன் உல்லாசன் ("Ulysses" வரலாறு கூறுவது. இந்நூல் த்ரோஜோ நகரப் போரில் பெரும் பணி புரிந்து தாய் நாட்டுக்குத் தொண்டு செய்தவன் இவனைப் பற்றிய ஒடிஸ்ஸி காவியத்தின் மொழிபெயர்ப்பாக உள்ளது இது. பத்து அத்தியாயங்கள் கொண்டது. ஒவ்வோர் அத்தியாயத்தின் தொடக்கத்திலும் அதன் கருப்பொருளை விளக்கப் பாடல் ஒன்று கொடுக்கப்பட்டுள்ளது; viii. 425/1913/I.

O31,3

**வெங்கடராம அய்யர், கே.**

**2442.** i. மார்த்தவி பிரியவதன பரிணயம்: முதற் பதிப்பு; ii. ஆர். ராஜகோபால் பிள்ளை; லார்ட் ரிப்பன் பிரஸ், கும்பகோணம்; iii. டிசம்பர், 1911; iv. உ. ப. 23; v. 18×12 செ. மீ.; vi. 0—1—6; vii. செகப்பிரியரின் "டெம்பஸ்ட்" என்னும் நாடகத்தைப் பின்பற்றி லாம்ப் என்பார் எழுதிய கதையைத் தழுவி எழுதப் பெற்றது; viii. 888/1911/IV.

O31,3

**2443.** i. ஸுசீலா ஸ்வயம்வரம்: முதற் பதிப்பு; ii. டி. கிருஷ்ணசாமி அய்யர், கும்பகோணம்; அலெக்ஸான்டிரா பிரஸ், கும்பகோணம்; iii. பிப்ரவரி, 1912; iv. உ. ப. 1+47; v. 16×11 செ. மீ.; vi. 0—2—0; vii. வில்லியம் மோரிஸ் என்பார் எழுதிய "அரசாளப்பிறந்த மனிதன்" ( The man born to be king ) என்னும் நூலைத் தழுவி எழுதப் பெற்றது. இந்தியப்பண்பாட்டிற்கு ஏற்றவாறு இக்கதையை அமைப்பதில் ஆசிரியர் தனது முழு ஆற்றலையும் பயன்படுத்தி இருப்பதாகக் கூறப்படுகிறது; viii. 537/1912/I.

O31,3

**வெங்கட்ராமன், பி., மாயவரம்**

**2444.** i. புத்ரித்ரோகி அல்லது கிருஷ்ணகுமாரியின் துக்க ஸம்பவம்: முதற் பதிப்பு; ii. பி. இராஜாராம் ஐயர் அண்டு பிரதர்ஸ், சென்னை; வேவர்லி பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1910; iv. உ. ப. 6+58; v. 19×12 செ.மீ.; vi. 0—4—0; vii. தந்தையினால் கொலை செய்யப்பட்ட மகளின் துன்ப நிகழ்ச்சியை விவரிக்கும் புதினம். பத்து அத்தியாயங்களைக் கொண்டது. தமது வரலாற்று ஆசிரியர் சொன்ன கதைக் குறிப்பை அடிப்படையாகக் கொண்டு இந்நூலை உருவாக்கியுள்ளார்; viii. 215/1911/I.

O31,3

வெங்கடேச சர்மா, எஸ். பி., மதுரை

2445. i. இராமாயண ஸாரசங்கிரகம் : முதற் பதிப்பு : ii. எஸ். பி. வெங்கடேச சர்மா, மதுரை ; விக்டோரியா பிரஸ், மதுரை; iii ஜூன், 1914 ; iv. உ. ப. 4+68 ; v. 20×14 செ. மீ.; vi. 0—4—0 ; இராமாயண வரலாற்றை, 65 கதைகளில் விவரிப்பது இந்நூல். எளிய தமிழில் குழந்தைகளுக்கேற்ற வாறு எழுதப்பட்டுள்ளது; viii. 1038/1914/II.

O31,3

வேணுகோபால் நாயுடு, ப. ம.

2446. i. குலசேகரன் : முதற் பதிப்பு ; ii. பி. கே. ஸ்ரீனி வாசாச்சாரியார் ; சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர் ; iii. ஜனவரி, 1913 ; iv. உ. ப. 4+60 ; v. 19×13 செ. மீ. ; vi. 0—4—0 ; vii. டென்னிசன் என்பார் எழுதிய "ஈனாக் ஆர்டன்" ( Enoch Arden ) என்னும் கதையைத் தழுவி எழுதப் பெற்றது. குலசேகரன் இளமையில் மணந்து வறுமை காரணமாகத் திரை கடலோடியும் பொருள் சேர்த்து மீண்டும் வருகின்றான். இதற்கிடையில் வாசந்திகை என்னும் அவனுடைய அழகிய மனைவி வாமனன் என்போ னுக்கு உரியவளாய் வாழ்ந்து வந்தாள். மீண்டு வந்த குல சேகரன் அவள் நலம் உசாவி, அவள்பால் வெறுப்புக் கொள் ளாது, அவளிடம் தம் பொருளைச் சேர்க்கச் செல்லல், அப் பொழுது அவள் அஞ்சி மூர்ச்சித்து மரணமடைந்து விடுகிறாள். வாமனன் பயந்து குகையில் ஒளிய அங்குச் சிங்கத்தால் கொல்லப் படுகிறான். இவர்களின் மறைவுக்கு வருந்திய குலசேகரன் துறவியாய் வீடுபெறுகிறான். இடையிடையே ஆன்றோர் செய்யுட் கள் மேற்கோளாக எடுத்தாளப்பட்டிருக்கின்றன. viii. 387/1913/I.

O31,3

2447. i. சம்பக மாலினி : முதற் பதிப்பு ; ii. ப. ம. வேணு கோபால் நாயுடு, வாணி நிகேதன அச்சுக்கூடம், வேலூர் ; iii. ஜூன், 1911 ; iv. உ. ப. 2+57 ; v. 18×12 செ. மீ.; vi. 0—4—0 ; vii. ஆங்கிலத்தில் கவி டென்னிசன் இயற் றிய இலேயின் (Elaine) என்னும் செய்யுள் நூலின் கதைப் போக்கையும் கருத்துக்களையும் பண்புகளையும் பெரும் பாலும் தழுவி நம் நாட்டுக்கு ஏற்ற வகையில் பெயர், ஊர் முதலியனவற்றை மாற்றியமைத்து எழுதப்பட்டது. சம்பக மாலினி என்னும் அழகி, போர்த் திறமை மிக்க கலியன் என்பானைக் காதலித்து அக் காதல் கைகூடாது உயிர் துறப்பதும், அது கண்ட காதலன் பிரிவாற்றாது ஞானியாய்த் துறவு பூணு வதும் சிறப்பு நிகழ்ச்சிகளாகும். இதில் வீரச் சுவையும், அவலச் சுவையும் மிகுந்து காணப்படுகின்றது. இந் நூலில் மேல் நோக்கில் காமச் சுவை புலப்படுவதாயினும் ஆன்மா இறை

வனது கோயிலை அடையப் பற்பல துன்பங்களை அடைகின்றது என்ற வேதாந்த உட்கருத்தை விளக்குகிறது. viii. 39/1911/II.

O31,3

2448 i சம்பக மாலினி: இரண்டாம் பதிப்பு; ii பு. க. ஸ்ரீநிவாஸாரியார், வேலூர் ; நூர்ஜஹான் அச்சுக்கூடம்; சென்னை; iii. 1915; iv உ.ப. 64; v. 18×13 செ.மீ.; vi. 0-4-0 ; vii. சண்பகமாலினியின் கதையை இந்நூல் விளக்குகிறது. ஆங்கிலக் கவிஞன் டென்னிசனின் ''லான்சிலாட்ர அண்ட் இலேயின்'' [Lancilat and Elaine] என்பதைத் தழுவியது. கதைப் போக்கிற்கு ஏற்ற தலைப்புக்கள் பக்கத் தலைப்புகளாக அமைக்கப்பட்டுள்ளன. viii. 521/1914/iv.

O31,3

வேணுகோபால் நாயுடு, ரே.

2449. i. சண்முகானந்தம்: முதற்பதிப்பு; ii. டி. கிருஷ்ணசாமி பாவலர்; சண்முகாநந்தம் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1912; iv. உ. ப. 61+1; v. 18×13 செ.மீ. ; vi. 0-4-0; vii. ஓர் இளவரசன் இளவரசி ஒருத்தியை மணம் புரிவது பற்றிய நிகழ்ச்சிகளை விவரிப்பது. ஆறு அத்தியாயங்கள் கொண்டது. viii. 501/1913/I.

O31,3

வேணுநாதம், தி, சா., சென்னை

2450 i லீலா; முதற் பதிப்பு; ii. தி. சா. வேணுநாதம்; பி.ஆர். ராமய்யர் அண்ட் கம்பெனி, சென்னை; iii. பிப்ரவரி, 1914; iv. உ.ப. 41; v. 18×12 செ.மீ.; vi. 0–4–0; vii. ஒரு காதற் கதை ஏழு பரிச்சேதங்கள் கொண்டது. அருளாநந்த போக் என்பாரின் வியத்தகு பட்டறிவுகளை வெளியிடுவது 'லீலா' என்பது கதைத் தலைவியின் பெயராகும். viii. 739/1914/I.

O31,3

வேதநாயகம் பிள்ளை, எஸ்.

2451. i. சுகுணசுந்தரி; திருத்திய 2-ம் பதிப்பு; ii. வி. ஜி. ஆரோக்கியசாமி அண்ட் பிரதர்ஸ், மாயவரம்; செயிண்ட் ஜோஸப் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சினாப்பள்ளி; iii. அக்டோபர், 1914; iv. உ.ப. 149 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. இது ஒரு தமிழ்ப் புதினம். இருபத்தொரு அதிகாரங்கள் கொண்டது. ஒவ்வோர் அத்தியாயத்தில் விரிக்கப்படும் சிறந்த கருத்துக்கள் தலைப்புப் போலத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. மாயூரம் முன்னாள் டிஸ்டிரிக்ட் முன்சீப் வேதநாயகம் பிள்ளையே

...வர்களின் புகைப்படம் ஒன்றுள்ளது. நூலிறுதியில் இந்நூலைப் பற்றிய,செய்தித் தாள்களின் கருத்துக்கள் தொகுத்து வெளியிடப் பட்டுள்ளன. நூலாசிரியரின் பெயரன் வீ. ஜி. ஆரோக்கியசாமி இந்த இரண்டாம் பதிப்பிற்கு முகவுரை எழுதியுள்ளார். இதில் தமது பாட்டனார் வேதநாயகம் பிள்ளையின் பெருமையையும் நூல்களையும் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். viii. 298/1914/IV.

O31,3

2452. i. பிரதாப முதலியார் சரித்திரம் : திருத்திய 5-ம் பதிப்பு ; ii. வி. ஜி. ஆரோக்கியசாமி அண்டு பிரதர்ஸ், மாயவரம் ; அர்ச். சூசையப்பர் தொழிற்சாலை அச்சுக்கூடம், திருச்சிறுப் பள்ளி ; iii. அக்டோபர், 1914 ; iv. உ.ப. 240 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-12-0 ; vii. தென்னிந்தியாவில் உள்ள சமூக வாழ்க்கையை ஒட்டித் தீமைகளைக் களையும் வகையில் அமைந்த புகழ்பெற்ற புதினம். இந்நூலின் பிற்பகுதி (241-ஆம் பக்கத்தி லிருந்து 395ஆ பக்கம் வரை) இதில் காணப் பெறவில்லை. தமிழ் நாட்டுப் பழமொழிகளும் பல முதுரைகளும் இதில் அங்கங்கே இடம் பெற்றுள்ளன. சமூகப் பழக்க வழக்கங்களை வேடிக்கை யாக எடுத்துக்கூறி, மூடப் பழக்க வழக்கங்களை நீக்குதற்கு வழிகாட்டுவது. viii. 29 /1914/IV.

O31,3

வேதாந்த ராமானுஜாசாரி, ஸ்ரீரங்கம்

2453. i. பாடலி பரிணயம் : முதற் பதிப்பு; ii. டி. சுவாமிநாத சாஸ்திரி, சென்னை; சாஸ்திர ஸஞ்ஜீவிநீ அச்சுக்கூடம், சென்னை; iii. ஜூன், 1914 ; iv. உ.ப. 28 ; v. 21×14 செ.மீ. ; vi.0-2-6 ; vii. கலாரத்னாகரத்தில் முதலாவதாக அமைந்தது. இப்பாடலீ பரிணயம் பாடலிபுரம் என்ற பெயரமைந்த வர லாற்றைக் கூறுவது. viii. 955/1914/II.

O31,3

2454. i. வேனிசு நகரத்து வர்த்தகன் ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. மே, 1914 ; iv. உ.ப. 52 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. செகப்பிரியரின் நாடகமான "மெர்சன்ட் ஆப் வெனிஸ்" என்பதனை ஒட்டி எழுதப்பட்ட லேம்பின் சிறுகதை மூலத்தின் தமிழ்த் தழுவல். பள்ளி மாணவர்களுக்கான துணைப்பாட நூலாக அமைக்கப்பெற்றது. ஆங்கில நாடகக் கதைக் கொத்து வரிசையில் இது எழாவது. viii. 599/1915/II.

O31,3

வைத்தியநாதய்யர், எம். எஸ்.

2455. i. பூமாது : முதற் பதிப்பு (வேதகிரி மாலை) ; ii. பத்மநாப நாயுடு, சென்னை; தனியாம்பாள் முத்திராக்ஷரசாலை, சென்னை ; iii. நவம்பர், 1914 ; iv. உ.ப. 13+46 ; v. 22×14 செ.மீ. ; vi. 0-12-0 ; vii. ஒழுக்கமுள்ள ஓர் இளம் பெண் தனக்கு ஏற்பட்ட இன்னல்களைத் துணிவுடன் போராடிப் புகழ் எய்தியதை விவரிக்கும் நவீனம். ப. சம்பந்த முதலியார் முதலியோரின் கருத்துரைகளும் இதில் இடம் பெற்றுள்ளன. "வேதகிரிமாலை" என்னும் திருக்கழுக்குன்றப் பெருமானை வழிபடும் பாடல்களும் இதில் இடம் பெற்றுள்ளன. தலைவன் தலைவியர் தமது துன்பச் சூழலில் இறைவனை வழிபடுவதற்காக இது அமைக்கப் பட்டிருக்கிறது. இது வெண்பாவினாலான 30 பாடல்கள் கொண் டது. viii. 631/1914/IV.

O31,3

வைத்தியநாதய்யர், ஜே. எஸ்.

2456. i. வினோத விகட சிந்தாமணி—இரண்டாம் பாகம் : முதற் பதிப்பு ; ii. இ. மா. கோபாலகிருஷ்ண கோன் ; மகமதியன் பிரஸ், மதுரை ; iii. ஜூலை, 1914 ; iv. உ.ப. 120 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. இந்நூல் நகைச்சுவைப் பாடல்களையும் வேடிக்கைக் கதைகளையும் கொண்டது. இதில் 85 கதைகளும் சில வேடிக்கைப் பாட்டுகளும் உள்ளன. முதல் ஒன்பது பக்கத்தில் இப்பாடல்களைக் காணலாம். "பக்கத் திருமுறை கெக்கெக்கெனச் சிரிக்கச் செய் விகடக் கற்கண்டு" என்றும் இதற்கு ஒரு பெயர் உண்டு. viii. 456/1914/III.

O31,3

2457. i. ஜயேசன் : வி. குமாரசாமி நாயுடு & ஸன்ஸ், சென்னை ; ii. காக்ஸ்டன் பிரஸ், மதராஸ் ; iii. 1914 ; iv. உ.ப. 42 ; v.18×13 செ.மீ.; vi. 0-1-6 ; vii. ஜயேசன் என்னும் கிரேக்க நாட்டு அரசனின் கதை. இது ஆங்கில மொழியினின்று மொழி பெயர்க்கப்பட்ட நூல். viii. 297/1915/III.

O31,3

ஜூலிஸ் வெர்ன்

2458. i. சமுத்திரத்தின் கீழ் இருபதினாயிரம் யோசனை ஆழம்: முதற் பதிப்பு ; ii. எஸ். வி. ரங்கசாமி அய்யங்கார், சென்னை ; ஆக்ஸ்பர்ட் சர்வகலாசாலை பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1914 ; iv. உ.ப. 185 ; v. 18×12 செ.மீ. ; vi. 0-9-0 ; vii. சூலிசு வெர்ன் என்பவர் எழுதிய ஆங்கிலக் கதையின் தமிழாக்கமே இந்நூல். ஒரு நீர்மூழ்கிக் கப்பலை அடிப்படையாகக் கொண்ட சுவையான கதை. முதற் பகுதியாகிய இந்நூல் 24 அத்தியாயங்கள் கொண்டது. "ஆக்ச்பர்ட் நாவல்கள்" வரிசையில் இது ஒன்று. viii. 394/1915/I.

O31,3

ஜெகநாதன், டி., இராமநாதபுரம்

2459. i. சுமுக-சௌந்தர்ய வல்லி : முதற் பதிப்பு ; ii. டி. ஜெகநாதன், ராமநாதபுரம் ; இந்தியா பிரிண்டிங் வொர்க்ஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1912 ; iv. உ. ப. 2+124+2 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. இரண்டு இளவரசர்கள் ஒருவருக்கொருவர் மற்றவருடைய தங்கைகளை மணந்துகொண்ட தனால் ஏற்பட்ட வாய்ப்புகளைப் பற்றி விவரிக்கும் ஒரு கதை. பதினான்கு அதிகாரங்களைக் கொண்டது. viii. 765/1912/I.

O31,3

ஸ்ரீசைல தாதாச்சாரியார்

2460. i. அம்புஜா : முதற் பதிப்பு ; ii. ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனி, சென்னை ; பி. ஆர். ராமய்யர் அண்டு கோ, சென்னை ; iii. டிசம்பர், 1911 ; iv. உ.ப. 37 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. இது ஒரு சிறிய துப்பறியும் தமிழ்க் கதை. பன்னிரண்டு இதழ்களாகப் பகுத்துத் தரப்பட்டிருக் கிறது. viii. 24/1912/I.

O31,3

2461. i. ராமநாதன் : முதற் பதிப்பு ; ii. ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை ; பி. ஆர். ராமா அய்யர்; அண்ட் கோ., சென்னை ; iii. எப்ரல், 1912 ; iv. உ.ப. 44 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. களங்கமற்ற மனிதன் ஒருவன் தன் தகப்பனது இறந்த ஆண்டு நினைவுக் கடனை முறையோடு செய்து ஏழையாய்ப் பல துன்பமடைந்து மீண்டும் அவன் இன்பமடைந்ததைப் பற்றி விவரிப்பது. இது நாண்கு அத்தியாயங்கள் கொண்டது.viii. 237/1912/II.

O31,3

ஸ்ரீநிவாஸ ஐயங்கார், வி. ஆர்.

2462. i. அலடின் அல்லது விசித்திர விளக்கு : முதற் பதிப்பு ; ii. வி. ஆர். ஸ்ரீநிவாஸ ஐயங்கார் ; அர்ச். சூசையப்பர் தொழிற்சாலை அச்சாபீஸ், திருச்சிறுப்பள்ளி ; iii. ஜூலை, 1912 ; iv. உ.ப. 2+28 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-3-0; vii. அரபிக்கதைகளுள் ஒன்றான அலாவுத்தீனும் அற்புத விளக்கும் எனும் கதையைத் தழுவித் தமிழில் செய்யப்பெற்ற ஒரு நூல். ஒன்பது பரிச்சேதங்களாக இதனைப் பிரித்துள்ளார். அலடினைக் கவர்ந்த படலம், பிலம் நீங்கும் படலம், விளக்கு பூதம் காண் படலம், அரசன் மகளை மணம்புரியப் பரிசம் போட்ட படலம், மந்திரி முயற்சி பழுதுபட்ட படலம், அசாத்தியமும் சாத்தியமான படலம், மணம்புரி படலம், கலி தொடர் படலம், கலி நீங்கு படலம், என்று பெயரிடப் பட்டுள்ளது. viii. 446/1912/III.

O31,3

2463. i. அலடின் அல்லது விசித்ர விளக்கு : புதிய பதிப்பு ; ii. சி. ஆர். ஸ்ரீனிவாச ஐயங்கார், ஸ்ரீரங்கம் ; ஸ்ரீ வாணி விலாஸ் பிரஸ், ஸ்ரீ ரங்கம் ; iii. அக்டோபர், 1914 ; iv. உ.ப. 31; v. 19×13 செ. மீ. ; vi. 0-2-0 ; vii. அராபிய இரவுக்கதைகளில் ஒன்ருன அலாவுதீனும் அற்புத விளக்கும் என்ற கதையின் தமிழ் மொழி பெயர்ப்பே இந்நூல். இது சிறுவர்க்கான வெளியீடு. 9 பரிச்சேதங்களில் இக்கதை அமைந்துள்ளது. viii. 428/1914/IV.

O31,3

2464. i. அலிபாபாவும் நாற்பது திருடர்களும் : முதற் பதிப்பு ; ii. ஸி. ஆர். ஸ்ரீநிவாச அய்யங்கார் ; அர்ச். சூசையப்பர் தொழிற்சாலை அச்சாபீஸ், திருச்சினுப்பள்ளி ; iii. ஜூலை, 1912 ; iv. உ.ப. 3+42 ; v. 18×12 செ. மீ. ; vi. 0-3-0 ; vii. அரபிக் கதைகளுள் ஒன்ருன இது மாணவர் பொருட்டுத் தெளிவான நடையிலும் சுருக்கமாகவும் எழுதப் பெற்றிருக்கிறது. பன்னிரண்டு அத்தியாயங்கள் கொண்டது. இவற்றில் சுமார் 582 வழக்கிலுள்ள தொடர் மொழிகளை ஆசிரியர் பயன்படுத்தி இருப்பதாகக் குறிப்பிட்டிருக்கிருர். பிற்சேர்க்கை பகுதியில் சிறப்பான தொடர் மொழிகள் அத்தியாய அளவில் கொடுக்கப்பட்டுள்ளன. தமிழ் கற்கும் சிறுவர்க்கான புத்தகத் தொடர் வரிசையில் இது இரண்டாவது நூல் viii. 447/1912/III. O31,3.

2465. i. வெனிஸ் வர்த்தகன்—முதற் பதிப்பு ; ii. ஸி. ஆர். ஸ்ரீனிவாச அய்யங்கார், ஸ்ரீரங்கம்; செயின்ட் ஜோசப்ஸ் இண்ட ஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சினுப்பள்ளி ; iii. ஏப்ரல், 1911 ;. iv. உ.ப. 24 ; v. 18×12 செ.மீ. ; vi 0-1-0 ; vii. செகப்பிரியரின் "வெனிஸ் வர்த்தகன்" என்னும் ஆங்கில நாடகக் கதையை இனிய தமிழ் நடையில் தருவது. பொழுதுபோக்குப் படிப்புப் புத்தக வரிசையில் வெளியிடப் பெற்றது. "கெடுவான் கேடு நினைப்பான்" "வினையிட்டவன் வினையறுப்பான்" என்னும் அறநெறிக் கருத்தை உட்கொண்டது. இக்காலத்து நோக்கத்திற்கேற்ப "பீஸ்", "பாரிஸ்டர்" முதலிய பிற மொழிச் சொற்களும் சேர்க்கப்பட்டுள்ளன வென்றும், இத் திசைச் சொற்கள் மொழியின் வளர்ச்சிக்கும் வண்மைக்கும் காரணமாகும் எனக்கொள்வாரும் உளர் என்றும் இவ்வாசிரியர் கூறுகின்ருர், viii. 363/1911/II.

O31,3

2466. i. ஸாவித்ரீ சரித்ரம் : முதற் பதிப்பு ; ii. சி. ஆர். ஸ்ரீனிவாசய்யங்கார் ; வெட்னஸ்டே ரிவ்யூ பிரஸ், திருச்சினுப்பள்ளி; iii. ஜூலை, 1911 ; iv. உ.ப. 53 ; v. 18×12 செ.மீ; vi. 0-4-0 ; vii. பாரதத்தில் வரும் சாவித்திரி என்னும் கற்புக்கரசியின் வரலாற்றைத் தருவது. இவ்வரலாறு வடமொழி பாரதத்தில் வன பர்வத்தில் 294 ஆம் அத்தியாயப்

தொடங்கி முந்நூறும் அத்தியாயம் முடிய உள்ளது. இந்த ஏழு அத்தியாயங்களின் மொழிபெயர்ப்பே இந்நூல். viii. 630/1911/III.

O31,3

2467. i. ஸாவித்ரீ சரித்ரம் : இரண்டாம் பதிப்பு ; ii. தாம்சன் அண்டு கோ ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப 53 ; v. 19×13 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. ............ ; viii. 268/1915/III.

O31,3

ஸ்ரீநிவாசப்பிள்ளை, சோ.ரா.

2468. i. இருபாம்பிகை : முதற்பதிப்பு ; ii. சோ. ரா. ஸ்ரீநிவாசப் பிள்ளை, கார்டியன் அச்சியந்திர சாலை, சென்னை ; iii. டிசம்பர், 1912 ; iv. உ. ப. 1+111 ; v. 21×14 செ. மீ. ; vi. 0–8–0 ; vii. இது காதற் பெருமையும், கடுங்குடி விளைவிக்கும் சிறுமையும் பற்றி விவரிக்கும் நவீனக்கதை. இருபது அத்தியாயங்கள் கொண்டது. இளைஞர்கள் கெட்ட வழிகளில் செல்வதைத் தடுத்து எச்சரிப்பதால் ஒரு வேளாள குடும்பத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பின்னணியாகக் கொண்டு அமைந்தது இந்நவீனம். viii. 284/1913/I.

O31,3

ஸ்ரீநிவாச ராகவ அய்யங்கார், எஸ்.வீ., சென்னை

2469. i. மெய்தாஸன் சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. ஜி. எஸ். மணியா அண்ட் கோ., தஞ்சாவூர் ; கல்யாண சுந்தரம் பவர் பிரஸ், தஞ்சாவூர் ; iii. அக்டோபர், 1911 ; iv. உ.ப. 28 ; v. 18+12 செ. மீ. ; vi. 0–1–3 ; vii. பரிசவேதி எனும் மெய்தாஸன் சரித்திரம் என்றும் இதற்குப் பெயர் உண்டு. ரஸ்கின் என்ற ஆங்கில எழுத்தாளரின் "பேராசைக்கார அரசன் மைதாசு அல்லது தொட்ட தெல்லாம் பொன்" என்னும் கதையின் தழுவலே இந்நூல். viii. 82/1911/IV.

O31,3

ஸ்ரீநிவாஸ ராகவாசாரியார், தி. ஈ.

2470. i. தசகுமார சரித்திரம்—முதற் பாகம் ; முதற் பதிப்பு ; ii. லலிதா விலாஸ புத்தக சாலையார், திருவல்லிக்கேணி ; பி. ஆர். ராமா ஐயர் அண்ட் கோ, சென்னை ; iii. ஜனவரி, 1914 ; iv. உ.ப. 61 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. வட மொழியில் சிறந்து விளங்கிய தண்டி ஆசிரியரின் தசகுமார சரிதத்தின் மொழி பெயர்ப்பு நூல். இதில் முற்பகுதி மட்டும் அமைந்துள்ளது. viii. 460/1914/I.

O31,3

ஸ்ரீனிவாஸாச்சாரியர், பு.க.

**2471.** i. பிரகலாதாழ்வான் சரிதை: இரண்டாம் பதிப்பு; ii. ஸ்ரீநிவாசாச்சாரியர்; சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர்; iii. 1915; iv. உ.ப. 71; v. 18×12 செ. மீ.; vi. 0-6-0; vii. திருமாலின் அடியவனான பிரகலாதனின் கதையை விளக்குவது. சிறந்த வேதாந்தக் கருத்துக் களைத் தன்னுட்கொண்டது. இவ்வரலாறு பாகவதம், விஷ்ணு புராணம் முதலிய நூல்களில் விவரிக்கப்பட்டுள்ளது. தமிழில் கம்பராமாயணத்தில் வரும் "இரணியன் வதைப்படலத்தில்" வரும் வரலாறே இந்த உரை நடை நூலுக்கு அடிப்படை யாகும். முகவுரையில் ஆசிரியர் இவ்வரலாறு பற்றிய பல செய்தி களையும் வழக்குகளையும் திரட்டி எழுதியுள்ளார். ஒன்பது அத் தியாயங்கள் கொண்டது. viii. 288/1915/VII.

O31,3

**2472.** i. பிரணவப் பொருளறியாத பிரமன் முருகக் கடவுளும் பிரம தேவனும்; முதற் பதிப்பு; ii. பு. க. ஸ்ரீனிவாஸாசாரியர், வேலூர்; சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர்; ஜனவரி, 1914; iv. உ.ப. 1+21; v. 16+11 செ. மீ.; vi. 0-1-6; vii. பிரமன் பிரணவப் பொருள் தெரியாது முருகப் பெருமானி டம் இழிவு எய்திய புராண வரலாற்றை உரைக்கும் கதை. கச்சியப்ப சிவாச்சாரியார் பாடிய கந்த புராணத்திலுள்ள "அய னைச் சிறை பிடிபடலம்", "அயனைச்சிறை நீக்கு படலம்" என் பவற்றைத் தழுவி உரை நடையில் எழுதப்பட்டிருக்கிறது. இத னால் செருக்கின்றி இருக்க வேண்டும் என்பதும் பொருளை றிந்து படித்தல் வேண்டும் என்பதும் விளக்கமாகிறது. viii. 508/1914/I.

O31,3

**2473.** i. விசயத்தவசியும் சிவ வேடனும்: முதற்பதிப்பு; ii. பு.க. ஸ்ரீனிவாஸாசாரியர்; ரெக்காட் அச்சியந்திரசாலை, வேலூர்; iii. டிசம்பர், 1913; iv. உ.ப. 3+40; v. 18×12 செ.மீ.; vi. 0-3-0; vii. பாரதத்தின் ஆரண்ய பருவத்தில் அருச்சுனன் தவநிலைச்சருக்கத்தின் கதைப் பகுதியே இந்நூல். வில்லி புத்தூரார் பாரதத்தின் செய்யுட்களைத் தழுவி எழுதப்பட்டது இந்நூல். சிவபெருமான் வேடனாக வந்து அருச்சுனனோடு ஒரு பன்றியின் காரணமாக நிகழ்த்திய சண்டையை விவரிப் பது. இறுதியில் சிவனருளால் அருச்சுனன் பாசுபதத்தைப் பெற்ற நிகழ்ச்சியும் விரிக்கப்பட்டுள்ளது. viii. 1028/1913/III.

O31,3

**2474.** i. ஸ்ரீவாமன சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. பு. க. ஸ்ரீநிவாஸாசாரி, வேலூர் ; சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர் ; iii. டிசம்பர், 1913 ; iv. உ.ப. 2+26 ; v. 19×12 செ.மீ.; vi. 0-2-0 ; vii. இதிகாச புராணங்களில் உள்ள இனிய கதைகளை எடுத்துச் சொல்லும் நோக்கத்துடன் இது எழுதப் பட்டது. கம்பராமாயணம் பாலகாண்டம் வேள்விப் படலத்தில் வரும் வாமன சரித்திரமே இதற்குக் கருவாக அமைந்தது. பாகவதம் முதலிய பிற நூல்களில் உள்ள வாமனப்பிறப்பு பற்றிய சிறப்புப் பகுதிகளை இதில் எடுத்தாண்டுள்ளார். வேத வியாசரது வட மொழிப் பாரதத்திலுள்ள வாமன சரிதத்தை மொழி பெயர்த்து அப்படியே பிற்சேர்க்கையாகச் சேர்த்துள்ளார். viii. 1017/1913/IV.

O31,3

ஷேக்ஸ்பியர்

**2475.** i. சண்டமாருதம்: முதற் பதிப்பு ; ii. ஸி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1913 ; iv. உ. ப. 32 ; v. 18×17 செ.மீ. ; vi. 0-1-0 ; vii. செகப்பிரியரின் நாடகங்களைத் தனித்தனிக் கதைகளாக அமைத்து வெளியிடும் " ஆங்கில நாடகக் கதைக் கொத்து " தொகுதியில் இது முதல்கதை. கதையின் போக்கும் நாடக மாந்தர்களின் அமைப்பும் இயற்கைக் காட்சி களின் வருணனையும் இதில் விளக்கப்பட்டிருக்கின்றன. செகப் பிரியரின் வரலாற்றுச் சுருக்கம் முதலில் தரப்பட்டுள்ளது. இது " டெம்பஸ்ட் " என்னும் நாடகத்திற்குரிய கதை. viii. 396/1913/IV.

O31,3

**2476,** i. சிம்பலீன் : முதற் பதிப்பு ; ii. ஸி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1915 ; iv. உ.ப. 44 ; v. 19×13 செ.மீ. ; vi.0-2-0; vii. செகப்பிரியர் நாடகக் கதைகளில் ஒன்றான " சிம்பலீன்" என்பதன் நாடகப் பொருளைக் கதை உருவில் வடித்துத் தருவது. viii. 476/1915/I

O31,3

**2477.** i. நடுவேனிற் கனவு : முதற் பதிப்பு ; ii. ஸி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. அக்டோபர் 1913 ; iv. உ.ப. 32 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-1-0; vii. " தி மிட் சம்மர் நைட்ஸ் ட்ரீம்" என்னும் செகப்பிரியர் நாடகத்தினை கதையாக அமைத்துத், தருவது இக்கதையின், போக்கு தெளிவாக எழுதப்பட்டிருக்கிறது; viii. 397/1913/IV.

O31,3

**2478.** i. மனம்போல மாங்கல்யம் : முதற் பதிப்பு ; ii. ஸி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ் ; சென்னை ; iii. நவம்பர், 1914 ; iv. உ. ப. 44 ; v. 19×13 செ.மீ.; vi. 0-2-0; vii.செகப்பிரியரின் ''ஆஸ் யூ லைக் இட்" என்ற

நாடகக் கதையைத் தழுவித் தமிழில் எழுதப் பெற்றது இந் நூல். ஆங்கில நாடகக் கதைக் கொத்து வரிசையில் இது ஐந் தாவது கதை; viii. 472/1914/IV.

O31,3

2479. i. மாக்பெத் ; ii. ஷி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ் ; காக்ஸ்டன் பிரஸ், மதராஸ் ; iii. 1914 ; iv. உ.ப. 52; v. 18×13 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. ஐந்து பெரிய துன்பியல் நாடகங்களில் ஒன்ருன செகப்பிரியரின் "மாக்பெத்" என்னும் நாடகத்தைத் தழுவித் தமிழில் எழுதப்பட்ட நூல். "ஆங்கில நாடகக் கதைக் கொத்து" வரிசையில் இது பத்தாவது கதை நூலாகும்; viii. 438/1915/IV.

O31,3

**ஸ்வதேச நண்பன்**

2480. i. முரஹரி : முதற் பதிப்பு ; ii. பு. க. ஸ்ரீநிவாஸாசாரியார், வேலூர் ; அப்பாஸ் அண்டு சன்ஸ் பிரிண்டர்ஸ், வேலூர் ; iii. அக்டோபர், 1914 ; iv. உ.ப. 89 ; v. 19×13 செ.மீ.; vi. 0-5-0 ; vii. ஒரு பெண்ணைக் கடத்தி அவளது சொத்துக்களை அபகரிக்க ஒரு கொடியவன் முயற்சி செய்து இறுதியில் முரஹரி என்பவனுல் அப்பெண் காப்பாற்றப்பட்டு அவளது சொத்துக்களும் காக்கப்படும் சம்பவங்கள் நிறைந்த துப்பறியும் நவீனம். பத்து அத்தியாயங்கள் கொண்டது. ஒவ்வோர் அத்தியாயத்தின் தொடக்கத்திலும் அதில் விவரிக்கப் போகும் பொருளுக்குப் பொருத்தமான ஒரு பாடல் கொடுக்கப்பட்டிருக்கிறது; viii. 494/1914/IV.

O31,3

2481. i. ஸரஸ்வதி : முதற் பதிப்பு ; ii. என். வெங்கடராயலு அண்டு சன், சென்னை ; ஜியோதிஷ் மதி பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1913 ; iv. உ.ப. 48; v. 19×13 செ.மீ. ; vi. 0-2-0; vii. தந்தையிடத்திருந்த பக்தியினுல் ஒரு பெண் அடைந்த செல்வத்தையும் புகழையும் இந்நூல் விவரிக்கின்றது. ஒரு பணக்காரன் தனது செல்வச் செருக்கினுல் சீரழிந்து பின் திருந்தியதையும் இந்நூல் விவரிக்கின்றது ; viii. 132/1914/I.

O31,3

**ஸுந்தர சாஸ்திரியார், தி. ஸா.**

2482. i. ராமஜனனம்: முதற் பதிப்பு; ii. தி. ஸா. ஸுந்தரசாஸ்திரியார், சென்னை ; பிரசிடென்ஸி பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1914 , iv. உ.ப. 24 ; v. 18×11 செ.மீ.; vi. 0-2-0 ; vii. இராமபிரா னுடைய பிறப்பை உரை நடையில் சுருக்கமாகத் தருவது ; தசரதர் மகப்பேறு வேண்டி செய்யப்பெறும் வேள்வியைச் செய்து மக்களை அடைந்த செய்தி விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இக் கதையில் அடங்கிய அறங்களை இறுதியில் ஆசிரியர் தொகுத்துக் கொடுத்துள்ளார்; viii. 1102/1914/II.

O31,3

2483. i. ஸுலோசனை : முதற் பதிப்பு ; ii. என். வெங்கடராயலு அண்டு சன், சென்னை; மினர்வா பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1914; iv. உ.ப. 38 ; v. 18×12 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. இராவணன் மகன் இந்திரசித்தின் மனைவியாகிய சுலோசனை என்பவளது வரலாறு. இவள் ஆதிசேடனின் மகளாவாள். இராம, இராவணப்போரில் இந்திரசித்து இறந்தபோது, அவனோடு உடன் கட்டை ஏறி இவளும் மேலுலகம் செல்கிருள். கற்பில் சிறந்த பெண்களின் கணவர்கட்கு அறம், பொருள், இன்பமும் நல்ல புகழும் வந்தடையும் என்பதை இந்த வரலாறு விளக்குகின்றது; viii. 584/1914/II.

O31,3

2884. i. ஸூர்யாபாய்; ii. லாங்க்மன்ஸ் கிரீன் அண்டு கோ, சென்னை; ஆனந்தா பிரஸ், மதராஸ் ; iii. அக்டோபர், 1914 ; iv. உ.ப. 22 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-1-6 ; vii. இந்நூல் பள்ளிச் சிறுர்களுக்கென வெளியிடப்பட்டது. ஆடு மேய்க்கும் ஓர் ஏழைப் பெண் இளவரசியானதைப் பற்றிக் கூறும் சிறு கதை; viii. 749/1914/IV.

O31,3

ஹகீம் ஷைக் தாவூத் சாகிபு & ஹகீம் முகம்மது ஷம்சுத்தீன் சாகிபு

2485 i. அமீர்ஹம் ஜா ஜங்க்: மூன்ரும் பாகம்: முதற் பதிப்பு; ii. ஹகீம் ஷைக் தாவூத் சாகிபு அண்டு ஹகீம் முகம்மது ஷம்சுத்தீன் சாகிபு ; ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்டு 1912 ; iv. உ.ப. 416 ; v. 22×14 செ. மீ.; vi. 1-8-0 ; vii. ஹஜிரத்ஹபீபு நபி முஹம்மது முஸ்தபா சல்லல்லாகு அலைஹி, வ. ஆலிஹி, வ அஸ் ஹாபிஹிவ சல்லம் அவர்களின் சிறிய தந்தையாகிய அமீர் ஹம்ஜா ஜங்க் என்பது இதன் முழுப் பெயர். மெக்காவில் வாழ்ந்த அமீர் ஹம் ஜா என்ற இஸ்லாமிய வீரனின் வீரச் செயல்களை விவரிப்பது; viii. 588/1912/III.

O31,3

2486. i. அமீர் ஹம் ஜா ஜங்க் : நான்காம் பாகம் முதற் பதிப்பு ; ii. ஹகீம் ஷைக்தாவூத் சாகிபு அண்டு ஹகீம் முகம்மது ஷம்சுத்தீன் சாகிபு, சென்னை ; ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1913 ; iv. உ.ப. 1+403 ; v. 22×14 செ. மீ.; vi. 1-8-0 ; vii. மெக்காவில் வாழ்ந்த சிறந்த வீரனை "ஹமீர் ஹம்ஜா" என்பவனது வீரதீரச் செயல்களை விரிக்கின்றது. இது இந்தி மூலத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டுள்ளது; viii. 681/1913/IV.

O31,3

2487. i. அமீர் ஹம்ஜா ஜங்க் : ஐந்தாம் பாகம் ; ii. ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை; iii. 1915 ; iv. உ.ப. 245; v. 22×14 செ. மீ.; vi. 1-4-0 ; vii. மெக்காவிலுள்ள ஓர் இஸ்லாமியப் போர் வீரனின் வீரச் செயல்களை விளக்குவது. இந்தி மொழியிலிருந்து மொழி பெயர்க்கப் பெற்றது; viii. 153/1915/III.

O31,3

ஹரிஹர அய்யர், ஏ.

2488. i. ராஜாமணி : முதற் பதிப்பு ; ii. ஜி. ஏ. நடேசன் அண்டு கம்பெனி, சென்னை; சுதேசமித்திரன் பவர் பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1914 ; iv. உ.ப. 153; v. 18×13 செ.மீ. ; vi. 0-8-0; vii. கல்வி கேள்விகளில் அளவிடற்கரியவராயினும் சில வேளை களில் மடமையான மூடநம்பிக்கையினின்று விடுபடுவது இயலாத செயலாகி விடுவதைச் சித்தரிக்கிறது இச் சமூகக் கதை. இக் கதையில், படித்துப் பட்டம் பெற்ற கோதண்டம் ஐயரவர்களே விதியின் கொடுமைக்கு இலக்காவதையும் முடிவில் அவர் மனைவி சாரதாம்பாளின் வழிபாட்டு வன்மையால் பேரிடுக்கணி லிருந்து பிழைப்பதும் விளக்கப்பட்டுள்ளன. 30 அத்தியா யங்கள் கொண்டது. பற்பல பாடல்கள் அங்கங்கே சேர்க்கப் பட்டுள்ளன. இவை பல்வகை ஒழுக்கம் முதலியவற்றை உட்கொண்டனவாம்; viii. 255/1915/II.

O31,3

ஹரிஹர ஐயர், ஆர்.

2489. i.. ஆத்திசூடி நீதிக் கதைகள் : முதற் பதிப்பு; ii. பு. க. சீனிவாசாசாரியார், வேலூர்; சுந்தரவிநாயகர் பிரஸ், வேலூர்; iii. மார்ச், 1915; iv. உ.ப. 108 ; v. 19×13 செ.மீ.; vi. 0-8-0; vii. ஆத்திசூடியில் காணப்பெறும் 13 அறநெறித் தொடர் மொழிகளை அடிப்படையாகக் கொண்டு 13 அறநெறிக்கதைகள் அடங் கிய தொகுப்பே இந்நூல். இக்கதைகள் கந்தபுராணம், திருவிளை யாடற் புராணம், பெரிய புராணம், பாரதம் முதலிய நூல்களி லிருந்து தெரிந்தெடுக்கப்பட்டனவாம்; viii. 897/1915/I.

O31,3

ஹரிஹர பாரதியார், ஆர்.

2490. i. அடைக்கலங்காத்தல்: முதற் பதிப்பு; ii. பு. க. ஸ்ரீனிவாஸா சாரி, வேலூர் ; சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர்; iii. மே, 1915 ; iv உ.ப. 26 ; v. 16×11 செ.மீ.; vi. 0-2-0 ; vii. அடைக்கலம் வேண்டினவரைக் காப்பதின் பெருமையை விளக்கிடும் இரண்டு புராணக் கதைகள் இந்நூலில் உள்ளன. சிபி மன்னன் வரலாறும் வீடணன் அடைக்கலமும் பற்றி விவரிக்கப்பட்டிருக்கின்றன ; viii. 415/1915/II.

O31,3

2491. i. தெய்வமிகழேல் : முதற் பதிப்பு; ii பு. க. ஸ்ரீனிவாஸா சாரி, வேலூர், சுந்தர விநாயகர் அச்சுக்கூடம் வேலூர் ; iii. மே, 1915 ; iv. உ.ப. 20 ; v. 16×11 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. தெய்வத்தைப் போற்றி நம்பிக்கையுடன் வழிபடுபவர் பெருமை யையும், தெய்வத்தைப் பழிப்பவர் படும் இன்னல்களையும் விளக்கும் இரண்டு புராணக் கதைகள். தெய்வத்தை இகழ்ந்த

தக்கன், இரணியன் இருவரைப்பற்றிய வரலாறுகள் உள. பிரகலாதனது திருமால் பக்தியின் பெருமையையும் விளக்கப்படுகிறது; viii. 416/1915/II. O31,3

2492. i. ஹேமலதை: முதற் பதிப்பு; ii. ஆர். நாராயணசாமி அய்யர், சென்னை; கம்மர்ஷியல் பிரஸ், சென்னை; iii. மே, 1914; iv. உ.ப. 343; v. 22×14 செ.மீ.; vi. 1-4-0; vii. இது, தமக்கை தங்கை இருவரும் சேர்ந்து எழுதிய நவீனம். நாற்பது அத்தியாயங்கள் கொண்ட பெருநூல். காதற்பாதை கரடு முரடானது என்னும் உண்மையை வலியுறுத்துகிறது; viii. 756/1914/II.

O31,3

## 894.8114 தமிழ் உரைநடை

**பால்வண்ண முதலியார், எஸ்,, திருநெல்வேலி**

2493. i. சொற்பொழிவாற்றுப்படை என்னும் பிரசங்க விதி, முதற் பதிப்பு; ii. நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி; iii. 1911; iv. உ.ப. 56; v. 16×10 செ.மீ.; vi. அணா 4; vii. மேடை ஏறிச் சொற் பொழிவாற்றுவோருக்கு வேண்டும் தகுதிகளைத் தொகுத்துரைக்கும் நூல். பொது இயல், பேச்சு முறை இயல், பேசுவோன் இயல், பேசும் பொருள், அவையோர் நிலை இயல், பேச்சின் பயன் இயல் முதலியவாக பதினோர் இயல்களைக் கொண்டது. மதுரை தமிழ்ச் சங்கத்து எட்டாவது ஆண்டு நிறை விழா கொண்டாட்டத்தில் இது அரங்கேற்றம் செய்யப்பட்டது; viii. 925/1911/IV.

O31,3

# 900 வரலாறு, நிலநூல், பயணம்

## 910 நிலநூல்

**இராஜகோபாலாச்சாரியார், செ.வீ., சென்னை**

2494. i. இயற்கைப் பொருட் பாடம் (முதற் பிரிவு): இரண்டாம் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1913; iv. உ.ப. 3+64+8; v. 21×14 செ.மீ.; vi. 0-8-0; vii. 'பிரகிருதி சாஸ்திரம், அல்லது இயற்கைப் பொருட் பாடம் என்பது இதன் முழுப்பெயர். இதில் நிலநூல் படிப்பதற்கு ஏற்ப இயற்கைப் பொருட் பாடங்களைப் படங்களுடன் அமைக்கின்றார். நிலம், நிலத்தைச் சுற்றியுள்ள பொருள்களின் தன்மை, பொருட் தன்மை, வேறுபடுவதற்குரிய காரணம், நிலப் பகுதிகளின் தன்மை, கனிப்பொருள்கள் ஆகியவற்றை விரிக்கின்றது. பொருளகராதி இறுதியில் உள்ளது. ஆசிரியருக்கும் மாணவர்கட்கும், பிறருக்கும், பயன்படுமாறு எழுதப்பட்ட ஒரு பொது அறிவு நூல்; viii. 1056/1913/IV. U·1

சுப்பிரமணிய சர்மா, நெ. ரா., பசுமலை

2495. i. பூகோள சாஸ்திரம்: இரண்டாம் பதிப்பு; ii. இ. எம். கோபாலகிருஷ்ண கோன், மதுரை; தமிழ்ச்சங்கம் பிரஸ், மதுரை; iii. நவம்பர், 1913 ; iv. உ.ப. 66 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. மதுரை மாவட்டத்தைப் பற்றிய நில நூல். இராமநாதபுரம் மாவட்டம் பிரிக்கப் பெற்ற பிறகு புதிய மதுரை மாவட்டத்தைப் பற்றி படங்களுடன் எழுதப்பட்ட நிலநூல். மூன்றும் வகுப்பிற்காக மாணவர் கட்காக எழுதப்பட்டது. மதுரை மாவட்ட வரலாறும், இதில் சுருக்கமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது; viii. 735/1913/IV.

U.1

சுப்பிரமணியம், எம். ஆர்.

2496. i. பூதத்வ போதினி : முதற் பதிப்பு ; ii. ஜெனரல் ஸப்ளைஸ் கம்பெனி, சென்னை; கார்டியன் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1912; iv. உ. ப. 8+93+5; v. 19×13 செ.மீ.; vi. 0–8–0 ; vii. நிலமும், அதன் மேற்பரப்பும் அதில் காணப்படும் மலைகள், கற்கள், மணிவகைகள், எரிமலைகள், நிலத்தின் உள்ளீடான நிலக்கரி, பொன் முதலிய கனிப்பொருள் கள் முதலியவற்றை விரித்து உரைப்பது. பல படங்கள் ஆங்காங்கே சேர்க்கப்பட்டுள்ளன. கலைச் சொறகளின் மொழிபெயர்ப்பு விளக்கம் பாடவாரியாக ஈற்றில் தரப் பட்டிருக்கிறது. பதினைந்து பாடங்களாக இது தொகுத்து எழுதப்பெற்றிருக்கிறது; viii. 670/1912/I.

U 1

செல்லப்ப சாஸ்திரி, வி.

2497. i. பூகோள சாஸ்திரம்: முதற் பதிப்பு; ii. செல்லப்ப சாஸ்திரி அண்டு கம்பெனி, சென்னை; பி. ஆர். ராம அய்யர் அண்டு கம்பெனியார், சென்னை; iii. ஜனவரி, 1913; iv. உ.ப. 4+269; v. 17×13 செ.மீ.; vi. 0–10–0; vii. பள்ளி மாணவர்களுக்குப் பொது மைய முறையை ஒட்டி எழுதப் பட்டது. சூரிய மண்டலம், நிலத்தின் தட்ப வெப்ப நிலைகளுக்கேற்ப விளையும் பொருள்கள் போன்ற பொதுச் செய்திகளும் இன்றியமையாத நாடுகளின் நில நூல் வரலாறும் இதில் உள்ளன. இந்தியாவையும், பிரிட்டீசுத் தீவு களைப் பற்றியும் விரிவாகக் கூறுகிறது. படங்களுடன் கூடியது; viii. 518/1913/I.

U.1

ராகவய்யர், அ., வேலூர்

2498. i. பூகோளம்: முதற் பதிப்பு; ii. அ. ராகவய்யர், வேலூர்; அப்பாஸ் அண்டு சன்ஸ், அச்சுக்கூடம், வேலூர்; iii. நவம்பர், 1914; iv. உ. ப. 32 ; v. 19×12 செ.மீ.;

vi. 0-2-0; vii. வட ஆற்காடு மாவட்டத்தின் நீர் நிலம், வளம், முதலியன பற்றியும், இம்மாவட்டத்திலுள்ள நகரங்கள், தொழில், மக்கள், வாழ்க்கை முதலியவை பற்றியும் இந்நூல் விளக்குகிறது. மாவட்ட வரைபடம் ஒன்றும் இடம் பெற்றுள்ளது; viii. 893/1914/IV.

U·1

விஸ்வநாத அய்யர், ஜே.

2499. i. பௌதீக பூகோள சாஸ்திரம்; ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1915; iv. உ. ப. 117; v. 18×12 செ.மீ.; vi. 0-5-0; vii. உலகத்தில் உள்ள இயற்கைப் பொருள்களின் பெருஞ் சிறப்பைத் தெரிந்து கொள்ளத் துணையாக இருப்பது இந்த நூல். உலகத்தோற்றம், அதில் அமைந்த மண்டலங்கள், அதில் உள்ள உயிரினங்கள்; பிற பொருள்கள் ஆகிய எல்லா வற்றையும் விவரிப்பது. படங்களுடன் கூடியது; viii 1007/1915/IV.

U·1

வீரராகவாசார்யர், கெ. ஏ.

2500. i. ப்ரபஞ்ச பூகோளம்: முதல் புஸ்தகம்: முதற் பதிப்பு; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்ட் கம்பெனி; கார்டியன் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1912; iv. உ. ப. 6+180; v. 18×13 செ.மீ.; vi. 0-7-6; vii. ஆசியா, ஐரோப்பா, முதலிய கண்டங்களைப் பற்றிய நிலவியல் பொதுவாகவும், இந்தியாவைப் பற்றிச் சிறப்பாகவும் விளக்குவது. நாடுகளின் இயற்கை அமைப்பு, தட்ப வெப்பநிலை, ஆறுகள், பயிர் பச்சைகள்; விலங்கு, கனிப்பொருள்கள், மக்கள் தொகை, வாணிகம், அரசு, சிறந்த நகரங்கள் ஆகியவற்றைப் பற்றிய விளக்கவுரையுடன் அமைந்தது. படங்களுடன் கூடியது. வண்ணப்படங்களும் சில உள்ளன; viii. 89/1913/I.

U·1

2501. i. பூமி வர்ணனை: முதல் புத்தகம்: முதற் பதிப்பு; ii. லாங்மன்ஸ் க்ரீன் அண்ட் கம்பெனி; ஆனந்தா பிரஸ், சென்னை: iii. செப்டம்பர், 1914; iv. உ.ப. 180; v. 19×13 செ.மீ.; vi. 0-7-6; vii. மாணவர் களுக்கென வெளியிடப்பெற்ற உலக நிலவியலைப் பற்றிய விளக்கங்கள். முதல் பகுதியில் உலகத்தில் உள்ள கண்டங்களைப் பற்றிய நில விளக்கங்கள் விரிக்கப்பட்டுள்ளன. இரண்டாம் பகுதியில் இந்தியா பற்றிய விளக்கங்கள் அமைந் துள்ளன. பற்பல படங்களுடன் கூடியது இந்நூல். viii. 439/1914/IV.

U·1

## 915·4 இந்தியா

இரகுநாதராவ், வி.

2502. i. தென் ஆற்காடு ஜில்லா, பூகோள சாஸ்திரம், முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. மே, 1914; iv. உ.ப. 46; v. 18×13 செ.மீ.; vi. 0–3–0; vii. இது மூன்றும் வகுப்பு மாணுக்கர்களுக்குப் பயன்படுமாறு எழுதப்பட்டுள்ளது. அரசு நூல்களிலிருந்தும் செய்திகள் திரட்டி எழுதியிருப்பதாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். பதின் மூன்று பாடங்கள் உள்ளன. அவை, மலை, ஆறு, மழை யளவு, விளைபொருள், விலங்குகள், கனிப் பொருள், போக்கு வரவு, வணிகம், மதங்கள், ஆகியவற்றை விரிக்கிறது. இந்த மாவட்ட வரலாறு 11-ஆம் பாடத்திலும், புதுச்சேரியின் வரலாறு 13-ஆம் பாடத்திலும் விளக்கப்பட்டுள்ளன; viii. 837/1914/II.

U·1411

இராமசாமி அய்யங்கார், கே.

2503 i. தமிழ் பூகோள சாஸ்திரம், பெங்களூர் ஜில்லா ; ii. கே. இராமசாமி அய்யங்கார் ; எஸ்.வி. பிரஸ், வேலூர் ; iii. 1915; iv. உ.ப. 55; v. 18×13 செ.மீ. ; vi. ..................... ; vii. பெங்களூர் மாவட்டத்தின் நிலவியலைப் பற்றிய நூல். மூன்றுவது வகுப்பின் பொருட்டு இயற்றப் பெற்றது. இரு பகுதிகளாக உள்ளது. முதல் பகுதியில் திக்குகள், படம், நிலம், சூரியன், சந்திரன் முதலியவற்றைப் பற்றிய பொது விளக்கங்களும், இரண்டாம் பகுதியில் பெங்களூர் மாவட்டத்தைப் பற்றிய சிறப்புச செய்திகளும் விவரிக்கப்பட்டுள்ளன; viii. 206/1915/IV.

U·44

இராமானுஜலு நாயுடு, எஸ்.ஜி.

2504. i. விஷ்ணு ஸ்தல யாத்ரா மார்க்க விவரணம்: முதற் பதிப்பு; ii. எஸ்.ஜி. இராமானுஜலு நாயுடு, கார்டியன் பிரஸ், மதராஸ்; iii. ஜுன், 1914; iv. உ.ப. 66; v. 22×14 செ.மீ; vi. 0–5–0; vii. வைணவக் கோயில்களைப் பற்றிய சிறு குறிப்புகள் அடங்கி யுள்ளன. வைணவர்களின் புனிதப் பயணத்திற்குப் பயன் படத்தக்க வழிகளைக் கூறும் நூல். நாராயணன் குடி கொண்டுள்ள 108 திருப்பதிகளும், கோயில்களும், குளங் களும், ஆழ்வார் ஆசாரியர் பிறப்பிடங்களும், அவற்றின் சிறப்புக்களும் இதில் அடங்கியுள்ளன. ஊர்களைப் பற்றிய வரலாறுகளும், புராண வரலாறுகளும் குறிக்கப்பட்டுள்ளன. ஆழ்வார்களின் வாழ்த்துப் பாடல்கள் பற்றியும் குறிப்பு தரப்பட்டுள்ளது; viii. 591/1914/III.

U·844

**சிவராம சாஸ்திரி, பி.**

**2505.** i. கங்கா யாத்ரா தீபிகை: இரண்டாம் பதிப்பு ; ii. பி. சிவராம சாஸ்திரி; ஸ்ரீவித்தியா விநோதினி அச்சியந்திர சாலை, தஞ்சை; iii. ஜனவரி, 1913; iv. உ.ப. 2+264; v. 21×14 செ.மீ.; vi. 1–8–0; vii. ஆதி சங்கராச்சாரியரது ஸ்ரீ காசி கங்காதி மான்மிய கங்காயாத்ரா தீபிகை என்று நூல் முகப்பில் பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. காசியின் பெருமையும் அங்குள்ள நீர் நிலைகளின் சிறப்பும் விளக்கப்பட்டிருக்கின்றன. ஒன்பது அத்தியாயங்கள் கொண்டது. காசிக்குச் சென்று வரும் வழிகளைப் பற்றிய விளக்கக் குறிப்புக்களும் உள்ளன. தென்னாட்டின் கோயில் குளங்கள் பற்றியும் இந்நூல் விளக்குகிறது. திருமால் கோயில்களின் அட்டவணையும் இதில் உள்ளது; viii. 319/1913/I.

**U8.445**

**2506.** i. காசியாதி மான்மிய கங்காயாத்ரா தீபிகை : முதற் பதிப்பு ; ii. பி. சிவராம சாஸ்திரி, காசிவாசி, பேரி; ஸ்ரீவித்தியா விநோதினி அச்சியந்திர சாலை, தஞ்சை ; iii. மார்ச், 1911 ; iv. உ. ப. 8+227 ; v. 22×14 செ. மீ. ; vi. 1–8–0 ; vii. புனித நீராடப் பயணம் செய்வோருக்குப் பயன்படும் வகையில் அமைந்தது இந்நூல். எழு அத்தியாயங்களாகப் பாகுபாடு செய்யப்பட்டிருக்கிறது. முதல் அத்தியாயத்தில் புனித நீராடற் பயணம் பொது விதிகள் பற்றி விவரிக்கப்பட்டிருக்கின்றது. அதன் பின் காசி, பிரயாகை, கயா, அயோத்தி முதலிய வட நாட்டு ஊர்களின் புராணப் பெருமைகளும் புதியவாய்ப்புகளும் விளக்கப்பட்டுள்ளன. இராமேச்சுவரத்திலிருந்து காசிக்குச் செல்லும் வழி பற்றியும் இதன்பின் உள்ளது. பிற்பகுதியில் திராவிட நாட்டிலுள்ள திருக்கோயில் புனித நிலைகள், அவற்றின் இருப்பிடங்கள் முதலிய விளக்கங்கள் உள்ளன. ‘ஸ்காந்தம்’, ‘பதுமம்’ முதலிய வட மொழி நூல்களும், திருக்குறள், பெரிய புராணம் முதலிய பல தமிழ் நூல்களில் வரும் பாடல்களும் கோயில் குறிப்புகளும் அங்கங்கே எடுத்தாளப்பட்டுள்ளன; viii. 782/1911/I.

**U8.44**

**சுப்பிரமணிய சர்மா, நெ. ரா.**

**2507.** i. பூகோள சாஸ்திரம்—இராமநாதபுரம் ஜில்லா : முதற் பதிப்பு; ii. இ. மா. கோபாலகிருஷ்ண கோனார், விக்டோரியா பிரஸ், மதுரை; iii. நவம்பர், 1912 ; iv. உ. ப. 36 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–3–0 ; vii. இராமநாதபுரம் மாவட்டத்தைப் பற்றிய நிலவியல், 1910 ஆம் ஆண்டுதான் இந்த மாவட்டம் தனிப்பட உருவாகியது.

